**Mr. S. Kulandhaivel, M.A., M.Phil.**
Assistant Professor, Department of English,
Ganesar Arts and Science College, Melasivapuri-622403,
Tamil Nadu, India.
E-mail: english.kulandhai@gmail.com

**Mr. B. Senthil Kumar, M.A., M.Phil., (Ph.D).**
Assistant Professor, Department of English,
Alagappa Govt. Arts College, Karaikudi, Sivaganga-630003,
Tamil Nadu, India.
E.Mail: skbosesk@gmail.com

**Ms. A.Angayarkanni, M.A., M.Phil.**
Assistant Professor, Department of English,
St Antony's College of Arts and Science for Women, Dindigul-624005,
Tamil Nadu, India.
E-mail: aangayarkanni@yahoo.com

**Mr. R. Ganesh Kumar, M.A., M.Phil., B.Ed.**
P.G. Assistant of English,
A.P.T. Durairaj Hr.Sec. School, Madurai,
Tamil Nadu, India.
E-mail: rgkumar321@gmail.com

PUBLISHER: D. Maheswari,
3/350, Veterinary Hospital Back side,
Virudhunagar – 626001.
Mobile: 8526769556
Mail: maheswari@ijtlls.com
dmakesh88@gmail.com, ijtllsetamiljournal@gmail.com

## PUBLISHER'S MESSAGE

### Aim & Objectives

**International Journal for Tamil Language and Tamil Studies** is an online Peer-Reviewed International Journal published twice in a year on July and January, which is published by **Maheswari Publishers,** patronized by **Pandian Educational Trust, Virudhunagar, Tamil Nadu, India**. It also publishes **Literary Druid, for English Language and Literature (Online)** to foster research in the domain areas**.**

**International Journal for Tamil Language and Tamil Studies** aims to bring down Academic Research to promote research support for the academicians and scholars in the field of Tamil Language and Literature. Research through this medium is motivating in all aspects of main and inter-disciplines by consequent projects and e-publication. Making Internationalization of the research works in the globalized world aid the scholarly community to develop scholarly profile in research through the quality of publications. The audacity and vision of academic research on internet could foster green printing and open access nature in research. All of these motivate best distribution of research that produces positive outcomes for the betterment of the world.

### Disclaimer

**International Journal for Tamil Language and Tamil Studies** is committed to research Ethics and consider plagiarism as a crime. The authors are advised to adhere academic ethics with respect to acknowledgment of quotations from other works. The Publisher & Editors will not be held responsible for any lapse of the provider regarding plagiarism in their manuscripts. The submissions ought to be original, must accompany the declaration form stating your research paper as an original work, and has not been published elsewhere for any research purpose. The contributor will be the sole responsibility for such lapses on any legal issues and publication ethics.

**Contact** ijtllsetamiljournal@gmail.com for submission and other information. See www.ijtlls.com for guidelines.

**D. Maheswari**
**Publisher and Director**

### Message from the Editor-in-Chief

**International Journal for Tamil Language and Tamil Studies** is an online Peer-reviewed International Journal of Tamil Language and Literature which is committed to academic research, welcomes scholars and students all over the world who to advance their status of academic career and society by their scholarly ideas. The journal welcomes publications of quality papers on the domain area.

Research ought to be active to create a major frontier in the academic world. It must augment the neo-theoretical frame that facilitates re-evaluation and augmentation of existing practices and thoughts. In due course, this will effect in a prime discovery and lean to the knowledge acquired. Research is to establish, substantiate facts, restate previous works ant to resolve issues. An active venture to endow cogent approach to these types for educational reformations through academic research has become the central intent of the journal.

**D. Maheswari**

# பொருளடக்கம்

# வாழ்த்துரை

**Ijtlls** எனும் பன்னாட்டு தமிழ் இதழை இனிதே தொடங்கி நடத்துவதில் மிகவும் பெருமையடைகிறோம். தமிழ் மொழி மற்றும் இலக்கியத்தின் தொன்மையினை வெளிகொணரும் வகையில் இவ்ஆய்விதழ் அமைந்துள்ளது. தமிழ் ஆய்வாளர்கள், பேராளர்கள் மற்றும் ஆர்வலர்கள் தங்கள் ஆய்வை இயற்றி ஒப்புமை மற்றும் உயர்வு பெற இது ஓர் அரிய களமாகும். இது இப்பன்னாட்டு இதழின் இரண்டாம் தொகுதியின் முதல் வெளியீடாகும். *என் பணி தமிழ் பணி செய்து கிடப்பதுவே* என்பதற்கிணங்க ஆராய்ச்சி மாணவர்கள் மற்றும் பேராளர்களால் சிறந்த ஆய்வு கட்டுரைகள் வழங்கப்பட்டு இவ்விதழ் வளம் பெற்றுள்ளது. இவ்விதழின் சிறப்பு இருமொழிகளில் (தமிழ் மற்றும் ஆங்கிலம்) ஆய்வு கட்டுரைகளைக் கொண்டிருப்பதாகும். தமிழ் வளர்ச்சிக்காக அதன் தொன்மையை உலக அரங்கிற்கு எடுத்துச் செல்வதே இவ்ஆய்விதழின் நோக்கமாகக் கொண்டாளப்பட்டுள்ளது. மேன்மேலும் இப்பன்னாட்டு இதழ் வளர்ச்சியடைய அனைவரின் சிறந்த ஆய்வு கட்டுரைகள் வரவேற்கப்படுகின்றன.

- பதிப்புக்குழு

International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com



# புறநானூற்றில் பெருமிதம்

## Magnanimousness in *Purananooru*

**அ.அக்ஸிலியாமேரி,** உதவிப்பேராசிரியர்,
தமிழ்த்துறை, அக்சிலியம் கல்லூரி, காட்பாடி, வேலூர் - 6.

## Abstract

*Every human being have developed a large extent in using their Intelligence in their major part of their life. Human is composed of feelings, emotions and knowledge. Human Life is developed from barbaricness to civilised state. According to the Great Tamil Scholar Tholkappiar, human is the only being which uses the common sense to differentiate in whole sphere of life such as Education, Gift, Fame and Courage. We are proud to be a human being in all the ways. When we have all these our emotions and feelings developed in many ways, it will be useful in developing a befitting society. This is what we could see the truth in Sangam Literature 'Purananuru'. The paper traces such virtues from the Sangam work.*

**Keywords:** Magnanimousness in *Purananooru*, Tamil Literature, Tholkappiar

**முன்னுரை**

மெய்ப்பாடு என்பது கலைஞன் தன்னுடைய எண்ணங்களை கருத்துகளை உடல் மொழியாக்கி நுகர்வோனுடன் நிகழ்த்தும் உரையாடல் ஆகும்.[1] மனிதருக்கு ஐம்புலம் வாயில்களால் ஒரு நிகழ்வு அல்லது செய்தி உணர்த்தப்படும் போது, முதலில் செயல்படுவது உணர்ச்சியே. அவர் அதனை அறிவின் பார்வைக்குக் கொண்டு செல்லும் போதே மெய்ப்பொருள் காணுதல் இயலும். மனிதர்கள் அறிவினால் பகுத்துநோக்கும் ஆற்றல் பெற்று உயிரினங்களுள் மேலானவராக விளங்கினாலும் பெரும் பகுதி உணர்ச்சிகளால் நிரம்பியதாகவே அவர்தம் வாழ்க்கை இயங்குகிறது. தொல்காப்பியனார் கூறும் எண்வகை மெய்ப்பாடுகளுள் ஒன்றாகப் பெருமித மெய்ப்பாட்டினைக் குறிப்பிட்டுள்ளார் *எட்டுத்தொகை* நூல்களுள் ஒன்றான புறநானூற்றில் சான்றோர்களின் பெருமிதத்தைப் பற்றியும், அரசர்களுக்குப் புலவர்கள் அறிவுரை கூறுகின்றதிறம் பற்றியும், கல்வியின் பயனால் சங்ககாலமக்கள் அடைந்த சிறப்புகளையும் இக்கட்டுரையானது புறநானூற்றில் பெருமிதம் என்னும் தலைப்பில் ஆராயமுற்படுகிறது.

**பெருமிதத்தின் நிலைக்களன்கள்**

ஒவ்வொருமெய்ப்பாட்டிற்கும் நான்கு நான்கு நிலைக்களன்களைக் குறிப்பிட்டுள்ளார். கல்வி, தறுகண், இசைமை, கொடைஎன்னும் நான்கு நிலைக்களன்களால் பெருமிதம் பிறக்கும் என்பதை தொல்காப்பியர்,

> **"கல்விதறுகண் இசைமைகொடையெனச்**
> **சொல்லப்பட்டபெருமிதம் நான்கே"[2]**

என்னும் நூற்பா மூலம் குறிப்பிடுகிறார். இந்நான்கின் அடிப்படையில் தான் பெருமிதம் பிறக்கும் என்று கூறலாம்.

**கல்விபெருமிதம்**

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

பெருமித மெய்ப்பாட்டின் வெளிப்பாடாகத் தோன்றும் எடுப்பானதோற்றம் நேர் கொண்டபார்வை, பீடுநடைஒவ்வொருநிலையிலும் மற்றவர்களைக் காட்டிலும் மேம்பட்டு கல்வியால் விளங்கவிழைதல் என்பனவெல்லாம் கல்வி பெருமிதத்தின் மேம்பட்ட நிலைகளாகும். கல்வியினால் மனிதன் அடையும் சிறப்புகளையும், பெருமிதப் பண்புகளையும் புறநானூறு பாடல்களில் அறியலாம். கல்வி நலத்தால் சிறப்புப் பெற்றவர்களையும் சான்றோர் என்ற சொல்லால் சங்கத் தமிழர் வழங்கியமையை,

**"ஆன்றவிந்துஅடங்கியகொள்கைச்**
**சான்றோர் பலர்யான் வாழும் ஊரே"[3]**

கற்க வேண்டிய நூல்களைக் கற்று ஒழுக்கமும், வீரமும் கொண்ட உயர் பேராளரைச் சான்றோர் எனச் சங்கப் புலவர்கள் குறிப்பிட்டமை கல்விப் பெருமையைச் காட்டுவனவாகும்.

அரசர்களுக்கும், புலவர்களுக்கும் இருந்த நெருக்கம் பற்றிய செய்திகள் புறநானூற்றுப் பாடல்களில் இடம்பெற்றுள்ளன. நாடாளும் வேந்தனுக்கு நல்ல அறிவுரைகள் கூறுகின்ற அறிவாற்றலும், அஞ்சாநெஞ்சமும் உடையவராக சங்க புலவர்கள் விளங்கினர்.

அறத்தை ஒட்டியே பொருளும் இன்பமும் அமைகின்றது. ஆதலால் அறச் செயல்களில் ஈடுபடுமாறு அறிவுரை வழங்கினர். இதனை,

**"அறநெறிமுதற்றேஅரசின் கொற்றம்**
**சிறப்புடைமரபின் பொருளும் இன்பமும்**
**அறத்துவழிப்படுஉம் தோற்றம் போல"[4]**

மேலும் அரசனுக்குத் தக்க செயல்களிலும், நல்வழியிலும் ஈடுபடச் செய்யுமாறு அறிவுரை வழங்குவதும் நெறிப்படுத்துவதும் புலவர்களின் கடமையாகும். பகைவர் நாட்டின் மீது படையெடுக்கும் போது அந்நாட்டிலுள்ளஎந்தப் பொருளையும் கவர்ந்து கொள்ளலாம். ஆனால் அந்நாட்டிலுள்ள காவல் மரத்தை அழிப்பதென்பது வீரத்தின் சிறப்பைக் காட்டது. ஆதலால் அதனைத் தவிர்க்குமாறு புலவர் காரிக் கண்ணனார் நன்மாறனுக்கு அறிவுறுத்துவதாக அமைந்த புறநானூற்றுப் பாடல்,

**"இறங்குகதிர்க் கழனிநின் இளையரும் கவர்க;**
**நனந்தலைப் பேர் ஊர் எரியும் நைக்க**
**மின்னுநமிர்ந்தன்னநின் ஒளிறு இலங்குநெடுவேல்**
**ஒன்னார் செகுப்பினும் செகுக்கஎன்னதூஉம்**
**கடிமரம் தடிதல் ஓம்பு–நின்**
**நெடுநல் யானைக்குக் கந்து ஆற்றாவே"[5]**

இப்பாடலில் வேந்தனே நீ பகைநாட்டின் மீது படையெடுத்துச் செல்லும் போது விளைச்சல் நிலங்களைக் கவர்ந்துக் கொள், உன் வீரர்கள் அவ்வூர்களைத் தீயிட்டு வேண்டுமானால் அழிக்கட்டும், உன்னுடைய வேல் பகைவர்களைக் கொன்று அழிக்கட்டும். ஆனால் அவ்வூரிலுள்ள காவல் மரங்களை மட்டும் அழிக்காமல் காப்பாயாக, அது இளமையான மரங்கள் அவை உன்னுடை யயானைகளுக்குக் கட்டுத் தரியாகக் கூடப் பயன்படமாட்டாது என்று மரங்களை அழிப்பதை நிறுத்துமாறு அறிவுரை கூறியுள்ளனர்.

கல்வியினால் மனிதன் அடைகின்ற சிறப்புகளையும், பெருமிதப் பண்புகளையும் மேற்கண்ட சான்றுகள் மூலம் அறியலாம்.

**தறுகண் பெருமிதம்**

கண் நிலைக்களன்களாகப் பெருமிதம் பிறக்கும் என்பர் தொல்காப்பியர். பெருமையும் உறனும் வெளிப்பட அஞ்சாது போர் தொடுக்கும் நெஞ்சுரம் மிக்க மன்னர்களைப் பற்றி புறநானூற்றுப் பாடல்கள் கூறுகின்றன.

மறப் பண்பு ஆடவர்கே அன்றி பெண்களுக்கும் உரியதாக உடையனவாய் விளங்கிற்று என்பளைளத, போர்க்களத்தில் வீரமரணம் அடைந்ததன் மகனைப் பார்த்த தாயின் மறமாண்பினை புறநானூற்றுப் பாடலில் காணலாம்.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

**"மீன் உண் கொக்கின் தூவிஅன்ன**
**வால் நரைக் கூந்தல் முதியோள் சிறுவன்**
**களிறுஎறிந்துபட்டனன் என்னும் உவகை**
**ஈன்றஞான்றினும் பெரிதேகண்ணீர்**
**நோன் கழைதுயல்வரும் வெதிரத்து**
**வான் பெயத் தூங்கியசிதறினும் பலவே"[6]**

இதில் மீனை விரும்பி உண்ணும் கொக்கின் தூவி போன்ற நரைத்த கூந்தலை யுடைய முதியவளின் மகன் போரில் எதிர் வந்த யானை மேல் வேலெறிந்து அதைக் கொன்றதோடு தானும் இறந்துபட்டான். ஆவன் இப்ப இறந்தான் என்ற சேதியைக் கண்டவர் சொல்லக் கேட்ட அந்த வயதான தாய் அடைந்த மகிழ்ச்சிக்கும் மேலானதே. அவள் கண்கள் வடித்த ஆனந்தக் கண்ணீர் வலிமை மிகுந்த மூங்கில் புதரிலுள்ள மூங்கில் இலைகள் மேல்படும் மழைத் துளியைவிட மிக அதிகமானது என்று பூங்கண் உத்திரையார் பாடுகின்றார்.

மேலும் வறுமையிலும் வீரமிக்கதம் கணவனின் வீரப் பெருமிதத்தினை எடுத்துரைக்கும் புறநானூற்றுப் பாடல்,

**"தொடுத்தகடவர்க்குக் கொடுத்தமிச்சிலல்**
**பசித்தபாணர் உண்டு, கடை தப்பலின்,**
**ஒக்கல் ஒற்கம் சொலியதன் ஊர்ச்**
**சிறுபுல்லாளர் முகத்துஅவை கூறி,**
**வரகுகடன் இரக்கும் நெடுந்தகை**
**அரசுவரின் தாங்கும் வல்லாளன்னே"[7]**

இப்பாடலில் தலைவன் சிறிதளவே விளைந்தவரகிலும், கடன்காரர்கள் வந்து எடுத்துக் கொண்டது போக மிச்சமுள்ளதைப் பசியோடவந்த பாணர்கள் உண்டு விட்டுப் போக, பசியுடன் வந்த சுற்றத்தார்கள் பசி தீர உணவு செய்யத் தன்னுடைய ஊரில் உள்ள நன்மனம் இல்லாதவரிடம் சென்று வரகைக் கடனாகப் பெற்ற நெடுந்தகை ஆவான். அத்தலைவன் பெருந் வேந்தர்கள் பகை கொண்டுவந்தாலும் எதிர்த்து நின்று வெற்றி கொள்ளும் வலிமை மிக்கவன் என்று அவனின் பெருமிதத்தினை எடுத்துரைக்கிறது.

**புகழ் பெருமிதம்**

சங்க காலம் புகழ் வேட்கை மிகுந்த காலமாகும். பழிகளுக்கு அஞ்சுகின்ற உணர்ச்சிகளுக்கு எதிர்மறையாக புகழை விரும்பி ஏற்கின்ற உந்துதல் தோன்றிய காலம். அறத்தைப் பின்பற்றிய சமுதாயத்தில் அறமில்லாததைப் செய்தல் ஆகாது என்னும் தவிப்புணர்வும் நிலவுதல் இயல்யே ஆகும். அறங்கள் பல செய்வதால் புகழ் சிறந்து விளங்கும். அறங்கள் பல செய்தும் போர்கள் பல நடத்தியும் வெற்றி பெற்றவர்களும் தம்மை சார்ந்தவர்களுக்கும், தம்மை நாடித் துன்பமுற்று வந்தவர்களுக்கும் தம்மால் இயன்ற பல பேரறம் செய்தவர்களே மரணத்தின் பின்னும் பலரால் பேசப்படுகின்றனர். இவர்களை சான்றாக முன் வைத்துக் கொண்டு பிறர் தம் வாழ்க்கையை நடத்திச் செல்வதால் சான்றோர்கள் என்றும் இவர்களைக் குறிப்பிடுவர்.

**"உரைசால் சிறப்பின் புகழ்சால் மாற**
**நின் ஒன்று கூறுவதுஉடையேன்; என் எனின்,**
**நீயேபிறர் நாடுகொள்ளும் காலைஅவர் நாட்டு"[8]**

என்று காரிக்கண்ணனார் கூறுகிறார்.

புகழ் வாழ்க்கை வாழ்ந்த சான்றோர்களைப் பற்றி து.சிவராகன் குறிப்பிடும் பொழுது 'வாழ்ந்து மறைந்தவர்க்கு நினைவாலயங்கள் அமைக்கப்படும் மக்கள் உள்ளத்தில் அவர்தம் உரைகளில் வெளிப்படுதலே மிகச் சிறந்த நினைவாலயம் ஆகும்' எனக் கூறுவது

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

கருதத்தக்கது.[9] வாழும் போதே பெறுகின்ற புகழ் தான் மரணத்தின் பின் உலகத்தில் நிலைத்திருக்கும் என்னும் நம்பிக்கையும் சங்க இலக்கியத்தில் காணப்படுகின்றன.

**கொடைபெருமிதம்**

பேரரசர்களான சேர, சோழ, பாண்டியர்களின் மூவரின் படைவலிமையும், செல்வச் சிறப்பும், கொடை வழங்கும் தம்மையும் சங்க இலக்கியங்களில் போற்றிப் பாடப்பட்டுள்ளன. இவர்கள் தம்மிடம் வந்தவர்களுக்கு வறுமை தீர ஈகை பல செய்தனர். தம்மிடம் வரும் இரவலருக்கு வேண்டிய பொருளைக் கொடுத்துச் சிவந்து, கையானது உரம் ஏறிக் காணப்படுகிறது என்றும், இரவலர்க்கு இன்முகத்தைக் காட்டியே பரிசில் வழங்கும் தன்மையை,

**“வலியவாகும்நின் தாள் தோய் தடக்கை”[10]**

என்று இவருடையகொடைப் பெருமிதத்தைக் கபிலர் போற்றி உள்ளார். குறிப்பிட்டகாலத்தில் தான் மழை பெய்து உலக உயிர்களை வாழவைக்கும். ஆனால் சேரமான் குட்டுவன் கோதை தன்னிடம் வந்தவருக்கு இல்லை என்று சொல்லாமல் மழை மேகமே நாணும் படியாக வாரி வாரி வழங்கக் கூடியவள்ளல் தன்மை பெற்றவன் என்பதை,

**“வானம்நாணவரையாதுசென்றோர்க்கு**
**ஆனாதுஈயும் கவிகை வண்மை”[11]**

என்று இவனுடைய கொடைப் பெருமிதத்தைப் பற்றியே இப்புறநானூற்றுப் பாடல் அடிகள் எடுத்துரைக்கின்றன. போர்க்களத்தில் வீரப் போர் பல புரிந்து பகைவர்களை வீழ்த்தினாய் அதனால் உன் வீரத்தையும், ஆற்றலையும் புகழ்ந்து பாடிப் பரிசில் பெற வந்த பாணனுக்கு அவன் மகிழும் படி யானைகளையும், உணவுப் பொருள்களையும் வழங்கினான் பாண்டிய மன்னன் என்பதை,

**“யானைஎருத்தின் வாள்மடல் ஓச்சி**
**ஆதரிதிரித்தஆள்உகுகடாவின்**
**முதியத்துஅன்னஎன் விசிஉறு தடாரி”[12]**

என்ற கல்லாடனாரின் கூற்று இதனை எடுத்துரைக்கிறது.

**முடிவுரை**

பெருமித உணர்வு மனிதன் அடைய வேண்டிய உணர்வு. அது அனைத்தும் கல்வி, தறுகண், புகழ், கொடை ஆகியவற்றின் வாயிலாகக் கிடைக்கும் போது பன்மடங்காகும் என்பது சங்க இலக்கியமான புறநானூறு காட்டும் உண்மையாகும்.

**பார்வை நூல்கள்**

1. சங்க இலக்கியத்தில் பெருமிதம், முனைவர் ஐ.பபீதா
2. தொல்காப்பியம், பொருளதிகாரம், மெய்ப்பாட்டியல் நூற்பா-258
3. புறநானூறு: 191
4. புறநானூறு: 31
5. புறநானூறு: 57
6. புறநானூறு: 277
7. புறநானூறு: 327
8. புறநானூறு: 57
9. து.சிவராகன்.சங்க இலக்கியத்தில் வாழ்வியல் பக்கம்: 96
10. புறநானூறு: 14
11. புறநானூறு: 54
12. புறநானூறு: 371

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
International Journal of Tamil Language and Literary Studies 
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

# நாட்டுப்புறப்பாடல்களில் பெண்களின் நிலைப்பாடுகள்

## The State of Women in Folk Songs

**முனைவர் தே.அசோக்,** விரிவுரையாளர்,
தமிழ்த்துறை, அரசு கலை மற்றும் அறிவியல் கல்லூரி, இலால்குடி, திருச்சி - 621712.

**Abstract**

*The life of other beings is enhanced by the openness of the human race to its worldview. Languages can be said to be the peak of humanity's thinking. Language helps to show the superiority of the human race in other organisms. Music in such languages makes the language rich, soothing, soothing and comforting. In that way, folk music is forever special. Folk songs get their place in folk music. Folk songs convey many good ideas and feelings. The songs also record women's lives in early life. Women are forced into folklore, burdened and neglected. Women are given a great deal of importance in romantic life in the villages. Love for them is appreciated. Are much loved. After this romantic life, it is also necessary to consider whether women are neglected in the course of time. The tribulations of the village women were known through their songs. After this, the folk must cross the boundaries of the urban and the masculine feminine, changing in thought, word and deed, and love relationships. The above folk songs can be an opportunity to make amends for this.*

**Key Words:** Tamil Folk music and songs, Village women life and oppression, Romantic life,

உலகத் தோற்றத்தில் மனித இனம் தன் சிந்தனைத் திறத்தால் ஏனைய உயிரினங்களின் வாழ்வினும் மேம்பட்டதாக விளங்கிறது. மனித இனத்தின் சிந்தனைத் திறத்தின் உச்சமாக மொழிகளைக் கூறலாம். ஏனைய உயிரினங்களிலும் மனித இனம் தன்னை மேம்பட்டதாய் காட்டிக் கொள்வதற்கு மொழியானது துணை புரிகிறது. அத்தகைய மொழிகளில் இசையானது மொழியின் செம்மாந்த நிலையாய் அமைந்து, மக்களை மயக்கக்கூடியதாகவும் மன மகிழ்வினைத் தரக்கூடியதாகவும் ஆறுதலாகவும் இன்னும் பலவாறாகவும் அமைகிறது. அந்த வகையில் நாட்டுப்புற இசையானது என்றென்றும் சிறப்பிற்குரியதாகும். நாட்டுப்புற இசையில் நாட்டுப்புறப்பாடல்கள் குறிப்பிடத்த இடத்தினைப் பெறுகின்றன. நாட்டுப்புறப்பாடல்கள் நல்ல பல கருத்தாக்கங்களையும் உள்ளத்து உணர்வுகளையும் வெளிப்படுத்துவதாக அமைகின்றன. நாட்டுப்புற சமூகத்தினை அப்பட்டமாக படம்பிடித்துக் காட்டும் கண்ணாடியாக நாட்டுப்புறப்பாடல்கள் அமைகின்றன. அச்சமுதாய வாழ்க்கையில் பெண்களின் வாழ்கை நிலைப்பாடுகளையும் பாடல்கள் நன்கு பதிவு செய்துள்ளன. பெண்கள் நாட்டுப்புறங்களில் உழைப்பாளிகளாகவும் சுமை தாங்கிகளாகவும் புறக்கணிப்பிற்கும் உள்ளாகின்றனர். அனைத்து சூழல்களும் அவ்வாறு இல்லை என்பதையும் மறுப்பதற்கில்லை. சில நிலைகளில் பெண்கள் மிகுந்த உயர்வுக்கு உட்படுத்தப்படுகின்றனர். எனவே அத்தகைய சூழல்களைக் கொண்டு நாட்டுப்புற சமுதாயத்தில் பெண்கள் பெறுகின்ற நிலைகளை ஆராய்கின்ற நோக்கில் இக்கட்டுரை அமைகிறது.

### உழைப்பாளிகளான பெண்கள்

உழைப்பு இந்த மண்ணில் தோன்றிய அனைத்து உயிர்களின் வாழ்கைத் தேவையாகும். அவ்உழைப்பே உயிர்களை உயிர்ப்புத்தன்மையுடன் வைத்திருக்கிறது. மனித

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

இனத்தில் ஆண் பெண் என்ற உடலமைப்பில் வேறுபாடு இருந்தாலும் உடல் உழைப்பில் வேறுபாடானது பெரிய இடைவெளி பெற்றிருப்பதாகத் தோன்றவில்லை. அந்த அளவிற்கு இன்று அனைத்துத்துறைகளிலும் பெண்களின் பங்களிப்பு இன்றியமையாததாக அமைந்து விளங்குகிறது. இதில் நகர்ப்புறம், நாட்டுப்புறம் என்ற வேறுபாடு என்பதெல்லாம் இல்லை. நாட்டுப்புறங்களில் ஆண்களுக்கு இணையாக பெண்களின் உழைப்பு அமைவதைக் கருத்தில் கொள்ள வேண்டும். குறிப்பாக பெண்கள் வேளாண்மைப் பணியில் மிகுதியாக ஈடுபடுகின்றனர். வேளாண்மை என்பது அறப்பணிகளில் முதன்மையானதாகும். உயிர்களின் பசித்துன்பத்தைப் போக்கும் அரிய பணியாகும்.

**"உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்மற் றெல்லாம்**
**தொழுதுண்டு பின்செல் பவர"** (குறள் : 1033)

என்பார் வள்ளுவர். அத்தகைய அரிய பணியில் நாட்டுப்புறப் பெண்கள் மிகுந்த உழைப்பைச் செலுத்தி வருகின்றனர்.

**"நன்னான்னே நானே நன்னே**
**நானான்னே நானே நன்னே**
**காசிக்கு அப்பாலே கருமலைக்கு இப்பாலே**
**காசிராஜன் கட்டி வைத்த காசாடு மண்டபங்க**
**செஞ்சிக்கு அப்பாலே சிறுமலைக்கு இப்பாலே**
**காசிராஜன் கட்டி வைத்தோ சீட்டாடும் மண்டபங்க**
**செஞ்சிக்கு அப்பாலே சிறுகுறுவ நெல்லு நட்டு**
**சிறுகுருவ நெல்லு அருக்கோ செல்லி மடிகோலி**
**நன்னான்னே நானே நன்னே**
**கருப்பு ரயிலேறி கடைசி மவ வந்திறங்கி**
**கச்சிதமா சாதம் வைப்பேன்**
**சின்ன சொம்பு தண்ணிலையோ**
**காச மலர வைப்பேன்**
**நன்னான்னே நானே நன்னே"**

என்ற இப்பாடலில் நாட்டுப்புறப் பெண்கள் தொலைதூரங்களில் மலைகளுக்கு அப்பால் சென்று, பயிர்களை நட்டு வளர்க்கின்றனர். பின்னர் பயிர்கள் வளர்ந்த பிறகு அப்பயிர்களை அறுவடை செய்கின்றனர். அந்த நெல்லை தன் மகளுக்கு சமைத்து உணவு படைக்கிறாள் தாயானவள் என்பது வரைக்கும் பாடலில் குறிக்கப்பட்டுள்ளது. இவ்வாறாக நாட்டுப்புறப் பெண்கள் வேளாண்மையில் ஈடுபடுகின்றனர். இந்தப்பாடலில் பெண்களின் கடுமையான உடல் உழைப்பும் ஒரு தாய்க்கு உரித்தான அன்பும் வெளிப்பட்டு நிற்கிறது. மிக நேரிய வழியில் கடுமையாக உழைக்கும் நாட்டுப்புறப் பெண்களின் உழைப்பு போற்றுதலுக்குரியதாகும்.

**சுமைதாங்கிகளாகும் பெண்கள்**

நாட்டுப்புறங்களில் பெண்கள் கடுமையான உழைப்பாளிகளாக விளங்கிவரும் நிலையில் பல்வேறு பணிச்சுமைகளையும் மனச்சுமைகளையும் தாங்கும் சுமைதாங்கிகளாகவே விளங்கி வருகின்றனர். நாட்டுப்புறங்களில் சிறு வயதினையுடைய பெண்குழந்தைகள் என்றும் பாராமல் அவர்களிடம் பொறுப்புகளைத் திணித்து, துன்புறுத்துகின்ற நிலையும் சமூகத்தில் காணப்படுவதை நாட்டுப்புறப்பாடல்கள் சான்று பகர்கின்றன.

**"ஓடி ஆடுற பெண்குழந்தை**
**ஏனோ இவ தலை குனிஞ்சா**
**இவ பாடி திரிகிற வேளையில**
**சில பாரங்கள இவ சுமந்தா"**

என்ற இப்பாடலில் சிறு பெண்ணாக இருக்கக்கூடியவள். குழந்தை என்று குறிப்பிடக்கூடிய வயதினைக் கொண்டிருக்கக்கூடியவள். ஆடிப் பாடி இன்பம் அடைகின்ற பருவம் குழந்தைப்

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

பருவம். **குழந்தை மானுடத்தின் ஆபூர்வப் பரிசு** என்பர்.[1] **வாழ்தலின் இன்பத்தை நோக்கியே குழந்தையின் சிறகுகள் விரிந்து பறந்து கொண்டேயிருக்கின்றன**[2] என்பது குறிப்பிடத்தக்கது. ஆனால் இவற்றையெல்லாம் கருத்தில் கொள்ளாத தன்மையே நாட்டுப்புறப் பதிவுகளில் காணப்படுகின்றன.

**பெண்களின் குடும்பச்சுமைகள்**

குடும்பத்தில் பெற்றோர் தாங்க வேண்டிய குடும்பச்சுமைகளைச் சிறுவயது கொண்ட பெண்பிள்ளையைத் தாங்க வைக்கின்றனர். பலப்பல பணிச்சுமைகளுக்குப் பெண்கள் ஆளாக்கப்படுகின்றனர். இந்நிலைகள் மிகுதியாக நாட்டுப்புறச் சமுதாயத்தில் காணப்படுகின்றது.

**"இவ பொண்ணா பொறந்ததாலே**
**பல பொறுப்பு வந்தது மேல**
**அத நெனச்சு நெனச்சு**
**நெஞ்சம் கலங்கி தவிச்சா**
**நெஞ்சம் கலங்கி தவிச்சா"**

என்ற பாடலின் வாயிலாக ஆண் என்றால் சுதந்திரமாக இருக்கலாம். பெண் என்றால் அவ்வாறு இருக்கலாகாது. அவளுக்கு பொறுப்புகள் அதிகம் என்ற மனநிலை காலங்காலமாக சமூகத்தில் நிலவி வருவதை மேற்கண்ட பாடல்வரிகள் நன்கு தெளிவு படுத்துகின்றன. பெண்கள் தங்கள் மனநிலையில் மிகுந்த பாதிப்பிற்குள்ளாகின்றனர். ஆதலால் தான் வலி மிகுந்த **"நெஞ்சம் கலங்கி தவிச்சா"** என்ற வார்த்தைகளை நாட்டுப்புறப்பாடல்களில் இருமுறைப் பாடி தங்கள் உள்ளக்கிடங்கை வெளிப்படுத்துகின்றனர். அந்தச் சுமைகளை எண்ணி எவ்வளவு தான் வருந்தினாலும் அச்சூழலிருந்து விடுபட வாய்ப்பு சிறுதும் இல்லை என்பதே முடிவாகவும் அமைகிறது. இவ்வாறு நாட்டுப்புறப்பாடல்களில் தங்களின் வலிகளை, வேதனைகளை இறக்கி வைப்பது அம்மக்களுக்கு குறிப்பாக நாட்டுப்பெண்களுக்கு ஒரு வடிகலாக இருக்கலாம் என்று எண்ணத் தோன்றுகின்றது.

**பெண்கல்வி புறக்கணிப்பு**

கல்வியானது மன இருளை அகற்றி, அறிவு ஒளியை ஏற்படுத்தக்கூடியதாகும் கல்வி என்பதற்கு அறிவு, கற்றல், நூல், வித்தை, பயிற்சி, உறுதி, கலை, கேள்வி, சால்பு, தேர்ச்சி என்றெல்லாம் **தமிழ் அகராதி பொருள்**[3] கூறுகிறது.

**"குஞ்சி யழகும் கொடுந்தானைக் கோட்டழகும்**
**மஞ்சள் அழகும் அழகல்ல நெஞ்சத்து**
**நல்லம்யாம் என்னும் நடுவு நிலைமையால்**
**கல்வி அழகே அழகு"** (நாலடியார் - 131)

என்ற நாலடியார் பாடலில் கல்வி மட்டும் தான் அழகு என்று குறிப்பிடுகிறது. அத்துணைச் சிறப்புப் பெற்ற கல்வியானது, ஆண், பெண், ஏழை, செல்வந்தர் என்ற எவ்வித பாகுபாடுமின்றி அனைவருக்கும் கிடைத்திடுவது தானே சமூக நீதியாக இருக்க இயலும். ஆனால் நாட்டுப்புறத்தில் பெண்களுக்கானக் கல்வி மறுக்கப்படுவதாக அம்மக்கள் சார்ந்த பதிவுகள் அமைகின்றன.

**"பள்ளிக்கூட பாடம் எல்லாம் - இவள்**
**படிக்கக்கூடாதா**
**பச்சபுள்ள கத்தி அழுதா - அத**
**தூக்கி சுமக்கனுமா"**

என்று நாட்டுப்புறப் பாடலில் பெண்ணானவள் குடும்ப சுமையைச் சுமக்க வேண்டுமே தவிர புத்தக சுமையை சுமக்க கூடாது என்ற சிந்தனை வெளிப்படுவதாக மேற்கண்ட பாடல் வரிகள் வெளிப்படுத்துகின்றன. இன்றைக்கு நகர்ப்புறங்களிலும் நன்கு படித்தவர்களிடமே பெண்

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

பிள்ளைகளை அதிகம் படிக்க வைக்கத் தேவையில்லை என்ற மனப்போக்கு அமைவதை கருத்தில் கொள்ள வேண்டும்.

**"பெண்கட்குக் கல்வி வேண்டும் குடித்தனம் பேணுதற்கே**
**பெண்கட்குக் கல்வி வேண்டும் மக்களைப் பேணுதற்கே**
**பெண்கட்குக் கல்வி வேண்டும் உலகினைப் பேணுதற்கே**
**பெண்கட்குக் கல்வி வேண்டும் கல்வியைப் பேணுதற்கே"** (குடும்ப விளக்கு)

என்ற பாவேந்தரின் வரிகள் பெண் கல்வியானது சமுதாய மாற்றத்திற்கும் சமுதாய உயர்விற்கும் மிகவும் முதன்மையானது என்று வலியுறுத்துகிறார். ஆனால் நாட்டுப்புறச் சமூகத்தில் அவ்வாறான சிந்தனைப்போக்கு இல்லாததையே மேற்கண்ட பாடலில் நமக்கு புலப்படுத்துவதாக அமைந்துள்ளது.

**வேறுபாடுகளுக்கு உள்ளாகும் பெண்கள்**

இயற்கையின் படைப்பில் ஆண் பெண் படைப்பு இயல்பானதாகும். ஆனால், உலகில் வேறு இனங்களில் பெண்ணினத்திற்கு இல்லாத பாதிப்புகள் மனித இனத்தில் தான் இன்றும் நிகழ்ந்தேறி வருகின்றன. குறிப்பாக, நாட்டுப்புறங்களில் ஆண் பெண் என்று பார்க்கக்கூடிய பேத நிலைகள் அதிகமாகவே காணப்படுகின்றன.

**"தாயாரு சமையல் செய்தா**
**பக்கத்துல பெண் குழந்தை**
**நோயால அவ விழுந்தா**
**பக்கத்துண பெண்குழந்த**
**வாச கூட்ட கோலம் போட**
**மாட்டுத்தொழுவம் கழுவிவிட**
**பாத்திரம் விளக்க பஞ்சணை விரிக்க**
**படைத்துவிட்டான் இவர்களைத்தான்"**

என்ற இப்பாடலில் வீட்டில் பெண்களுக்கு அதிகப்படியான வேலைகளைச் செய்ய உட்படுத்தப்படுகின்றனர். பெண் குழந்தைகள் மன உளைச்சலுக்கு ஆளாகும் அளவிற்கு பணிச் சுமைகள் அமைகின்றன. ஆனால் ஆண் பிள்ளைகளுக்கு அத்தனை நெருக்குதலுக்கு இல்லை என்பதே உண்மையாகும். எனவே நாட்டுப்புறச் சமூகத்தில் ஆண் ஆதிக்கப் போக்கு மேலோங்குவதை மேற்கண்ட நாட்டுப்புறப் பாடல் வெளிப்படுத்துகிறது.

**"ஆண் பெண் பேதம் நிலைகள் குழந்தை பருவத்தில் இருந்தே சமூகத்தில் நிலவி வருகின்றன. குழந்தைகள் அதிகாரம் அற்றவர்கள். அவர்கள் ஒரு குறிப்பிட்ட வயது வரை பெரியோர்களை அண்டியே வாழ வேண்டியிருக்கிறது. பெரும்பாலும், அவர்களுக்கு எதிரான அதிகார மையத்தில் ஆண்தான் கட்டற்ற அதிகாரம் உடையவனாக இருக்கின்றான். குழந்தைகள் வீட்டிலும் சரி வெளியிலும் சரி ஆண்களைக் கண்டு தான் அஞ்சுகிறார்கள். குறிப்பாக, வீட்டில் ஒரு அப்பா, அம்மாவின் மீது குழந்தைகள் மீது, செலுத்துகிற அதிகாரத்தைக் கண்டு குழந்தைகள் குழப்பம் அடைகிறார்கள். மெல்ல மெல்ல இந்த உலகம் ஆண் மைய உலகம் என்று புரிந்து கொள்கிறார்கள். ஆண் குழந்தைகள் இந்த அதிகாரத்தை பெண் குழந்தைகளோடு விளையாடும் போது போலி செய்கிறார்கள். பெண் குழந்தைகளும் வீட்டில் உள்ள பெண்களைப் பார்த்தும் புற உலக சம்பிரதாயங்களைப் பார்த்தும் மூடச்சடங்குகளைப் பார்த்தும் தாங்கள் வளர்க்கப்படும் விதத்தினாலும் தங்களது ஆற்றலை ஒடுக்கி ஆண் மைய அதிகாரத்திற்கு அடங்கி அதை ஏற்றுக் கொள்கிறார்கள். இதனால் பெண் குழந்தைகளின் ஆளுமை முளையிலேயே கிள்ளி எறியப்படுகின்றன"**[4]

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

என்பது ஏற்றுக்கொள்ளக்கூடிய கருத்தாகும். நாட்டுப்புறங்களில் பெண் மீது திணிக்கப்படுகின்ற ஒடுக்குமுறைக்கு எதிராக தங்களது எதிர்ப்பு குரலையும் அவர்கள் பதிவு செய்யவும் அவர்கள் தவறவில்லை. இப்பிரச்சினைளுக்கானத் தீர்வுகளையும் தங்கள் படைப்புகளில் அழுத்தமாகவே பதிவு செய்துள்ளார்கள்.

**"இவ பொண்ணா பொறந்ததே**
**பல பொறுப்பு வந்தது மேலே**
**அத நெனச்சு நெனச்சு**
**நெஞ்சம் கலங்கி தவிச்சா**
**ஆண் பிள்ளைனா உசத்தி என்ன**
**பெண் பிள்ளைன்னா தாழ்த்தி என்ன**
**ஆணுக்குப் பெண்ணு அடிமையில்லை**
**அடக்கி வைப்பது முறையுமில்லை"**

என்ற பாடல் வரிகள் பெண்களின் ஒடுக்குமுறைக்கு எதிராக ஓங்கி ஒலிக்கப்படும் குரலாக அமைகிறது. மேற்கண்ட பாடல் வரிகள் நாட்டுப்புற பெண்களின் மனநிலையை, அவர்களின் எதிர்பார்ப்பை வெளிப்படுத்துவதாய் அமைவதை இச்சமூகம் கருத்தில் கொள்ள வேண்டும்.

**புறக்கணிப்பிற்கு உள்ளாகும் பெண்கள்**

உலகம் அன்பில் மட்டுமே நிலைபெறக்கூடியதாகும். அன்பு தான் இந்த உலகத்தை இயக்குகிறது. அப்படியிருந்தும் உலகில் பல்வேறு பிரச்சினைகள் எழுவதற்கு என்னதான் காரணமாக இருக்க முடியும். அன்பானது அனைவர் மீதும் செலுத்தப்படாமல் குறுகிய வட்டத்தில் தன்னலம் மேலோங்கி இருப்பதே காரணமாகும்.

**"அன்பிலார் எல்லாம் தமக்குரியர் அன்புடையார்**
**என்பும் உரியர் பிறர்க்கு" (குறள் - 72)**

என்ற குறள் அன்பில்லாதவர்கள் எல்லாவற்றையும் தமதாக்கிக் கொள்ள முனையும் இன்றைய மக்களின் மனநிலையை வெளிப்படுத்துவதாக அமைகிறது. அன்பான நிலையே சிறப்பானதாகும்.

**"அன்பின் வழியது உயிர்நிலை அஃதில்லார்க்கு**
**என்புதோல் போர்த்த உடம்பு" (குறள் - 80)**

என்று அன்பாக இருத்தலே உயிரோடு இருத்தலுக்கான நிலையாக வள்ளுவர் குறிப்பிடுகிறார். இத்தகைய அன்பான நிலையில்லாமல் ஒருவருக்கொருவர் வாழ்கின்ற சூழலும் இச்சமூகத்தில் நிலவி வருகிறது. குறிப்பாக கணவனுக்கும் மனைவிக்கும் இடையேயான அன்பு நிலைகள் இல்லாமல் வாழ்கின்ற இல்லறவாழ்க்கை மிகுந்த வேதனையை தருவதாகும். மனைவியின் எதிர்பார்ப்பினை உணராமல், அவள் அன்பினைப் புரிந்து கொள்ளாத கணவன்மார்களும் இச்சமுதாயத்தில் உள்ளனர்.

**"ஏ நன்னன்னானே நானே நன்னே நானே நன்னே**
**ஏ ஏலக்காயாம் புள்ள ஏலரிசாம் புள்ள**
**அங்க ஈச்ச மரத்தடியில**
**ஏங்க வைத்து திங்கிறானே**
**ஏ பாக்கு மரம் அந்த சோலையி**
**பாக்க வச்சி திங்கிறானே**
**அவன் காலுக்கறி போடலண்ணு**
**காட்ட வச்சி பேசுறானே - போடு**
**தானான்னே தானே நன்னே**
**நானே நானே நன்னானே**
**அம்மா வாய்க்கு வந்ததை பேசுறாக - அம்மா**
**தன்னே நன்னே நானே நன்னே**

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

அம்மா சொல்லி நல்ல பேசுறாக
அம்மா சொல்லி நல்ல பேசுறாக”

என்றும்,

“நானே நன்னே நன்ன நானே
ஏ வந்துபோன பக்கமெல்லாம் - எம்மா
வம்பு வந்து நேருதம்மா - நானே நன்னே
நானே நன்னே நன்ன நானே
கொது போன பக்கமெல்லாம் - எம்மா
கொடுமை வந்து நேருதம்மா - நானே நன்னே
நானே நன்னே நன்ன நானே
மதுரையில காய்ச்ச மாங்கா – எம்மா
மாதா திங்க சொந்தமில்ல – நானே நன்னே
நானே நன்னே நன்ன நானே
சீமையில காய்ச்ச மாங்கா எம்மா
சீதை திங்க சொந்தமில்லை – நானே நன்னே”

என்றும்,

“ஏ எட்டு பிள்ளி கோலமிட்டு
நல்ல நிலத்தினிலே நான் பிறந்தேன்
எழுதாத மாமனுக்கு கண்ணையா
நான் ஈஸ்வரியா மாலையிட்டேன் சொல்லையா
படிக்காத மாமனுக்கும் கண்ணையா
நான் பார்வதியை மாலையிட்டேன் சொல்லையா
ஏ காப்புடி கம்பரிசாம் கால் போன கோழி குஞ்சு
கோழிக்கறி போடலண்ணு கண்ணையா
அங்க மொனவுறாராம் சாமத்திலே சொல்லையா
ஏ முக்காப்புடி கம்பரிசாம் மூக்கு போன கோழி குஞ்சாம்
மூக்குக்கறி போடலண்ணு கண்ணையா
அங்க மொனவுறாராம் சாமத்திலே சொல்லையா
எட்டடுக்கு டிப்பனுல நல்ல எண்ணிவச்சேன்
இட்டலிய இலந்த மரச்சோலையிலே கண்ணையா
என்ன ஏங்க வச்சி திங்குறாரே சொல்லையா
பத்தடுக்கு டிப்பனுல நல்ல பாத்துவச்சேன்
இட்டலிய பாக்குமர சோலையில கண்ணையா
என்ன பாக்க வச்சி திங்கிறாரே சொல்லையா
ஏ நன்னன்னே நானே நன்னே கண்ணையா
ஏ நன்னன்னே நானே நன்னே சொல்லையா”

என்றும் பலப் பாடல்களில் பெண்களின் மன உணர்வுகளை புரிந்து கொள்ளாமல் பெண்களை புறக்கணிப்பிற்கு உள்ளாக்கும் நிலைகள் பதிவு செய்யப்பட்டுள்ளன. அன்பு கொண்டு வாழக்கூடியது இல்வாழ்க்கையாகும். பெண்களின் வாழ்க்கையைப் பொறுத்தவரையில் ஓரிடத்தில் பிறந்து, பிறிதோரிடத்தில் வாழ்க்கையை மேற்கொள்கின்றனர். திருமணமானவள் தன் கணவனை முழுதும் நம்பியே வாழ்க்கையைத் தொடங்குகிறாள். அத்தகைய நிலையில் கணவன் மீது மிகுந்த நம்பிக்கையும் எதிர்பார்ப்பும் கொண்டவளின் மனம் அடையும் இன்னல்களை பாடல்கள் நன்கு பதிவு செய்துள்ளன. மகிழ்ச்சியாக வாழ வேண்டிய இல்வாழ்க்கை, அன்பான உணர்வுகளைப்புரிந்து கொள்ளாத உணர்வற்றவர்களால் மிகுந்த துன்பத்துக்கு உரியதாக மாறுவது வேதனையாகும்.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

**களவு வாழ்வில் பெண்கள்**

நாட்டுப்புறச் சமூகத்தில் பெண்கள் முழுக்க முழுக்க அடிமைப்படுத்தப்பட்டு துன்பப்படுத்தப்படுகிறார்கள் என்ற முடிவுக்கு நாம் வர இயலாது. நாட்டுப்புற சமூகத்தில் காதல் வாழ்க்கையில் பெண்களுக்கு மிக உயர்ந்த இடம் அளிக்கப்படுகிறது.

**“கண்ணிமைக்கும் நேரத்திலே**
**காதல் கொண்டேனடி**
**கற்கண்டு நீ கையில் வந்தா**
**கடிச்சி தின்பேனடி**
**ஓய்சு ஒன்னே போனேனடி**
**ஒன்ன ஒரு தடவை காணதில்ல**
**காஞ்சு ஒன்னே போனேனடி**
**வரந்தேடி ஊரு ஊரா**
**பார்க்காத பொண்ணுமில்ல**
**நீ வரம் போல நீ கிடைச்ச**
**உன்னை மிஞ்ச யாருமில்ல**
**உன்னை மிஞ்ச யாருமில்ல**
**ஊரெல்லாம் பார்க்கும்படி**
**கல்யாணம் பண்ணிக்கலாம்**
**அடி சிரிக்கும் சிங்காரியே**
**ஒரு நூறுருய்க்கு சில்லற கொடு**
**சீசனில்லா மாம்பழமே**
**வளவளக்கும் வாழமட்ட**
**இடுப்புக்கு அழகாச் சொன்னேன்**
**என்ன சொல்லி நான் பாட**
**எண்ணங்கள் கூடவில்லை”**

என்ற பாடலில் காதல் வாழ்க்கையில் நாட்டுப்புறப் பெண்களுக்கு அளிக்கப்படும் முக்கியத்துவத்தை நன்கு வெளிப்படுத்துகின்றன. தலைவியைக் காணாத நாட்டுப்புறத் தலைவன் அவளைப் பார்க்காத வேளையில் மிகவும் வாடி போகின்றான். அவளை மிஞ்ச யாருமே இல்லை என்று குறிப்பிடுகின்றான். மிகுந்த பெருமையோடு திருமணம் செய்வதாகவும் குறிப்பிடுகிறான். தன்னுடைய காதலியைக் கற்கண்டாகவும் மாம்பழமாகவும் குறிப்பிடுகின்றான் என்பதிலிருந்து அந்தத் தலைவியை மிகுதியாக நேசிக்கின்றான் என்பதும் மிகுந்த இன்பம் அடைகிறான் என்பதும் வெளிப்படுகிறது. பெண்களுக்கான துன்பங்கள் நாட்டுப்புற சமூகத்தில் நிகழ்ந்தாலும் கூட காதல் என்று வருகின்ற வேளையில் பெண்கள் மிக உயர்ந்த இடத்தில் வைத்து பார்க்கப்படுகிறார்கள் என்பதில் மாற்றுக் கருத்து இல்லை.

**நிறைவாக**

நாட்டுப்புறப்பாடல்கள் கருத்துகளை மிகுதியாக உள்ளடக்கியுள்ளன. மக்களின் அனைத்து உணர்வுகளையும் வெளிப்படுத்துகின்ற வாய்ப்பாக இப்பாடல்கள் அமைகின்றன. நாட்டுப்புற பெண்கள் மீது குழந்தைப்பருவத்திலிருந்தே குடும்பப்பொறுப்புகள் திணிக்கப் பெற்று துன்பத்திற்கு ஆளாகின்றனர். ஆண் பெண் பேதநிலைகளுக்கு உள்ளாகி மன வேதனைக்கு உட்படுத்தப்படுகின்றனர். அன்பிற்காக ஏங்குபவர்களாகவும் பெண்களின் நிலைகள் அமைகின்றன. நாட்டுப்புற பெண்கள் இருக்கின்ற சூழலுக்கு தன்னை தகவமைத்துக் கொள்கிறார்கள். நாட்டுப்புறத்தில் காதல் வாழ்க்கையில் பெண்களுக்கு மிகுந்த முக்கியத்துவம் அளிக்கப்படுகிறது. அவர்கள் மீது அன்பு பாரடாட்டப்படுகிறது. மிகுந்த நேசிப்பிற்கு உட்படுத்தப்படுகின்றனர். இந்த காதல் வாழ்க்கைக்குப் பிறகு, கால ஓட்டத்தில் பெண்கள் புறக்கணிக்கப்படுகிறார்களா என்றும் கருத வேண்டியுள்ளது. அல்லது வள்ளுவர்

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

குறிப்பிடும் மலரினும் மெல்லிய காதலை சிலரால் தான் இன்பம் துய்க்க இயலும் என்ற வகையில் எல்லா பொழுதுகளிலும் பெண்கள் போற்றப்படுகின்ற பாடல்கள் கிடைக்கின்ற வேளையில் வேறு முடிவினை எட்டலாம். நிறைவாக, நாட்டுப்புற பெண்களுக்கு நேர்கின்ற இன்னல்களை அவர்களின் பாடல்களின் வாயிலாக அறிய முடிந்தது. இதன் பிறகு, நாட்டுப்புறம் நகர்ப்புறம் என்ற எல்லைகளைக் கடந்து, ஆண் பெண் என்ற பேதநிலைகள் எண்ணத்திலும் சொல்லிலும் செயலிலும் மாறி அன்புணர்வு கொண்டு உறவுகளை நேசிக்க வேண்டும். இதற்கான மனத்தூண்டுதலை ஏற்படுத்திக் கொள்ள மேற்கண்ட நாட்டுப்புறபாடல்களை வாய்ப்பாகக் கொள்ளலாம்.

**சான்றெண் விளக்கம்**

1. உதயசங்கர் - குழந்தைகளின் அற்புத உலகில் ப.1.
2. உதயசங்கர் - குழந்தைகளின் அற்புத உலகில் ப.3.
3. புலவர்குழு, கழகத் தமிழ் அகராதி ப.297.
4. உதயசங்கர் - குழந்தைகளின் அற்புத உலகில் பக். 18-19.

**தகவலாளிகள்**

1. சிவகாம சுந்தரி, விழிப்புணர்வுப்பாடல், வயது: 52, சிறுமருதூர், இலால்குடி, திருச்சிராப்பள்ளி.
2. நிர்மலா, நடவுப்பாடல், ஒப்பாரிப்பாடல், வயது: 41, வாளாடி, இலால்குடி, திருச்சிராப்பள்ளி.
3. மஞ்சுளா, நாட்டுப்புறப்பாடல், வயது : 45, எசனக்கோரை, இலால்குடி, திருச்சிராப்பள்ளி.
4. வடிவேல், ஒப்பாரிப்பாடல், தெம்மாங்குப்பாடல், வயது : 50, ஆலம்பாக்கம், இலால்குடி, திருச்சிராப்பள்ளி.

**நூற்பட்டியல்**

1. உதயசங்கர், குழந்தைகளின் அற்புத உலகில், நியு செஞ்சுரி புக் ஹவுஸ் (பி)லிட், 41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட், அம்பத்தூர், சென்னை - 98, முதற் பதிப்பு : ஜுலை 2014.
2. பாரதிதாசன், குடும்ப விளக்கு, மலர் நிலையம், 133, பிராட்வே, சென்னை - 1 முதற் பதிப்பு: மார்ச் - 1955.
3. புலவர் குழு, கழகத் தமிழ் அகராதி, சைவ சித்தாந்த நூற்பதிப்புக்கழகம், திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், 154, டிடிகே சாலை, சென்னை - 18.
4. ஞா. மாணிக்கவாசகன்(உரை), திருக்குறள், உமா பதிப்பகம், 58, ஐயப்ப செட்டி தெரு, மண்ணடி, சென்னை - 1, ஏழாம் பதிப்பு - ஜனவரி 2000.
5. ஜெ.ஸ்ரீசந்திரன் (உரை), நாலடியார், வர்த்தமானன் பதிப்பகம், ஏ.ஆர்.ஆர் காம்ப்ளெக்ஸ் 141, உஸ்மான் சாலை, தியாகராய நகர், சென்னை - 17, ஆறாம் பதிப்பு – பிப்ரவரி 2000.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

# அகநானூறு குறிஞ்சிப்பாடல்களில் உள்ளுறை

## Ullurai in *Agananooru* Kurunji Songs

**சீ.அலக்ஸ் ஜேக்கப்,** உதவிப்பேராசிரியர்,
தமிழ்த்துறை, அன்னை வேளாங்கண்ணி கல்லூரி, தொலையாவட்டம்.

**Abstract**

*All sangam Literature are based on policies and principles of grammer. Theories found in Tolkapiyam are very much helpful to research 'Ullurai' 'Brevity' and its characteristics. The words or matter that we can't able to speak in outward can be easily able to speak by using ullurai. So, its act as a teachnique to bring out the mistake and guilties found inside the person without being hurt to him. The aim of ullurai is to speak short and sweet, but it helps to understand lot even from those short speech. There are many ullurais in Agananaooru 'Kurunji songs'. This research paper explains the Ullurais found in Agananaooru 'Kurunji songs' with its characteristics and advantages in detail.*

**Keywords:** Ullurai in *Agananooru*, Kurunji Songs

இலக்கணக் கொள்கையின் அடிப்படையில் சங்கஇலக்கியங்கள் அனைத்தும் அமைந்துள்ளன. உள்ளுறையைப் பற்றி ஆராய தொல்காப்பியச் சூத்திரங்கள் உதவுகின்றன. உவமையானது தொல்காப்பியரின் காலத்திலேயே போற்றப்பட்ட உவமைப்பொருள் நய உத்தியாகும். தொல்காப்பியர் விளக்கும் இவ்வுத்தியானது அகப்பொருள் இலக்கியத்திற்கே உரியதாகப் போற்றப்பட்டது. சங்க இலக்கியங்களிலும் அகப்பொருள் பாடல்களிலேயே இவை இடம் பெறுகின்றன. உள்ளுறை என்பது கூறப்பட்டக் கருத்திலிருந்து கூறாத கருத்தை உய்த்துணர வைக்கும் குறிப்பு முறை வெளியீட்டு முறையாகும்.

உள்ளுறையானது கருப்பொருளின் துணைகொண்டு பெறப்படும் குறிப்பு உவமையாகும். உள்ளுறை வாயிலாக ஒரு கருத்து குறிப்பாகக் கூறப்படுகிறது. வெளிப்படையாகக் கூற இயலாத கருத்தையும் உள்ளுறைக் குறிப்பால் கூறலாம். கேட்பவரின் மனம் புண்படாமல் மறைமுகமாகக் குறையினைச் சுட்டும் நாகரிக நெறி தான் உள்ளுறை.

சுருங்கச் சொல்லி விளங்க வைப்பது (Brevity) உள்ளுறையின் நோக்கமாகும். பழமொழியைப் போல் எவ்வளவு சுருங்கச் சொல்ல முடியுமோ அவ்வளவு சுருங்கக் கூறி அதில் பெரிய விளக்கம் உடையதாக அமைவதே உள்ளுறையாகும்.

**"உள்ளுறை உவமம் வெளிப்படை உவமம் என**
**எள்ளரும் உவமம் இருவகை யுடைத்தே"**

அகப்பாட்டினுள் விளங்குகின்ற இகழப்படாத சிறப்பினையுடைய உவமமானது உள்ளுறை உவமம், வெளிப்படை உவமம் என இருவகையுடையது என்று நம்பியகப்பொருள் நூற்பா குறிப்பிடுகின்றது.

உள்ளுறையானது தெய்வம் தவிர ஏனைய கருப்பொருட்களை ஒட்டியே பிறக்கும் என தொல்காப்பியர் கூறுகிறார். இதனை,

**"உள்ளுறை தெய்வம் ஒழிந்ததை நிலம் எனக்**
**கொள்ளும் என்ப குறி அறிந்தோரே"**

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

என்ற பாடலின் வாயிலாக அறியலாம்.

புலவன் தான் கூறக்கருதிய பொருளை உள்ளடக்கிய அது புலப்படக் கூறுகின்ற உவமத்துடன், அகப்பொருள் ஒத்து முடியும்படி ஏற்றமுறையில் சொற்களை உள்நிறுத்தி உரைப்பது உள்ளுறை உவமமாகும். இதனை,

**"உள்ளுறுத்த இதனோடு ஒத்துப் பொருள் முடிகென**
**உள்ளுறுத்த உரைப்பதே உள்ளுறை உவமம்"**

என்ற தொல்காப்பிய நூற்பாவின் வாயிலாக அறியலாம்.

நன்கு ஆராய்ந்து அறியும் தன்மையுடையதாய் பறவை, விலங்கு முதலான பிறவற்றுள்ளும் உவமிக்கப்படுகின்ற தன்மை புலப்படுவது உள்ளுறை உவமமாகும். இதனை,

**"உள்ளுறை உவமம் உய்த்துணர் வகைத்தாய்**
**புள்ளொடு விலங்கொடும் பிறவொடும் புலப்படும்"**

என நம்பியகப்பொருள் நூற்பா சுட்டுகின்றது.

அகநானூற்றுக் குறிஞ்சிப்பாடல்களிலும் கருப்பொருளை மையமாகக் கொண்டு உள்ளுறைகள் காணப்படுகின்றன.

**"பாறை நெடுஞ்சுனை, விளைந்த தேறல்**
**அறியாது உண்ட கடுவன் அயலது**
**கறிவளர் சாந்தம் ஏறல் செல்லாது,**
**நறுவீ அடுக்கத்து மகிழ்ந்து கண்படுக்கும்" (அகம்-2)**

பாறையிலுள்ள பெரிய சுனையில் உண்டான தேனை ஆண்குரங்கானது தேன் என அறியாமல் உண்டது. அதன் இனிமையை அறிந்த குரங்கு தன் தொழிலாகிய மரம் ஏறுதலை மறந்து அங்கேயே உறங்கியது என்ற வெளிப்படைப் பொருளில் களவொழுக்கத்தின் மூலம் இன்பம் நுகர்ந்த தலைவன் தன் தொழிலாகிய அறஞ்செய்தலை விடுத்து, தலைவியையும் மறந்து களவொழுக்க இன்பத்தில் ஊறித்திளைத்து அங்கேயே கிடந்தான் என்ற கருத்தை ஆசிரியர் இப்பாடலில் உள்ளுறையாகக் கூறியுள்ளார்.

**"பெரிய கேழல் அட்ட பேழ்வாய் ஏற்றை**
**புலா அமல் அடுக்கும் புலாவ ஈர்க்கும்" (அகம்-8)**

பிளந்த வாயினையுடைய ஆண் புலியானது பெரிய பன்றியினைக் கொன்று அதை பழநாற்றம் உடைய பலாமரங்கள் செறிந்த மலைப்பகுதியில் புலால் நாறும்படி இழுத்துச் சென்றது என்ற வெளிப்படைப் பொருளில் தலைவன் தான் இன்பம் அடையும்படி தலைவியைக் கூடி, அதன் நிமித்தம் புகழ்ச்சியையுடைய தலைவியின் குடியை இகழ்ச்சியடையச் செய்தான் என்ற கருத்து உள்ளுறையாகக் கூறப்பட்டுள்ளது.

**"ஈர் உயிர்ப் பிணவின் வயவுப்பசி களைஇய**
**இருங்களிறு அட்ட பெருஞ்சின உழுவை**
**நாம நல்லாரக் கதிர்பட உமிழ்ந்த**
**மேய்மணி விளக்கின் புலா ஈர்க்கும்" (அகம் 72)**

கருவுற்றிருக்கும் பெண்புலியின் பசியைப் போக்க ஆண்புலியானது பெரிய பன்றியைக் கொன்று அதை இழுத்துச் செல்வதற்கு, பிறருக்குத் தீங்கு செய்யும் அச்சம் தரும் பாம்பு உமிழ்ந்து வைத்திருந்த மணியின் ஒளியானது துணையாக அமைகிறது என்ற வெளிப்படைப் பொருளில் தலைவன் தலைவியை மணந்துக்கொள்ளும் எண்ணத்துடன் வந்தால் கடுஞ்சொல் சொல்வாரும் இன்சொல் கூறி திருமணத்திற்கு உடன்படுவர் என்னும் கருத்து உள்ளுறையாக அமைந்துள்ளது.

**"இரும்பிடி கன்றொடு விரைஇய கயவாய்ப்**
**பெருங்கை யானைக் கோள் பிழைத்து, இரீஇய**
**அடுபுலி வழங்கும் ஆர்இருள் நடுநாள்" (அகம் 118)**

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

இப்பாடலில் புலியானது அகன்ற வாயினையும், பெரிய கையினையும் உடைய கரிய யானையைத் தன் இரையாக்கிக் கொள்ளும் முயற்சியில் பிழைத்தமையால் யானைகள் கூட்டமாக ஓரிடத்தே தங்கின என்னும் வெளிப்படைப் பொருளில் தலைவன், தலைவியை மணந்து கொள்ளும் முறையில் பிழைத்தமையால் அவள் எங்கும் செல்ல முடியாமல் இற்செறிப்புக்கு உள்ளாக்கப்பட்டாள் என்னும் கருத்து உள்ளுறையாக அமைந்துள்ளது.

**“குறவர் ஊன்றிய குரம்பை புதைய,**
**வேங்கை தாஅய தேம் பாய் தோற்றம்**
**புலி செத்து, வெரீஇய புகர்முக வேழம்**
**முழை படு சிலம்பில் கழைபட, பெயரும்” (அகம் 12)**

குறவர்கள் அமைத்த குடிசையின் மீது வேங்கைப் பூக்கள் அதிகளவில் விழுந்து குடிசையை மறைக்கும் அளவிற்குப் பரவிக் கிடந்தன. இதைப்பார்த்த யானை, பூக்களால் மூடப்பட்ட குடிசையை புலியெனக் கருதி அஞ்சி ஓடியது என்னும் வெளிப்படைப் பொருளில் தலைவன் இரவுக்குறியில் தலைவியைச் சந்திக்க வரும்போது ஏற்படும் இடையூறுகளால் தலைவியைப் பார்க்கக் கூடாமல் திரும்பிச் செல்லும் நிலை ஏற்பட்டால் தலைவி உயிர்வாழமாட்டாள் என்னும் கருத்து உள்ளுறையாக அமைந்துள்ளது.

**“கன்று கால் ஒய்யும் கடுஞ் சுழி நீத்தம்**
**புன் தலை மடப் பிடிப் பூசல் பல உடன்**
**வெண் கோட்டு யானை விளி படத் துழவும்**
**அகல் வாய்ப் பாந்தட் படாஅர்ப்**
**பகலும் அஞ்சும் பனிக் கடுஞ் சுரனே” (அகம் 68)**

கடும் மழை பெய்ததால் பெருக்கெடுத்து ஓடிய வெள்ளத்தில் யானைக் கன்றுகள் அடித்துச் செல்லப்பட்டன. இதைப்பார்த்துப் பெண்யானைகள் வருத்தமுற்று அலறியபோது ஆண்யானைகள் குரல் கொடுத்தன என்னும் வெளிப்படைப் பொருளில் அலர் தூற்றுதலினிமித்தமும், தலைவன் வரும் வழியின் கொடூரத்தை நினைத்தும் தலைவி அஞ்சி வருத்தமுற்ற பிறகே தலைவன் அவளது வருத்தத்தை மறைக்க முயல்வானேயன்றி அதற்கு முன்பு முயலமாட்டார் என்னும் கருத்தை ஆசிரியர் உள்ளுறையாகக் கூறியுள்ளார்.

**“நனந்தலைக் கானத்து ஆளிஅஞ்சி,**
**இனம் தலைத்தரூஉம், வாய் புகு, கடாத்து**
**பொறி நுதற் பொலிந்த வயக்களிற்று ஒருத்தல்**
**இரும் பிணர்த் தடக் கையின், ஏமுறத் தழுவ,**
**கடுஞ்சூல் மடப் பிடி நடுங்கும்” (அகம் 78)**

புள்ளிகளையுடைய பொலிவுற்றுத் திகழும் பெரிய நெற்றியுடன் காணப்படும் ஆண் யானையானது பெண் யானையை அரவணைத்துக் காக்கும் தன்மையுடையது. இருப்பினும், பெண்யானை ஆளி எனப்படும் பெரிய மிருகத்தை நினைத்து அஞ்சி நடுங்கியது என்னும் வெளிப்படைப் பொருளில் தலைவன் தலைவியைப் பாதுகாக்கும் தன்மையுடையவனாய் இருந்தாலும் அவனது பிரிவை நினைத்து தலைவி அஞ்சி நடுங்கினாள் என்னும் கருத்து உள்ளுறையாகக் கூறப்பட்டுள்ளது.

**“கொடிச்சி பெருவரை மருங்கில் குறிஞ்சிபாட,**
**குரலும் கொள்ளாது, நிலையினும் பெயராது,**
**படாஅப் பைங் கண் பாடு பெற்று, ஒய்யென**
**மறம் புகல் மழ களிறு உறங்கும் நாடன்” (அகம் 102)**

கானவனது மனைவியாகிய கொடிச்சி பாடிய குறிஞ்சிப் பாடலைக் கேட்ட, தினையை உண்ண வந்த யானையானது மிகுந்தபசி இருந்த பிறகும் தினையை உண்ண முடியாமல் அவ்விடத்திலேயே தூங்கியது (உறங்கியது) என்று ஆசிரியர் வெளிப்படையாகக் கூறியுள்ள

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019
Available at: www.ijtlls.com

பொருளில் தலைவியைக்கூட வந்த தலைவன் அலரின் நிமித்தமாக தலைவியை நுகர முடியாமல் சிறைப்புறத்தே இருந்தான் என்னும் கருத்து உள்ளுறையாக அமைந்துள்ளது.

**“புலிப்பகை வென்ற புண்கூர் யானை**
**கல்லகச் சிலம்பில் கைஎடுத்து உயிர்ப்பின்**
**நல்இணர் வேங்கை நறுவீ கொல்லன்**
**குருகுஊது மிதிஉலைப் பிதிரிவின் பொங்கி**
**சிறுபல் மின்மினி போல, பல உடன்**
**மணநிற இரும்புதல் தாவும் நாட” (அகம் 202)**

புலியுடன் போரிட்டு வென்ற களிறானது (யானை) போரின் போது ஏற்பட்ட புண்ணின் நோவினால் மலையில் படுத்துத் தன் கையை உயர்த்திப் பெரு மூச்சுவிட்டது. அம்மூச்சு காரணமாக வேங்கை மலர்கள் சிதறிவிழுந்து, அம்மலர்கள் மின்மினிப் பூச்சிகளைப் போல எழுந்து புதரில் தாவும் என்ற வெளிப்படைப் பொருளில் தலைவன் இரவு நேரத்தில் பலவிதமான இடையூறுகளைத் தாண்டி வருவதால் ஊர் எங்கும் அலர் எழுந்தது என்னும் கருத்து உள்ளுறையாக அமைந்துள்ளது.

**“மடப்பிடி மழைதவழ் சிலம்பில் கடுஞ்சூல் ஈன்று**
**கழைதின் யாக்கை விழைகளிறு தைவர,**
**வாழைஅம் சிலம்பில் துஞ்சும்**
**சாரல் நாடன் சாயல் மார்பே” (அகம் 328)**

மேகம் தவழும் மலையில் சூல் ஈன்ற பெண் யானையின் முதுகினை ஆண்யானை தடவிக் கொண்டிருக்க, வாழைத் தோப்புகள் அதிகமுள்ள மலையில் பெண் யானை தன் கன்றுடன் இனிதே வாழும் என்ற வெளிப்படைப் பொருளில், தலைவி தலைவனுடைய வளமிக்க மனையில் குழந்தையைப் பெற்றெடுத்து தலைவன் அவளிடம் மிகந்த அன்பு செலுத்தி சிறப்பான இல்லறம் நடைபெறுவதை விரும்புவாள் என்ற கருத்தை உள்ளுறையாக ஆசிரியர் கூறியுள்ளார்.

**“கிளையோடு மேய்ந்த கேழ்கிளர் யானை**
**நீர்நசை மருங்கின் நிறம்பார்த்து ஒடுங்கிய,**
**பொருமுரண் உழுவை தொலைச்சி, கூர்நுனைக்**
**குருதிச் செங்கோட்டு அழிதுளி கழாஅ” (அகம் 332)**

நீர் அருந்தச் சென்ற போது தன்னைத் தாக்கிய புலியை, போரிட்டுக் கொன்ற யானை இரத்தம் படிந்த தன் கொம்பினை மழைநீரில் கழுவி, பின்னர் பெண்யானையுடன் மலையில் சென்று உறக்கம் கொண்டது என்ற வெளிப்படைப் பொருளில், தலைவன் அலர் கூறும் பெண்களின் வாயை அடக்கி களவொழுக்கத்தால் ஏற்பட்ட மாசு தீரத் தலைவியை மணந்து தன் இல்லத்தில் தலைவியுடன் இனிமையான இல்லறம் நடத்தினான் என்ற கருத்து உள்ளுறையாக அமைந்துள்ளது.

**“பகுவாய்ப் பல்லிப் பாடு ஓர்த்து, குறுகும்**
**புருவைப் பன்றி வரு திறம் நோக்கி**
**கடுங் கைக் கானவன் கழுதுமிசைக் கொளீஇய**
**நெடுஞ் சுடர் விளக்கம் நோக்கி, வந்து, நம்**
**நடுங்கு துயர் களைந்த நன்னராளன்” (அகம் 88)**

பல்லி சொல்லும் நிமித்தத்தைக் கேட்டு தினைப்பயிரை உண்ண வந்த பன்றியின் வருகையானது கானவன் கொளுத்தி வைத்திருந்த சுடர் ஒளியில் வெளிப்பட்டு விடுகிறது என்ற வெளிப்படைப் பொருளில் தலைவியைச் சந்திக்க வரும் தலைவனின் வருகையும் வெளிப்பட்டு விடும் என்ற கருத்து உள்ளுறையாக அமைந்துள்ளது.

**“வயிரத் தன்ன வைஏந்து மருப்பின்,**

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

**வெதிர்வேர் அன்ன பருஉ வமயிர்ப் பன்றி**
**பறைக்கண் அன்ன நிறைச்சுனை பருகி,**
**நீலத்தன்ன அகல்இலைச் சேம்பின்**
**பிண்டம் அன்ன கொழுங்கிழங்கு மாந்தி,**
**……கிளை அமல் சிறுதினை விளைகுரல் மேய்ந்து,**
**கண் இனிது படுக்கும்'' (அகம் 178)**

கூர்மையான கொம்பையும், பருத்த மயிரையும் உடைய பன்றியானது சுனையில் நீலைக் குடித்து கொழுமையான கிழங்கைத்தின்று, தினையின் முற்றிய கதிரை உண்டு இனிமையாய் உறங்கியது என்ற வெளிப்படைப் பொருளில் தலைவன் தான் எண்ணியவற்றையெல்லாம் அடைந்து தலைவியை மணந்து இன்பமுடன் இனிது வாழ்வான் என்ற கருத்தை ஆசிரியர் உள்ளுறையாகச் சுட்டியுள்ளார்.

**"வயநாய் எறிந்து, வான்பறழ் தழீஇ,**
**இளையர் எய்துதல் மடக்கி, கிளையொடு**
**நால்முலைப் பிணவல் சொலிய, கான் ஒழிந்து**
**அரும்புழை முடுக்கர் ஆள்குறித்து நின்ற**
**தறுகட் பன்றி'' (அகம் 248)**

அஞ்சாமையுடைய ஆண்பன்றியானது வலிமைமிக்க வேட்டை நாயை எதிர்த்து விரட்டி, துயர்களையும் தடுத்து நிறுத்தி பெண்பன்றிக்கு எவ்வித தீங்கும் ஏற்படாமல் காவலாய் நின்றது என்ற வெளிப்படைப் பொருளில் தலைவன் இற்செறிக்கப்பட்ட தலைவிக்கு ஏற்படும் துன்பத்தைப் போக்கி அவளைக் காக்கவேண்டும் என்ற கருத்து உள்ளுறையாகக் கூறப்பட்டுள்ளது.

**"கூனன் எண்கின் குறுநடைத் தொழுதி**
**சிதலை செய்த செந் நிலைப் புற்றின்**
**மண் புனை நெடுங் கோடு உடைய வாங்கி**
**இரை நசைஇப் பரிக்கும்''**

கரடிக் கூட்டமானது கறையான் எடுத்த சிவந்த புற்றினது உச்சியை உடைத்து அதிலுள்ள இரையினை உண்டு, மேலும் அதனை உண்ண விரும்பி அங்கேயே சுற்றித் திரிந்நதன என்று வெளிப்படையாகக் கூறப்பட்டுள்ள பொருளில், தலைவன் பெற்றோர் ஏற்படுத்திய காவலையும் மீறித் தலைவியுடன் களவொழுக்கத்தில் ஈடுபட்டு, பின்னரும் அக்களவொழுக்கத்தினையே விரும்பி இரவுக்குறி பகற்குறிகளைப் பெறுவதற்கு சுற்றிச் சூழ்ந்து வந்துள்ளான் என்ற கருத்து உள்ளுறையாக அமைந்துள்ளது.

**"அல்கல்**
**விரவுப் பொறி மஞ்ஞை வெரீஇ, அரவின்**
**அணங்குடை அருந் தலை பை விரிப்பவை போல**
**காயா மென் சினை தோய நீடிப்**
**பல் துடுப்பு எடுத்த அலங்கு குலைக் காந்தள்'' (அகம் 108)**

அனைவரும் விரும்பும் அழகிய காந்தள் மலரின் விரிந்த மடலானது அஞ்சத்தக்க பாம்பின் படம் போன்று இருந்தது என்ற வெளிப்படைப் பொருளில் விரும்பத்தக்க சிறப்புடைய தலைவனின் வருகையானது வழியின் தீமையால் அச்சத்தைத் தருவாதாக இருந்தது என்ற கருத்து உள்ளுறையாக அமைந்துள்ளது.

**"திருமணி உமிழ்ந்த நாகம் காந்தட்**
**கொழுமடற் புதப்பூ ஊதும் தும்பி**
**நல்நிறம் மருளும் அருவிடர்'' (அகம் 138)**

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

காந்தளின் புதுமலரை நுகர்ந்ததனால் நல்ல நிறத்தைப் பெற்ற வண்டினைக் கண்ட, மணியை உமிழ்ந்த நாகமானது, வண்டினை தன் மணியென் நினைத்து மயங்கியது என்ற வெளிப்படைப் பொருளில் தலைவனுடன் கூடி இன்பம் அடைந்தால் புதுப்பொலிவினைப் பெற்றத் தலைவியைக் கண்டு அன்னை மயங்கினாள் என்ற கருத்து உள்ளுறையாக அமைந்துள்ளது.

**“அரும்புமுதிர் வேங்கை அலங்கல் மென்சினைச்**
**சுரம்புவாய் திறந்த பொன்புரை நுண்தாது**
**மணிமருள் கலவத்து உறைப்ப அணிமிக்கு**
**அவிர்பொறி மஞ்ஞை ஆடும்” (அகம் 242)**

வேங்கை மரத்தின் இதழ்களிலுள்ள நுண்ணிய பொடிகள் நீலமணி போன்ற மயிலின் தோகையில் விழும் போது அழகு மிகுந்த மயில் தனது தோகையை விரித்து ஆடும் என்ற வெளிப்படைப் பொருளில் தலைவனின் மார்பிலுள்ள சந்தனம் தலைவியின் மார்பில் படுமாறு தழுவப்பெற்றால் தலைவி அழகுடன் விளங்குவாள் என்ற கருத்தை ஆசிரியர் உள்ளுறையாகக் கூறியுள்ளார்.

**“பூநுதல் யானையொடு புலிபொரக் குழைந்த**
**குருதிச் செங்களம் புலவுஅற, வேங்கை**
**உருகெழு நாற்றம் குளவியொடு விலங்கும்” (அகம் 268)**

யானையுடன் புலி போரிட்டமையால் இரத்தம் படிந்து காணப்பட்ட போர்களத்திலிருந்து எழும் புலால் நாற்றத்தை, வேங்கை மலர்களின் மணமும், காட்டு மல்லிகையின் மணமும் ஒன்று கூடி மாற்றியது என்று வெளிப்படையாகக் கூறப்பட்ட பொருளில் களவொழுக்கத்தினால் ஏற்பட்ட பழியானது, தலைவியைத் தலைவன் மணந்து கொண்டு இல்லறம் நடத்துவதன் மூலம் நீங்கிவிடும் என்ற கருத்து உள்ளுறையாக அமைந்துள்ளது.

**“பொன் நேர் புதுமலர் வேண்டிய குறமகள்**
**இன்னா இசைய பூசல் பயிற்றலின்**
**ஏ கல் அடுக்கத்து இருள் அளைச் சிலம்பின்**
**ஆ கொள் வயப்புலி ஆகும் அ ஃது ”(அகம் 52)**

வேங்கை மரத்தின் உயர்ந்த கிளையிலுள்ள பொன் போன்ற மலரைப் பறிப்பதற்காக ‘புலிபுலி’ என குறத்தி எழுப்பிய ஒலியானது ஊரனைத்தும் அறிந்தது என்ற வெளிப்படைப் பொருளில் தலைவனுடன் தலைவி கூடத்தொடங்கியவுடனேயே அலர் எழும்பி ஊரார் அனைவரும் அறிந்தனர் என்ற கருத்து உள்ளுறையாக அமைந்துள்ளது.

**“முடவுமுதிர் பலவின் குடம்மருள் பெரும்பழம்**
**புல்கிளைத் தலைவன் கல்லாக் கடுவன்” (அகம் 352)**

ஆண் குரங்கானது பலா மரத்திலுள்ள பெரிய பழத்தைத் தழுவிக் கொண்டுத் தன்துணையாகிய பெண் குரங்கினை அழைக்கும் என்ற வெளிப்படைப் பொருளில் தலைவன் தன் சுற்றுப்புறத்தாரைப் பேணிப்பாதுகாத்துக்கொண்டு தலைவியிடம் பேரன்பு உடையவனாக இருந்தான் என்ற கருத்தை உள்ளுறையாக ஆசிரியர் கூறியுள்ளார்.

உள்ளுறையானது அகப்பொருளுக்கே உரியதாகவும், புலவர்கள் தம் மதிநுட்பம் காட்டும் நெறியாகவும் அமைந்துள்ளது. குறிஞ்சி நிலத்திலுள்ள கருப்பொருட்களைக் கொண்டு உள்ளுறைகள் இவ்வியலில் அமைந்துள்ளன. தலைவன் தலைவியின் களவும் தலைவியின் அன்பும் உள்ளுறைப் பொருளாக விளக்கப்பட்டுள்ளது. தலைவன் தலைவியின் அன்பைப் போலவே விலங்குகளின் அன்பைப் பற்றியும் உள்ளுறை விளக்குகிறது.

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்


International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com


**துணைநூற்பட்டியல்**

1. இராம சுப்பிரமணியம் வ.த. நம்பியகப்பொருள் விளக்கம், முல்லை நிலையம், 9-பாரதிநகா் முதல் தெரு, தி.நகா், சென்னை 600 017.
2. இளம்பூரணா். தொல்காப்பியம், சாரதா பதிப்பகம், 6-16 தோப்புவெங்கடாசலம் தெரு, திருவல்லிக்கேணி, சென்னை 600 005.
3. செயப்பால். இரா. அகநானூறு, நியூசெஞ்சுரி புக்ஹவுஸ் (பி)லிட், 41-பி சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட், சென்னை 600 098.
4. தாசன். மு. தொல்காப்பியக் களஞ்சியம், பொருளதிகாரம், தெருவுக்கடை, குமரிமாவட்டம் 629 187.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

# தமிழ்ப் புதுக்கவிதைகளின் மூன்று முகங்கள்

# The Three Facets of Modern Poetry in Tamil

**முனைவர் பா.இரேவதி,** உதவிப்பேராசிரியர்,
தமிழ்த்துறை, நா.ம.ச.ச.வெள்ளைச்சாமி நாடார் கல்லூரி, மதுரை-19

## Abstract

*In the 20th century, the impact of Western literature has had a profound change in Tamil targeting. The poem thus gained a new revival by liberating itself from the subject of verse. The purpose of this article is to analyze the history of poetry in three periods. The history of Tamil revision can be divided into three periods in its developmental stage. They are 1. 1930-1950, 2. 1950-1970 and 3. 1970. Hence, the history of modern poetry begins within the period (1930-1950). Under the influence of Bharathi's 'verse poem', many poets began to write such poetry. But they did not become Bharati's 'sights', but they continued to try to write it down, without any issue. The paper delves deep to decode these facts with related concepts.*

**Keywords:** Three Facets of Modern Poetry, Tamil Poetry

20-ஆம் நூற்றாண்டில் மேலைநாட்டு இலக்கியங்களில் ஏற்பட்ட தாக்கத்தின் விளைவால் தமிழ் இலக்கித்தில் பெரும் மாறுதல்கள் ஏற்பட்டன. அவ்வகையில் கவிதையானது செய்யுள், வசனகவிதை என்ற நிலையிலிருந்துத் தன்னை விடுவித்துக் கொண்டு புதுக்கவிதையாக மறுமலர்ச்சி பெற்றது. இவ்வாறான புதுக்கவிதையின் வரலாற்றை மூன்று காலகட்டங்களாகப் பகுத்து ஆய்வது இக்கட்டுரையின் நோக்கமாகும். தமிழ்ப் புதுக்கவிதை வரலாற்றை அதன் வளர்ச்சி நிலையில் மூன்று காலகட்டங்களாக பிரிக்கலாம். அவை, 1) 1930-1950 2) 1950-1970 3) 1970. புதுக்கவிதையின் வரலாறு **'மணிக்கொடி' (1930-1950)** குழுவினரின் மூலம் தொடங்குகிறது. பாரதியின் 'வசனகவிதை' தாக்கத்தால் பல கவிஞர்கள் அவ்வாறான கவிதையை எழுதத் தொடங்கினார்கள். ஆனாலும் அவைகள் பாரதியின் 'காட்சிகள்' போல் அமையாமல் போனாலும் அக்கவிஞர்கள் யாப்புகளுக்குட்படாமலும் அதனைக் கட்டுடைத்து எழுதும் முயற்சியையும் தொடர்ந்தனர். **வால்ட் விட்மன், எஸ்ரா பவுண்ட், டி.டிஸ்.டிலியட்** போன்ற மேனாட்டாரின் கவிதைகளைக் கொண்டு அதே முறையில் எழுதத் தொடங்கினர். இவ்வகையான செயலில் ஈடுபட்டவர்களுள் முதன்மையானவர் ந.பிச்சமூர்த்தி. இவர் கவிதைகள் மணிக்கொடியில் வெளிவந்தன. இவரைத் தொடர்ந்து பல்வேறு கவிஞர்களும் புதுக்கவிதை எழுதத் தொடங்கினர். அவர்களுள் குறிப்பிடத்தக்கவர்கள் **கு.ப.இராஜகோபால், வல்லிக்கண்ணன், க.ஞா.சுப்பிரமணியன் (மயன்), சீனிவாசராகவன், ச.து.ச.யோகியார், தி.சு.வரதராசன், புதுமைப்பித்தன்** போன்றோராவர்.

**'மணிக்கொடி குழுவினர்'** பாரதியின் புதிய முயற்சியை நாமும் மேற்கொள்ள வேண்டும் என்ற ஆர்வமிகுதியால் எழுதியவர்கள். இவர்களின் கவிதை வசனமாகவும் மரபாகவும் என ஒரு குழப்பமான நிலையில் எழுதப்பட்டது. இவர்களுள் பலர் 'வசனகவிதை' எனற வடிவத்தில் மனங்கொண்டு எழுதினார்களேயன்றி அவர்கள் புதுப்பொருளிலே ஈடுபாடு என அறுதியிட்டுச் சொல்வதற்கில்லை. ஆனால் மரபுவழிச் சிந்தனையாளர்களின் எதிர்ப்புக்கும்

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

ஏசலுக்குமிடையே வசனகவிதை எழுதுவதிலிருந்து பின்வாங்கவில்லை எனலாம். இக்காலக் கட்டத்திலே வசனகவிதையை அடுத்த கட்டத்திற்கு முன்னெடுத்துச் செல்லவேண்டும் என்ற சிந்தனை இருந்துள்ளது. இதை,

> **"அச்சியந்திரம், லைப்ரரிகளும் மௌனவாசிப்பும் தோன்றிய பிறகு அவை தோன்றாத காலத்தில் அமல் செலுத்திய கேள்வி மரபும் ஸ்தூலக் காதின் ஆட்சியும் கண்ணெதிரே மறைந்து வருவதைக் கண்ட பிறகும் கவிதையை வேறுவிதமாக அமைக்க ஏன் முயலக்கூடாது"[1]**

என ந.பிச்சமூர்த்தி சிந்திக்கிறார். ஒரு காலகட்டத்தில் வசனகவிதைகளை ஆதரித்த இதழ்கள் நின்று போனபின் 1914இல் வசனகவிதை முயற்சி ஓய்ந்தன. அதனால் மரபிலே இன்னும் மூழ்கியிருந்தோர் வசனகவிதை செத்துவிட்டது என மகிழ்ந்தனர்.

மணிக்கொடிக்குப் பின் **'ஜெயபாரதி' 'சூறாவளி' (1939) 'கிராம ஊழியன்' (1943) 'காலமோகினி' (1947)** போன்ற புதுக்கவிதையையும் கவிதை பற்றிய விவாதங்களையும் வெளியிட்டு புதுக்கவிதை கால்கோள்வதற்கான களமாக இருந்தன. 1950க்குப் பிறகு தொடங்கி 1970 வரையில் எழுதப்பட்ட கவிதைகளைப் புதுக்கவிதை வளர்ச்சியின் 2ஆம் காலக்கட்டமாகக் கொள்ளலாம். சி.சு.செல்லப்பா 1959 சனவரியில் 'எழுத்து' இதழைத் தொடங்கினார். இதன் ஆரம்ப நிலையில் (4ஆவது இதழ் வரை) கவிதை பற்றிய எந்த கண்ணோட்டமும் அக்கறையும் கொள்ளவில்லை. முதன் முதலில் காலமோகினியில் வெளியான கு.ப.இராஜகோபாலின் 'வசனகவிதை' என்னும் கட்டுரையை கு.ப.இரா. நினைவு ஏட்டில் (ஐந்தாவது இதழில்) வெளியிட்டது. அதில்,

> **"சுவடு தெரிகிற தடத்திலே செல்ல மறுத்து புதுத்தடம் போட்டுக் கொண்டு இலக்கியத்தின் எல்லைகளைச் சற்று விரிவடையச் செய்ய முயல்கிறவர்களின் படைப்புக்களை வரவேற்பது"[2]**

என்பதாகப் பிரகடனப்படுத்திக் கொண்டது. இதன்பிறகே புதுக்கவிதைகள் மற்றும் கவிதைகள் பற்றிய கட்டுரைகளும் ஏராளமாக வெளிவந்தன.

எழுத்தில் வெளியான கவிதைகளில் பெரும்பாலான வாழ்க்கையை மேலோட்டமாக விமர்சித்ததேயன்றி புரட்சிக் கண்ணோட்டத்தில் இருந்ததென சொல்லும்படியாக அமையவில்லை. ஆனாலும் ஓரளவிற்கு மரபிலிருந்து விடுப்பட்டாலும் பழைமை கருத்துக்களிலிருந்து முற்றும் விடுதலையாக முடியாத வகையில் படைப்புக்கள் வெளிவந்தன. இக்காலத்தில் மனித சிறுமை பற்றிய தங்கள் கருத்துக்களையே பாலியல் தடுமாற்றம், முடியாட்சி கவிழ்ப்பு, அரசியல் விரக்தி, மனமுறிவு, கசப்புணர்வு போன்றவைகளைப் பிரதிபலிப்பதாகவும் வெறும் அகவயக் கவிதைகளாகவுமே இருந்தன.

> **"தற்கால வாழ்க்கைச் சூழல் எனக்குத் திருப்தி தரவில்லை. எனவே என் கவிதைகள் ஏக்கம், வேதனை, தார்மீகக் கோபம், மனப்புழுக்கம் குறைவு கொண்டவையாகவே இருக்கும். ஆனால் நான் நம்பிக்கை கொண்டவன் என்வதை மட்டும் சொல்லி நிறுத்திக் கொள்கிறேன்"[3]**

என்று ஒரு கவிஞன் சொல்வதின் மூலம் அக்காலக் கவிதைச் சூழலை அறிய முடிகிறது. இக்காலகட்டத்தில் தி.சோ.வேணுகோபால், டி.கே.துரைஸ்வாமி, சி.சு.செல்லப்பா, இ.கஸ்தூரிரங்கன், பசுவய்யா (சுந்தரராமசாமி) மா.இளையபெருமாள், ஜெயகாந்தன், தருமு சிவராமு, சி.மணி போன்றோர் கவிதைகளை எழுதினர். ஞானக்கூத்தன் கீழ்வெண்மணியில் நிகழ்ந்த கொடுமையை (1969) அடித்தளமாக வைத்து எழுதிய கவிதைகள் அரசியல் நடப்புகளைக் கவிதைப் பொருளாக்குவதா? என்று அவற்றை வெறுத்து ஒதுக்கினர்.

> **"பாரதியின் வசனகவிதை முயற்சி மேற்கின் முயற்சியைப் பார்த்து செய்யப்பட்ட ஒரு சோதனைதான். யாப்பை வெறுத்த முயற்சியன்று"[4]**

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

ஆவரைப் பின்தொடர்ந்து எழுதியவர்கள் யாப்பின் மீது ஏற்பட்ட கசப்பு, புதுமை, ஆர்வம், மேற்கத்திய கவிதையில் பெற்ற அறிமுகம். யாப்பு அறியாமை எதையும் பாடுவதற்குத் தடையில்லா நிலை. சுதந்திரச் சொற்கள் என இவர்களின் புதுக்கவிதை முயற்சி யாப்பு கட்டுப்பாடுகளை வேரறுத்தது. எழுத்துவிற்குப் பிறகு பிற வெளியீடான இலக்கிய வட்டம் (1996 க.நா.சு தோற்றுவித்தது) மேலும் நடை (அக்டோபர் 1968) அதைத் தொடர்ந்து **'கணையாழி', 'தீபம்", 'அ∴', 'ஞானரதம்'** போன்ற இதழ்கள் தோன்றி தொடர்ந்து புதுக்கவிதைகளை வெளியிட்டன.

1970களிலிருந்து தொடங்கிய கவிதை மரபைப் புதுக்கவிதையின் மூன்றாவது காலகட்டமாகக் கருதலாம். இக்காலத்தில் பொதுவுடைமைக் கருத்துக்கள் கவிதைகளில் மிகுதியாக இடம் பெற்றன. முற்போக்குச் சிந்தனைகளோடு வெளிவந்த **'தாமரை'** (1958) தொடக்கக் காலத்தில் கவிதைப் பற்றிய அக்கறை இல்லாமலிருந்தது. பின் புதுக்கவிதை வடிவத்தை எதிர்த்து வந்தது. அதன் பிறகு தான் பொதுவுடைமைக் கருத்துக்களை உள்ளடக்கிய கவிதைகளை வெளியிடத் தொடங்கினர்.

> **"இக்காலக் கட்டத்தில் கவிதைத் துறையின் சித்தாந்த ரீதியான ஒரு மாற்றம் நிகழத் தொடங்கிற்று. கட்சிகளுக்கு அப்பால் மார்க்ஸிய சித்தாந்தம் அறிவாறிகளையும் படைப்பாளிகளையும் தொட்டது. சோவியத் யூனியன் மற்றும் சோசலிச நாடுகளின் கவிதைகளும் ஏராளமாக தமிழுக்கு அறிமுகப்படுத்தப்பட்டன"**[5]

இதன்மூலம் பெரும்பாலானோர் புதுக்கவிதை எழுதுவதில் ஈடுபட்டனர்.

**'தாமரை'** இதழில் கவிதை வெளியீட்டுக்குப் பிறகு பல மரபுக் கவிஞர்களும் புதுக்கவிதை எழுத முன்வந்தனர். **காமராசு, புவியரசு, பரிணாமன், விடிவெள்ளி, நவபாரதி, சிற்பி** போன்றோர் சமுதாய விழிப்புணர்வுக்கான கவிதைகளை மக்களின் குரலாக ஒலித்தனர். இக்காலப் படைப்புமுறை முன்பிருந்த கவிதையின் உள்ளடக்கத்தை மாற்றியமைத்து,

> **"தமிழ்க் கவிதையின் புரட்சிப் புனைவியலாகிய உள்ளடக்கத்தைப் பெரிதும் மாற்றி அனைத்துத் தமிழ்க்கவிதையைச் செழுமையாக்கி எழுபதுகளில் புதுக்கவிதைக்கு அழியா இடத்தைப் பெற்றுத் தந்தவர் நா.காமராசன் ஆவார்"**[6]

மேனாட்டுத் தாக்கமான புனைவியற் பாங்கைத் தமிழ்க் கவிதையுலகில் அறிமுகப்படுத்திய முன்னோடி இவரே ஆவார். சமூகத்தின் மீதுள்ள அக்கறையாலும் 'தாமரை'யில் எழுதிய கவிதையனுபவத்தாலும் பொதுவுடைமைச் சிந்தனையாளர்கள் வானம்பாடி என்னும் இலக்கிய அமைப்பின் மூலம் சமூக சிந்தனையை வளர்த்தெடுத்தனர்.

**'வானம்பாடி'** (1971) என்ற இதழைப் புதுக்கவிதைக்கென்றே ஏற்படுத்தினர். சிற்பியை ஆசிரியராகக் கொண்டு இது பொள்ளாச்சியிலிருந்து வெளிவந்தது. இந்த வானம்பாடியின் அறிமுகமே ஒரு வரலாறாய் நீளும் இந்த இயக்கம் எந்தக் கட்சி சார்பின்றியும் சமுதாயப் பார்வையின் அடிப்படையில் முற்போக்கான சிந்தனைகளை முன் வைத்து கட்டப்பட்டதாகும்.

> **"எரிமலையின் உள் மனங்களாய்**
> **அக்னிக் காற்றின் இதழ் விரிக்கும்**
> **அரும்புகளாய்**
> **திக்குகளின் புதல்வர்களாய்**
> **தேச வரம் பெற்றவர்களாய்**
> **...மண்ணை வலம் வரும் பறவைகளாய்**
> **மானுடம் பாடிவரும் வானம்பாடிகளின்**
> **விலையிலாக் கவிமடல்"**[7]

என்று தங்கள் வெளியீடு பற்றி பெருமையோடு விளம்பரம் செய்து கொண்டனர். இவ்வாறு வானம்பாடிகளால் தான் சமூகத்தில் ஒரு புரட்சியை ஏற்படுத்த முடிந்தது.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

> **"புலவர்களின் செய்யுள் காட்டிலிருந்து விடுபட்டு மக்களின் அரவணைப்பில் மகிழத் துடிக்கும் முற்போக்கு எண்ணத்துடன் முற்போக்கு இயக்கங்கள் ஆங்காங்கு அணிதிரளத் தொடங்கியதும் தனி மனித வாழ்த்துக் கெதிரான சமூக யதார்த்தமாகும். தன் தத்துவ பலத்தோடு வியூகம் அமைத்தலும் இந்தக் காலத்தில் தான்"[8]**

என்று வல்லிக்கண்ணன் கூறுவதிலிருந்து கலையில் உண்மையான கோட்பாட்டை வானம்பாடி இயக்கம் நிறைவு செய்திருக்கிறது என்பதை அறியலாம்.

வானம்பாடி இயக்கத்தின் மூலம் **அப்துல் ரகுமான் 'கவிராத்திரி'** நடத்தினர். தொடர்ந்து ஒடுக்கப்பட்ட மக்களுக்கான கவிதைகளை **இன்குலாப், தணிகைச் செல்வன்** போன்றோர் எழுதினர். இக்காலத்தில் எதிர்கால நம்பிக்கை, சமூக விடுதலை, பொதுவுடைமை, நாட்டுப்பற்று, கூட்டுறவு மனநிலை, மனிதநேயம் என பலவற்றையும் புதுக்கவிதையில் எழுதியதன் மூலம் **'எழுத்து'**வின் அகவயக் கவிதை முறையை உடைத்து நடப்புகளைப் பாடுபொருளாக்கிக் கொண்டனர். அதனாலேயே கவிதை வரலாற்றில் காலத்தால் அழிக்க முடியாதபடி வானம்பாடி நிலைபெற்றுவிட்டது.

தமிழ்ப் புதுக்கவிதை வளர்ந்த வளர்ச்சியினையும் தொண்டு செய்த கவிஞர்களையும் இக்கட்டுரை பதிவு செய்துள்ளது. மேலும் ஒவ்வொரு காலகட்டத்தில் புதுப்புது கருத்துக்கள் தோற்றுவிக்கப்பட்டு அவைகள் சமூக மாற்றத்திற்கு எங்ஙனம் காரணமாக விளங்கின என்பதையும் வெளிப்படுத்தியுள்ளது.

**அடிக்குறிப்புகள்**

1. சுதந்திரமுத்து.மு, படைப்புக்கலை, ப.69.
2. வல்லிக்கண்ணன், புதுக்கவிதை தோற்றமும் வளர்ச்சியும், ப.86.
3. சிலம்பொலி செல்லப்பா, இக்கால புதுக்கவிதை உத்திகள், ப.178.
4. சுதந்திரமுத்து.மு, படைப்புக்கலை, ப.69.
5. பொன்னீலன், ஜனகனமன கவிதைகள் அணிந்துரை.
6. அருச்சுதட்சிணாமூர்த்தி, புதுக்கவிதை சில பார்வைகள், ப.21.
7. சுப்புரெட்டியார் டாக்டர். புதுக்கவிதை நோக்கும் போக்கும், பக்.23-24.
8. வல்லிக்கண்ணன், புதுக்கவிதை தோற்றமும் வளர்ச்சியும், ப.253.

**நூற்பட்டியல்**

1. சுதந்திரமுத்து.மு, படைப்புக்கலை, அறிவுபதிப்பகம், 2008.
2. வல்லிக்கண்ணன், புதுக்கவிதை தோற்றமும் வளர்ச்சியும், சாகித்ய அகாடமி, 1978.
3. சிலம்பொலி செல்லப்பா, இக்கால புதுக்கவிதை உத்திகள், பாரி பதிப்பகம்,1984.
4. பொன்னீலன், ஜனகனமன கவிதைகள், நியூ செஞ்சுரி புக்ஹவுஸ், 2015.
5. அருச்சுதட்சிணாமூர்த்தி, புதுக்கவிதை சில பார்வைகள், கழக வெளியீடு, 1981.
6. சுப்புரெட்டியார் டாக்டர். புதுக்கவிதை நோக்கும் போக்கும், கழக வெளியீடு, 1992.

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019
Available at: www.ijtlls.com

# *வெண்சீர் ஈற்றசை நிரையசை இயற்றே* என்ற நூற்பாவின் உரை: சிக்கலும் தீர்வும்

# Explanation of the Verse *Venseer Eettrasai Niraiasai Eyatre*: Problems and Solution

**முனைவர் அ.உமாமகேஸ்வரி,** உதவிப்பேராசிரியர்,
தமிழ்த்துறை, கிருஷ்ணசாமி மகளிர் அறிவியல் கலை மற்றும் மேலாண்மையியல் கல்லூரி, கடலூர்.

## Abstract

*The verse line of Tholkappiam- "Venseer Eettrasai Niraiasai Eyatre" has many controversies and explanations in many facets by various scholars. Scholars such as Ilampooranar, Prof. Nachinarkiniyar, Su. Balasundaram, A. Sivalinganar had written explanations for it. It has had many oppositiuons and the paper tries to find out the problems and solution of the taken concept.*

**Keywords:** *Tholkappiam*, Verse, *Venseer Eettrasai Niraiasai Eyatre*, Problems and Solution

**"வெண்சீர் ஈற்றசை நிரையசை இயற்றே"** (செய்.28) என்ற தொல்காப்பியச் செய்யுளியல் நூற்பாவிற்கு நிறுத்த முறையாலும் நூற்பாவின் செய்தி வழியாலும் பொருள் காணல் மற்றும் இந்நூற்பாவிற்கு உரைவரைந்த இளம்பூரணர், பேராசிரியர், நச்சினார்க்கினியர், சு.பாலசுந்தரம், ஆ.சிவலிங்கனார் ஆகியோர் கண்ட உரைகள், அவற்றிற்கான மறுப்புகள் ஆகியனவற்றை ஆராயும் வகையில் இக்கட்டுரை அமைகிறது.

**நூற்பா வைப்புமுறை உணர்த்தல்**

**"வெண்சீர் ஈற்றசை நிரையசை இயற்றே"** (செய்.28) இந்நூற்பா நிறுத்த முறையாலும் நூற்பாவின் பொருள் நிலையாலும் வஞ்சிப்பாவின்கண் தளைவகை சிதையுமிடத்து அவற்றினை ஓசை நிலையால் சிதையாத் தன்மையான் ஏற்றலைச் சுட்டி நின்றது.

**"இசைநிலை நிறைய நிற்குவ தாயின் அசைநிலை வரையார் சீர்நிலை பெறவே"**[1] என்ற செய்யுளியலின் 26ஆம் நூற்பா, தனியசைச் சீராக ஏற்கப்படும் தன்மையினைக் குறித்து நின்றது. அதனை அடுத்து **"இயற்சீர்ப் பாற்படுத்தியற்றினர் கொளலே தளைவகை சிதையாத் தன்மை யான"** (செய்.27) என்ற நூற்பா அவ்வசைச்சீரினைத் தளைகொள்ளுமிடத்து ஈரைச்சீர் போன்று தளை கொள்ளல் வேண்டும் என்கின்றது. அடுத்து அமைவதே **"வெண்சீர் ஈற்றசை நிரையசை இயற்றே"** (செய்.28) என்னும் நூற்பாவாகும். இது வெண்சீர் வந்து தளை சிதையுமிடத்து ஓசைநிலையான் தளை சிதையாத் தன்மையின் ஏற்றலைக் குறித்து நின்றது. இந்நூற்பா எந்தப் பாவினைச் சேரும் எனின் 27, 26 ஆம் நூற்பாவினைக் கடந்து **"வஞ்சி மருங்கினு மிறுதிநில் லாது"** (செய்.25) என்ற நூற்பாவினைத் தழுவி நிறுத்தமுறையால் வஞ்சிப்பாவிற்குப் பொருளுரைத்ததாகும்.

**நூற்பாப் பொருள்**

வஞ்சிப்பாவின்கண் காய் இறுதியுடைய வெண்சீர் அமைந்து வஞ்சித்தளை சிதையுமிடத்து, வெண்சீரின் ஈற்றாக நின்ற **'காய்'** நேரினை **'நிரை'** அசையாக ஏற்று வஞ்சித்தளை சிதையா வண்ணம் ஓசை நிலையான் தளை கொள்ள வேண்டும் என்கிறது.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

வெண்சீர் ஈற்றசை **'நிரை'** அசையாக மாறுமிடத்து அது கனிச்சீராகும். இஃது வருமொழியுடன் ஒன்றியமையின் ஒன்றிய வஞ்சித்தளையாம். ஒன்றாது அமையின் ஒன்றா வஞ்சித்தளையாக அமைந்து, வஞ்சித்தளை ஓசைநிலையான் சிதையாது அமையப் பெறுமென்கிறது. **(எ.டு),**

**"தொன்னலத்தின் புலம்பலைப்பத் தொடித்தோண்மேல்**
**பன்னலத்த கலந்தொலையப் பரிவெய்தி**
**என்னலத்தகை இதுவென்னென் எழில்காட்டிச்**
**சொன்னலத்தகைப் பொருள்கருத்தினிற் சிறந்தாங்கெனப்**
**பெரிதும்,**
**கலங்கஞர் எய்தி விருப்பவும்**
**சிலம்பிடைச் செலவும் சேணிவந் தற்றே"** (யா.வி.மேற்கோள்.375)

என்று மூன்றுசீரான் அமைந்த வஞ்சிப்பாவில் வெண்சீர் ஈற்றசை 'நிரை' அசையாக ஓசைநிறைவு பெற்றது.

**"தொடியுடைய தோண்மணந்தனன்**
**கடிகாவிற் பூச்சூடினன்**
**நறைகமழுஞ் சாந்தநீவினன்**
**செற்றோரை வழிதபுத்தனன்**
**நட்டோரை உயர்வுகூறினன்**
**----றலையே"** (யா.வி.மேற்கோள்.ப.374)

என்ற இருசீரான் அமைந்த வஞ்சிப்பாவில் வெண்சீர் ஈற்றசை 'நிரை' அசையாக ஓசைநிறைவு பெற்றது.

**உரையாசிரியர்கள் கூறும் கருத்துகளுக்கு மறுப்புரை**

**"வெண்சீர் ஈற்றசை நிரையசை இயற்றே"** (செ.28) என்ற நூற்பா வைப்புமுறையானும் பொருள்முறையானும் கலிப்பாவிற்குரியது என்பர் பேராசிரியரும் நச்சினார்க்கினியரும். பொருள்முறையான் வெண்பாவிற்குரியதென்பர் சு.பாலசுந்தரனாரும் ஆ.சிவலிங்கனாரும்.

**நூற்பா வைப்புமுறைக்கு மறுப்பு**

**பேராசிரியர்**

இது வெண்சீராற் கலித்தளையாமா றுணர்த்துதல் நுதலிற்று. **"கலித்தளை மருங்கிற் கடியவும் படாஅ"** (செய்.23) என்புழி, அவ்வாசிரியவுரிச்சீராற் கலித்தளையாமென்றான்; அவ்வதிகாரம் இடையறாது நின்றமையினை இதுவுங் கலித்தளைக்கே இலக்கணமாயிற்று என்றார்க்கு, **"வஞ்சி மருங்கினும்" (338)** எனவும் **"இசைநிலை நிறைய"** (339) எனவும் **"இயற்சீர்ப் பாற்படுத்து"** (340) எனவும் இம்மூன்றும் சூத்திரம் இடையிட்டனவாலெனின்; அற்றன்று கலிப்பாவிற்கு விலக்கப்பட்ட நேரீற்றியற்சீர் அதிகாரம் பற்றி இடைபுகுந்த தல்லது கலித்தளையதிகாரம் விலக்கின்வல்ல வென்பது[1].

**நச்சினார்க்கினியர்**

**"வெண்சீராற் கலித்தளையாமாறுணர்த்திற்று. கலிக்கு விலக்கிய நேரீற்றியற்சீர் அதிகாரம் பற்றி இயற்சீர் கூறியதல்லது கலியதிகாரம் விலக்காமை"**[2].

**மறுப்புரை**

அவ்விருவுரையாசிரியரும் **"கலித்தளை மருங்கிற் கடியவும் படாஅ"** (செய்.23) **"கலித்தளை யடிவயின் நேரீற்றியற்சீர் நிலைக்குரித் தன்றே தெரியு மோர்க்கே"** (செய்.24) என்ற இரு நூற்பாவினைத் தழுவி நின்றது இந்நூற்பா என்பர். அதனையடுத்து **"வஞ்சி மருங்கினும் இறுதிநில் லாது"** (செய்.25) என்ற நூற்பா நின்று வைப்புமுறையில்

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

வஞ்சிப்பாவிற்கு இலக்கணம் கூறியமையால் இந்நூற்பா வைப்புமுறையால் கலித்தளைக்குச் சேரும் என்ற இருவரும் கூறுவது பொருந்துமாறில்லை.

**பொருள்கொள்ளும் நிலைக்கு மறுப்பு**

**பேராசிரியர்**

வெண்சீர் பல் தொடர்ந்து ஒரு கலியடியுள் நின்றவழி அவ்வெண்சீருள் ஈற்றுநின்ற சீரின், முதல் வந்த நேரசை மற்றை நிரைமுதல் வெண்சீர் வந்து, முன்னைய இரண்டுங் கலித்தளை யாயவாறு போலக் கலித்தளையாம் என்றவாறு. மேனின்று அதிகாரத்தால் தளைவகை சிதையாத் தன்மைக்கண் (340) என்பது கூட்டியுரைக்க. எனவே, வெண்சீர்ப் பின்னர் நிரை வந்து தட்டலே சிறந்ததெனவும், நேர்வந்து தோன்றினும் அவ்வோசையே பயந்து ஒரு நிகர்த்தாமென்பதூஉங் கூறி அவ்வாறாங்காலும் இறுதிச் சீரின் முதலசையே நிரையிற்றாவதெனவுங் கூறினானாம்[3].

**நச்சினார்க்கினியர்**

**“அடிதாங்கு மளவன்றி யழலன்ன வெண்மையால்”** (பாலைக்கலி-10) என இவ்வெண்சீர்கள் பகைத்து வந்து ஈற்றுச்சீரின் முதற்கணின்ற நேரசை நிரையசை போலத் துள்ளலோசை கோடலிற் கலித்தளையாயிற்று[4].

**ச.பாலசுந்தரம்**

வெண்பா உரிச்சீரின் ஈற்றசையாகிய நேரசை தளை கோடற்கண் நிரையசை இறுதியாகிய பாதிரி, கணவரி போல நிரையசை இயல்பிற்றாகும் தலைகொள்ளுமிடத்து. என்றது அசை வகையான் நேரசையாயினும் தளைநிலைக்கண் நிரையசை இயல்பிற்றாய், பிறிதாக எதிர் வருஞ்சீர் முதலசை நேராயின் வெண்டளை எனவும், வருஞ்சீர் வெண்பா உரிச்சீராகவே வந்து முதலசை நேரசையாயின் வெண்சீர் வெண்டளை எனவும் நிரையசையாயின் கலித்தளை எனவும் கொள்ளப்படும்[5].

**ஆ.சிவலிங்கனார்**

வெண்பாச் சீரின் இறுதியசை நிரையசை இயல்பினதாய் நிற்கும். இது வெண்பாவில் வரும் காய்ச்சீர் நிரையசையிறுதி போலக் கொண்டு அலகிடப்படும் என்கின்றது. நிரையசை முன் நேர் வருவதும் வெண்பாத்தளையாம். அவ்வாறே காய்ச்சீர் முன்னர் நேர் வருவதும் வெண்பாத்தளையாம். அதனால் காய்ச்சீர் நிரையசையிறுதியைப் போலும் என்க[6].

**மறுப்புரை**

பேராசிரியர், நச்சினார்க்கினியர் இவ்விரு உரையாசிரியரும் வெண்சீரான அமைந்த நாற்சீர் அடியில் ஈற்றுச்சீரின் முதலசை நேராக அமையுமிடத்து அதனை ‘நிரை’ அசையாக ஏற்று, காய்முன் நிரை வருவது கலித்தளை என்பர்.. “வெண்சீர் ஈற்றசை நிரையசை இயற்றே” என்ற நூற்பா, வெண்சீராகிய தேமாங்காய், புளிமாங்காய், கருவிளங்காய், கூவிளங்காய் என்ற நான்கு சீரின் ஈற்றசை நேராக நிற்பது ஓசை நிறைவின் பொருட்டு ‘நிரை’ அசையாக ஏற்கப்படும் என்பது தெளிவாக இருப்பின்; இவ்விரு உரையாசிரியரும் ஈற்றுச்சீரின் முதலசையினை ‘நிரை’ அசையாகக் கொள்வது பொருள் பொருந்துமாறில்லை.

ச.பாலசுந்தரம், வெண்சீராகிய மூவசைச்சீரினைப் பாதிரி, கணவரி என்ற ஈரசைச்சீர் போன்று கோடல் வேண்டும் என்கிறார். அதன்முன் நேர்வரின் வெண்டளை எனவும் நிரைவரின் கலித்தளை எனவும் வருஞ்சீர் வெண்பா உரிச்சீராகவே வந்து முதலசை நேராக அமையின் வெண்சீர் வெண்டளை எனவும் பொருள் கூறுகிறார்.

வெண்சீரான காய்ச்சீரினைப் பாதிரி, கணவரி என்று ஈரசைச்சீர்போல் கொண்டால் வரும்சீரின் முதலசை நிரையாக அமையுமிடத்து விளம் முன் நிரை நிரையொன்றிய ஆசிரியத்தளையாமேயன்றி கலித்தளை ஆகா. மேலும் வருமொழியாக நேர் முதல் காய்ச்சீர்

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

வதரினும் விளம் முன் நேர் தொடுத்தல் இயற்சீர் வெண்டளையாகுமேயன்றி இவர் கூற்றுப்படி வெண்சீர் வெண்டளையாகாது. எனவே இவர் கருத்தும் பொருந்து மாறில்லை.

ஆ.சிவலிங்கனார், வெண்பாவில் வரும் காய்ச்சீரின் இறுதியை நிரையசையாகக் கொண்டால் அது கனிச்சீராகிய வஞ்சித்தளை தொடுக்குமேயன்றி வெண்தளை ஆகா. மேலும் வெண்பாவில் பிறதளைகள் வருவதில்லை என்பதாலும் அவர் கூற்றும் பொருந்துமாறில்லை.

**தீர்வு**

வெண்சீர் ஈற்றசை நிரையசை இயற்றே' என்ற நூற்பா வைப்பு முறையாலும் பொருள் நிலையிலும் வஞ்சிப்பாவின்கண் வெண்சீரமைந்து பிறதளைகள் வந்து தூங்கலோசை சிதைந்தவழி அவற்றினை ஓசைநிலையான் தூங்கலோசை கோடலையே இந்நூற்பா உணர்த்தி நின்றதென்பது தெளிவாகிறது.

**அடிக்குறிப்புகள்**

1. தொல்.பொருள். செய்.பகுதி-1 (உரைவளம்)- நூற்பா. 337
2. மேலது
3. மேலது
4. மேலது
5. தொல்.ஆராய்ச்சி காண்டிகை. 3- நூற்பா- 343.
6. தொல்.பொருள். செய்.பகுதி-1 (உரைவளம்)-நூற்பா. 337

**துணைநூல்கள்**


1. தொல்காப்பியம்: பொருளதிகாரம் இயம்பூரணர்- மு.சண்முகம் பிள்ளை, முல்லை நிலையம், 2004.
2. தொல்காப்பியம். பொருளதிகாரம் (பிற்பகுதி) பேராசிரியர் உரை, கு.சுந்தரமூர்த்தி, முதல் பதிப்பு, 1985, அண்ணாமலைப் பல்கலைக்கழகம்.
3. தொல்காப்பியம்: பொருளதிகாரம், செய்யுளியல் அடிகளாசிரியர், தஞ்சை, தமிழ்ப் பல்கலைக்கழகம், 1985.
4. தொல்காப்பிய ஆராய்ச்சி, காண்டிகையுரை செய்யுளியல் & மரபியல்- ச.பாலசுந்தரம், தாமரை வெளியீட்டகம், 1991
5. தொல்காப்பியம்: உரைவளம், செய்யுளியல் பகுதி-1 சிவலிங்கனார், ஆ. உலகத்தமிழ் ஆராய்ச்சி நிறுவனம், 1997
6. யாப்பருங்கல விருத்தி - மே.வீ.வேணுகோபாலப்பிள்ளை, உலகத்தமிழ் ஆராய்ச்சி நிறுவனம், 1998.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

# மருதத்திணை உள்ளுறை உவமையில் அழகியல்

## Brevity in Decoding of Beauty in Marutham Thinai

**க.கருப்பசாமி,** முனைவர் பட்ட ஆய்வாளர்,
இக்கால இலக்கியத்துறை, மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை - 21

## Abstract

*The world is full of nature. In Sangam Literature, there are songs related to inward and outward states of life. They mostly deal with human lives and nature. We can understand what was in those peoples' minds by understanding these poems. These songs speaks much more of the love life between the couples. Many songs sung at the 'Marutha Thinai' are having brevity in explaining beauty. Hence, the objective of this research paper is to find the theme related concepts.*

**Keywords:** Brevity, Decoding Beauty, Marutham Thinai

### முன்னுரை

சங்க இலக்கியத்தில் அகப்பாடல்களும், புறப்பாடல்களும் இயற்கைக் காட்சிகளை, வருணனைகளைத் தருமிடத்து, மனிதனின் வாழ்க்கையோடு பின்னிப் பிணைந்து உள்ளதை அறியமுடிகிறது. இயற்கை, மனிதனின் உள்ளத்தோடு எந்த வகையில் இணைந்துள்ளது என்பதைச் சங்க இலக்கியங்கள் மூலம் அறிந்து கொள்ளலாம். அவ்வாறு அமைந்துள்ள இயற்கைக் காட்சிகள் மனித வாழ்வில் உள்ளுறையாக உள்ளனவையன்றி வெளிப்படையாக இல்லை. இவ்வாறு பாடப்பட்ட சங்க இலக்கியம் தலைவன், தலைவியின் காதல் வாழ்வினை எடுத்தியம்பும் வகையில், இயற்கை நிகழ்வினை தலைவனுக்கும், தலைவிக்கும் உவமை கூறும் வகையில், சங்கப் புலவர்கள் பாடல்களைத் தமது கற்பனையின் வடிவில் வடிவமைத்துள்ளனர். அப்படி அமைக்கப்பட்ட சங்க இலக்கியத்தில் அகநானூற்று மருதத் திணையில் அழகியல் சார்ந்த உள்ளுறை உவமைகள் உள்ளதைக் கண்டறியும் வகையில் இக்கட்டுரை முன்னெடுத்துச் செல்கிறது.

சங்க இலக்கியத்தில் அகம், புறம் என்று இருதிணை வடிவம் கொண்டுள்ளது. இந்த இருதிணையிலும், புறத்திணைப் பொருளான வீரம், கொடை முதலியவை மக்கள் சிலரிடம் காணப்படுகிறது. அகத்திணைப் பொருளான காமமோ பருவம் நிரம்பிய உயர்திணை, அஃறிணை என உயிர்களுக்கெல்லாம் பொதுவாக அமைந்துள்ளது.

**"எல்லா உயிர்க்கும் இன்பம் என்பது**
**தான்அமர்ந்து வருஉம் மேவற் றாகும" (தொல்.பொருள். பொருள்.1168)**

என்று தொல்காப்பியர் கூறுமிடத்து, மேலும் அகம் என்பது வாழ்க்கைக்கு வேண்டிய பொருள் சேர்த்தாலும், அப்பொருளில் துணைகொண்டு அறம் பெருக்குதலும், அன்புடன் இல்லறவாழ்வு நடத்தலாம் என்பதையும் தொல்காப்பியம் உணர்த்துகிறது. இத்தகைய இன்ப உணர்வைக் காமத்துடிப்பை நெறிப்படுத்திய பொருளாகக் கொண்டவை அகத்திணைப் பாடல்கள். அகத்தின் இன்றியமையாமை சிறப்புகளை குறிப்பிடும் வகையில் அகநானூறு அகத்திணையைப் பெற்றுள்ள நூலாகும்.

அகம், புறம் என்னும் இருதிணை வடிவமைந்த பொருளிலக்கியம் அறிவுலகிற்கு புதியது. புலவனுக்கு மதம் எனப்படுவது ஆண், பெண் காதலே, அக்காதல் இலக்கியத்தில்

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

இடம்பெறுகிறது. இவற்றில் அகவாழ்வினைப் பற்றி கூறும் நூல் அகநானூறு. இது தலைவன், தலைவியின் காதல் வாழ்வினை சொல்வதோடு, இயற்கையின் இயல்புகளை குறிக்கின்ற வகையில், அவற்றில் உள்ள அழகினையும் எடுத்துக்கூறும் நிலை அகநானூற்றில் அமைந்துள்ளது.

**உள்ளுறை, இறைச்சி**

இரண்டு பொருள்களை ஒப்புமை கூறுமிடத்து, அவற்றில் உள்ள உட்கருத்தினைப் புலப்படுத்துவது உள்ளுறை ஆகும். அகநானூறு முல்லைத்திணை தவிர, ஏனைய நான்கு திணைகளிலும் உள்ளுறைகள் அமைந்த பாடல்கள் உள்ளன. கடவுள் வாழ்த்திணை விடுத்த ஏனைய நானூறு பாடல்களில் நூற்று ஒன்று பாடல்களில் உள்ளுறைகள் அமைந்துள்ளன. அகநானூற்றில் ஐம்பத்து ஒன்று பாடல்களில் உள்ளுறையின் அழகியல் தன்மை அமைந்துள்ளன.

**அகநானூற்றில் உள்ளுறை, இறைச்சி பற்றிய அழகியல்**

அகநானூற்றுப் பாடல்கள் தலைவன், தலைவி காதல் வாழ்வில் அவர்களுக்கு ஏற்படும் இடையூறுகளையும், அவர்கள் சந்திக்கின்ற நிகழ்வுகளை அவற்றில் அமைந்துள்ள இயற்கைக் காட்சிகளின் அழகியல் தன்மைகளையும் சித்தரிக்கின்றன.

அகமாந்தர்களில் தோழிக்கெனத் தனிச்சிறப்பிடம் உண்டு. களவு, கற்பு என்னும் இருவகையிலும் பெரும்பங்கு வகிப்பவள் தோழி. தலைவியின் உணர்வை உணர்வு போல வெளியாகும் உரிமையை அகப்பொருள் இலக்கணம் தோழிக்கே வழங்கியுள்ளது. தலைவனும், தலைவியும் களவில் காதல் கொண்டு பழகினர். இதனை அறிந்த தலைவியின் தாய் மகளை இற்செறிந்து வெளியில் செல்லாமல் தடுத்தாள். அதனால் தினைப்புனத்திற்குச் சென்று தலைவனைக்காணும் வாய்ப்புத் தலைவிக்கு இல்லாமல் போனதால் காதல் வாழ்விற்கு இடையூறாக அமைந்தது. இதில் காதல்கள் சந்தித்து இன்புறும் அழகியல் தன்மை வெளிப்படுத்தப்படுகிறது.

தோழி இந்த நிலையை அவர்களின் நன்மைக்குப் பயன்படுத்த எண்ணினாள். தலைமக்களின் காதல் வளர்வதற்குத் துணையாக நின்றவள். களவொழுக்கம் தொடர்ந்து நீட்டிப்பதால் இடையூறுகள் மிகும் என்பதை நன்கு அவள் அறிந்தாள். ஆதலால் திருமணம் செய்துகொண்டு இல்லறம் நடத்த வழிகாணுகின்றாள். தலைவன் தலைவியின் காதலுக்கு உறுதுணையாக நிற்கும் தோழி கூற்றின் வழியும், இயற்கை நிகழ்வுகளின் வழியும் வெளிப்படும் அழகியல் உணர்வு குறிப்பிடத்தக்கதாகும்.

**மருதத்திணையில் உள்ளுறை உவமை அழகியல்**

மருதத்திணையில் அழகியல் சார்ந்த உள்ளுறைகள் அதிகப் பாடல்களில் அமைந்துள்ளன.

**“சேற்றுநிலை முனைஇய செங்கண் காரான்**
**ஊர்மடி கங்குலில் நோன்தளை பரிந்து**
**கூர்முள் வேலி கோட்டின் நீக்கி**
**நீர்முதிர் பழனத்து மீன்உடன் இரிய**
**அம்தூம்பு வள்ளை மயக்கி, தாமரை**
**வண்டுஊது பனிமலர் ஆகும் ஊர” (அகம், 46: 1-6)**

எனும் இப்பாடலில், எருமை தனது இடமான கொட்டிலை நீராலும், சாணத்தாலும் தானே சேறாக்கிக் கொண்டு, கட்டையும் அறுத்துக்கொண்டு, வயலுக்குக் காவலாய் இருந்த முள்வேலியையும் கொம்பினால் நீக்கி, மீன்கள் அஞ்சுமாறு தாமரையைச் சுற்றியுள்ள வள்ளையை மயக்கி, வண்டுகள் ஊதும் தாமரையைப் போல, நீயோ உன்னால் ஏற்றுக்கொள்ளப்பட்ட இத்தலைவியை வேறுபடுத்தி நாணமாகிய கட்டையை அறுத்து, பரத்தை மகளிரோடு நாணமற்று வாழ்கின்றாய் என்று உள்ளுறையாக செய்தி புலப்படுவதை அறிய முடிகிறது.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

இவற்றில் எருமை தலைவனுக்கும், கொட்டில் தலைவியின் இல்லறத்திற்கும், தளையை அறுத்தல் நாணத்தை இழந்ததற்கும், பழனத்துக்குக் காவலாகிய வேலி பரத்தையர்க்கும், எருமை கோடு பாணனுக்கும், வள்ளைக்கொடி பரத்தையின் தாய்க்கும், தாமரை பரத்தைக்கும் அழகியலின் உள்ளுறையாகக் கூறப்பட்டுள்ளன. இதனுள் தலைவனின் செயல் எருமையுடன் உவமைப்படுத்திக் குறிப்பாகக் கூறும் போது, இங்ஙனம் ஓர் அழகியல் உள்ளுறை அமைப்பு சிறந்து விளங்குகின்றன.

**தோழி வற்புறுத்தல்**

தோழி தலைவனின் காதலை உணர்ந்து தலைவியின் ஊடலைத் தீர்த்து, அவனை ஏற்கும்படி வற்புறுத்தல் செயலில், அகநானூற்றுப் பாடலானது அழகியலை அழகாகச் சித்தரிக்கின்றது.

**“துறைமீன் வழங்கும் பெருநீர்ப் பொய்கை**
**அரிமலர் ஆம்பல் மேய்ந்த நெறிமருப்பு**
**ஈர்ந்தண் எருமைச் சுவல்படு முதுபோத்து**
**தூங்குசேற்று அள்ளல் துஞ்சி, பொழுதுபட,**
**பைந்திண வராஅல் குறையப் பெயர்தந்து**
**குரூஉக்கொடிப் பகன்றை சூடி மூதூர்ப்**
**போர்ச்செறி மள்ளரின் புகுதரும் ஊரன்” (அகம். 316: 1-7)**

எனும் இப்பாடலானது, நீர் நிலையில் ஆம்பலை மேய்ந்தது எருமைக் கடா. அது சேற்றில் உறங்கிக் காலையில் வரால் மீன் மதிபடப் பகன்றைக் கொடியைச் சூடி, வீரர் போலப் புகும் என்றது, தலைவன் பரத்தையர் சேரியில் அப்பரத்தையரை அனுபவித்து இரவெல்லாம் அந்த இன்பத்தில் மயங்கிக் கிடந்து, காலையில் தன் பெருமை குறையவும், அலர் எழுமாறும் நாணம் இன்றி, தன்னுடைய இல்லறத்திற்கு வருகின்றான் என்பதில் உள்ளுறை அழகியலைக் காணமுடிகிறது. இதில் எருமை தலைவனுக்கும், இழிந்த சேறு பரத்தையர் சேரிக்கும், பகன்றை மாலை பரத்தையரின் பூமாலைக்கும் அழகியல் உள்ளுறையாகக் கூறப்பட்டது. தலைவன் தனது செயலுக்கு நாணி இனி நமக்குத் துன்பம் செய்யமாட்டான் என இறைச்சி அழகியல் தன்மை வாய்ந்த நகை உள்ளுறையுடன் தோழி கூறுகின்றாள்.

தலைவி கூற்றில் உள்ளுறைகள் அமைந்துள்ளன என்பதை,

**“சுடர்ப்பூந் தாமரை நீர்முதிர் பழனத்து,**
**அம்தூம்பு வள்ளை ஆய்கொடி மயக்கி,**
**வாளை மேய்ந்த வள்எயிற்று நீர்நாய்,**
**முள்அரைப் பிரம்பின் மூதரில் செறியும்**
**பல்வேல் மத்தி கழாஅர்” (அகம். 6: 16-20)**

என்னும் பாடலானது, நீர்நாயானது வாளை மீனுக்குக் காவலாய் இருந்த வள்ளைக் கொடியை நெகிழ வைத்துப் பின்னர், அம்மீனை உண்டு, பிரப்பந்தூரிலே தங்கியது. அதுபோலத் தலைமகன், பரத்தைக்குக் காவலாய் இருந்த தாய் முதலியோரது காவலை நெகிழ்த்து, குலமகளிர் அல்லாத விலைமகளிரை அனுபவித்து விட்டு ஒரு பயனும் இன்றி, இங்குத் தங்கிட மாத்திரமே எம் வீட்டிற்கு வந்தீர்கள் என்று தலைவி வாயில் மறுக்கிறாள். இதனுள் நீர்நாய் தலைவனுக்கும், வள்ளைக்கொடி பரத்தையின் தாய்க்கும், பரம்பின் புதிர் தலைவியின் இல்லத்திற்கும் உள்ளுறையாக அமைகின்றன.

**பரத்ததையர் கூற்றில் அழகு**

சங்க இலக்கியத்தில் பரத்தை முக்கிய இடம் பெறுகின்றாள். தலைவன் தன்னுடன் இருக்கும் சூழலிலும், தலைவியிடம் இருக்கும் சூழலிலும் பரத்தையர் கூற்று நிகழும்.

**“நீள்இரும் பொய்கை இரைவேட்டு எழுந்த**
**வாளை வெண்போத்து உணீஇய, நாரைதன்**
**அடிஅறிவு உறுதல் அஞ்சி, பைப்பயக்**

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

**கடிஇலம் புகூஉம் கள்வன் போல,**
**சாஅய் ஒதுங்கும் துறைகேழ் ஊரன"** (அகம். 276: 1-5)

எனும் பாடலானது, நாரை தான் வருவதை வாளை மீன் அறியாதவாறு மெல்ல அடி வைத்து நடந்து கவர்ந்து உண்ணும் ஊரன் என்றது, தானும் அவன் உணராதவாறு திடுமெனத் தோன்றி அவனை மயக்கி அடிமை கொள்ளும் வலிமை உடையவள் என வஞ்சகமாக தலைவி உள்ளுறையாக ஓர் இயற்கை அழகியலை உணரமுடிகிறது.

இதனுள் அழகியல் நிலையில் ஒன்றான நகையுள்ளுறை அமைந்துள்ளது. வாளைமீன் பரத்தைக்கும், நாரை தலைவனுக்கும் உள்ளுறையாகக் கூறப்பட்டது. தலைவனைப் பரத்தை வலிந்து கைப்பற்றிக் கொண்டாள் என எண்ணும் தலைவியிடம் அப்பழிக்கு நான் பழியுடையேன் அல்லன் தலைவன் தான் அன்பிலன்: ஆதலின் மீண்டும் என் இல்லம் புகுந்தான்: அவனே பழியுடையன் என்று அழகியல் சார்ந்த உள்ளுறையை அமைத்துக் கொண்டுள்ள தன்மையை அகநானூறு சித்தரிக்கின்றது. இவ்வாறு உள்ளுறை மற்றும் இறைச்சியின் அமைப்பும் ஓர் அழகியல் உணர்வை வெளிப்படுத்திக் காட்டுகிறது.

**முடிவுரை**

இயற்கைக் காட்சிகளையும், அவை நடைபெறும் நிலத்தினையும் தலைவன், தலைவியின் வாழ்க்கைக்கு உவமை கூறுமிடத்து அநானூற்றில் உள்ளுறை, உவமைப் பாடல்களும், இறைச்சியின் தன்மையும் மருதத்திணையில் அழகியல் சார்ந்த செய்திகள் அதிகமாக காணப்படுகின்றன. தோழி தலைவனை வாயில் மறுக்கும் சூழலிலும், தலைவி பரத்தமையொழுக்கம் கொண்ட தலைவனுடன் ஊடுருவதாகவும், உள்ளுறையில் அழகியல் தன்மைகள் இக்கட்டுரையின் மூலம் வெளிப்படுவதைக் கண்டறிய முடிகிறது.

**நூற்பட்டியல்**

1. தமிழண்ணல், சங்க இலக்கியம் - அகநானூறு, கோவிலூர் மடாலயம், கோவிலூர். முதற்பதிப்பு - செப்டம்பர், 2004.
2. தமிழண்ணல், தொல்காப்பியம் மூலமும் கருத்துரையும், மீனாட்சி புத்தக நிலையம், மதுரை. ஐந்தாம் பதிப்பு - ஆகஸ்ட், 2017.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

# கவிஞர் ஆண்டாள் பிரியதர்ஷினியின் 'கவியும் கருவும்'

## 'Theme and Poetry' of the Poetess Aandaal Priyadharshini

**முனைவர் கே.பி.கனிமொழி,** உதவிப்பேராசிரியர்,
தமிழ்த்துறை, அக்சிலியம் கல்லூரி, காட்பாடி, வேலூர் - 6.

## Abstract

*Aandal Priyadarshini, one of the Tamil Feminist Creators, has simultaneously developed herself as a Feminist poet and writer. She was born on October 5, 1962 to the eminent poet parents Nellai Ganapathi and Suppulakshmi Ganapathi at Thamirabharani. She is a poet, short story writer, novelist, essayist and T.V show producer and so on. Aandaal Priyadarshini's essay 'kavi and karu' is the theme that the women should express her fundamental rights and to lead society to live with self determination. In her poetry, she has a unique perspective on social consciousness, Innovation and humanity that redeem human values. The article discusses on the themes oriented to it.*

**Keywords:** Theme and Poetry, Poetess Aandaal Priyadharshini, Feminism

"ஏளிய பதங்கள், எளிய நடை, எளிதில் அறிந்து கொள்ளக்கூடிய சந்தம், பொது ஜனங்கள் விரும்பும் மெட்டு இவற்றினையுடைய காவிய மொன்று தற்காலத்திலே செய்து தருவோன் நமது தாய்மொழிக்குப் புதிய உயிர் தருவோனாகிறான்" என்று பாடுவான் பாரதி. பாரதியின் கூற்றுப்படி நிகழ்காலத்தில் தமிழ் மொழிக்குப் புதிய உயிர் தருவோர் கவிஞர்களே. "பழையன கழிதலும் புதியன புகுதலும்" என்று கால மாற்றத்திற்கு கட்டியம் கூறும் நன்னூல் நூற்பாவின்படி, இலக்கியத்துறையில் அமைப்பிலும், உள்ளடக்கத்திலும், படைக்கும் முறையிலும் பல மாற்றங்கள் அடைந்துள்ளது. இந்த மாற்றம் கவிஞர்களுக்கு மட்டுமல்ல அவர்கள் படைக்கும் கவிதைக்கும் பொருந்தும். இதனடிப்படையில் நித்தமும் ஆர்வம் தூண்ட நெஞ்சத்தில் கவிகள் ஊறிடப் பெற்றவர், ஊக்கம் ஊட்டும் சொற்கள் கொண்டு கவிதை படைப்பதை தன் பாணியாக அமைத்துக்கொண்டவர் தான் கவிஞர் ஆண்டாள் பிரியதர்ஷினி. இவரின் கவியும் கருவும் பற்றி ஆராய்வதே இக்கட்டுரை.

### கவிஞர் ஆண்டாள் பிரியதர்ஷினி

பெண் சுயமாக சிந்திப்பதையும் செயல்படுவதையும் அனுமதிக்காத தந்தைவழி சமூகம் இன்றைய பெண்ணின் செயல்பாடுகளை ஓரளவிற்கு அனுமதித்திருக்கிறது. இது காலத்தின் கட்டாயம் என்று கூறிக்கொள்கிறது. பெண்கள் தங்கள் வலிகளை வேதனைகளை கொடுமைகளை எழுத்தில் கதைகளாக கவிதைகளாக சுயசரிதைகளாக வெளியிட்டு வருகின்றனர். இவ்வாறு வெளியிட்டு வரும் பெண் கவிஞர்களில் ஆண்டாள் பிரியதர்ஷினியும் ஒருவர். இவர் நீண்ட காலமாக எழுதிவருபவர். அதாவது பெண், ஆண் எழுத்தாளர் பிரிவினைக்கு முன்பிருந்தே நாவல், சிறுகதை, கட்டுரைகள் என இலக்கியத்தின் அனைத்துத் தடத்திலும் தனது பதிவுகளைப் பதித்துவருகிறார்.

### தத்துவம்

மனித வாழ்க்கை நீர்க்குமிழி போன்று நிலையில்லாத தன்மையுடையது என்பதை உணர்ந்தவர்களே ஞானிகளாகின்றனர். இதை உணராத அற்ப மனிதர்கள் ஏதோ தேடி அலைந்து

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019
Available at: www.ijtlls.com

வாழ்க்கைத் தொலைத்து விடுகின்றனர். வாழ்க்கையில் இன்பமும், துன்பமும் நம் கையில் தான் உள்ளது என்பதை,

**“தோல்விகளால்**
**தோற்கடிக்க முடிவதில்லை**
**வாழ்க்கை மீதான**
**என்நேசம்**
**இச்சிக்கிறேன் வாழ்க்கையை**
**பித்தனைப்போல்” (எனக்கும் கடவுளுக்கும் ஊடல், ப.30)**

என்று வாழ்க்கையை ரசிக்கத் தெரிந்தவர்களுக்கு அது சுமையாகத் தெரிவதில்லை. அதை உணர்ந்தவர்களுக்கு அதன் அருமை புரிகின்றது என வெளிப்படுத்தியுள்ளார் கவிஞர்.

**இல்வாழ்க்கை**

மனிதன் தன் வாழ்க்கையில் பல்வேறு குழுக்களில் பங்கேற்றுச் செயல்படுகின்றான். அவற்றுள் முதன்மையானது குடும்பம். குடும்பம் எனும் நிறுவனம் ஆணும், பெண்ணும் கூடி வாழ்வதாகும். குடும்ப வாழ்க்கையில் ஏற்படும் அகப்புறச் சிக்கல்களும் போராட்டங்களுக்கும் மனித வாழ்வைச் சீர்குலைத்துவிடுகின்றன. பெண்கள் குடும்ப அமைப்பில் எத்தகைய பங்குவகிக்கின்றனர், ஆண்களால் ஏற்படும் இன்னல்களை எவ்வாறு பொறுத்துக் கொள்கின்றனர் போன்றவற்றை வெளிப்படுத்துவன இவரின் படைப்புகளே.

**“அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை**
**பண்பும் பயனும் அது” (குறள் 45)**

என்பது வள்ளுவம். ஒருவருக்கொருவர் அன்போடு வாழும் வாழ்வு புனிதமானது. புரிதல் இல்லாத வாழ்வு பிரிதலிலே முடியும். பெண்ணின் மனஆழத்தைக் கண்டவர் இவ்வுலகில் எவரும் இல்லை என்பர். அவளுக்குள் இருக்கும் மென்மை, உறுதி, நேசம் அத்தனையையும் இயற்கை மட்டுமே அறியும் என்பதை,

**“தேவையாயிருக்கிறது**
**வெற்றிடம்**
**குண்டூசி முனையாவது**
**திரிசங்கு மாதிரி**
**இடமில்லாத இடமாவது” (முத்தங்கள் தீர்ந்துவிட்டன, ப.99)**

என்று கூறும் போது ஒருமித்த வாழ்வு இல்லாத நிலை சுட்டப்படுகின்றது. இல்லறவாழ்வில் இருவரும் கருத்தொருமித்த வாழ்வு வாழ்தலே இனிமையுடையது என்கிறார் கவிஞர்.

**தாய்மை**

“தாய்மை” இந்தியப் பண்பாட்டில் புனிதம் நிறைந்தது. ஒரு நல்ல மகனை, மகளை வளர்க்கும் பொறுப்பில் ஆண் விலகிச்செல்லும் போது அந்தப் பொறுப்பைச் சரியாகச் செய்பவள் பெண்தான். புதிய தலைமுறையை உருவாக்கும் பெண் தாயாக இருப்பதால் சமூகத்திலும், குடும்பத்திலும் மாற்றத்தை ஏற்படுத்துகிறாள். இதனால் குழந்தைகளும் இயல்பாகவே தாயிடம் அதிக பாசம் கொள்கின்றனர். இன்றையச் சூழலில் பணிக்கு செல்லும் பெண்களால் தன் குழந்தைகளிடம் தன் தாய்மையை உணர்த்த முடியாத அவலநிலையே ஏற்படுகிறது. பச்சிளங் குழந்தையை வீட்டில் விட்டுவிட்டு அலுவலகம் செல்லும் பெண் உடலால், மனதால் படும் வேதனையை,

**“தாலாட்டு நான்பாட**
**ஒருநொடியும் நேரமில்லை**
**தாய்மடியில் நீஉறங்க**
**அலுவலகம் விடுவதில்லை” (கடவுளின் கடைசிநாள். ப.46)**

என்றும், மற்றொரு கவிதையில்,

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

**"தாய்மை சுமப்பது**
**கருப்பை மட்டுமல்ல**
**பொறுப்பையும்" (என் காதலன் என் காதலி, ப.63)**

என்று பெண் உடல் சார்ந்த உணர்வுகளின் உன்னதநிலையை, பெண் படைப்பாளர்களால் உணர்த்தப்படுகின்றது. மேலும் தாய்ப்பாலின் மகத்துவத்தை அறிந்திருந்தும் குழந்தைகளுக்கு ஊட்ட முடியாத அவலநிலை குறித்தும் சித்தரிக்கப்பட்டுள்ளது.

**"வேலைக்குநான் போகவென்று**
**தாய்ப்பாலை மறக்கடித்தேன்**
**நினைத்துமனம் ஏங்குமென்று**
**உனைத்தழுவும் சுகம்மறுத்தேன்" (கடவுளின் கடைசிநாள். ப.47)**

என்று குடும்பப் பொருளாதாரத்தை சரிசெய்து கொள்ள வேண்டிய சூழலில் இருக்கும், அலுவலகப் பெண் தன் குழந்தையைக் கவனித்து கொள்ள முடியாத நிலையில் குழந்தையின் மனம் வெம்பி விடுகிறது. இதனால் பெண் உணர்வுக்கும், பணிக்கும் இடையே போராடிக் கொண்டிருப்பதை அறிய முடிகிறது.

**கல்வி**

குடும்பத்தில் ஒரு பெண் கல்வி அறிவு பெற்றவளாக இருந்தால் அக்குடும்பமே கல்வி அறிவுடன் விளங்கும். ஒரு நாட்டின் முன்னேற்றம், பெண்கல்வி முன்னேற்றத்தில் தான் அடங்கியுள்ளது. அதாவது பெண் கல்வியறிவில் சிறந்தவளாக இருந்தால் நாட்டையே ஏன்! இந்த உலகத்தையே ஆளலாம். இதனையே,

**"கல்விக்கு வழியின்றி**
**மூளியாக நிற்கும்நம்**
**தங்கத் தமிழ்ப்பெண்ணின்**
**நெஞ்சம் மலர்ந்திருக்க**
**சரஸ்வதியால் மாறுகின்ற**
**சந்தோஷம் தீபாவளி!" (தோகையெல்லாம் துப்பாக்கிகள். ப.53)**

என்று பெண்கல்வியின் அவசியத்தை வலியுறுத்துகிறார்.

**முகம்மாறும் அவலம்**

எதிர்பார்ப்புகள் நிறைவேறாத போது ஏமாற்றம் கிடைக்கின்றது. ஏமாற்றம் கிடைப்பதால் வாழ்வில் ஏக்கங்கள் உருவாகின்றது. தோல்வியைத் தாங்கிக் கொள்ள முடியாத மனநிலை ஏற்பட்டவுடன் தனக்குள்ளேயே துக்கங்களைப் புதைத்துக் கொள்கிறாள் பெண். ஏதாவது ஒருவகையில் ஆணைச்சார்ந்து வாழ்பவளாகவே இருக்கின்றாள். சமூகம் அவளை தனித்துவாழ விடுவதில்லை. ஓராயிரம் எதிர்பார்ப்புகள் உள்ளத்தில் தோன்றினாலும் அவை நடக்காத போது, தன்னைப் பலரோடு இருக்கும் போதும் தனிமைப்படுத்திக் கொள்கிறாள்.

**"தெரிகிறது அவளின்**
**முகம்மாறும் அவலம்**
**அவளுக்கென்றிருந்தது**
**எப்போதோ இழந்த**
**வார்த்தைகளோடு**
**இழக்கிறாள் இதையும்**
**மாறியே விட்டது**
**அவளின் முகமும்**
**அடிமைச்சுருக்கத்தோடு" (முத்தங்கள் தீர்ந்தவிட்டன, ப.24)**

**சமுதாயக் கட்டுப்பாடு**

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

பெண் தனக்குள் தோன்றும் உணர்வுகளை, ஆசைகளை, எண்ணங்களை மறைத்துக்கொண்டு பிறருக்காக வாழ்பவள். உள்ளத்தில் எழும் இன்னல்களை புதைத்துக்கொண்டு புன்முகம் காட்டி பிறரை மகிழச்செய்பவள். அதுவும் ஒருவரை மணம் செய்து கொண்டதும் காணாமல் போகின்றது. துயரம் மட்டுமே வாழ்க்கையாகின்றது. கருத்து ரீதியாக 'பெண்' இப்படியெல்லாம் இருக்க வேண்டும் என்ற கட்டுப்பாடுகள் காலம் காலமாகப் புகுத்தப்பட்டு, கண்ணுக்குப் புலப்படாத கயிறுகளால் கட்டப்பட்டிருப்பதை,

**"எனது சிறகைச் சிறைப்படுத்திச்**
**சிறுமையும் செய்கிறது**
**கொத்தடிமையாக்கி**
**துரத்துகிறது**
**நுகத்தடி மாடாய்**
**உயிர் தராமல்**
**ஸ்தம்பிக்க விட்டாலும்**
**துரத்துகிறது அருபமாய்" (முத்தங்கள் தீர்ந்துவிட்டன, ப.80)**

என்று முள்ளுடனே பறந்த திரியும் பெண் 'இறுதிபறத்தலுக்கு முன்பாயினும் முள் முறித்துப் பறக்க வேண்டும்' என்று ஆசிரியர் விரும்புவது ஒரு நல்ல தொடக்கமாக இருக்கிறது.

**வறுமை**

வறுமையில் வாழ்வதைக் காட்டிலும் வேறு கொடுமை உலகில் இல்லை எனலாம். மனிதத்தை தம் கவிதைகளில் பாடுபொருளாகக் கொண்டுள்ள கவிஞர், மனிதனின் வறுமை நிலையைக் கண்டு வருந்துகிறார். இது அவருடைய சமூக அக்கறையையும், மாறாத மானுட நேசத்தையும் காட்டுகிறது எனலாம்.

**"வாழ்பவர்க் கெல்லாம் இல்லாத இடத்தில்**
**கொலுவரி சையிலே சிலைகள் எதற்கு?**
**ஏழைக்கு வசிப்பிடம் இல்லாத நாட்டில்**
**நீளமாய் நீளமாய்ச் சமாதிகள் எதற்கு?" (தோகையெல்லாம் துப்பாக்கிகள்,ப.14)**

என்ற வரிகளில் வறுமையில் வாடுகின்றோருக்குத் தன்னால் இயன்ற உதவியைச் செய்வது மனிதநேயம் என்கிறார்.

**தொழிலாளர் நிலை**

தொழிலாளர்களின் கடுமையான உழைப்பால் தொழில்வளம் பெருகுகின்றது. தொழிலதிபர்களும், அதிக வருமானத்தைப் பெறுகின்றனர். முதலாளியின் இலாபத்திற்கு ஏற்பத் தொழிலாளர்களுக்குச் சம்பளம் வழங்கப்படவில்லை என்பதை,

**"இறங்குகிறேன் ஈரடி**
**ஓரடி ஏறும்முன்**
**ஆனாலும் தீர்வதில்லை**
**வாழ்க்கை ஈர்ப்பும்**
**உழைப்புத்தீர்ப்பும்." (எனக்கும் கடவுளுக்கும் ஊடல் ப.31)**

எனும் கவிதைவரிகளில் பதிவு செய்துள்ளார்.

**சமயம்**

நல்ல சிந்தனை, செயல், சொல், வாழ்க்கை, நம்பிக்கை, முயற்சி என அனைத்தையும் மனிதனுக்குப் போதிக்கும் விதமாக உருவானது தான் பலவகை சமயங்களாகும். தற்பொழுது சமயங்களுக்கு சமாதி கட்டிவிட்டு வன்முறைகளும், சமயங்களின் பேரால் கலவரங்களும் தான் உருவாகின்றன என்பதை,

**"எத்தனை சண்டை எத்தனை பூசல்**
**இறைவன் பெயரால் தினந்தோறும்**

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

**இவனே பெரியவன் இவனே சிறியவன்**
**யுத்தங்கள் உண்டு இனந்தோறும்" (தோகையெல்லாம் துப்பாக்கிகள், ப.40)**

ஆகவே சமயங்கள் பேரால் சமூகத்தைச் சீர்குலைப்பதை விடுத்து மனித சமூகம் மேம்பட சமயத்தலைவர்கள் சிந்தித்துச் செயல்படவேண்டும்.

**ஒற்றுமை**

உலகம் உய்வதற்கு ஒற்றுமைத் தேவை. தனித்து நின்று ஒரு செயலைச் செய்வதைவிடக் கூட்டுறவு முறையில் ஒரு தொழிலை செய்யும் போது, பொதுநலம் அங்கே தலைமை ஏற்கிறது என்பதனை,

**"பேசியே உலகினை ஆண்டவர்க் கெல்லாம்**
**மௌனத்தின் பெருமையைப் போதித்து வைப்போம்**
**ஏசாமல் பேசாமல் சிலையாக இணைத்து**
**ஒற்றுமை உணர்வை போஷித்து வைப்போம்"**
**(தோகையெல்லாம் துப்பாக்கிகள், ப.14)**

எனக் ஒற்றுமையின் வலிமையைக் கூறி நேயத்தோடு வாழ்வதற்கு நல்வழியைக் காட்டுகிறார் கவிஞர்.

**சமதர்மம்**

சமூகத்தில் மனிதன் ஏற்றத் தாழ்வு கொண்டு வாழ்வது கவிஞருக்கு ஒப்பவில்லை, உடன்பாடு இல்லை. சமதர்மத்தோடு வாழவேண்டும் என்பதே அவரது நோக்கு. அதற்கு அன்புள்ளம் வேண்டும். இதனை

**"தேசத்துக்குள் பாசமில்லாமல்**
**நாசமாவதோ மனிதம்? நீங்கள்**
**பேசுவதென்ன புனிதம்?" (முத்தங்கள் தீர்ந்துவிட்டன. ப.68)**

என்று சமதர்ம நோக்கிற்குக் கருணையும் அன்பும் அவசியம் என வற்புறுத்துவதைக் காணலாம்.

**கலாச்சாரம்**

கலாச்சாரம் காலந்தோறும் மாற்றமடைந்து வருகிறது. கலாச்சாரம் நடைமுறை வாழ்வியலுக்கு உதவுவதாய் இருக்க வேண்டும். இன்று கலாச்சாரம் இயற்கையை, மனிதர்களுடைய வாழ்வை, உழைப்பை உறிஞ்சி அவர்களின் எதார்த்த நிலையை மாற்றியமைத்து விட்டது. இது கவிஞர்களுடைய பார்வையில் விவாதிக்கப்படுகிறது. இக்கவிஞரும் இக்கருத்தை அரண்செய்யும் வகையில்,

**"சில சம்பாஷணைம்**
**சில சிரிப்பு**
**சில துவேஷம்**
**சில துயரம்**
**சில கைகுலுக்கலுடன்**
**கடந்து போகின்றன தினங்கள்" (முத்தங்கள் தீர்ந்துவிட்டன. ப.68)**

**இயற்கை**

இயற்தை உரங்களே மனிதனின் ஆரோக்கியத்திற்கு உரமாய் இருந்தன. காலமாற்றத்தில் மனித வாழ்க்கையில் எத்தனையோ முன்னேற்றங்கள் விஞ்ஞானக் கண்டுபிடிப்புடன் பெருகிவிட்டன. இவை அனைத்தும் பிற்காலத்தில் இயற்கைக்கு பாரமாகிவிட்டன என்பதை

**"பழைய பூமியைக் காணவில்லை அந்தப்**
**பசுமையை யாரும் பேணவில்லை**
**செடிகொடி மரத்தை உடைத்து உடைத்து**

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

**கறுப்பாய் ஆக்கினோம் வானவில்லை" (தோகையெல்லாம் துப்பாக்கிகள் ப.18)**

என்று இயற்கை அழிவிற்கு மனிதனே காரணம் என்று கூறுகிறார் ஆசிரியர்.

**தொகுப்புரை**

கவிஞர் ஆண்டாள் பிரியதர்ஷினியின் கவிதையில் நாட்டுப்பற்று, முற்போக்கு சிந்தனை, சமுதாயத்தின் மேல் அவருக்குள்ள தாக்கம் போன்ற உணர்வுகளை அழகுறப் பதிவுச் செய்துள்ளார். பெண்ணின் ஆழ்மன உணர்வுகள் ஆழமான விடுதலை வேண்டியே குரல் கொடுக்கின்றது என்பதையும் வெளிப்படுத்தியுள்ளார். சொல்லும், பொருளும் இணைந்து பண்பாடு, ஒழுக்கம், நாகரிகம் மிளிர கவிதைகள் படைத்திட வேண்டும் என தம் உள்ளடக்கிடக்கினை தனது கவிதைகளின் கரு வாயிலாக கவிஞர் வெளிப்படுத்தியுள்ளதையும் உணரமுடிகிறது.

**பார்வை நூல்கள்**

1. பாரதியார் கவிதைகள் - பாரதியார்.
2. திருக்குறள் - பரிமேலழகர் உரை.
3. முத்தங்கள் தீர்ந்துவிட்டன - ஆண்டாள் பிரியதர்ஷினி.
4. கடவுளின் கடைசிநாள் - ஆண்டாள் பிரியதர்ஷினி.
5. என் காதலனும் என் காதலியும் - ஆண்டாள் பிரியதர்ஷினி.
6. தோகையெல்லாம் துப்பாக்கிகள் - ஆண்டாள் பிரியதர்ஷினி.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

# சங்க இலக்கியத்தில் விழாக்கள்

## Festivals in Sangam Literature

**வி.கார்த்திகாயினி,** முனைவர் பட்ட ஆய்வாளர்,
தமிழ்த்துறை, யாதவா கல்லூரி, மதுரை.

### Abstract

*Tamil Nadu is known for its magnificent festivals outlined with rangolis, bright skills, flowers, temples celebrations and of course lots of festival food in the sangam period. Pongal, the festival of harvest and spring, thanking lord Indiran and lord EL (the Sun), comes on 14/15 of January (Thai Maatham). Indira vizha, the festival for the rain, celebrated for one full month starting from the full moon in ( Chitirai ) and completed on the full moon in vaikaasi, it is epitomized in the epic Cilapatikaram in detail. Thiruvonam or Onam is the birthday of Mayon (Lord Vishnu). 'Thiruonam' is a group of stars which are bright together and resemble like an eagle, Lord Vishnu's mount is Garuda (Eagle), so the day was considered as the birthday of Lord Vishnu. The people of Pandya kingdom celebrated it for 10 days. That was mentioned in Madurai Kaanji, one of the Pathupattu books. Thirupallandu by periyazhwar and the song of Thirugnanasambandhar in Thevaram deals with the festivals in the age old traition. An equivalent to widely celebrated festival of Kartigai Deepam festival is inarguably an important festival in Tamilnadu with has its mention in the sangam liberature. The present paper elucidates the evidences from the sources.*

**Keywords:** Festivals, Sangam Literature, Tamil Culture

### முன்னுரை

தமிழ்நாடு தனிப்பெருஞ் சிறப்புடையது. தன்னேரில்லா வளமே இதற்குக் காரணம் வளம் என இங்குக் குறிப்பிட்டது ஒரு வளத்தைப்பற்றி மட்டும் அன்று, நீர்வளம், குடிவளம், கோன்வளம் முதலான பல வளங்களையுமே ஆகும். இன்னோரன்ன வளங்கள் மலிந்து இருந்தமையினால் தான் இந்நாட்டு மக்கள் இன்பமும், இறை அன்பும் ஒருங்கே உடையவர்களாக இருந்தனர். இருந்து வருகின்றனர். இனி:யும் இப்படியே இருப்பர்.

இவ்வாறு இன்பமும், இறை அன்பும் தமிழ்நாட்டு மக்கள் கொண்டிருந்தமையாலும், நாடும் எல்லா நலன்களும் ஒருங்கே பெற்றருந்தமையாலும் மக்கள் இந்நாட்டில் விழாக்களைப் பெரிதும் கொண்டாடி வந்தனர் என்பது தெளிவாகின்றது.

விழா தோன்றக்காரணம்

பண்டைய காலத்தில் வெயில் மழையென்று பாராமல் உழைத்தவனுக்கு ஓய்வு தேவைப்பட்டது. அந்த ஓய்வானது மனத்திற்கு இன்பத்தையும், சுகமான அனுபவங்களையும் கொடுக்க வேண்டும் என்று எண்ணினான். வேலை முடிந்து வீடு திரும்பியவன், கையில் கிடைத்த பொருள்களை வைத்துக்கொண்டு இசைத்தும், ஆடியும், பாடியும் தன்னை திருப்திப்படுத்திக் கொண்டான். அதுவே பெரிய்தாகவும், அனைத்து உறவுகளையும் ஒன்று கூட்டி விழாவாகச் செய்தால் எப்படி இருக்கும் என எண்ணி மகிழ்ச்சி அடைந்தான். விழா

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

நடத்துவதற்கு காரணம் வேண்டுமே! தெய்வத்தின் திருப்பெயரைச் சொல்லி மக்களை அழைத்து விழாக் கொண்டாடினான். புது ஆடை உடுத்தியும், இல்லையென்று வந்தவருக்கு வேண்டியவகைகளைக் கொடுத்தும் தன்னுடையக் குலம் இப்பூவலகில் நிலைபெறச் செய்தான். மனிதன் வேட்டையாடினான் ஓய்வாக இருந்தபோது தன்களைப்பை போக்க ஆடிப்பாடினான் இதன் பயனாக விழா கொண்டாடி மகிழ்ந்தான்.

**விழா - பொருள் விளக்கம்**

விழா, சாறு, திருவிழா, பண்டிகை, நோன்பு, திருநாள் என விழாவிற்கு வேறு பெயர்களாகச் சுட்டுவர்.'' விழாக்கள் உடலுக்கு ஓய்வும், உள்ளத்திற்கு இன்பமும் தரவல்லன. எனவே மக்கள் விரும்பி ஏற்றுக் கொண்டாடுவதால் விழா என்று அழைக்கப்படுகிறது. விழா என்னும் சொல் 'விழை'என்ற சொல்லின் அடியாகத் தோன்றியது. இதற்கு விருப்பம் பற்று ஆகிய பொருள்கள் உள'' என்று கா.மு. பாபுஜி கூறுகின்றார். பரந்துப்பட்ட மக்கள் அனைவரும் ஒன்று கூடி எடுக்கும் நிகழ்வினை விழா என்கிறோம்.

விழாக்களைப் பொது விழாக்கள், வழிபாட்டு விழாக்கள் என்று இருவகைப்படுத்தலாம். பொது விழாக்களை ஆண்டு விழாக்கள், தினவிழாக்கள், வாழ்வியல் சார்ந்த விழாக்கள் (திருமணவிழா, காதணி விழா, பூப்பு விழா போன்றவகைள் என வகைப்படுத்தலாம். வழிபாட்டு விழாக்களை தேர்த்திருவிழா எருதுவிடும் விழா,குடமுழக்கு விழா எனப் பிரிக்கலாம்.

**சங்க கால விழாக்கள்**

சங்க இலக்கியங்களில் சங்க காலத் தமிழர்கள் கொண்டாடிய விழாக்கள் பற்றிய குறிப்புகள் கிடைத்துள்ளன. அவற்றுள் சில சமயத் தொடர்பானவை, சில சமூகத் தொடர்பானவை. விழாக்களின் போது பாணரும், கூத்தரும் ஆடியும், பாடியும் மக்களை மகிழ்வித்தனர். நகரகங்கள் சில 'விழவு மேம்பட்டபழவிறல் மூதூர்' என்று பாராட்டப்பட்டுள்ளன. சங்க கால விழாக்கள் மக்களின் அன்றாட வாழ்வோடு ஒன்றிருந்திருந்தன. சங்க காலத்தில் தெய்வத்தை வணங்கும் பொருட்டும், அனைத்து மக்களும் ஒன்று கூடி உறவு கொண்ட மகிழும் பொருட்டும், உணர்வுகளைப் புதுப்பித்து எழுச்சி ஊட்டும் இந்திரவிழா, தை நீராட்டுவிழா, நீர் விழா, உள்ளி விழா, பங்குனிவிழா, கார்த்திகை விழா, கோடியர் விழா, ஓணவிழா, பூந்தொடை விழா முதலிய பலவிழாக்கள் கொண்டாடப்பட்டதற்குக் குறிப்புக் காணப்படுகின்றன.

இந்திரவிழா

இந்திரனைப் பற்றிய சில குறிப்புகளே சங்கச் செய்யுட்களில் கிடைக்கின்றன. **"வச்சிரத் தடக்கை நெடியோன் கோயிலுள்ள முரசம் முழங்குதலைப்"** புறநானூறு குறிப்பிடுகின்றது (புறம்.141) **இந்திர விழாவிற் பூவின் அன்ன"** (ஐங்குறு.62) என்று உவமையாகப் பயன்படும் அளவிற்கு இந்திர விழா சிறப்புற்றிருந்தது. சிலம்பு, மணிமேகலை காலத்தில் இந்திரவிழா அரசாங்க விழாகவே கொண்டாடப்பட்டது. கற்பகக் கோட்டத்தில் வெள்ளானை கொடியேற்றப்பட்டது. பல தெய்வங்களுக்கும் பூசையிடப்பட்டது. இசையும், கூத்தும் கலந்து மக்களுக்கு இன்பமூட்டின. நகரம் முழுவதும் அணி செய்யப்பட்டதை *மணிமேகலை* விழாவறை காதை தெளிவாக்குகின்றது.

**தைநீராட்டுவிழா**

இது தைதிங்களில் கொண்டாடும் விழாவாகும், முதலில் அறுவடை விழாவாகத் தொடங்கி பின்னர் வளத்தைக் குறித்த விழாவாக மாறியது தைதிங்களில் மகளிர் ஆறு, குளங்களில் நீராடுவது சில செய்யுள்களில் குறிப்பு காணப்படுகின்றது. பின்னால் இதனையே மார்கழி நீராட்டு என்றனர்.

**"தையில் நீராடிய தவந்தலைப் படுவளோ"** (கலி.13) என்று மகளிர் கூட்டமாக நீராடுவர்''என்பதனை,**நறுவீ ஐம்பால் மகளிர் ஆடும் தைஇத் தண்கம் போல"** (ஐங். 84) என்னும் குறிப்புகளால் அறியலாம். தமக்கு வாய்க்கும் கணவன் மார் நற்பண்புடையவராதல்

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

வேண்டும் என வேண்டிப் பெண்கள் எடுத்த இந்நோன்பு பிற்காலத்தில் சமயத் தொடர்பு பெற்றதை, ஆண்டாள், மாணிக்கவாசகர் பாடல்களால் அறிகின்றோம். அம்பாவாடல் என்று பரிபாடல் இதனைத் குறிப்பிடும்.

**நீர்விழா**

நீர் இன்றி அமையா உலகம் போல என நற்றிணை உரைக்கும். மனிதத் தேவையின் மிக்வும் இன்றியமையாதன ஒன்று தண்ணீர்தான். இவ்வுலகமானது வறண்டு விட்டால் நிலத்தில் வாழுகின்ற அனைத்து உயிரினங்களும் மண்ணில் புதைய வேண்டியது தான். இதனை அறிந்த அன்றைய மக்கள் காவிரி ஆற்றில் வருகின்ற புதுப்புனலை ஆடி மகிழ்ந்தனர். ஆடிப் பெருக்கின் நாளன்று காவிரிக்கரையில் புதுத்துணி உடுத்தி புனலடுதல் வழக்கம்.

**“மலிபுனல் பொருந மருது ஒங்கு படப்பை**
**கலிகொள் சுற்றமொடு கரிகால் காண” (அகம் .376)**

இப்பாடலில் நன்றாக வளர்ந்த கதிர்களையுடையது கழார் என்னும் பகுதியாகும், அப்பகுதியில் கரிகால் மன்னன் தன் சுற்றத்தாருடன் ஆரவரரம் மிக்க புனல் விழாவினைக் கண்டு மகிழந்தான் என்கிறார் ஆசிரியர்.

**உள்ளிவிழா**

கொங்கு மண்டலத்தின் சுற்று வட்டார பகுதியில் நடைபெறுவது உள்ளிவிழா கொங்கர்கள் இடுப்பில் மணிகளைக் கட்டிக்கொண்டு ஆடுகின்ற விழாவாகும்.

**“கொங்கர்கள் மணி அரையாத்து**
**மறுகின் ஆடும்**
**உள்ளி விழவின் அன்ன” (அகம் 368.16-18)**

என்று அகநானூறு உரைக்கும் இவ்விழாவினைக் காணவந்த மக்களின் ஆரவாரம் மிகப்பெரிது.

**பங்குனி விழா**

தமிழக மக்களிடையே மிகப் பெரியதாகக் கொண்டாடப்படும் விழாக்களில் ஒன்று பங்குனி உத்திர விழாவாகும். இவ்விழாவில் பக்தர்கள் காவடி எடுப்பதும் மொட்டைப் போட்டு நேர்த்திக்கடன் செலுத்துவதும் உண்டு.

**“உருவவெண்மணல் முருகுநாறு தண்பொழிற்**
**பங்குனி முயக்கம் கழிந்த வழிநாள்” (அகம் 137:8-9)**

பகைவர்களை வென்று அடிக்கின்ற முரசினையும், போர் வெற்றியையும் உடையது சோழனின் உறையூர் அவ்விடத்தே காவிரிப் பேரியாற்றின் பெரிய கரையில் மணம் கமழும் சோலையில் முருகக்கடவுள் வீற்றிருக்கிறார். முருகப்பெருமானை வழிபடுவதற்கு ஏற்றதருணமாக உத்திரநட்சத்திரத்தில் நிறைமதியும் கூடிய நன்னாளில் பங்குனி உத்திரவிழா நடைபெறும்.

**“பல்பொடி மஞ்ஞை வெல்கொடி உயரிய**
**ஒடியா விழவின் நெடியோன் குன்றத்து” (அகம்.149 –15-16 )**

பாண்டிய மன்னன் ஆட்சி புரிகின்ற மதுரை மாநகரில் கொடிகள் அசைந்தாடும் வீதிகளையுடையது. அனைத்து வீடுகளிலும் மயில் தோகையினைனத் தொங்கவிட்டிருப்பார்கள். இடைவிடாது நடைபெறும் விழாக்களையுடைய முருகனின் அறுபடை வீடுகளில் ஒன்றான திருப்பரங்குன்றம் அங்கே அமைந்துள்ளது. சங்க இலக்கியத்தில் *திருமுருகாற்றுப்படை* முழுவதும் முருகப்பெருமானின் வழிபாடுகளும், விழாக்களும் சொல்லப்படுகின்றது.

**கார்த்திகை விழா**

கார்த்திகை மாதத்தில் கார்த்திகை நட்சத்திரமும், பூரணதிதியும் கூடிய நன்னாளில் கொண்டாடப்படும் விழா சிவபொருமான் திரிபுர அசுரரைக் கண்டு சிரித்து எரித்ததை

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

நினைவூட்டும் வகையில் இவ்விழாவானது கொண்டாடப்படுகிறது. இரவு நேரங்களில் அனைத்து வீடுகளிலும் அகல் விளக்குகளால் தீபம் ஏற்றப்பட்டிருக்கும் எங்கும் ஒளிபரவி புத்துணர்ச்சியைக் கொடுக்கிறது அகநானூற்றில்,

**"அறுமீன் சேரும் அகல் இருள் நடுநாள்**
**மறுகுவிளக் குறுத்து மாலை நோக்கி" (அகம். 141:8-9)**

மழைபெய்து ஓய்ந்த சாயங்காலம் வானில் நிறம் மங்கி இரவை நெருங்கிற்று மதி நிறைந்தஅ கார்த்திகை நாளில் இருள் அகன்ற வீதிகள் திருவிளக்குளால் அலங்கரிக்கப்பட்டன.

கார்த்திகைத் திருநாளில் இடும் விளக்குகளைப் போல, இலவமரங்களின் பூக்கள் பூத்திருக்கிறது. இந்நாளில் அறம் செய்வதற்கு நன்னாள் அன்றைய தினத்தில் விளக்கில் ஏற்றப்பட்ட ஒளியானது வானத்து நட்சத்திர சந்திரனின் ஒளியை விட மிஞ்சிநிற்கும் என

**"பெருவிழா விளக்கும் போலப் பலவுடன்" (அகம்.185)**

என்ற அகநானூற்றுப் பாடல் அடிகள் குறிப்பிடுகிறது.

**கோடியர் விழா**

கோடியர் என்போர் கூத்தர்கள் என்று அழைக்கப்படுகின்றனர் பாணர்கள், கூத்தர்கள், பொருநர்கள் விறலியர்கள் என அனைவரும் ஒன்றாய் சேர்ந்து விழா நிகழ்த்துகிறார்கள்.

**"கோடியர் விழவு கொள் மூதூர் விறலி பின்றை**
**முழவன் போல அகப்படத் தழீஇ" (அசம் 352: 4:6)**

என்கிறது அகநானூறு ஆடல், பாடல் நிகழத்தும் கலைஞர்கள் இணைந்து பழமையான ஓர் ஊரின் கண் விழா எடுக்கின்றனர். இவ்விழாவில் ஆடுவோர், பாடுவோர், முழவு வாசிப்போர் என அவரவர் திறனை மக்களிடையே வெளிப்படுத்துவர். விழா நேரங்களில் ஆடும் கூத்தர்கள் வெவறோன ஒப்பனைகளுடன் திகழ்வார்கள் என்று புறநானூற்றும் பாடல் அடிகள் குறிப்பிடுகின்றன.

**ஓணவிழா**

திருமாலோடு தொடர்புடைய விண்மீன் திருவோணமாகும். இந்நாளில் கொண்டாடிய விழா ஓண விழாவாகும் இதனை,

**"கணங்கொள் அவுணர்க் கடந்த பொலந்தார்**
**மாயோன் மேய ஓண நன்னாள்" (மது.காஞ்சி 590- 591)**

என்று மதுரைக்காஞ்சி குறிப்பிடுகின்றது. இந்தநாளில் வீரர்கள் நீல்க்கச்சையணிந்து விருந்துண்டு களித்தனர். இவ்விழா ஆவணித் திங்களில் கொண்டாடப்பட்டது. இவ்வோணம் பின்னாளில் கேரள மாநிலத்தில் வசிக்கும் மக்கள் மட்டும் கொண்டாடும் விழாவாக இன்று மாறிவிட்டது நோக்கத்தக்கது. கி.பி. 7 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த ஆழ்வார்கள் இதுபற்றிக் குறிப்பிடுகின்றனர். கி.பி.12 ஆம் நூற்றாண்டில் சைவம் புத்துயிர் பெற்றபோது ஆதிரை நாள் சிறப்பிடம் பெற்றது.

**பூந்தொடை விழா**

படைக்கலப் பயிற்சி பெற்று திரும்பிய வீரர்களை அரங்கேற்றும் விழாவாகும். பெரும் வீரணான தன்மகள் பயிற்சி முடிந்து வீடு திரும்புகிறான். அவனுடைய வெற்றியை இவ்வுலகம் காணட்டும் என்று தங்களின் வீடுகளில் புது வண்ணம் பூசுவர். வீட்டின் முன்னால் பரந்துட்ட இடத்தில் மணல் பந்தலிட்டு துணங்கைக் கூத்தினை ஆடி மகிழ்வார்கள்.

**"வார்கழற் பொலிந்த் வன்கண் மழவர்**
**பூந்தொடை விழவின் தலைநாள் அன்ன**
**தருமணல் ஞெமிரிய் திருநகர் முற்றம்" (அகம் 187.7-9)**

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

பயிற்சிக் காலத்தில் விற்போர், வாட்போர், குதிரையேற்றம், யானையேற்றம், மதிலைக் காத்தலும், அழித்தலும், முன்னின்று சண்டையிடுதல் போன்றவற்றைக் கற்றுத் தெளிந்து வந்துள்ள மழவர்கள் பூந்தொடை விழாவினைக் பொலிவுடன் கொண்டாடினார்கள்.

**முடிவுரை**

பண்டையத் தமிழகத்தில் விழாக்களுக்குப் பஞ்சமில்லை. அக்காலத்தில் சமய விழாக்களே பெரும்பான்மையாக இருந்தன என்றும், இவ்விழாக்களின் போது பாட்டும், கூத்தும், விருந்துகளும் நிறைந்து மக்களை மகிழ்ச்சியில் ஆழ்த்தின என்றும் தெள்ளதின் உணர்கின்றோம். இயற்கையில் ஆரம்பமாகிய வழிபாடு தொல்காப்பியர் காலத்திற்கு முன்பே தொடங்கி இன்றளவும் நிலவுகிறது. இயற்கைவழிபாடானப் பிறையும், கார்த்திகை விழாவும், பங்குனி வழிபாடு, சங்க்காலம் தொட்டு இன்றளவும் நிகழ்ந்துள்ளது என்பதனை அகநானூறு காட்டுவதோடு குறிப்பிட்ட தெய்வங்ளை அல்லாமல் பல தெய்வங்களையும் வழிபாடு செய்து பக்தியில் சங்ககால மக்கள் மூழ்கி இருந்தனர் என்ற செய்திகளும் நம்மால் உணர்முடிகிறது.

**பார்வை நூல்கள்**

1. கா.மு.பாபுஜி. *சிலப்பதிகாரத்தில் விழாக்கள்*, சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை – 108. பக் 5-6 - 1991.
2. பா.இறையரசன், *தமிழர் நாகரிக வரலாறு.* பூம்புகார் பதிப்பகம், சென்னை - 108.பக். 237 – 242 1978.
3. கண்ணப்ப முதலியார், *கட்டுரைக் கொத்து.* அம்மையப்பர் அகம், சென்னை -600007. ப.40. 1996.
4. நா.வானமாமலை. *தமிழர் வரலாறும் பண்பாடும்* (ஆராய்ச்சிக்கட்டுரைகள்). NCBH– சென்னை- 600 098 . பக் 14-15. 1997.
5. கி.வா. ஜகந்நாதன், *முந்நீர் விழா.* அமுத நிலையம், சென்னை – 600018. ப.6. 1961.
6. ஔவை சு.துரைசாமிப் பிள்ளை, *புறநானூறு.* சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகம், சென்னை – 108. ப.296. 1950.
7. உ.வே.சாமிநாத ஐயா. *ஐங்குறுநூறு.* நூல்நிலையம், சென்னை – 600041, ப.88.1980.
8. நச்சினார்க்கினியா். *கலித்தொகை.* சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை – 600014. ப.23. 1952.
9. ந.மு. வேங்கடசாமிநாட்டார், *அகநானூறு.* வைசசித்தாந்த நூற்பதில் கழகம், சென்னை – 600018, ப.136 1970.
10. நச்சினார்க்கினியர், *மதுரைக்காஞ்சி.* தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர். 1986, ப. 288.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

# பாரதி போற்றிய பெண்மை

# Feminism Glorified by Bharathi

**நா.கிருஷ்ணராஜ்,** உதவிப்பேராசிரியர்,
தமிழ்த்துறை, டாக்டர் என்.ஜி.பி. கலை மற்றும் அறிவியல் கல்லூரி, கோயம்புத்தூர் – 642 048.

## Abstract

*Feminism is an important role in human life. Bharathi visualised the new women as an emanation of Godesses Shakthi, willing helpmate of man to build a new earth through co-operatile edeavour. Bharathi is considered as one of the pioneers of Modern Tamil Literature. Bharathi was also against caste system. He decided that there were only two castes men and women and nothing more than that. He opposed child marriage and he belived in women rights, gender equality and women emancipation. The article probes to find feminism in Bharathi's ideology.*

**Keywords:** Feminism, Glorified by Bharathi

**முன்னுரை**

உலகம் இயங்குவதற்கும் உயிர்கள் தோன்றுவதற்கும் மூலாதாரமாய் விளங்குவது சக்தியே. அந்த மூலாதாரச் சக்தியே பெண்ணினம் ஆகும். பெண்ணினம் இல்லையென்றால் உலகம் இயங்காது உயிர்களும் தோன்றாது பரிணாம வளர்ச்சியும் நிகழாது. எறும்பு முதலாய் யானை ஈறாய் பல்வேறு உயிரினங்களும் தம் சந்ததிகளைத் தோற்றுவித்து, தம் இனம் அழியாமல் நிலைத்திருப்பதற்குக் காரணம் பெண் இனமே. மானுட சக்தியின் ஆதாரமான பெண்கள் உலகம் தோன்றிய நாள் முதற்கொண்டு இன்று வரை தாம் இயங்குவதோடு தம் குடும்பம், சுற்றத்தார் என எல்லோரையும் இயக்குகின்ற பேராற்றலின் வடிவமாகத் திகழ்கின்றனர். கல்வி, அறிவியல், பண்பாடு போன்றவற்றில் மாற்றங்கள் நிகழ்ந்தாலும் அவர்களின் தியாகம், அன்பு, கருணை இவற்றில் சிறிதளவும் மாற்றங்கள் ஏற்படவில்லை. பெண்ணினத்தின் சிறப்புகளைப் பறைசாற்றும் பாவலர்கள் பலர் இருப்பினும் பார்போற்றும் பைந்தமிழ்ப் பாகன் பாரதிக்கு இணையாக எவரும் இல்லை. பெண்ணினம் அடிமைப்பட்டிருந்த கால கட்டத்தில் பெண் விடுதலைக்குக் குரல் கொடுத்து, பெண்மையைப் போற்றியவன் பாரதியே. பாரதி போற்றிய பெண்மையைப் பற்றி இக்கட்டுரையில் ஆய்வோம்.

**பெண்களின் சிறப்புகள்**

**'மங்கையராகப் பிறப்பதற்கே –நல்ல: மாதவஞ் செய்திட வேண்டும் அம்மா! பங்கயக் கைந்நலம் பார்த்தலவோ – இந்தப் : பாரில் அறங்கள் வளரும் அம்மா!'** என்ற கவிமணியின் வரிகளுக்கு ஏற்ப, 'பெண்' இனமாகப் பிறப்பதற்கு அரிய தவம் செய்திருக்க வேண்டும். ஆண் என்பது உடல் உறுதி : பெண் என்பது மன உறுதியைக் குறிக்கும். பெண்களின் சிறப்பைக் கூற வந்த திருமூலர்,

**"பெண்ணொருபெண்ணைப் புணர்ந்திடும் பேதைமை**
**பெண்ணிடை ஆணும் பிறந்து கிடந்தது**
**பெண்ணுடை ஆணென் பிறப்பறிந் தீர்க்கின்ற**
**பெண்ணுடை ஆணிடைப் பேச்சற்ற வாறே" (திருமந்திரம்,பா,1135.)**

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

என்று கூறுகிறார். உயிர்களின் தோற்றத்திற்கும் ஆக்கத்திற்கும் மூலமாக இருப்பவள் பெண்ணாவாள். பெண் எவ்வழி செல்கிறாளோ அவ்வழியிலே தான் அவள் வழியாகத் தோன்றுகின்ற சந்ததிகளும் செல்வார்கள். பெண் என்றால் தனி ஒரு மனிதர் அல்ல. ஒட்டு மொத்த உலகமே என்னும் உண்மையை மறுக்கலாகாது.

**பாரதியின் பெண் விடுதலை**

பாரத தேசமே அந்நியர்களின் ஆட்சிப் பிடியிலிருந்த போது, அவர்களுக்கு அடிமைகளாக இருந்த இந்திய ஆண்கள் பெண்களைத் தம் அடிமைகளாக நடத்தினர். ஆரம்ப காலகட்டத்தில் பாரதியும் கூட பெண்ணடிமைத் தனத்துடனேதான் இருந்தார். சகோதரி நிவேதிதா தேவியின் சந்திப்பிற்குப் பின்புதான் பாரதியும் தன் தவறினை உணர்ந்தான். பெண்ணடிமைத் தனமே முழுவதும் சூழ்ந்திருந்த மூடச்சமூகத்தில் பெண் விடுதலைக்காகப் போராடிய சிறந்த போராளி மகாகவி பாரதியே ஆவான்.

**"கும்மியடி தமிழ்நாடு முழுவதும்
குலுங்கிடக் கைகொட்டிக் கும்மியடி!
நம்மைப் பிடித்த பிசாசுகள் போயின
நன்மை கண்டோ மென்று கும்மியடி" (பாரதியார் கவிதைகள், ப.211.)**

காலம் காலமாகப் பெண்களை வீட்டிற்குள்ளேயே அடக்கி வைத்து, அடிமைப் படுத்தி வைத்திருந்த அடக்குமுறைக்கு எதிராகக் குரல் கொடுத்தவன் பாரதி. அடுப்பங்கரையிலேயே தம் வாழ்நாளைக் கழித்துக் கொண்டிருந்த பெண்கள் வெளியுலகிற்கு வரவேண்டும். வீடே உலகம் என்றிருந்த பெண்களின் நிலை மாறி, உலகையே வீடாக நோக்குகின்ற விரிந்த அறிவும் விசாலமான பார்வையும் கொண்டவர்களாக விளங்க வேண்டும். காலம் மாறி விட்டது. பெண்களை வீட்டிற்குள் பூட்டி வைக்க வேண்டுமென்ற மூடர்களெல்லாம் அழிந்து விட்டார்கள். ஆண்களைப் போன்றே பெண்களும் எல்லா இடங்களுக்குச் செல்வதற்கும் கல்வி, தொழில் கற்பதற்கும் எந்தவிதமான வேறுபாடுகளுமின்றி உரிமையும் விடுதலையும் வேண்டும். 'சுடர் விளக்காயினும் தூண்டுகோல் வேண்டும்' என்பதற்கேற்ப, பண்பும் அறிவும் திறமையும் மேன்மையும் பெற்றிருந்தாலும் அவா்களுக்கெல்லாம் ஒரு தூண்டுகோலாகத் திகழ்ந்ததோடு மட்டுமின்றிப் பெண் விடுதலைக்கான முன்னோடியாக விளங்கியவர் பாரதி.

மனிதர்கள் தங்கள் பிரச்சினைகளுக்குரிய தீர்வுகளை அவர்களே காண விழைய வேண்டும். பாதிக்கப்பட்டவர்கள் போராட முற்படும்போது தான் சிக்கலுக்குரிய தீர்வுகளும் முகிழ்க்க ஆரம்பிக்கும். அடிமைப்பட்டிருந்த பெண்கள் தங்கள் விடுதலைக்கான வழிகளையும் பிரச்சினைகளுக்குரிய தீர்வுகளையும் அவர்களேதான் தேட வேண்டும். அந்தத் தேடல்தான் உண்மையான தேடல். உண்மையான தேடலில்தான் விடிவுகள் தோன்றும். பெண் விடுதலை பற்றிப் பேச வந்த பாரதியும் இந்தக் கருத்தையே முன்மொழிகிறார். அந்நியரிடமிருந்து விடுதலை பெறுவதைக் காட்டிலும் ஆண்களிடமிருந்து பெண்கள் விடுதலை பெற வேண்டும். ஆண் பெண் என்னும் படைப்பில் இருவருக்குமே சம உரிமை உண்டு. இந்தச் சம உரிமையை இடையிலே வந்த மனிதர்கள்தான் சிதைத்தார்கள். பெண்களின் விடுதலையும் உரிமையும் ஒடுக்கப்பட்டிருந்தாலும் அவர்களின் திறமையினால் உயர்ந்த நிலையை அடையச் செய்வோம். தாய்நாட்டிற்கு ஏற்பட்ட சிறுமைகளை நீக்கி, அந்நியர் பிடியிலிருந்து விடுதலைபெற ஆண்களோடு பெண்களும் சேர்ந்து போராடுவதற்குத் தயாராக உள்ளார்கள். போராடுவதற்குரிய வலிமையும் மனத்திண்மையும் கொண்டவர்கள் பெண்கள். பெண்களை நமக்கு அடிமையாக்கிவிட்டு நாம் விடுதலைக்காகப் போராடினால் அது முழுமையான போராட்டமாக இருக்காது. விடுதலை பெறுதல் என்பதும் கேள்விக்குரியாகவே இருக்கும்.

**"விடுதலைக்குமகளிரெல் லோரும்
வேட்கை கொண்டனம் வெல்லுவம் என்றே
திடம னத்தின் மதுக்கிண்ண மீது
சேர்ந்து நாம் பிரதிக்கினை செய்வோம்." (பாரதியார் கவிதைகள்,ப.212.)**

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

**பெண்கல்வி**

மனித சமுதாயத்தில் காணலாகின்ற அறியாமை எனும் இருளை அகற்றி, அறிவைக் கொடுக்கும் ஒளிவிளக்கே கல்வி. அறிவைப் பெருக்கும் கல்வியைக் கற்பதில் எவ்விதப் பேதங்களும் இருக்கக் கூடாது. சாதிய ஏற்றத்தாழ்வுகளினாலோ, பால் வேறுபாடுகளினாலோ கல்வி கிடைப்பதில் பிரச்சினைகள் இருக்கக் கூடாது.

**"எண்என்ப ஏனை எழுத்தென்ப இவ்விரண்டும்**
**கண்என்ப வாழும் உயிர்க்கு." (திருக்குறள் - 392.)**

என்று வள்ளுவரும்,

**"களர்நிலத் துப்பிறந்த உப்பினைச் சான்றோர்**
**விளைநிலத்து நெல்லின் விழுமிதாக் கொள்வர்**
**கடைநிலத்தோ ராயினும் கற்றறிந் தோரைத்**
**தலைநிலைத்து வைக்கப் படும்." (நாலடியார்,பா.133.)**

என்ற பாடல் வரிகள் கல்வியின் சிறப்பையும் கற்றவர்களுக்குக் கிடைக்கும் பெருமையையும் எடுத்துரைக்கிறது.

உயிர்களைப் படைத்த இறைவன் ஆண்-பெண் இருவருக்கும் சமமான அறிவைத்தான் வழங்கினான். மனிதர்கள்தான் அவளின் அறிவைச் சிதைக்க முற்பட்டனர். அதன் ஒரு பகுதிதான் பெண் கல்வி மறுக்கப்படல். பெண் கல்வியை மறுப்பவர்கள் மனிதர்கள் அல்லர் மூடர்கள். ஆண்களுக்கு மட்டும் கல்வி கற்கும் உரிமையை வழங்கி, பெண்களுக்கு மட்டும் அவ்வுரிமையை மறுப்பது இரண்டு கண்களில் ஒன்றைக் குத்தி ஒரு கண்ணில் மட்டும் அழகான காட்சியைப் பார்க்க முற்படுவதைப் போன்றதாகும்.

**"மண்ணுக்குள்ளே சில மூடர் நல்ல**
**மாதர் அறிவைக் கெடுத்தார்**
**கண்கள் இரண்டினில் ஒன்றைக் குத்திக்**
**காட்சி கெடுத்திட லாமோ" (பாரதியார் கவிதைகள், ப.205.)**

ஆண்கள் கல்வி பெற்றால் அது அவர்களுக்கு மட்டும்தான் பயன்படும். பெண்கள் கல்வியறிவு பெற்றால் அது இந்த உலகிற்கே பயன்படும். கல்வியறிவில்லாத பெண்கள் நல்ல அறிவுடைய சந்ததிகளைப் பெற்றெடுக்க இயலாது. அவர்கள் பயனற்ற நிலத்தைப் போன்றவர்கள். பெண்கட்கு எதற்குக் கல்வி வேண்டுமென்று பாவேந்தரும் பின்வருமாறு பட்டியலிடுகிறார்.

**"பெண்கட்குக் கல்வி வேண்டும்**
**குடித்தனம் பேணுதற்கு**
**பெண்கட்குக் கல்வி வேண்டும்**
**உலகினைப் பேணுதற்கே"**
**பெண்கட்குக் கல்வி வேண்டும்**
**கல்வியைப் பேணுதற்கே" (குடும்ப விளக்கு, ப.73.)**

பெண்கள் கல்வி பெறுவது அவர்களுக்கு மட்டும் பயன்படக்கூடிய தன்னலம் சார்ந்த செயலன்று. குடும்பம்-சமூகம்-நாடு-உலகம் என்று எல்லாருக்கும் பயன்படக்கூடிய பரநலம் சார்ந்தது. பெண், கல்வி கற்றால் ஒட்டுமொத்த உலகிலுள்ள அனைத்து விதமான வேறுபாடுகளும் ஏற்றத்தாழ்வுகளும் நீங்கும்.

**கற்பு**

கற்பு என்பது பெண்களுக்கு மட்டும் உரியது அல்ல. ஆண் பெண் இருவருக்கும் உரியது. எல்லாருக்கும் பொதுவானது என்று முழங்கியவன் பாரதியே.

**"கற்பு நிலையென்று சொல்ல வந்தார் இரு**
**கட்சிக்கும் அஃது பொதுவில் வைப்போம்**
**வற்புறுத் திப்பெண்ணைக் கட்டிக் கொடுக்கும்**

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

**வழக்கத்தைத் தள்ளி மிதித்திடுவோம்" (பாரதியார் கவிதைகள், ப.211.)**

மனைவி வீதியில் சென்றாலே அவர்கள் மீது கோபம் கொள்ளும் ஆண்கள், மனைவியைத் தவிர வேறு பெண்களைத் தாயாக நினைத்து வாழ்வதுதான் கடமை என்கிறார் உடுமலை நாராயணகவி.

**"பெண்களிடம் கற்பை எதிர்**
**பார்க்கும் ஆண்களே!**
**பெண்களுக்கும் ஆண்களுக்கும்**
**கற்புப் பொதுவன்றோ?" (உடுமலை நாராயணகவி பாடல்கள், ப.106.)**

பெண்கள் வீட்டிற்குள் தான் இருக்க வேண்டும். வீட்டை விட்டு வெளியே சென்றால் கற்பு போய் விடும் என்றிருந்த வழக்கத்தை, மூடப் பழக்கத்தை மாற்ற முற்பட்டவன் பாரதி. வீட்டை விட்டு வெளியேறுவதால் அவர்களுடைய கற்பிற்கு எந்தவிதமான இழிவும் நேர்ந்து விடாது. கற்பு என்பது ஒழுக்கம் சார்ந்ததே தவிர, அடிமைத்தனம் சார்ந்தது அல்ல. கற்புடன் இருக்க அடிமைத்தளையும் ஒடுக்குமுறையும் தேவை இல்லை. பெண்கள் எவல்லா விதமான அடிமைத் தளைகளிலிருந்தும் அடக்குமுறைகளிலிருந்தும் தங்களை மீட்டெடுத்துக் கொள்ள வேண்டும். சமுதாயத்தில் மாற்றங்களையும் புதுமைகளையும் படைக்க புதுமைப் பெண்கள் உருவாக வேண்டும். இப்புதுமைப் பெண்கள் பண்டைய பழக்க வழக்கங்களையும் மூடத்தனங்களையும் மூழ்கடித்துவிட்டு சமுதாயத்தில் மறுமலர்ச்சியை ஏற்படுத்த வேண்டும்.

**முடிவுரை**

மானுட சமுதாயம் மேம்படப் போரடிய கவிகளுள் முதன்மையானவர் பாரதியே. அந்நியர் பிடியிலிருந்த இந்தியர்கள், பெண்களைத் தமக்கு அடிமைப் படுத்தியிருந்தனர். உலகத்தின் ஆதரமாக விளங்குகின்ற பெண்களின் முன்னேற்றத்திற்கும் கல்விக்கும் முன்னோடியாகத் திகழ்ந்ததோடு, உரிமைக்காகப் போராடினான். தங்களின் விடுதலைக்குப் பெண்களும் ஆர்வமும் ஈடுபாடும் கொண்டிருக்க வேண்டும். ஆண்களோடு சேர்ந்து போராடுகின்ற வலிமையும் அவர்களுக்கு உண்டு. எல்லாருக்கும் பொதுவான கல்வியைப் பால் பாகுபாட்டினால் மறுத்தல் கூடாது. பெண்கள் கல்வி கற்றால் அது அனைவருக்கும் பயன்படும். பெண்கள் கல்வி கற்பது அறிவு வளர்ச்சிக்கும் மட்டுன்று. குடும்ப வளர்ச்சிக்கும் பயன்படும். ஆண் – பெண் இருவருக்கும் பொதுவான கற்பைப் பெண்களுக்கு மட்டும் கற்பிப்பது தவறு. பெண்கள் வீட்டை விட்டு வெளியில் வருவதால் கற்புப் போய்விடாது. ஒழுக்கப் பிறழ்வும் நிகழாது. கற்பைக் காரணம் காட்டி பெண்களை அடக்கி ஒடுக்குதலும் கூடாது. பெண்களுக்கு எதிராக சமுதாயத்தில் மண்டிக்கிடந்த மூடப்பழக்க வழக்கங்களையும் மூடத்தனங்களையும் மூழ்கடித்துவிட்டு மறுமலர்ச்சியை ஏற்படுத்தியவன்

**பார்வை நூல்கள்**

1. *உடுமலை நாராயணகவி பாடல்கள், முனைவர் அமுதன், புலவர் ப.வீரப்பன், புலவர் க.சுரேந்தர்* (தொ.ஆ), உடுமலை நாராயணகவி அறக்கட்டளை வெளியீடு, பூளவாடி, உடுமலைப்பேட்டை. ஆண்டு 1999.
2. *குடும்ப விளக்கு*, சே.சுந்தரராசன் (உ.ஆ), முல்லை நிலையம், சென்னை. 2010.
3. *திருக்குறள்*, நாமக்கல் கவிஞர் (உ.ஆ), சாரதா பதிப்பகம், சென்னை. 2014.
4. *திருமந்திரம்*, ப.இராமநாதபிள்ளை (உ.ஆ), கழக வெளியீடு, சென்னை. சூன் 2009.
5. *பதினெண் கீழ்க்கணக்கு*, ஆசிரியர் குழு, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட். இரண்டாம் பதிப்பு 1981.
6. *பாரதியார் கவிதைகள்*, பூம்புகார் பிரசுரம், சென்னை. மூன்றாம் பதிப்பு, டிசம்பர் 1981.

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019
Available at: www.ijtlls.com



# சிலப்பதிகாரத்தில் மூவேந்தர்கள் பற்றிய பதிவுகள்

## Registration on Triumvirs in Silappathikaram

**முனைவர் நா.குமாரி,** உதவிப்பேராசிரியர்,
தமிழ்த்துறை, அக்சிலியம் கல்லூரி, காட்பாடி, வேலூர் - 6.

**Abstract**

*The greatest epic literature of Tamil Language is Silappathikaram, it speaks of Tamil Dhesiyam and it includes ancient history, politics, society, community, art and it's status. Muthamizh has a special glee and glitter. The greatness & honour of Silappathikaram & muthamizh are lightfully belonged to the three great kings. That is of the great triumvirs Chera, Chola and Pandiya kings. The Cholas are shown as luxurious and brave ones and the state of the business men class is clearly portrayed through the prime characters. The nation of the king Pandiya contained of all the natural resources like trees, plants and bushes. The real fact that the honourable king Neduncheziyan sacrificed his soul for his own kingdom and truth. The history of Silappathikaram reveals that the great king Cheran Chenkuttuvan won great success in the Bharatha and he brought the boulder from the Himalayas to Tamilnadu. He also gave a special event for the people to celebrate by sculpting the statue of Kannaki. The poet Elango Adigal, glorifies the kingdom of chola when he starts to sing the literature of Silappathikaram. In the kingdom of Chola, it was seen that the kingdom was well developed and wealthy, the patriot king ruled the nation in a very great manner and they formed five unions to rule the nation in a great manner. The triumvirs are much portrayed in the epic Silappathikaram and has mentioned about their kingdom, wars and donation to peoples.*

**Keywords:** Registration on Triumvirs, Chera, Chola Pandias, *Silappathikaram*

**முன்னுரை**

இலக்கியம் மக்கள் வாழ்வியல் முறையில் எழுந்து வாழ்வைச் சார்ந்து செல்வது. வாழ்வை வளம் படுத்தவும் நெறிப்படுத்தவும் நினைப்பது. வாழ்வின் இலங்கு ஆகியும் இயல் உரைத்தும் அமைவது. இத்தகு பல்வகைச் சிறப்புடைய இலக்கியம் தோன்றிய காலமோ அல்லது அதற்கு முன்னதாகவோ உள்ள வாழ்வியல் சூழலை வெளிப்படுத்தும் தமிழின் முதற் காப்பியமான சிலப்பதிகாரம் தமிழ்த்தேசியம் என்ற கட்டமைப்போடு அக்கால வரலாறு, அரசியல், சமூகம், சமயம், கலை என்ற சிந்தனைகளை வெளிப்படுத்துகின்றது. சிலப்பதிகாரம் கவிதை நயம் பற்றி எழுந்த நூலல்ல, அக்காலத்தில் தமிழர் நாகரிகத்தை எடுத்துக்காட்டும் நோக்கோடு வரலாற்று நூல் போலவே எழுதப்பட்ட நூலாகும். (சாமி சிதம்பரனார் சிலப்பதிகார தமிழகம் ப. 130) இத்தகைய சிலப்பதிகாரச் சிந்தனை வெளிப்பாடுகளில் வரலாற்றுப் பதிவுகள் மட்டுமே இக்கட்டுரையின் ஆய்வுப் பொருளாய் மேற்கொள்ளப்பட்டுள்ளன.

**சிலம்பு ஒரு வரலாற்று நூல்**

சிலப்பதிகாரம் தமிழர்தம் வரலாற்றை விளக்கும் கருத்துப் பெட்டகமாக விளங்குகிறது. தமிழர்தம் பண்பாடு வரலாற்றையும், அரசியல் வரலாற்றையும் ஒருங்கே கூறும் ஒப்பில்லா நூல்

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

சிலப்பதிகாரம் (பொ.வே.சோமசுந்தரனார் சிலப்பதிகார உரை ப. 13) என்பர். மேலும் ரா.பி. சேதுப்பிள்ளை, சு. துரைசாமிப்பிள்ளை, ந.மு. வேங்கடசாமி நாட்டார். மு.வ. போன்ற தமிழறிஞர்களும் சிலம்பை தமிழரின் வரலாற்று நூலாகவே கண்டனர். வஞ்சிக் காண்டத்தை மிகச் சிறப்பாகக் கொண்டாடினார்கள். செங்குட்டுவனின் படையெடுப்பு தமிழரின் வீரத்தைக் காட்டும் வரலாற்று நிகழ்வாகக் கருதப்பட்டது.

தமிழர்களை இணைக்கும் கோட்பாடாகத் தமிழ்த் தேசியத்தை உருவாக்க முனைந்த அடிகளாருக்கும் பல்வேறு கருத்துக்கள் ஒன்றுக்கொன்று முரண்பட்டவையாக இருந்தாலும் அவற்றைச் சமரசப்படுத்தி இணைக்க வேண்டி வந்தது. சிலப்பதிகாரத்தில் இந்த இணையைக் காண்கிறோம். ஒரு பேரரசின் ஆக்கத்திற்கும் அதன் நிறுவனங்களைக் கட்டிக் காப்பதற்கும் தேசம், தேசத்தின் மானம் காக்கும் வீரப்படை தேவை என்னும் கருத்தினை வலியுறுத்தி அவற்றைச் சமூகத்திற்கு இன்றியமையாதவை, சட்டப்பூர்வமானவை என மக்கள் ஏற்கவைக்கும் பணியினை இக்காப்பியம் செய்கிறது.

**சிலம்பில் மூவேந்தர்கள்**

இக்காப்பியம் முத்தமிழுக்கு எத்தகைய சிறப்பும் பெருமையும் அளித்தனவோ அத்தகையச் சிறப்பும் பெருமையும் மூவேந்தர்களுக்கு உடையதாக அமைகின்றது. மனிதனின் செயற்பாடுகள் தாம் இலக்கியங்களாகப் படைக்கப்படுகின்றன. இச் செயற்பாடுகளை வெளிப்படுத்துகிற கருவியாக மாந்தர்களைப் பயன்படுத்த வேண்டியதாயிருக்கிறது. ஒரு சமூகத்தில் தன் வரலாறும் இப்படித்தான் நிகழ்கிறது. (க. பஞ்சாங்கம் சிலப்பதிகாரத் திறனாய்வுகளின் வரலாறு ப. 125) என்பர். மூவேந்தர்களின் புனைவும் காப்பியக் கட்டமைப்போடு கலந்து கதையின் உயிர்ப்புத்தன்மையை உறுதியாக்குகின்றது.

**சேரனின் வரலாறு**

பண்டைத் தமிழகத்தினை ஆண்ட முடியுடை மூவேந்தர்களில் முதன்மையான மூன்று அரசர்களில் சேர மரபைச் சேர்ந்த புகழ் பெற்ற மன்னன் சேரன் செங்குட்டுவன் ஆவான். இவன் கி.பி. முதலாம் நூற்றாண்டின் இறுதிப் பகுதியில் சேரநாட்டை ஆண்டதாகக் கருதப்படும் சேரலாதன் என்னும் மன்னனுக்கு ஞாயிற்றுசோழன் என்னும் சோழ மன்னனுடைய மகள் நற்சோணைக்கும் பிறந்தவன். சேரநாடு மிகவும் வலிமை குன்றியிருந்த நேரத்தில் அதன் அரசுப் பொறுப்பை ஏற்ற செங்குட்டுவன் அதனை மீண்டும் ஒரு வலிமை மிக்க நாடாக்கினான்.

பல்வேறு சேர மன்னர்களைப் பற்றி சங்கத் தமிழ் இலக்கியங்களில் குறிப்புகள் இருந்தாலும், செங்குட்டுவன் பற்றி தகவல்களை சங்க நூல்கள் எதிலும் காணப்படாமையால் இவன் சங்க மருவிய காலத்தவன் என்பது வெளிப்படை. இவன் சிலப்பதிகாரச் காப்பியத் தலைவியான கண்ணகிக்குச் சிலை எடுத்தபோது இலங்கையின் முதலாம் கயவாகு மன்னன் சேரநாட்டுக்கு வந்ததாகவும்இ அவன் பத்தினி (கண்ணகி) வணக்கத்தை இலங்கையில் பரப்பியதாகவும் வரலாற்று குறிப்புகள் உள்ளதால் செங்குட்டுவன் முதலாம் கயவாகு வாழ்ந்த காலத்தைச் சேர்ந்தவன் என்பது இலங்கை வரலாற்று நூலான மகாவம்சம் போன்ற நூல்களில் இருந்து தெரிய வருவதால்இ செங்குட்டுவனும் இரண்டாம் ஸ்ரீசதகர்ணியும் செங்குட்டுவனுக்கு சமகாலத்தவர்களே.

**செங்குட்டுவனின் தலைநகரம்**

சிலப்பதிகாரத்தில் 25:9, 148, 149, 173, 174, 27:149, 150, 256, 29:1, 30:173, 174 ஆகிய பகுதிகளில் செங்குட்டுவன் வஞ்சியிலிருந்து ஆட்சி புரிந்தான் என்று கூறுகிறது.

**செங்குட்டுவனின் வெற்றிகள்**

சேரன் செங்குட்டுவன் பல வெற்றிகளைப் பெற்று தமிழ்நாட்டில் சேர மரபை முன்னிலைப் பெறவைத்தான் என்று பின்வரும் படையெடுப்புகளைப் பற்றிய செய்திகள் சிலப்பதிகாரத்தின் பல்வேறு வரிகள் மூலம் உணரப்படுகிறது.

**கடம்ப வெற்றி**

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

தென்னகத்தின் மேற்குப் பகுதியில் கடம்பர் என்பவர் வாழ்ந்து வந்தனர். அவர்கள் கடற்கொள்ளைகாரர்களாகக் கருதப்பட்டனர். இவர்களைப் பற்றி பிளைனி, தாலம் போன்ற மேலை நாட்டவரும் குறிப்பிடுகின்றனர். இவர்களால் சேரர்களின் கடல் வாணிகம் பெரிதும் பாதிப்புக்குள்ளானது. இவர்களை வென்று அடக்குவது சேரர்களின் பெரு வெற்றியாகச் கருதப்பட்டது. சேரன் செங்குட்டுவன் கடம்பர்களை வென்றான். சேரனின் கடம்ப வெற்றியை பெருமைக்குறிய வெற்றியாக இக்காப்பியம் கூறுகிறது.

**மோகூர் வெற்றி**

பழையன் என்ற குறுநில மன்னன் மோகூரின் தலைவன் பாண்டியனின் படைதுணைவன். பழையன் என்பது குடிப்பெயர். இந்த பழையன் என்பவன் செங்குட்டுவனின் நண்பன் அறுகை என்பவனைத் தோற்கடித்து விட்டான். இதனை கேள்விப்பட்ட செங்குட்டுவன் ஒரு படையுடன் சென்று மோகூரை முற்றுகையிட்டார். பின் பழையனூர் காவல்மரமாகிய வேப்பமரத்தை வெட்டி வீழ்த்தினான். பின்னர் அரண்மனையில் புகுந்து அந்தப்புர மகளிர் தலையை மொட்டை அடித்து அந்த முடிகளால் கயிறு திரித்து கலம் மரத்துண்டுகளைக் கட்டி யானைகளால் இழுத்துவரச் செய்தான் என்பதை, **“பழையன் காக்கும் குழை பயில் நெடுங்கோட்டு வேம்பு முதல் தடித்த ஏந்துவாள் வலத்துப் போந்தை கண்ணிப் பொறைய”** என மாடலன் மறையோன் சிறப்பாக கூறுவதிலிருந்து அறியலாம்.

அறுகை என்ற தன் நண்பனுக்காக மோகூரின் மேல் படையெடுத்து அந்நாட்டின் தலைவனான பழையனை வென்றான். (சிலம்பு 27:124, 126) சோழர் குடியைச் சேர்ந்த ஒன்பது வேளிர்களை நேரியவாயலில் வென்று சோழ மன்னனின் தொல்லை தீர்த்தான். (சிலம்பு 27:117, 123) ஆரிய அரசன் தலைமையில் கூட்டணி ஒன்று தமிழ்நாட்டின் மேல் படையெடுத்தபோது தமிழ் படைகளின் சார்பில் செங்குட்டுவன் யானைப் படையை நடத்த சென்றான் (சிலப் 25:156,159). தன்தாயை கங்கையாற்றில் நீராட அழைத்துச் சென்ற போது எதிர்த்த ஆரிய மன்னனை வென்றான். (சிலப் 25,160,163,) பத்தினி கடவுளின் சிலைக்கு கல்லெடுக்க இமயமலைக்குச் சென்றபோது தடுத்து நிறுத்திய கனக விசயர் கூட்டணியை வென்றான். (சிலப் 26:176, 177, 179, 182, 187, 211, 212, 221, 224, 247, 253, 254) சோழ பாண்டியரைக் கொங்கர் போர்களத்தில் வென்றான்.

**செங்குட்டுவனின் வடநாட்டு பயணம்**

பத்தினிக் கடவுள் கண்ணகிக்குக் சிலை வடிக்க செங்குட்டுவன் வடநாடு சென்றது பற்றி பதிற்றுப்பத்தின் ஐந்தாம் பதிகத்தில், செங்குட்டுவன் பத்தினிக் கடவுளுக்குச் சிலை வடிக்க கல் எடுக்க வேண்டி, காடுகளைக் கடந்து சென்று, ஆரிய அண்ணாவை வென்று கல்லெடுத்துக் கங்கையில் நீராட்டினான் என்று கூறப்படுகிறது. இச்சிறு குறிப்பைப் பெரிதாக்கி இளங்கோவடிகள் ஒரு காண்டமே இயற்றியுள்ளார்.

செங்குட்டுவன் வடநாட்டின் மீது படையெடுத்துச் செல்லவில்லை,பத்தினிக் கடவுள் கண்ணகிக்கு சிலை வடிக்க இமயமலையில் கல்லெடுப்பதற்காகவே என்று இளங்கோவடிகள் பலவிடங்களில் பலமுறை கூறி தெளிவுபடுத்துகிறார். (சிலப் 25:168, 169, 150, 151). வடநாட்டுப் பயணம் தொடங்கிய செங்குட்டுவன் நூற்றுவர் கன்னர் நீலகிரி உதவிய தோணிகள் மூலம் கங்கையாற்றைக் கடந்து இமயமலை நோக்கி சென்றான். இடையில் உத்திரபிரதேசத்தில் கனக விசயர் தலைமையில் உத்தரன், விசித்திரன், உருத்திரன், பைரவன், சித்திரன், சிங்கன், தனுத்தரன், சிவேதன் முதலிய வடதிசை மன்னர்கள் செங்குட்டுவனை எதிர்த்தனர். அந்த அரிய படைகளை செங்குட்டுவன் படைகள் துவம்சம் செய்து கனக விசயரையும் கைது செய்தது. பிறகு செங்குட்டுவன் வில்லவன் கோதை (செங்குட்டுவனின் அமைச்சர்) தலைமையில் சிறு படையை அனுப்பி இமயமலையில் கல்லெடுத்து பத்தினி கடவுள் கண்ணகிக்கு சிலையை வடிக்க செய்தான். அந்த பத்தினி கடவுளின் சிலையை கனவிசயர் தலைமேல் ஏற்றிக் கங்கைக் கரைக்கு கொண்டுவந்து நூல் மரபுப்படி கங்கையில் நீராடினார்கள். பிற்பாடு செங்குட்டுவன் தன் பிரதேசம் வந்து பத்தினி

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

கடவுளுக்கு கோயில் எழுப்பி பத்தினி சிலையை நன்றாக அலங்கரித்து பிரிதி'டை செய்தான். மாடலன் என்னும் மறையோனின் அறிவுரைகளைக் கேட்டு சினம் தணிந்து கனக விசயரைச் சிறையினின்றும் விடுவித்து அறச் செயல்களில் ஈடுபடச் செய்தான் என்பதும், கண்ணகிக்கு கோயில் எடுத்த விழாவில் கனக விசயர், இலங்கை மன்னன், மாழுவ மன்னன், குடகக் கொங்கர் முதலானோர் கலந்து கொண்டனர் என்பது சிலப்பதிகாரம் மூலம் அறியப்படும் வரலாற்றுக் குறிப்புகளாகும்.

**சோழர் வரலாறு**

சிலப்பதிகாரத்தைப் பாடத் தொடங்கும் போதே சோழ அரசினைப் பாராட்டித் தொடங்குகிறார். **"திங்களைப் போற்றதும் திங்களைப் போற்றுதும் ஓங்கிப் பரந்தொழுக லான்"** என சோழனை வாழ்த்தி மங்கலவாழ்த்தைத் தொடங்குகிறார். அதனைப்போல மங்கல வாழ்த்துப் பாடலை முடிக்கும் போதும், **"மங்கல நல்லமளி யேற்றினார் தங்கிய இப்பாடல் இமயத்து இருத்திய வாள்வேங்கை உப்பாலை பொன்போட் டுழையதா எப்பாலும் செருமிகு சினவேல் செம்பியன் ஒருதனி ஆழி உருட்டுவோன் எனவே"** இவ்வாறு பாடுகிறார்.

**சோழர்களின் நாடு நகர்கள்**

பட்டினம் என்பதும், புகார் என்பதும் காவிரி பூம்பட்டிணத்தைக் குறிக்கும். சோழநாட்டின் தலைநகர் புகார் நகரம். காவிரிப்பூம்பட்டினத்தை எக்காலத்திலும் பகைவர்கள் கைக்கொண்டதேயில்லை. ஆதலால் அந்நகர மக்கள் வேற்றூர்களில் குடிபுகுந்து அறியமாட்டார்கள். அவர்கள் பரம்பரையாக அவ்வூரிலேயே வாழ்ந்த பழங்குடிமக்கள் இதையே இளங்கோவடிகள் பொதியமலை, இமயமலை, ஒப்பற்ற புகழ் படைத்த புகார் நகரம் இவை மூன்றும் எப்போதும் அழியாதவை. இவைகளுக்கு இறுதிக்காலம் உண்டு என்று உரைப்போர் ஒருவரும் இல்லை என்று கூறுகிறார்.

**"பொதியில் ஆயினும் இமயம் ஆயினும் பதிஎழு அறியாப் பழங்குடி கெழிஇய பொது அறு சிறப்பின் புகாரே ஆயினும்"** மங்கல வாழ்த்து-13, 15) இப்பாடல் சோழநாட்டின் வரலாற்றும் பின்னணியையும் மக்களின் மனநிலையையும் இளங்கோவடிகள் குறிப்பிட்டுள்ளார். தனிச் சிறப்பினை உடையது புகார் என்றும் சான்றோர் அங்கு சிறப்புடன் வாழ்கின்றனர் என்று எடுத்துரைக்கின்றார். முற்றும் உணர்ந்த ஞானிகள் வாழ்கின்றனர். அதுமட்டுமல்லாமல் நகர் உலகத்தோடு ஒப்பிட்டு புகார்நகரை கூறுகிறார். **"நாளநீள் நகரொடு நாகநாடு அதனொடு போகநீள் புகழ்மன்னனும் புகார்நகர்"** புகார் நகரத்தின் சிறப்பைக் கூறிய பின்னர் மருவூர்பாக்கம் மற்றும் பட்டினப்பாக்கம் எனும் இரண்டு ஊரின் சிறப்புகளை எடுத்துரைக்கிறார்.

மருவூர்ப்பாக்கத்தைப் புறநகர் என்றும் பட்டினப்பாக்கத்தை அகநகர் என்றும் கூறுவர். இவ்விரண்டு பிரிவுகளுக்கும் இடையில் ஒரு வெட்ட வெளியுண்டு. அங்கே பகலில், வாணிகம் செய்வோர் கூடும் இடம் இருந்தது. இதற்கு நாளங்காடி என்று பெயர். புகாரின் கடற்கரைக் பகுதியில் மீனவர் சேரி இருந்தது.

**மருவூர் பாக்கம்**

புகார் நகரின் மருவூர்பாக்கத்தில், நிலாமுற்றமும் பெரிய அணிகள் வைத்த அறைகளோடு கூடிய இடங்களும், மானின் கன்னைப்போலத் துளை செய்யப்பட்ட காற்று செல்லும் சாளரங்களைக் கொண்ட மாளிகைகளும், காண்பாரைத் தம்மை விட்டுப்போக விடாமல் தடுக்கும் பயன் கெடுதல் அறியாத யவனர் இருப்பிடங்களும் பல விளங்கின. மரங்கலங்கள் மூலமாக வரும் செல்வத்திற்காக, தாம் பிறந்த நாட்டை விட்டுவந்த அயல் நாட்டார் பலரும் ஒரே நாட்டவரைப்போல கலந்து உறையும் கடற்கரையைச் சார்ந்த குடியிருப்புகள் பல அங்கு விளங்கின. வண்ண வண்ணக் குழம்பும், சுண்ணக் பொடியும், குளிர்ந்த மணம் மிக்க சந்தனக் கலவையும், மலர்களும், அகில் முதலான புகைக் பொருள்களும் விற்கப்படும் வீதிகள் பல அங்கு இருந்தன. பட்டு நூலாலும், எலி மயிராலும், பருத்தி நூலாலும் நுண் தொழில்களை ஊசியால் செய்யும் கைவினைஞரான காருகர் வாழ்விடங்கள் பல அங்கு இருந்தன. பட்டும், பவளமும், சந்தனமும், அகிலும், மாசிலாமுத்தும்

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

பிற மணிகளும், பொன்னும் ஆகிய இவை இவ்வளவு என அளந்து அறிய முடியாதவாறு குவிந்துக்கிடக்கும் வளம் மிகுந்த இடம் அகன்ற வீதிகள் பல அங்கு இருந்தன. பகுதி வேறுபாடு தெரிந்த பற்பல பண்டங்களும் நெல், வரகு, திணை முதலான எண்வகைக் கூலமும் மனித்தனியாகக் குவிந்துவிற்கும் கூலக் கடைத் தெருக்கள் பல அங்கு இருந்தன. பிட்டு வாணிகளும், அப்பம் சுடுவாரும், கள்ளைவிற்கும் வலைச்சியரும், மீனைவிற்கும் பரதரும், வெண்மை நிறம் வாய்ந்த உப்பை விற்கும் உமணரும், வெற்றிலை விற்பாரும், பஞ்சவாசம் விற்பாரும், பல்வகை ஊண்தசைகளை விற்பாரும் எண்ணெய் வாணிகரும் நெருங்கி உறையும் ஊன் மலிந்த இருப்பிடங்கள் பல அடங்கு இருந்தன. வெண்கலப் பாத்திரம் செய்யும் கன்னாரும், செப்புப் பாத்திரம் செய்வோரும், மரத்தை அறுத்து வேலை செய்யும் தச்சரும், வலிய கையையுடைய கொல்லரும், சித்திரங்கள் வரைவோரும், மண்ணால் பொம்மை செய்வோரும், பொன்னை செய்வோரும், தோலைத் தைத்து வேலை செய்யும் செம்மாரும் துணியாலும் நெட்டியாலும் பலவகை உருக்களை செய்து அழகினை மிகுந்து காட்டிக் குற்றமற்ற கைத்தொழில் செய்யும் பல்வேறு இனத்தாரும் வாழும் இடங்கள் பல அங்கு இருந்தன. குழல், யாழ் ஆகியவற்றால் குரல் முதலான எழிசையையும் குற்றமின்றி அமைத்துப் பண்புகளையும், திறங்கயையும் பாடவல்ல பெறவரும் இசைமரபு உணர்ந்த பெரும்பாணர்கள் உறையும் இடங்கள் பல அங்கு இருந்தன. சிறிய கைத்தொழில் செய்வோரும், பிறர் இட்ட பணியைச் செய்வோரும் உறையும் இடங்களும் அம்மருவூர்ப் பாக்கத்தே இருந்தன. தமிழ்ச்சமூகம் எவ்வளவு சிறப்பபாக இருந்துள்ளது என்பதனை இதன் வாயிலாக நாம் தெரிந்து கொள்ளலாம்.

**பட்டினப்பாக்கத்தின் சிறப்பு**

பட்டினப்பாக்கத்தில், பெரிய இராசவீதி இருந்தது. கொடியையுடைய தேரோடும் வீதியும் இருந்தது. கடைத்தெருக்களும், சிறந்த குடிப்பிறப்பையுடைய வணிகரது மாட மாளிகைகளையுடைய தெருக்களும் இருந்தன வேதியர் வாழ் இடங்களும் பல அங்கு இருந்தன. அனைவரும் விரும்பும் குடியனராகிய உழவரும், ஆயுர்வேத மருத்துவரும், சோதிடரும் தனித்தனிப் பகுதியாக வாழும் இடங்களும் பல அங்கு இருந்தன. முத்துக்கோப்போரும், சிறந்த கொள்கையோடு அணியப்பெறும் அழகிய சங்கை அறுத்து வளையல் வெய்வோரும் வாழும் அகன்ற வீதிகள் பல அங்கு இருந்தன. நின்று போற்றும் சூதர் இருந்தது போற்றும் மாகதர், வேதாளிகர் என்பவருடன் நாளிகைக் கணக்கர், அணிகள் அணிதலாலும் கூத்தலும் அழகுபெறும் சாந்திக் கூத்தர், காமக்கிழத்தியர், அகக்கூத்தாடும் பதியிலாளர் பரிசம் கொள்வார். வீட்டு வேலை செய்யும் மகளிர் முதலானோர் வாழும் தனித்தனி இடங்கள் பல அங்கு இருந்தன. தோற்கருவி, துளைக்கருவி ஆகிய தொழில்களில் பயிற்சி பெற்ற குயிலுவக் கருவியாளர், பல வகையான வாத்தியங்களை வாசிப்பவர், விதூடகர் ஆகியோர் வாழும் தனித்தனி இடங்கள் பல அங்கு இருந்தன விரைந்து செல்லும் குதிரைகளைச் செலுத்துவோரும், யானைப் பாகரும் நெடுந் தேரினைச் செலுத்தும் தேர்ப்பாகரும், அஞ்சாமை மிக்க காலாட்படைத் தலைவரும் மன்னனின் அரண்மனையை சூழ்ந்திருக்குமாறு அமைந்த இருப்பிடங்கள் பல அங்கு இருந்தன. இவ்வாறு பெருமை மிக்க மேன்மையுடைய பெரியோர்கள் நிறைந்த பாடல்சார் சிறப்புடன் விளங்கியது பட்டினப்பாக்கம் இந்த பட்டினப்பாகத்தில் பல்வேறு தொழில் செய்பவர்கள் வாழ்ந்துள்ளனர் என்பது தெரிய வருகிறது. அதுமட்டுமில்லாமல் ஒவ்வொரு தொழில் செய்பவர்களும் தனித்தனி வீதிகளில் வாழ்ந்துள்ளனர். இன்று இது போன்ற அமைப்பு காணப்படவில்லை. ஆனால் அரசுத்துறைகளில் பணிபுரிபவர்களுக்கு அரசே குடியிருப்புகள் கட்டி கொடுக்கின்றது. ஓய்வு பெற்றபின் அவ்வீட்டை காலிசெய்து விட வேண்டும் என்பதே அரசு விதி. முற்காலத்தில் ஒரு குறிப்பிட்ட வீதியில் சென்றால் அந்த குறிப்பிட்ட வேலையை முடித்து விடலாம். ஆனால் இன்று அந்த நிலை இல்லை. இன்று கடைத் தெருக்கள் பல்பொருள் அங்காடிகளாகக் காட்சி தருகின்றன.

**நாளங்காடிப் பூதம்**

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

இரு பெருவேந்தர் போர் குறித்து வந்து தங்கும் பாசறைகளுக்கு இடையே உள்ள நிலம் போல, மருவூர்ப்பாக்கம் பட்டினப்பாக்கம் என்னும் இரு பகுதிகளுக்கும் இடையே உள்ள நிலம் விளங்கியது. அங்கு மிகவும் நெருங்கி வளர்ந்துள்ள சோலை மரங்களின் அடிகளையே தூண்களாகக் கருதி அவற்றில் கட்டப்பட்டு அமைந்த கடைகளில் பொருள்களை விற்போர் செய்யும் ஓசையும் இடையறாது ஓங்கி ஒலிக்கும் சிறப்புடையது நாளங்காடி என்னும் காலைக் கடைத்தெரு, அந்நாளங்காடியில் சித்திரைத் திங்கள், சித்திரை நட்சத்திரத்தில் நிறைமதி சேர்ந்து வரும் பௌர்ணமி நாளன்று, வெற்றிமிக்க வேலையுடையது முசுகுந்தன் என்னும் மன்னனக்கு நேர்ந்தத் துயரைப் போக்குவராய் என முன்னர் இந்திரன் ஏவ, அதன்படி அங்கு வந்து சேர்ந்து அந்நாள் தொட்டுப் பலி கொள்ளும் காவல் பூதத்தின் கோயில் வாயிலில் ஒரு பலி மீடம் இருந்தது. அப்பலி பீடத்தில் அவரை, துவரை முதலான பொருள்களை வேக வைத்த புழுக்கலையும், எள்ளுருண்டையையும் நினைத்துடன் கலந்த சோற்றையும், மலரையும், புகையையும், பொங்கலையும் படைத்து வழிப்பட்டனர் மறக்குடி மகளிர். துணங்கைக் கூத்தினராய், குரவைக் கூத்தினராய், தெய்வம் ஏறப்பெற்று ஆடி எம் மன்னன் ஆளும் நிலம் முழுவதும் பசியும் பிணியும் பகையும் நீங்கி மழையும் வளமும் சுரப்பதாக என வாழ்த்தி அழகிய கோலத்தோடு வல்லமையுடன் உரைக்கும் அம்மறக்குடி மகளிர் ஆரவாரத்துடன் பலியிட்டு செல்வர். இச்செய்தியில் மன்னனுக்கு நேர்ந்த துன்பத்திற்காக மக்கள் இறைவனிடம் வேண்டும் செய்திகளை காணமுடிகிறது.

அரசன் எவ்வளவு நல்லாட்சி செய்திருந்தால் மக்கள் இதனை செய்ய முன்வந்திருப்பார்கள். என்பதனை நாம்புரிந்து கொள்ள முடியும். சித்திரைத் திருநாள் பண்டிகை முற்காலம் தொட்டே கொண்டாடப்பட்டு வந்த செய்தியினை இதன் வாயிலாக நாமும் தெரிந்து கொள்ளலாம். அதுமட்டுமில்லாமல் பலியிட்ட செய்தியினையும் இதன் வாயிலாக அறிந்து கொள்ளலாம்.

**பாண்டியர் வரலாறு**

பண்டைத் தமிழகம் இயற்கை வளங்கள் நிரம்பியது. பாண்டிய நாட்டிற்கு வளம் சேர்த்தது வைகை என்னும் பொய்யாகக் குலக்கொடி, கழனிகள், பொழில்கள், ஏரிகள் கொண்டு தெங்கு, வாழை, கமுகு, மா, பலா போன்ற கனிதரும் மரங்கள் அடர்ந்த சோலைகள் நிறைந்த செழிப்பான நாடு பாண்டிய நாடு. மதுரையிலிருந்து வந்த தென்றல் காற்றில் கழுநீர், செண்பகம், மாதவி, மல்லிகை, முல்லை முதலிய பூக்களின் வாசனை கலந்து வந்ததாகக் கூறுவது மதுரை. பல பூஞ்சோலைகளைக் கொண்டு திகழ்ந்தது என்பதைச் சுட்டுகிறது. இவ்வாறு பாண்டிய நாட்டினைச் செழிப்பான சிலம்பு காட்டுகிறது.

**மதுரை**

பாண்டியர்களின் தலைநகராகவும், தமிழ் சங்கத்தின் தலைநகராகவும் திகழ்ந்தது மதுரை. சிலம்பின் புகார்க் காண்டத்தில் சில பகுதிகளிலும், இரண்டாம் காண்டமான மதுரைக் காண்டத்திலும், வஞ்சிக் காண்டத்திலும், மதுரையைப் பற்றியச் செய்திகளைக் காணலாம். மதுரைநகர் கூடல் என்றழைக்கப்பட்டது. இந்நகர் பாண்டியரின் தலைநகர் என்பதை, **“கௌரியர் பெருஞ்சீர்க் கோலின் செம்மையும் குடையின் தன்மையும் வேலின் கொற்றமும் விளங்கிய கொள்கைப் பதியெழு வறியாப் பண்புமேம் பட்ட மதுரை மூதூர் மாநகர்...”** என்று இளங்கோவடிகள் குறிப்பிட்டுள்ளார்.

ஊர்க்காண் காதையில் மதுரைப் பற்றிய பல தகல்களைச் சிலப்பதிகாரம் தருகின்றது. காவற்காடு, அகழி, மதில் எனப் பாதுகாப்பு அரண்கள் கொண்டதாக திகழ்ந்தது மதுரை. மதுரைக் கோட்டை சூழ்ந்த நகர். காவல் செய்யும் காவலர் தவிர பகைவா கோட்டையை அணுகா வண்ணம் ஏராளமான பொறிகள் இருந்தன. வளைந்து தானே எய்யும் எந்திர வில், குரங்கு போன்று அருகில் வந்தவர்களைக் கடிக்கும் பொறியும், கற்களிடப்பட்ட கூடைகளும், தூண்டில் பொறிகளம், சிற்றம்புகளை எய்யும் எந்திரமும், கணையங்கள், எறிகோல்கள் இன்னும் பிற கருவிகளும் கோட்டை மதிலில் பொருத்தப்பட்டிருந்தன என சிலம்பு கூறுவது

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com


அக்கால மன்னர்களின் பாதுகாப்பு ஏற்பாடுகளையும், பண்டைத் தமிழரின் மேலோங்கிய பொறியியல் வல்லமையையும் பறைசாற்றுகின்றன.

**மதுரையிலிருந்த கோவில்கள்**

மதுரையில் சிவன், திருமால், பலராமன், முருகன் ஆகிய தெய்வங்களுக்கு கோவில்கள் இருந்தன. அவற்றில் காலை முரசம் ஒலித்தன என்று சிலப்பதிகாரம் கூறுகின்றது. கண்ணி மதுரையை விட்டு செல்லுமுன் கொற்றவை கோவிலுக்குச் சென்றதால் கொற்றவைக்கும் கோவில் இருந்துள்ளது தெரிகிறது. மதுரையின் புறநகர் பகுதியில் இயக்கி என்ற பெண் தெய்வத்திற்கு கோவில் இருந்துள்ளது. மாதரி இத்தெய்வத்திற்குப் படைத்துவிட்டுப் செல்லும் போது கவுந்தி அடிகளைச் சந்தித்தாள். சிறு தெய்வங்களுக்கும் கோவில்கள் இருந்தன. மதுரையில் காவல் தெய்வமாக மதுராபதி என்னும் தெய்வம் இருந்ததாக சிலப்பதிகாரம் எடுத்தியம்புகிறது. இவ்வாறு பல தெய்வங்களுக்கு வழிபாட்டுக் கூடங்கள் மதுரையில் பல பகுதிகளில் இருந்துள்ளன. அவற்றில் முரசம் அறைந்து வழிபாடுகள் நடந்தன. நான்மறை அந்தணர் வேதமும் ஓதியுள்ளனர். இவற்றுடன் அறத்துறையில் விளங்கிய அறவோர் பள்ளியாக சமண, புத்த பள்ளிகளும் மதுரையில் இருந்துள்ளன. சங்ககால பாண்டியர் காலத்தில் மதுரையிலும், மதுரையைச் சுற்றியுள்ள இடங்களிலும் சமணப் பள்ளிகள் இருந்துள்ளன. அதிலுள்ள பிராமிக் கல்வெட்டுகள் மன்னன் முதல் சாதாரண மக்கள் வரை சமண முனிவருக்கு அளித்தக் கொடைகளைப் பற்றி இன்றும் எடுத்தியம்பி வருகின்றன.

**வீதிகள்**

மாமதுரையின் மதிலினுள் வாணிகர், அரசு அலுவலர், வணிகர்கள் போன்றோருக்குத் தனி வீதிகள் இருந்தன. நான்கு வர்ணத்தாராகிய அரசன், அந்தணர், வணிகர், வேளாளர் என்பவருக்கென தனி வீதிகள் இருந்தன. காவற்கணிகையர் வீதி, ஆடற்கூத்தியர் வீதி, அங்காடி வீதி, அறுவைக்கடை வீதி என ஒவ்வொரு பிரிவினருக்குமான தனி வீதிகளாமைத்து மதுரைக் காணப்பட்டது.

**வணிக நகர்**

மதுரை ஒரு வணிக நகர். அங்கு விலை உயர்ந்த மணிகள் விற்கும் இடமும், கூலவீதியும் இருந்தன. அங்காடி வீதிகளில் செம்பு, வெண்கலத்தால் ஆன பொருட்கள் கயிற்றில் பின்னப்பட்ட மாலைகள் போன்றவைகள் நிறைந்திருந்தன. ஒன்பது வகை மணிகள் விற்கப்பட்ட இரத்தினக் கடைத் தெருவையும், நால்வகைப் பொன் கிடைக்கும் பொற்கடைத் தெருவையும் கோவலன் சுற்றிப் பார்த்ததாகச் சிலம்பு கூறுகிறது. பிற சங்க கால இலக்கியங்களும் மதுரையில் அல்லங்காடி, நாளாங்காடி என இரவு நேர, பகல் நேரக் கடைகள் இருந்ததை இயம்புகின்றன. இன்றும் மதுரை தூங்காநகராகத் திகழ்வது கண்டு நோக்கத்தக்கது. அயல்நாட்டு வணிகரும் வணிகம் செய்தனர் என்பது வைகை ஆற்றில் கண்டெடுக்கப்பட்ட அயல்நாட்டு நாணயங்கள் உறுதிப்படுத்துகின்றன.

**கோவலனின் கொலைக்களம்**

கடைத்தெருவில் அரச பொற்கொல்லனைக் கண்டு கோவலன் சிலம்பை விலை பேச, அவன் அதைப் பயன்படுத்தி மன்னனிடம் கோவலனை அரசியின் காற்சிலம்பைக் கவர்ந்த கள்வன் எனக் கூறி கோவலனைக் கொலை செய்ய ஆணை பெற்று கொலையும் செய்தான். வெட்டுண்டு வீழ்ந்த கோவலனை காவலன் செங்கோல் வளையய வீழ்ந்தான் என்று இளங்கோவடிகள் குறிப்பிடுகிறார். இன்றும் மதுரையின் ஒரு பகுதி கோவலன் பொட்டல் என்று அழைக்கப்படுகிறது. அவ்விடமே முற்காலத்தில் கொலைக்களமாக இருந்திருக்கலாம். அவ்விடத்தில் தொல்லியல் துறையினரால் நடத்தப்பட்ட அகழ்வாய்வுகளில் தாழிகளும் அதில் மாறுகை, மாறுகாலில்லாத எலும்புக்கூடும் கிடைத்துள்ளது சிலப்பதிகாரம் கூறும் நிகழ்வுகளை நினைவுப்படுத்துகின்றது.

**பாண்டிய மன்னர்கள்**

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

சிலப்பதிகாரத்தில் பல இடங்களில் பரவலாக பல பாண்டிய மன்னர்களைப் பற்றியும், அவர்தம் புகழ் வாய்ந்த செயல்களைப் பற்றியும் கூறப்பட்டுள்ளது. பாண்டியர் குலத்தைச் சார்ந்தவர்கள் என்பதை அந்திமாலை சிறப்புப் செய் காதையில் இளங்கோவடிகள் கூறியுள்ளார். முற்காலப் பாண்டியப் பேரரசர்கள் தமது அனைத்துச் செப்பேடுகளிலும் தங்கள் சந்திரக்குலத்தவர்கள் எனத் தவறாது பொறித்துள்ளது இங்கு நோக்கத்தக்கது. பண்டைய பாண்டிய வேந்தர்களைப் பற்றியக் குறிப்பு சிலம்பில் காணக்கிடக்கிறது. வடிம்பலம்ப நின்ற பாண்டியன் காலத்தில் நடைபெற்ற கடல்கோளால் ப∴றுளி ஆறு, மற்றும் மலைகளுடைய குமரிக்கோடு பகுதிகளை இழந்த பாண்டியன் தனது எல்லையை வடதிசையில் விரிவடையச் செய்து நிலம்தருதிருவில் பாண்டியனானான் என்ற என்ற செய்தியை அறியலாம். கடல்கோளால் நிலப்பகுதிகள் அழிக்கப்படுவதை அண்மையில் தோன்றிய சுனாமி தெளிவுப்படுத்தியது. கடலாய்வுகளுகம் கன்னியாகுமரிக்குத் தெற்கே பெரும் நிலப்பகுதி கடலுள் மூழ்கியுள்ளதைத் தெரிவிக்கின்றன. **“ப∴றுளி ஆற்றுடன் பன்மலை அடுக்கடுத்துக் குமரிக் கோடும் கொடுங்கடல் கொள்ள”** என்ற இளங்கோவடிகளின் வரிகள் அவரை ஆட்சியாளராக அடையாளம் காட்டுகிறது. பாண்டிய நாட்டைப் பற்றி எழுதும் போது அதன் வரலாறைத் திறம்பட தெரிந்த பின் தொகுத்து எழுதிய அவர் பாங்கு போற்றத்தக்கது. இவரது இவ்விரு வரிகளே லெமூரியா கண்டம் பற்றியும் அதிலிருந்து பிரிந்த இந்திய துணைக் கண்டத்துக்கான ஆய்வுக்கும் உறுதுணையாக நிற்பது கண்டு நோக்கத்தக்கது. இந்திரனின் ஆரத்தை மார்பில் அணிந்த பாண்டிய மன்னன், இந்திரன் ஆணையால் மழை பொய்த்த போது மேகங்களைச் சிறைப்பிடித்து மழை பெய்ய வைத்து நாடு செழிக்க வைத்தான். பிறிதொரு மன்னன் என நாடுகாண் காதையில் பாண்டியமன்னர்கள் சிலரைப் பற்றிய குறிப்புகளைக் காணலாம். கட்டுரை காதையில் பொற்கைப் பாண்டியன், வார்த்திகள் என்ற அந்தணனுக்கு நீதி வழங்கிய பாண்டிய மன்னன் என்பவர்களைப் பற்றிய செய்திகள் கூறப்படுகிறது. ஆறாம் நூற்றாண்டில் ஆட்சி செய்த முற்காலப் பாண்டிய மன்னர்கள் தங்களது தானத்தைப் பற்றிக் கூறும் செப்பேடுகளின் முகவுரையில் (பிரசஸ்தியில்) மேற்கூறிய மன்னர்களின் வழித்தோன்றல் என்பதைப் பெருமையுடன் கூறுகின்றனர். சேர நாட்டின் இளவலாக இருந்தும் பாண்டிய மன்னரது வரலாற்றைத் தெள்ளத் தெளிவாக உணர்ந்து அம்மன்னரது புகழையும், பெருமையையும் சிலம்பில் பதிய வைத்த இளங்கோவடிகளின் திறம் போற்றத்தக்கது.

**கொற்கை**

கொற்கை பாண்டியரது முக்கிய நகரமாகத் திகழ்ந்தது. கொற்கைத் துறைமுகம் முத்துக் குளித்தலுக்கு பேர் பெற்றது. பாண்டிய நாடு முத்துடைத்ததால் கொற்கைப் புகழ்வாய்ந்த நகரமாகத் திகழ்ந்தது. பாண்டியரது இளவல் அங்கு பொறுப்பாளராக இருந்தனர் பாண்டிய மன்னன் நெடுஞ்செழியன் மாண்ட செய்தி கேட்டதும் வெற்றி வேற் செழியன் என்ற பாண்டிய இளவரசன் மதுரை வந்து முடி சூடியதை சிலப்பதிகாரம் கூறுகிறது. எனவே சோழர், சேரர் போன்று பாண்டிய மன்னர்களும் இரண்டாவது தலைநகரைக் கொண்டிருந்தனர் என்பது தெரிகின்றது.

இத்தகைய சிறப்புகள் பலவற்றைக் கொண்டுள்ள சிலப்பதிகாரம், ஒரு பல்வண்ணக் களஞ்சியமாகவும், பார்போரின் கோணத்திற்கும், இரசனைக்கும் ஏற்ப அது இலக்கியப் புதையலாகவும், வரலாற்றுப்பதிவு ஏடாகவும், பண்பாடு பெட்டகமாகவும் பல்வேறு காட்சிகளைத் தருகிறது. தமிழினத்தின் வளர்ச்சிக்கும், எழுச்சிக்கும் இன்றளவும் மூல ஊற்றாக இருக்கும் ஒரே ஒப்பற்ற காப்பியம் சிலப்பதிகாரமே,என வரலாற்றுப் பதிவுகள் வழியாக அறிய முடிகிறது.

**பார்வை நூல்கள்**

1. சாமி சிதம்பரனார் - சிலப்பதிகார தமிழகம், திருமகள் நிலையம்.
2. பொ.வே.சோமசுந்தரனார் - சிலப்பதிகார உரை, பாரி நிலையம்.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

# பாவேந்தர் பார்வையில் சங்க இலக்கியம்

# Sangam Literature in the View of Paventhar

**முனைவர் அ.கோவிந்தராஜன்,** இயக்குநர் (ம) உதவிப்பேராசிரியர்,
பாரதிதாசன் உயராய்வு மையம், பாரதிதாசன் பல்கலைக்கழகம், திருச்சிராப்பள்ளி - 24.

## Abstract

*On Sangam Literature, Paventhar Bharathidasan reflected several ideas and elicited indepth meanings of Sangam Literature through his works. He praised the lifestyle of Sangam period and he took it to heights, and shared love and happiness from it with the people through his works. He emphasized the 'aram' and made people think about well being and to be honest. He insisted on forgetting all our sorrows and be happy always is the chief idea of his poems which are predominantly based on Sangam Literature.*

**Keywords:** Aram, Sangam Literature, Love and Happiness, Paventhar Bharathidasan.

### முன்னுரை

இருபதாம் நூற்றாண்டில் தோன்றிய பாரதிதாசன் இயற்கையின் மீது கொண்ட காதலாலும் பற்றாலும் நாட்டின் மீது கொண்ட தேசப்பற்றாலும் நாட்டு மக்களுக்காக தம் கவிதைகளில் புரட்சிக் கருத்துக்களை பதிவுசெய்துள்ளார். சங்க இலக்கியத்தின் மீது கொண்ட காதலால் தம் கவிதைகளில் அச்சாயலை பதிவு செய்துள்ளார். அவ்வாறு சங்க இலக்கியத்திலிருந்து தழுவி அமையப்பெற்ற பாரதிதாசனின் பாடல்களை ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

### சங்கத்தை கையாண்ட பாவேந்தர்

பழந்தமிழ்ப் பாக்களில் காணப்பெறும் பிசிராந்தையார் பற்றிய செய்திகளைத் திரட்டிப் பிசிராந்தையார் என்னும் உரைநடை நாடகத்தையும், ஆட்டன் அத்தி ஆதி மந்தி பற்றிய குறிப்புகளைக் கொண்டு சேரதாண்டவம் எனும் உரைநடை நாடகத்தையும் படைத்துள்ளார். சிலப்பதிகாரம்,மணிமேகலை ஆகிய காப்பியங்களைச் சற்று மாற்றி எளிய நடையில் ''கண்ணகி புரட்சிக் காப்பியம்', மணிமேகலை வெண்பா' என்று தந்துள்ளார்.

ஒத்த உணர்வுடைய ஒருவனுக்கும், ஒருத்திக்கும் ஏற்படும் தனிமனித உரிமையே காதல் எனப்படும். இத்தனிமனித உரிமையே உலக ஒருமையையும் மாந்த நேயத்தையும் வளர்க்கும் உறவாகும். இவ்வாழ்வியல் மேன்மைகளை உணர்ந்து வாழ்ந்தது பழந்தமிழ்ச் சமுதாயம். இதைத் தம்மினச் சமுதாயம் கடைபிடிக்க வேண்டும் என்பதை,

> **''பண்ணி வைப்பதாக வரும்**
> **பார்ப்பு மணம் வேண்டாம்**
> **கண்மணி யும்நீயும் நல்ல**
> **காதல் மணம் கொள்வீர்''**[1]

என்று தம் பாடல்களின் மூலம் வலியுறுத்துகிறார். ஒத்த உணர்வுடைய ஆண், பெண் உள்ளத்து உணர்வுகளே அகவாழ்வை அமைத்துத் தருதலால் அகம் என்பது உளவியல் சார்ந்து இயங்குவது. இதனை நுண்ணிதின் உணர்ந்த பாரதிதாசன் காதலின் சிறப்பையும், உயர்வையும், அது தரும் இன்பத்தையும் புரியும் வண்ணம் புதுமுறையில் உணர்த்தலானார்.

### பக்தியும் நற்றிணையும்

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

**"நின்ற சொல்லர் நீடுதோன் றினியர்
என்றும் என்றோள் பிரிபறி யலரே
தாமரைத் தண்டா தூதி மீமிசைச்
சாந்தின் தொடுத்த தீந்தேன் போலப்
புரைய மன்ற, புரையோர் கேண்மை
நீரின் றமையா வுலகம் போலத்
தம்மின் றமையா நந்நயந் தருளி
நறுநுதல் பசத்த லஞ்சிச்
சிறுமை உறுபவோ செய்பறி யலரே"**

என்பது நற்றிணை முதற்பாடல் பிரிவுணர்த்திய தோழிக்குத் தலைவி சொல்லியது. "தோழி தலைவர் நிலைத்து வாழும் சொற்களையே பேசுபவர். நெடுங்காலம் நிலைக்கும் பண்புகளை உடையவர். எக்காலத்தும் என் தோளைப் பிரிய இயலாதவர். தாமரைப் பூவின் தால் சந்தன மரத்தின் உயர்ந்த கொம்பில் கட்டிய தேன்போலச் சிறந்தவரின் உறவுகள் உயர்வுடையன் தண்ணீர் இல்லாமல் வாழ்வு அமையாது. எனவே அவர் நம்மைக் கைவிடாது விரும்பி அருளுவார். நெற்றி பசலையுறுவதற்கு அஞ்சுவார். துன்பம் விளைக்கமாட்டார் என்று தலைவி தன் காதல் நிகழ்ச்சிகளைத் தோழிக்குக் கூறுவதாக அமைந்துள்ளது.

இரு இதயங்களின் காதல் உணர்வுகளை இப்பாடல் எதிரொலிக்கிறது. தலைவன் மேல் தலைவி கொண்ட உறவின் துடிப்பை இப்பாடல் உணர்த்துகிறது. பழந்தமிழ்ச் சமுதாயத்தில் காதல் உணர்வுகள் சமுதாய ஏற்புப் பெற்றிருந்த சூழ்நிலையை இப்பாடல் அறிவிக்கிறது. தேன்போல மருந்தாகி வளமூட்டுவதாகவும் அமைய வேண்டும் என வற்புறுத்துகிறது.

சுவை நலனுக்கு அடிப்படையாக இருத்தல் வேண்டும். பழந்தமிழ் இலக்கிய வாழ்க்கையைப் போலத் தலைமகளின் பண்பு ஒன்றே நோக்கமாகக் கொண்ட காதலை இக்காலத் தமிழ்ச் சமுதாயத்திற்குப் பாரதிதாசன்.

**"சொன்னசொல் மாறாத தலைவர் - அவர்
தொலையாத நிலையன்புக் கினியர்! - தோழி
தோளினைப் பிரியாத துணைவர் - அவர்
தூய்மையும் வாய்மையும் வாய்ந்ததால் கணவர்
சொன்னசொல்.......
இன்சுவைத் தாமரைத் தேனுண்ட தேனீ
இனம்கூடிச் சந்தன மரத்தின் வானீள
நன்கிளை தாங்கிய தேனடைத் தேன்போல்
நல்லவர் நட்பென்றும் ஊன்றிடும் ஆல்போல்
சொன்னசொல்.......
உலகிற்கு நீர் முதல் ஆவது போலே
உறவுக்கு அவரின்று அமையாது வாழ்வே
விலகவே பெறாதவர் பிரிவதும் ஏது?
வீணையை விரல்பிரிந்தால் இசை பிறக்காது!
சொன்னசொல்.......
என்நெற்றிப் பசலைக்கு என்றுமே அஞ்சுவார்
இன்னல்தரார் எனையே இன்பத்தில் கொஞ்சுவார்
அன்பென்ற வேறொன்றும் உண்மையில் அறியார்
அவர்பிரிந்தார் என்றால் வேறெவர் மிஞ்சுவார்?
சொன்னசொல்......."**[2]

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

எனப் பாடுகிறார். அமைப்பு முறையில் “இசைப் பாங்கும், சொந்த உணர்ச்சி வெளிப்பாடும் சேர்ந்த பாங்கே தன்னுணர்ச்சிப் பாங்கு என்று கூறப்படும்[3]. என்பதற்குப் பாரதிதாசனின் இப்பாடல் சிறந்த எடுத்துக் காட்டாகும்.

**அறம் உணர்த்தும் அகம்**

**“அண்ணாந் தேந்திய வனமுலை தளரினும்
பொன்னேர் மேனி மணியிற் றாழ்ந்த
நன்னெடுங் கூந்தல் நரையொடு முடிப்பினும்
நீத்த லோம்புமதி பூக்கே ழூர!
இன்கடுங் கள்ளி னிழையணி நெடுந்தேர்க்
கொற்றச் சோழர் கொங்கர்ப் பணீஇயர்
வெண்கோட் டியானைப் போஓர் கிழவோன்
பழையன் வேல்வாய்த் தன்னநின்
பிழையா நன்மொழி தேறிய இவட்கே”**

என்பது நற்றிணைப் பாடல். “நுட்பமான மனவுணர்வு அளவான வரம்பு மீறாத பாலுணர்வு இரண்டும் ஒட்டி உறவாடிய செல்லும் பாங்கை, நாம் சங்கக் காதற் கவிதைகளில் காணலாம்.”[4] என்ற உண்மைக்கு ஏற்பத் தோழி தலைமகனுக்குக் கூறுவதாக இப்பாடல் அமைந்துள்ளது.

பிழைபடாத உன் நல்ல மொழிகளைக் கேட்டு உண்மை எனத் தெளிந்த இவளுக்கு அண்ணாந்து உயர்ந்த அழகிய கொங்கைகள் தளர்ந்தாலும் பொன் போன்ற மேனியிலேயே கருமணி போலத் தாழ்ந்த நெடிய கூந்தல் நரைத்தாலும் இவள் முயக்கத்திற்குப் பயன்படாது முதுமை அடைந்துவிட்டாள் என்று கைவிடாது பாதுகாப்பாக! என்பது இப்பாடலின் கருத்து. வாழ்க்கையில் பாலுணர்வூக்கத்தை முதன்மைப்படுத்தாது அன்பையும் நேயத்தையும் வளர்க்கும் மனநிலை பெற வேண்டும் என்ற உளவியல் கொள்கையை இப்பாடல் கற்பிக்கின்றது. இப்பழந்தமிழ் மெய்மை மீட்டு எடுக்கப்பட வேண்டும் என்ற நோக்கத்தோடு பாரதிதாசன் இப்பாடலைப் புதுக்கியுள்ளார். நடத்தைக் கோலங்களாக உருவாவது பண்பாடாகும் என்ற உளவியல் கொள்கையின்படி தலைமகனின் நடத்தை உருவாக்கத்தை எதிர்நோக்கி இப்பாடல் பாடப்பட்டுள்ளது.

**“பெற்றோர் அறிந்திலர்
உற்றார் தெரிந்திலர்
கற்றவனே இவளைக் கொண்டாய்
கருங்குயில் வரச் சொல்லி விண்டாய்?
குற்றம் ஈதானாலும்
நற்றவக் காதற்கு
நான்தடை ஆவதும் உண்டோ?
நாளைநீர் வாழ்பவர் அன்றோ?
இன்றுபோல் என்றும்நீர்
அன்பினில் தென்பினில்
நன்று குறள்போல வாழ்க!
நற்றிணைப் பாடல்போல் வாழ்க!
ஓங்கிய மார்பெழில்
ஒளியுமிழ் திருமேனி
பாங்கு தளரினும் கைவிடாய்
பசையற்றுப் போகுமோ மெய்விடாய்?
கூந்தல் நரைத்தாலும்
கொண்டநின் காதற்சொல்**

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

**ஏந்திய பெண்ணினைத் தள்வையோ?**
**இன்றுபோல் என்றும்நீ கொள்வையே"[5]**

சங்க இலக்கியப் பாடலைவிடப் பாரதிதாசன் பாடல் இசைக் கூறுகளோடு அமைந்து இக்காலச் சமுதாயத்தை ஈர்க்கிறது.

நற்றிணையில் கொங்கைச் சிறப்பையும், கூந்தல் சிறப்பையும் பாடி இளமைக்கும் காதல் உணர்விற்கும் உள்ள தொடர்பை விளக்குகின்றார். பாரதிதாசனோ, ஓங்கிய மார்பெழிலையும் கூந்தலையும் கூறியதோடு ஒளியுமிழ் திருமேனி என்றும் கூறி இளமைச் சிறப்பை எடுத்துக் கூறுகின்றார்.

**"அள்ளையிலே காதல் அதை அருந்தல் இன்பம்!**
**அகமொத்து மேல் நடத்தல் அறமாம் என்றாள்"[6]**

என்ற பாண்டியன் பரிசுப் பாடல் வரிமூலம் இக்கருத்தை மெய்மைப் படுத்துகிறார். நற்றிணைப் பாடற்கருத்து பாரதிதாசன் நெஞ்சில் நன்கு பதிந்து செல்வாக்குப் பெற்றுள்ளது என்பதற்கு,

**"மதியல்லமுகம் அவட்கு**
**வறள்நிலம் குழிகள் கண்கள்**
**எதுஎனக் கின்பம் நல்கும்**
**இருக்கின்றாள் என்பதன்றோ"[7]**

என்ற குடும்ப விளக்கில் முதியோர் காதலில் வரும் பாடல்வரியே சான்றாகும். இந்நற்றிணைப் பாடல் "நரை வந்த போதும் நங்கையிடம் அன்பு மறவாதே" என்கிறது. இங்கு முதியோர் இல்லம் முப்போதும் மறவாத இறைவனாக இருக்கின்றாள் முதியோள் கிழவி" என்பார் கருத்தும், பாரதிதாசனின் பழந்தமிழ் இலக்கியச் செல்வாக்கைப் பறைசாற்றுகின்றது.

சங்க இலக்கயப் பாடல்களில் வரலாற்று நிகழ்ச்சிகளைக் காதல் நிகழ்ச்சிகளுடன் தொடர்பு படுத்திப் பாடும் மரபு காணப்படுகிறது. நற்றிணைப் பாடலில் காணப்படும் வரலாற்றுச் செய்தியை ஒதுக்கிவிட்டு வாழ்வியற் செய்தியைப் பாரதிதாசன் இருபதாம் நூற்றாண்டுத் தமிழ் மக்களுக்கு எடுத்துரைக்கின்றார்"[8]. ஒலி நயத்தின் ஆற்றல் படைத்த ஆட்சியை நல்ல கவிதையில் காண்கிறோம். என்பதற்கு எடுத்துக்காட்டாகப் பழந்தமிழ் பாடலும், தஅதன் செல்வாக்கால் எழுந்த பாரதிதாசன் பாடலும் சான்றாய் விளங்குகின்றன.

**"போகவில்லை அகம்புறமும் நாலிரண்டும் நெஞ்சம்**
**புகுந்தொறும் புகுந்தொறும் அறம்எதிரிற் கொஞ்சும்"[9]**

குடும்பவிளக்கு பாடிய பாரதிதாசன் அக்காப்பியத்தின் தலைவி தன் குழந்தைகளைப் பார்த்துப் பள்ளியிலே நீங்கள் இன்று என்ன படித்தீர்கள்? என்று கேட்பதாகவும். அக்குழந்தைகள் நான்கு புறநானூற்றுச் செய்யுளையும் பத்துத் திருக்குறளையும் பழச்சுளைகளை போலப் படித்தச் சுவைத்ததாகவும் பாடுகிறார்.

**"நல்ல புறநானூற்றில்**
**நான்கும் திருக்குறளில்**
**கல்வி ஒரு பத்தும்**
**கடுந்தோல் விலக்கிச்**
**சுவைசுளையாய் அம்மா**
**சுவைசுவையாய் உண்டேன்"[10]**

புறநானூற்றுச் செய்திகளைச் சமுதாயத்தின் ஒரு பிரிவு மக்கள் சாதிச் சேற்றால் மூடிப் பண்பட்ட தமிழ் நிலத்தைக் கெடுத்தார்கள்.

**"புறத்தைச் சாதிச் சேற்றினால் மூடித் - தமிழர்**
**புலத்தைக் கெடுத்தானப் பேடி"[11]**

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

எனக் குறிப்பிடுகிறார். பிஞ்சுக் குழந்தைகளுக்குப் பாடல் மூலம் குறிக்கோள்களைக் கற்பித்துச் சமுதாயத்தோடு உறவு உண்டாக்குவது இலக்கியத்தின் பணி.

**கவிதையும் உணர்ச்சியும்**

விழுமிய உணர்ச்சி உடையதே சிறந்த கவிதையாகும். உணர்ச்சியற்ற பாட்டு உரை நடையாகும். கவிதை உணர்ச்சிகளில் தலை சிறந்த அவலமே ஆகும். கண்ணீரை நல்கும் கவிதை உணர்ச்சிக் கவிதைக் கலையில் சிகரமாகும். "எங்களின் சோகமான எண்ணங்களே சுகமான கவிதைகளாக இனிக்கின்றன"[12] என்று ஆங்கிலக் கவிஞர் ஷெல்லி கூறுவர். பழந்தமிழ் இலக்கியத்தில் அவலச்சுவை மிகுந்த கவிதைகள் உண்டு. இதனைக் கையறுநிலைக் கவிதைகள் என்பர்.

"தமிழில் கையறுநிலைப் பாடல்கள் என்பன ஒருவர் இறப்பின்மீது பாடியவற்றையே சிறப்பாகக் குறிக்கின்றன. அவை தவிர ஏனைய அவலக்கூறு அடங்கிய பாடல்களும் தமிழில் மிகுதி"[13] இக்கையறுநிலைப் பாடல்களைக் கற்றுத் தேர்ந்த பாரதிதாசன் தம்காலத் தமிழ்ச் சான்றோர்கள் இறந்த பின்னர்ப் புகழஞ்சலியாகப் பல பாடல்களைப் பாடி இருக்கின்றார்.

**முருகியல் உணர்வு**

கவிஞன் காலத்தின் எதிரொலி என்பதற்கேற்ப குழந்தை அமிழ்து மைக்கூட்டை எடுத்துப் போய் முல்லைக் கொடியில் சாய்த்தும் அச்சேற்றில் சிறு வீடு கட்டியும் விளையாடுகின்றாள். அப்பனும் அதை வாங்கி உண்கிறான். குழந்தையின் குறும்புக் காட்சி பாரதிதாசன் பாட்டைப் படிப்பவர் நெஞ்சை விட்டு நீங்காது. கவிதையைக் கண்ணுக்குள் வைக்கச் சொல்லி கருத்தை நெஞ்சுக்குள் பதியம் செய்து விடுகிறது. அப்பழம் பாடல் பாட்டை விடக் காட்சியை நினைவில் நிறுத்தி உணர்ச்சியை ஊட்டுவதால் பாரதிதாசன் பாடல் சிறந்து விளங்குகிறது. "ஒப்பிலக்கிய நோக்கால் இதுவரை உலகினர் அறிந்து கொள்ள இயலாத வகையில் மறைத்து வைக்கப்பட்ட பல மொழிகளின் இலக்கியச் செல்வம் செல்வாக்கு மரபு இலக்கியத் தாக்கம் ஆகியவை யாரும் அறியவும் உண்மையான நிலையை உணரவும் வழிவகை ஏற்படும்."[14] என்ற ஒப்பியல் உண்மையை இப்பாடல் மூலம் கவிஞர் உணர்த்துகின்றார். இப்பாடல் புதுப்பிக்கப்பட்ட பாங்கு நினைவுக்குத் தெரியாமல் பாரதிதாசன் நிறைந்த இன்பத்தைப் படிப்பவர் நெஞ்சில் நிலைக்கச் செய்கின்றார்.

**கவிதையும் தத்துவமும்**

தத்துவம் தாழ்வு மனப்பான்மையை நீக்கி நிகரமைப்பு மனப்பான்மையை உருவாக்கும். தத்துவம் என்ற சொல்லுக்கு உண்மைப் பொருள் விளக்கம் அல்லது மெய்யியல் என்று பொருள் கூறுவர். "தத்துவத்தப் பொறுத்த அளவில் அது பதட்டமடைந்த மனத்திற்கு அமைதியைத் தரும். துன்பம் தாளாது துவளும் மனத்திற்கு நிம்மதியைத் தரும். சதா அஞ்சி நடுங்கும் மனத்திற்குத் துணிவைத் தரும்."[15]

**முடிவுரை**

சங்க காலம் புலவர்களின் பெட்டகமாக திகழ்ந்தது. அதனையொட்டி தற்கால கவிஞர்களில் ஒருவரான பாவேந்தரும் சங்க இலக்கியத்தை தழுவி பல கவிதைகளை புனைந்துள்ளார். பாவேந்தரின் ஒவ்வொரு கவிதைகளும் சங்கச் சொற்களும் சங்க கவிதைகளும் நிறைந்து இருப்பதை காண முடிந்தன. இவர் தற்கால கவிஞர்களை விட மேலானவர் என்பதை அழகியல் தத்துவம், உணர்ச்சி, அறம், பக்தி போன்றவற்றினால் இக்கட்டுரை செம்மைப்படுத்தி உள்ளது என்பதை அறிய முடிகிறது.

**அடிக்குறிப்புகள்**

1. பாரதிதாசன், பாரதிதாசன் கவிதைகள் - மூன்றாம் தொகுதி.
2. மேலது தேனருவி – ப.59.

3. குனகசபாபதி. சி முனைவர் .பாரதி பாரதிதாசன் கவிதை மதிப்பீடு ப.115.
4. மகாதேவன், கதிர், ஒப்பிலக்கிய நோக்கில் சங்ககாலம் ப.214.
5. பாரதிதாசன் தேனருவி ப.71.
6. பாரதிதாசன் பாண்டியன் பரிசு ப.126.
7. பாரதிதாசன் குடும்ப விளக்கு.ப.101.
8. பாலச்சந்திரன்.சு.முனைவர், இலக்கியத் திறனாய்வு, ப.152.
9. மேலது ப.64.
10. பாரதிதாசன் குடும்ப விளக்கு ப.7.
11. பாரதிதாசன் குயில் இதழ் 6.10.59.
12. "Our sweetest songs are those that tell of saddest thoughts", ரகுநாதன் பாரதியும் செல்லியும். ப.230.
13. தமிழண்ணல் - சங்க இலக்கிய ஒப்பிடு இலக்கிய வகைகள் ப.190.
14. மகாதேவன், கதிர் ஒப்பிலக்கிய நோக்கில் சங்க காலம் ப.42.
15. Joad. C.E.M. *Return to Philosophy*. P.187.

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
International Journal of Tamil Language and Literary Studies 
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

# நாலடியார் வலியுறுத்தும் இயற்கை வாழ்வு

## Environmentally Friendly life Emphasized by *Naladiyar*

**மு.சங்கர் முனிசாமி,** முனைவர் பட்ட ஆய்வாளர்,
மலாயாப் பல்கலைக்கழகம், கோலாலம்பூர்.

**Abstract**

*The world is emphasizing the awareness to preserve nature. The main reason for this is the fear that the humankind will be destroyed without nature. The U.N., the largest organization in the world, has initiated serious measures to maintain the nature of this earth. It regularly advises member countries to reduce the organic excretion. The Tamils since the beginning of their civilization live their life with nature. Our literatures also emphasize this. The Naladiyar, the intellectual creation of the Tamils, still practical in today's scientific era. It teaches us to live a natural life. The objective of this research paper is to emphasise ways that have been taught by Naladiyar towards an environmentally friendly life.*

**Keywords:** *Naladiyar*, nature, natural life, environmentally friendly

**முன்னுரை**

அமெரிக்க வட கொரியத் தலைவர்களின் சந்திப்பு, ஏவுகணைத் தாக்குதல், ஐரோப்பிய ஒன்றியத்திலிருந்து பிரிட்டன் வெளியேறுவதில் சிக்கலும் தடுமாற்றமும், இந்தியா பாக்கிஸ்தானுக்கிடையே நிலவும் பதற்றநிலை, இன்னும் பல உலக அரசியல் சர்ச்சைகள் ஆகியவற்றுக்கிடையேயும் இயற்கை குறித்தும், பருவநிலை மாற்றம் குறித்தும் உலக ஊடகங்கள் 2018-லும் 2019 தொடக்கத்திலும் மிகப் பரவலாகப் பேசியும் எழுதியும் வந்துள்ளன . பன்னாட்டு ஊடகங்கள் தொடங்கி, வட்டார தேசிய நிலை ஊடகங்கள் வரை 2018-ஆம் ஆண்டு மட்டும் இயற்கை தொடர்பான ஏறக்குறைய 2400 கட்டுரைகளையும் எழுத்துப் படிவங்களையும் வெளியிட்டுள்ளன (Robert, 2019).

அளவுக்கு அதிகமான கரிம வெளியேற்றம் உலகுக்கு மிகப் பெரிய அச்சுறுத்தலாக விளங்கி வருகிறது. சுற்றுச்சூழலுக்கு மாசினை ஏற்படுத்தி, மனிதர்களுக்கும் இதர உயிரினங்களுக்கும் அழிவைக் கொண்டுவரும் மிகப் பெரிய இடரை அது ஏற்படுத்தியுள்ளது. கரிவளி வெளியேற்றம், அடுக்குத்திரள் மேகங்கள் (Stratocumulus) அழிந்துபோகும் நிலையை ஏற்படுத்தியுள்ளது (Topio, 2019). நேரடி வெப்பத்தைத் தவிர்க்கும் இந்த அடுக்குத்திரள் மேகங்கள் அழிந்துவருவதால், கடும் வெப்பத்தாக்கத்தை எதிர்கொள்ளும் பூமி, இயற்கை பேரிடர்களை சந்திக்கிறது. வடதுருவத்தில் வெப்பநிலை இருமடங்காக அதிகரித்துள்ளது (Caroline, 2019). இயற்கைக்கு ஏற்பட்டுள்ள இடர்பாடுகள் மனுக்குலத்துக்கு விளைவிக்கும் துன்பங்கள் பற்றிய பல செய்திகளை நாம் தொடர்ந்து பார்த்தும் கேட்டும் வாசித்தும் வருகிறோம். இயற்கை பற்றிய விழிப்புணர்வு,இதுகாறும் இல்லாத அளவுக்கு இப்போது மனுக்குலத்திடையே தோன்றத் தொடங்கியுள்ளது. மனிதர்கள் இயற்கையைப் பேணுவது குறித்து இன்னும் அதிகம் சிந்திக்கத் தொடங்கியுள்ளனர்.

**நாலடியார்**

நீதிநூல்களுள் திருக்குறளுக்கு அடுத்த நிலையில் சிறப்பாகக் கருதப்படும் நூல்

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019
Available at: www.ijtlls.com

நாலடியார் (குருசாமி, 2002). இது பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்று. நான்கடி வெண்பாக்களால் ஆக்கப்பட்டு நாலடியார் எனப் பெயர் பெற்றது. சமண முனிவர்கள் பாடிய பாடல் தொகுப்பே நாலடியார். பதுமனார் என்பாரால் தொகுக்கப்பெற்று 'நாலடி' எனப் பெயர் சூட்டப்பட்டது. கி.பி இரண்டாம் நூற்றாண்டு முதல் கி.பி ஒன்பதாம் நூற்றாண்டுப் வரை எழுதப்பட்ட பாடல்கள் இதில் தொகுக்கப்பட்டுள்ளன (பழனிவேல் பிள்ளை, 1947)

**நாலடியார் வலியுறுத்தும் இயற்கை**

**மன்னருக்குள்ள (அரசாங்கத்துக்கு) பொறுப்பு**

நாலடியார் பாக்களில் புலவர்கள் நாட்டு மன்னர்களை குறிப்பிடும்போது இயற்கையை முன்வைத்தே குறிப்பிட்டுள்ளனர். இதன்வழி, மன்னர்கள் தங்கள் நாட்டின் இயற்கை வளத்தைப் பேண வேண்டும் என்பதை நாலடியார் வலியுறுத்துவதைக் காண முடிகிறது. அரசர்கள் என்று நாலடியார் கூறுவதை இன்றைய சூழலில் நாம் ஓர் அரசாங்கத்தின் கடமையாக எடுத்துக் கொள்ள வேண்டும். முடியாட்சி நாடுகள் மிகக் குறைந்துவிட்டன. இன்று மன்னர்கள் இருந்தாலும் அவர்கள் சடங்குப்பூர்வ மன்னர்களாகவே அமர்த்தப்பட்டுள்ளனர். அதிகாரம் ஆளும் அரசாங்கத்தின் கைகளில். எனவே, மன்னர் எனக் குறிப்பிடப்படுவதை நாம் அரசாங்கம் என ஏற்றுக்கொள்ளுதல் சிறப்பு. அந்தந்த நாடுகளின் இயற்கை வளத்தைப் பேணவேண்டியது அந்தந்த அரசாங்கங்களின் முதன்மைக் கடமையாகும் என்பதை நாலடியார் தெளிவுறக் கூறுகிறது. இயற்கை வளம் நீடித்து நிலவும் நாட்டில் மன்னராட்சி செழிக்கும். நாடு செழிப்பாக இருந்தால்தான் மன்னர் (அரசாங்கம்) தொடர்ந்து நிலைத்திருப்பார் என்ற கருத்தினை இப்பாடல்களின் வழி நாலடியார் மிகத் தெளிவாக எடுத்துரைக்கிறது.

**"மாதர் வண்டு ஆர்க்கும் மலி கடல் தண் சேர்ப்ப!-**
**ஆவது அறிவார்ப் பெறின்?" (பாடல் 73)**

மலர்களிலெல்லாம் அழகான வண்டுகள் ஆரவாரிக்கும் குளிர்ச்சி நிறைந்த கடற்கரையை உடைய நாட்டின் தலைவ! என்று மன்னரைக் குறிப்பிடுகிறது இந்த நாலடிப் பாடல். ஆக, இயற்கை வளம் மிக்க ஒரு நாட்டின் மன்னன் இங்கு விளிக்கப்படுகிறான். மன்னரின்நாடு செல்வச்செழிப்பினாலோ, போர்த் திறத்தினாலோ குறிப்பிடப்படவில்லை. இய்ற்கையை வைத்தே ஒரு நாட்டின் மன்னன் அழைக்கப்படுகிறான் என்பது தெளிவாகிறது.

**"அறியாரும் அல்லர் அறிவ தறிந்தும்**
**பழியொடு பட்டவை செய்தல் – வளியோடி**
**நெய்தல் நறவுயிர்க்கும் நீள்கடல் தண்சேர்ப்ப**
**செய்த வினையான் வரும்" (பாடல் 108)**

காற்று வீசி நெய்தல் நிலங்களிலே தேனைச் சிந்தும் நீண்ட கடலினது குளிர்ச்சி பொருந்திய கரையை உடைய வேந்தே என்று மன்னரைக் குறிக்கிறது மேற்கண்ட பாடல். மன்னர்க்கு சிறப்பு அவர் நாட்டின் இயற்கையை வைத்தே அமைகிறது என்பதற்கு இப்பாடலும் எடுத்துக் காட்டாக அமைகிறது.

**"கோதை அருவிக் குளிர் வரை நல் நாட!**
**பேதையோடு யாதும் உரையற்க!" (பாடல் 71)**

மாலைபோல ஒழுகுகின்ற அருவிகளையுடைய குளிர்ச்சி பொருந்திய நல்ல மலைகளையுடைய நாடனே என்கிறது இப்பாடல். மலைகளும் அருவிகளும் ஒரு நாட்டின் இயற்கைக்கு சான்று பகர்வன. தொடர்ந்து நீர்வரத்து இருக்கும் அருவிகளும், பச்சைப் பசேலென கண்ணுக்குக் குளிச்சிதரக்கூடிய மலைகளும் இயற்கை கொடுத்த பெருவரம். அவற்றைப் பேணிக் காப்பது நாட்டுத் தலைவர்களுடைய கடன். இவ்வகையில் மன்னர் இயற்கையோடு தொடர்பு படுத்திப் பாடப்படுவதைக் காண்கிறோம்.

**"கலந்தாரைக் கைவிடுதல்-கானக நாட!**

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

**விலங்கிற்கும் விள்ளல் அரிது!" (பாடல் 76)**

காடுகள் சிறந்த நாடனே, காடுகளைப் பேணி வரும் தலைவனே என்று இப்பாடல் மன்னரை விளிக்கிறது. கம்பரும், இராமாயணத்தில் , சோழ நாடு என்று பாடாமல் காவிரிநாடு என்று வலிந்து பெயரிட்டதை இங்கு நாம் ஒப்பிட்டு நோக்கலாம் (அழகிரிசாமி, 1963). மன்னர்கள் அழிவர், இயற்கை என்றும் நிலைத்திருக்கும் என்பதால் அவ்வாறு பெயரிட்டு அழைத்ததை அறிந்துகொள்ள முடிகிறது. எனவே மன்னர்களையும் நாட்டையும் குறிப்பிடும் புலவர்கள் இயற்கையை முன்வைத்தே அவர்களைக் குறிப்பிட்டிருப்பது மிக தெளிவாக புலப்படுகிறது. இயற்கையைப் பேண வேண்டிய பொறுப்புடையவர்கள் மன்னர்கள் என்பதை தெள்ளத் தெளிவாக எடுத்துரைத்துள்ளனர் நாலடியார் பாடிய புலவர்கள்.

**நிலையாமைக்கு மேற்கோளாக அமையும் இயற்கை**

யாக்கை நிலையாமை என்ற அதிகாரத்தில் குறிப்பிடப்பட்டுள்ள பாடல்களிலும் இந்த உடல் நிலையாமைக்கு இயற்கையைத் துணைக்கழைத்துக் கொள்கின்றனர் நாலடியார் புலவர்கள்.

**"மலைமிசைத் தோன்றும் மதியம்போல் யானைத்**
**தலைமிசைக் கொண்ட குடையர் – நிலமிசைத்**
**துஞ்சினார் என்றெடுத்துத் தூற்றப்பட் டாரல்லால்**
**எஞ்சினார் இவ்வுலகத் தில்" (பாடல் 21)**

மலையின் மீது காணப்படும் சந்திரனைப் போல, யானைத் தலையின் மீது பிடித்த குடையுடைய அரசர்களும், உலகில் இறந்தனர் என இகழப்பட்டார்களே அல்லாமல், இவ்வுலகில் இறவாது எஞ்சி இருந்தவர் யாரும் இல்லை. மன்னாதி மன்னர்களும் மாண்டனர் என்றதனால் யாக்கை நிலையாமை உணர்த்தப்பட்டது. மலையின் மீது காணப்படும் சந்திரன் நிலைத்து அங்கிருப்பதில்லை. சிறிது நேரம் தோன்றி மறைவது. இப்படித்தான் வாழ்க்கையும் நிலையாமை உடையது என்பதை இப்பாடல் மூலம் புலவர்கள் வலியுறுத்துகின்றனர்.

**"படு மழை மொக்குளின் பல் காலும் தோன்றி,**
**கெடும், இது ஓர் யாக்கை" என்று எண்ணி" (தடுமாற்றம், பாடல் 27)**

வீழ்கின்ற மழை நீரிலே தோன்றும் குமிழிபோல பலமுறை தோன்றியழியும் ஒருவகைப் பொருள் இந்த உடம்பு என உடலுக்கு உவமை கூறுகிறது இந்தப் பாடல். ஆக இப்பாடலைப் பாடிய புலவர் உடல் நிலையற்றது என்பதைத் தெளிவு படுத்துவதற்கு மழை நீர்க் குமிழியை உவமையாகக் கூறுகிறார். மழை நீர்க்குமிழி தோன்றிய சில விநாடிகளில் மறைவது, அப்படியே இவ்வுடலும் என்பதை மிக இயல்பாக இயற்கையை உவமையாக்கிக் கூறுகிறார் புலவர்.

**வினையில் இயற்கை**

வினைகளை உதாரணங்காட்டுவதற்கு மழையையும் பசுங்கன்றையும் நாலடியார் குறிப்பிட்டுச் சொல்கிறது.

**"பல் ஆவுள் உய்த்துவிடினும், குழக் கன்று**
**வல்லது ஆம், தாய் நாடிக் கோடலை தொல்லைப்**
**பழவினையும் அன்ன தகைத்தே, தற் செய்த**
**கிழவனை நாடிக் கொளற்கு." (பாடல் 101)**

பல ஆக்களின் இடையில் செலுத்திவிடப்பட்டாலும் இளைய ஆன்கன்று, தன் தாயைத் தேடித் தெரிந்தடைதலைப் போன்று பிறப்புக்கள் தோறும் தொன்று தொட்டுவரும் பழவினையும் தன்னைச் செய்த உரிமையாளனைத் தேடி அடையும் தன்மையுடையதேயாகும். எனவே மேற்குறிப்பிட்ட பாடல், வினைகளை உதாரணம் காட்டுவதற்கு இயற்கைச் சூழலை உவமையாகக் காட்டுவதறியலாம். பழவினைகள் எப்படியாவது உரியவனைச் சென்றடையும்

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

என்பதற்கு, கன்று தாய்ப்பசுவை தேடிச் சென்றடவதை உவமையாக மிக அழகுற உணர்த்துகிறது இப்பாடல்.

**"உறற்பால நீக்கல் உறுவர்க்கும் ஆகா**
**பெறற்பால் அனையவும் அன்ன ஆம்-மாரி**
**வறப்பின், தருவாரும் இல்லை அதனைச்**
**சிறப்பின், தணிப்பாரும் இல்." (பாடல் 104)**

உருத்து வருந் தீவினைகளை நீக்குதல் சான்றோர்க்கும் ஆகாது, அங்ஙனமே அடைந்தின்புறற்குரிய நன்மைகளும் அப்பெரியோர்களால் தடை செய்தற்குரியன அல்லவாம், மழை பெய்யாதொழியின் அதனைப் பெய்விருப்பாருமில்லை மிகப் பெய்யின் அதனைத் தணிப்பாருமில்லை. இவ்விடம் மழை வினைக்கு எடுத்துக்காட்டாக ஆளப்படுகிறது. மழையை யாராலும் நிறுத்தவும் இயலாது பெய்விக்கவும் இயலாது. வினைகளையும் யாரும் தடுக்கவியலாது.

**இயற்கை அளிக்கும் தன்முனைப்பு**

பின்வரும் பாடல் தன்முனைப்பை அளிக்கும் பாடலாக அமைந்துள்ளது. ஒருவருக்கு தன்னம்பிக்கையை ஊட்ட இயற்கையை உதவிக்கு அழைத்துள்ள நாலடிப் புலவர்களின் சிந்தனை வியந்து பாராட்டுக்குரியது.

**"உறக்கும் துணையது ஓர் ஆலம் வித்து ஈண்டி,**
**இறப்ப நிழல் பயந்தாஅங்கு, அறப்பயனும்,**
**தான் சிறிதுஆயினும், தக்கார் கைப் பட்டக்கால்,**
**வான் சிறிதாப் போர்த்துவிடும்." (பாடல் 38)**

சிறிய அளவினதான ஓர் ஆலம் விதை, தழைத்து மிகவும் நிழல் கொடுத்தாற் போல, அறச்செயல்களின் பயனான புண்ணியத்தைத் தரும் பொருளும், தான் அளவில் சிறியதேயானாலும், தகுதியுடைய பெரியோர் கையிற் சேர்ந்தால், வானமும் சிறிதென்னும்படி அவ்வளவு பெரிய புண்ணியத்தைச் சூழ வைத்துவிடும்.

தன்முனைப்புக்கு முன்னுதாரணமாக இந்தப் பாடலைப் பாடிய புலவர் ஆலம் விதையை உவமையாகக் கொள்கிறார். சிறிய விதையாயினும், பெரிய மரமாகி பலருக்குப் பயன் தருகிறது ஆலமரம். அதேபோல, மிகச் சிறிய அறச்செயலை நாம் செய்தாலும், அது கண்டிப்பாக மிகப் பெரிய பலனைக் கொண்டுவருமென்பதை இயற்கையோடு இணைத்துக் கூறுகின்ற விதம் மிகக் கவர்கிறது.

**இயற்கையே இன்பம்**

நாலடியார் பாக்கள் நானூறில், ஏறக்குறைய இருநூறு பாக்களில் இயற்கை இடம்பெற்றுள்ளது அல்லது எடுத்துக்காட்டாகவும் உவமையாகவும் கூறப்பட்டுள்ளது, புலவர்கள் இயற்கைமீது கொண்டிருந்த நாட்டத்தையும் இயற்கையைப் பேணவேண்டியதன் அவசியத்தை அந்நூல் வலியுறுத்துகிறது என்பதையும் இதன் மூலம் தெளிவாகத் தெரிந்து கொள்ள முடிகிறது.

**"ஒண்கதிர் வான்மதியம் சேர்தலால் ஓங்கிய**
**அங்கண் விசும்பின் முயலும் தொழப்படூஉம்**
**குன்றிய சீர்மைய ராயினும் சீர்பெறுவர்**
**குன்றன்னார் கேண்மை கொளின்" (பாடல் 176)**

அழகிய வானத்திலே உள்ள ஒளி பொருந்திய சந்திரனைச் சேர்ந்திருப்பதால், முயலும் சந்திரனைத் தொழும்போது சேர்த்து தொழப்படும். அதுபோல, சிறப்பு இல்லாதவராயினும் குன்றுபோலும் உயர்ந்த நற்குணங்கள் உடையாரைச் சேர்வாராயின் பெருமை பெறுவர். சிறையார்க்கும் பெரியார்க்கும் உள்ள தொடர்பைக் கூற வரும் இப்பாடல், பெரியார்க்கு குன்றையும் வான்மதியத்தையும் உவமை காட்டுகிறது. இயற்கைச் சூழலைக் கொண்டே,

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

வாழ்க்கையின்மிகப் பெரிய நடைமுறையைத் தத்துவத்தை இப்பாடல் மிகத் தெளிவாக எடுத்துணர்த்துகிறது.

**"கொல்லை இரும் புனத்துக் குற்றி அடைந்த புல்**
**ஒல்காவே ஆகும், உழவர் உழுபடைக்கு" (பாடல் 178)**

கொல்லையாகிய பெரியநிலத்திலுள்ள மரக்கட்டையைச் சேர்ந்து வளர்ந்த புல் உழவரது உழுகின்ற படையாகிய கலப்பைக்குக் கெடாதனவாகும். இயற்கை வளத்தை இயற்கையோடு மனிதர் வாழ்வு அடங்கியிருப்பதை இப்பாடல்வழி நம்மால் உணரமுடிகிறது. சிறு புல்லினமும் வேண்டும் அதனை இயற்கை இன்பமாகக் கொள்ள வேண்டும் என்பதை இப்பாடல் தெளிவுறுத்துகிறது.

**"ஈண்டு நீர் வையத்துள், எல்லாரும், எள்துணையும்**
**வேண்டார்மன், தீய் விழைபமன், நல்லவை-**
**வேண்டினும், வேண்டாவிடினும், உறற்பால**
**தீண்டாவிடுதல் அரிது." (பாடல் 109)**

மிக்க நீரையுடைய கடலாற் சூழப்பட்ட உலகத்தில் யாரும் சிறிதும் துன்பந்தருந் தீயவற்றை விரும்பமாட்டார்கள். எல்லாரும் எவ்வளவும் விரும்புகின்ற பயன்கள் இன்பந்தரும் நல்லனவே, மக்கள் விரும்பினாலும் விரும்பா விட்டாலும் அவர்கள்பால் வந்து பொருந்துதற்குரியன பொருந்தாதொழிதல் இல்லை. இங்கு, உலகைக் குறிப்பிட வரும் நாலடிப்பாடல், கடலால் சூழப்பட்ட உலகு என்று குறிப்பிடுகிறது. உலகம் கடலைச் சார்ந்துள்ளது. கடலைப் பேணாவிட்டால், உலகைப் பேண இயலாது. கடலில் மிதக்கும் கழிவுகளையும், நெகிழிப்பொருட்களையும் தூய்மை செய்வதற்கு பல கோடிகள் செலவுசெய்யப்பட வேண்டியுள்ளதை உற்று நோக்குவோமாக. எனவே, கடலைப் பேணுங்கள் என்பதை மறைமுகச் செய்தியாக இப்பாடல் குறிப்பிடுகிறது.

**சினத்துக்கு எடுத்துக்காட்டாகும் இயற்கை**

**"விரிநிற நாகம் விடருள தேனும்**
**உருமின் கடுன்சினம் சேணின்றும் உட்கும்**
**அருமை யுடைய அரண்சேர்ந்தும் உய்யார்**
**பெருமை யுடையார் செறின்" (பாடல் 164)**

படம் விரிக்கும் பாம்பு நிலத்தின் வெடிப்பினுள்ளே இருந்தாலும், தொலைவில் எழும் இடியோசைக்கு அஞ்சும். அதுபோல மேன்மை மிக்க பெரியோர் சினம் கொள்வாரானால் தவறு செய்தவர் பாதுகாப்பான இடத்தைச் சேர்ந்தாலும் தப்பிப் பிழைக்கமாட்டார் என்பது இந்த நாலடியாரின் பொருளாகும். சினத்தைப் பற்றி கூற வரும்போதும் கூட இயற்கையைத் துணையாக் கொண்டு பாக்களைப் புனைந்துள்ளனர் நாலடியார் புலவர்கள். தவறு செய்தவர்களை பாம்பு எனக் காட்டுகிறது இப்பாடல். பெரியாருக்கு வானத்தினின்று தோன்றும் இடியை உவமையாக எடுத்தாள்கிறது இப்பாடல். பெரியவர்களது சினம், எப்படியாவது தவறு செய்தவர்களை வந்தடையும் என்பதை இயற்கைவழி உணர்த்தியுள்ளது இப்பாடல்.

**நிறைவு**

இயற்கையைப் பேணவும், அதனைப் பாதுகாத்து, அடுத்த தலைமுறைக்கு உலகத்தை அழிவில்லாமல் கொடுக்கவும் தொடர் முயற்சிகள் இன்று மேற்கொள்ளப்படுகின்றன. உலகின் மிகப் பெரிய பன்னாட்டு அமைப்பான ஐநா முதல் அந்தந்த நாடுகளில் உள்ள மிகச்சிறு இயக்கங்கள் வரை இன்று இயற்கையை நேசிக்கும் முயற்சிகளையும் விழிப்புணர்வு நடவடிக்கைகளை மேற்கொண்டு வருவது மிகப் பாராட்டுக்குரியது வரவேற்கத்தக்கது. நாலடியார் அன்று தொட்டு இந்த இயற்கை இன்பத்தை வலியுறுத்தி வந்துள்ளது என்பது நாமனைவரும் பெருமை கொள்ளத் தக்கதாகும். இருந்தாலும், அந்தப் பெருமையை நாம் முழுமையாக ஏற்று அனுபவிக்க இயலாத நிலை இன்று உலகெங்கும் ஏற்பட்டுள்ளது எனது வருத்துக்கு உரியதே! இயற்கை வழி நிற்றலை

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

நாலடியார் மிக அழகாக எடுத்துரைத்துள்ளது. இயற்கையோடு இசைந்த வாழ்வுக்கு அளவுகோலாகவும் எடுத்துக்காட்டாகவும் இருப்பது நாலடியார். மிகச் சிறந்த வாழ்வை நோக்கிய பயணத்துக்கு இயற்கையை மறக்காதிருப்போம் மறுக்காதிருப்போம். அதற்கு நாலடியாரை வழித்துணையாகக் கொள்வோம்.

**மேற்கோள்கள்**

1. அழகிரிசாமி. கு, கவிச்சக்கரவர்த்தி (நாடகம்), பாரி நிலையம், சென்னை, 1963.
2. கந்தசாமி பிள்ளை. ஆ.சு, முத்துரத்ன முதலியார். ளு, நாலடியார் உரைவளம், சரஸ்வதி மகால் நூலகம், 1990.
3. குருசாமி. அ.சா, நாலடியார் மூலமும் எளிய உரையும், சுரா புக்ஸ், சென்னை, 2002.
4. சீனிவாசன். ரா, நாலடியார் செய்யுளும் செய்திகளும், அணியகம், சென்னை, 2000.
5. தேவ்நாத். சி. எஸ், மகிழ்வோடு வாழ நாலடியார் காட்டும் வழிகள், நர்மதா பதிப்பகம், சென்னை, 1997.
6. நாலடியார். www.tamivu.org
7. பழனிவேல் பிள்ளை. பே, நாலடி இன்பம், தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், திருநெல்வேலி, 1947.
8. ஸ்ரீ சந்திரன். ஜெ, நாலடியார் மூலமும் தெளிவுரையும், வர்த்தமானன் பதிப்பகம், சென்னை, 1999.
9. Caroline Voight & others (2019, March 1). Ecosystem carbon response of an Arctic peatlands to simulated thawing permafrost. Retrieved from https://www.sciencedaily.com
10. Robert Mcsweeney. (2019). Analysis: The climate papers most featured in the media in 2018 retrieved from www.carbonbrief.org
11. Topio Schneider. (2019) Possible climate transitions from breakup of stratocumulus decks under greenhouse warming> Journal of Nature Geosciences. Retrieved from https://www.nature.com

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

# தமிழர்களின் நாட்டுப்புறக் கலைகளும் அதன் கோட்பாடுகளும்

## Folklore of the Tamil People and its Norms

**முனைவர் இரா.சசிகலா,** உதவிப்பேராசிரியர்,
தமிழ்த்துறை, பிரிஸ்ட் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.

**Abstract**

*Art or culture of a country is a marvellous instrument for reflecting its society. Not only does the art act as the medium for entertainment but also acts as the medium for communication and culture. The art is a reflection of our 'powerful feelings and thoughts'. Especially our folk arts reflect our heritage which has been deeply rooted in ourselves and our soil. We can obviously perceive our ancestral beliefs, hopes, feelings, thoughts and their habits through these folk arts which are the sources of our society. These folk arts, otherwise called as 'rural arts', have instrumented for communication and have been the sources for our renowned culture. It is noteworthy that various media have been flourishing to enhance the monstrous and tremendous technological growth of communication and entertainment which cannot be denied at any cost. Change is the only permanent thing in the world. So there must be a need for change at all times. At the same time, there is no need to put aside our opacity of our heritage and the conventional or traditional arts. Instead, we must protect these traditional values which are considered to be our duty and responsibility. No countries which are enriched with their nanotechnologies have culled their traditional arts but they have made them as their bases for all kinds of their growth and development. The paper traces the folk tradition of the Tamils and the norms laid to them.*

**Keywords:** Folklore of the Tamil People, Folklore and its Norms

ஒரு நாட்டின் கலை மற்றும் கலாச்சாரம் அச்சமுகத்தினைப் பிரதிபலிக்கும் சிறந்த கருவியாகும். கலை என்பது பொழுது போக்கிற்காக மட்டுமின்றித் தகவல் ஊடகமாகவும் கலாச்சாரப் பழ கனியாகவும் திகழ்கின்றது. கலை என்பது மன உணர்வுகளின் வெளிபாடு. குறிப்பாக நாட்டுப்புறக் கலைகள் நமது மண்ணோடும் நம்மோடும் தொடர்புடையவையாகும். நமது பாராம்பரியத்தையும் அடி ஆழத்து வேர்களையும் பிரதிபலிக்கும் கலை சமூக வளர்ச்சிக்கும் மன எழுச்சிக்கும் சிறந்த கருவியாகும்.

நமது முன்னோர்களின் நம்பிக்கைகள், எண்ணங்கள், சிந்தனைகள், பழக்கவழக்கங்கள் ஆகியவற்றை நாட்டுப்புறக் கலைகள் மூலம் அறியமுடிகிறது. இக்கலைகளே சமுதாயத்தின் ஆவணமாகத் திகழ்கின்றன. இன்று தொழில் நுட்பத்தின் அசுர வளர்ச்சியான தகவல் தொடர்பிற்கும் பொழுது போக்கிற்கும் பல்வேறு ஊடகங்கள் உருவாகி வருகின்றன. இம்மாறுதல் இயற்கையானதே. இவற்றினை நாம் எளிதில் புறக்கணித்து விட முடியாது. காலத்திற்கும் ஏற்ற மாறுதல்கள் தேவைதான் ஆனால் அதே சமயம் நாம் நம்முடைய பாரம்பரியத் தன்மைகளயும் கலை மரபுகளையும் ஒதுக்கிவிட வேண்டியதில்லை. நம்முடைய பாரம்பரியத் தன்மைகளை இழந்துவிடாமல் பாதுகாத்துக் கொள்ள வேண்டும். இந்தக்

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

கடமையும், பொறுப்பும், அவசியமும் நமக்கு இருக்கிறது. தொழில் நுட்பத்தின் வளர்ச்சி அடைந்த நாடுகளும் அதிநவீன நாகரிகத்தோடு தன்னை அடையாளப்படுத்திக் கொண்டுள்ள நாடுகளும் கூட தங்களுடைய பாரம்பரியக் கலைகளைப் புறக்கணித்து விடவில்லை. தங்களுடைய எல்லா வளர்ச்சிக்கும் அதனையே ஆதாரமாகக் கொண்டுள்ளன. வாழ்ந்து பெற்ற அனுபவங்களின் கலவையாக சில கலைகளை கிராமங்கள் நமக்கு அளித்துள்ளன. அவை பொழுதுபோக்கிற்காக மட்டுமின்றி மன வளர்ச்சிக்கும் உடல் வளர்ச்சிக்கும் வளம் சேர்ப்பனவாகும். ஒருங்கிணைந்த சமூக முன்னேற்றத்திற்கு உரம் சேர்ப்பதாகவும் அமைந்திருப்பதனை அறியமுடிகிறது.

இந்திய நாட்டுப்புறக் கலைகளில் தமிழ், நாட்டுப்புறக் கலைகள் பல்வேறு வகைகளில்சிறப்பும் தனித்தன்மையும் கொண்டவை. இவைகளை

நிகழ்த்துக் கலைகள் - Performing Arts
நிகழ்த்தாத கலைகள் - Non-performing Arts
பொருட்கடை - Material Arts

என நாட்டுப்புறவியல் வல்லுனர்கள் வகைப்படுத்தியுள்ளனர். பொதுவாக தமிழக நாட்டுப்புறக் கலைகள், 1. ஒயிலாட்டம் 2. ஆலியாட்டம் 3. காலாட்டம் 4. கரகாட்டம் 5. காவடியாட்டம் 6. கும்மி 7. வில்லுப்பாட்டு 8. தெருக்கூத்து 9. பாவைக்கூத்து (பொம்மலாட்டம்) 10. கணியன் ஆட்டம் 11. வர்மம் 12. சிலம்பாட்டம் 13.களரி 14. தேவராட்டம் 15. சக்கையாட்டம் 16. பொய்க்கால் குதிரை ஆட்டம் 17. மயிலாட்டம் 18. உறியடி விளையாட்டு (கண்ணன் விளையாட்டு) 19.தப்பாட்டம் 20. உக்கடிப்பாட்டு 21. இலாவணி 22. கைச்சிலம்பாட்டம் 23. குறவன் குறத்தியாட்டம் 24. துடும்பாட்டம் 25. புலி ஆட்டம் 26. பொம்மைக் கலைகள் 27. மண்பாண்டக்கலை 28. கோலக்கலை.

இதுபோன்று ஒவ்வொரு பகுதியிலும் ஒவ்வொரு விதமான கலைகள் உள்ளன. இந்தக் கலைகள் வெளியே தெரியாமல் உள்ளன. மேலும் நாடகம் வீதி, நாடகம், இசை நாடகம், நாட்டிய நாடகம், பரத நாட்டியம், இசைச் சிற்பம் போன்று பல கலை நிகழ்ச்சிகளும் நடைபெற்று வருகின்றன. இதில் சில கலைகளை மட்டும் விரிவாக காண்போம்.

**கும்மி ஆட்டம்**

கும்மி பலர் கூடி ஆடும் ஒருவகைக் கூத்து அல்லது நடனம் இது தொன்றுதொட்டு வரும் ஒரு நடனக் கலை ஆகும். பலர் வட்டமாக ஆடிக்கொண்டோ அல்லது இருபுறமாக,சரிசமமாக நின்று ஆடிக்கொண்டோ வரும்போது இசைக்ககுத் தக்கவாறு தன் கைகளைத் தட்டி கால்களையும், இடுப்பையும் , தலையையும் அழகுற அசைத்து குனிந்தும் நிமிர்ந்தும் கூட்டமாக ஆடும் ஒரு கூத்து. தமிழ்நாட்டிலும் கேரளத்திலும் கும்மி வழக்கில் உள்ளது. குரவை என்ற கலையில் இருந்து கும்மி பிறந்ததாகக் கூறப்படுகிறது.

**தமிழ் இலக்கியங்களில் கும்மி**

அகநானூற்றிலும், சிலப்பதிகாரத்திலும் கும்மி பற்றி குறிப்புகள் காணப்படுகின்ற. அதுபோன்று பாரதியார் பாடல்களிலும்

**“கும்மியடி! தமிழ்நாடு முழுவதும்**
**குலுங்கிடக் கைக்கொட்டிக்**
**கும்மியடி!**
**நம்மைப் பிடித்த பிசாசுகள்**
**போயின்**
**நன்மை கண்டோ மென்று**
**கும்மியடி!” (கும்மி)**

**தமிழ் சினிமாவில் கும்மி**

**“ஆனை வாரதப் பாருங்கடி – அது**

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

**அசைச்சு வரத்தப்பாருங்கடி"**

என்ற பிரபலமான கும்மிப் பாடலே இளையராஜாவால் சினிமாவுக்கு கொண்டுவரப்பட்டது. மற்றும்

**"ஆயிரம் தாமரை மொட்டுக்களே – வந்து**
**ஆனந்தம் கும்மி தட்டுங்களேன்"**

என்று பட்டி தொட்டி எங்கும் பிரபலமானது. கும்மி ஆடும்போது முளைப்பாரி, குத்துவிளக்கு, மலர்க்கூடை, பலகாரக்கூடை வைத்து ஆடுவார்கள். கும்மி நடனத்தின் தாளம் 6/8 அல்லது 12/8 என்ற வேகதாளம் கொண்டது. இத்துடன் தோபானை சிங்கி போன்ற இசைககருவிகள் பயன்படுத்தப்படுகின்றன. இவ்வாறான சிறப்பம்சங்களைக் கொண்டதே கும்மியாட்டம். "என் அம்மாச்சி" தொடங்கி என் அக்காள் வரை கும்மியை மீட்டு எடுத்து மீண்டும் ஆடவைக்க முடியாவிட்டாலும் நினைவிலாவது இந்த பெயரை வைத்திருக்க வேண்டும் என்ற உயர்ந்த நோக்கில் தான் கும்மியைப் பற்றி நான் இதில் கூறியுள்ளேன்.

**சிலம்பம்**

சிலம்பம் என்பது ஒரு தடியடி தமிழர் தற்காப்புக் கலை மற்றும் தமிழர்களின் வீர விளையாட்டு ஆகும். வழக்கில் இவ்விளையாட்டைக் கம்பு சுற்றுதல் என்று கூறுவர். இது தடியைக் கையாளும் முறை. கால் அசைவுகள், உடல் அசைவுகள் மூலம் தம்மைப் பாதுகாத்து கொள்ளுதல் எனப் பல கூறுகளைக் கொண்ட விரிவான தற்காப்புக் கலை ஆகும். சிலம்பாட்டத்தில் எதிராளி வீசும் கம்பினைத் தடுத்தல் எதிராளியின் உடலில் சிலம்புக் கம்பினால் தொடுதல் (தொடு புள்ளி) போன்ற அடிப்படையாக்க கொள்ளப்படுகிறது. சிலம்பாட்டத்தைக் கற்றுக் கொள்ளக் குறைந்தது ஆறு மாதக் காலம் தேவை. இதற்கென சிலம்பாட்டக் கழகங்கள் பல தமிழகத்தில் உள்ளன. சிலம்பாட்டம் ஆடுவதற்குக் குறைந்தது இருவர் வேண்டும்.நன்கு பயிற்சி பெற்ற ஆட்க்காரர்களே சிலம்பாட்டப் போட்டிகளில் விளையாடுவர். தற்காலத்தில் ஆண்கள், பெண்கள் என்று இருபாலரும் சிலம்பாட்டத்தைக் கற்று விளையாடி வருகின்றனர். திருவிழா கோயில் விழாக்கள் மற்றும் ஊர்வலங்களில் சிலம்பாட்டம் தவறாது இடம் பெறும். இக்கலை திருநெல்வேலி, தூத்துக்குடி, கன்னியாகுமரி மாவட்டங்களில் பெருமளவு நடக்கிறது.

**செல் பிறப்பு**

சிலம்பம் என்ற பெயர் சிலம்பு என்ற வார்த்தையில் இருந்து உருவானது. சிலம்பு என்பதற்கு ஒலித்தல் என்று பொருள். சிலம்பம் ஆடும்பொது உருவாகும் ஒலிகளை குறிக்கும் விதமாக சிலம்பம் என்ற பெயர் சூட்டப்பட்டதாகச் சொல்லப்படுகிறது. "சிலம்பம்" என்ற சொல் "சிலம்பல்" என்ற வினையின் அடியாகப் பிறந்தது. மலைப் பகுதிகளில் அருவி விழும் ஓசை, பறவைகளின் கீச்சொலி, மரங்களின் இலைகள் காற்றில் அசையும் ஓசை, விலங்குகளின் இரைச்சல் போன்ற பல ஓசைகள் ஒலித்துக் கொண்டே இருப்பதால் மலைக்கு "சிலம்பம்" என்ற மற்றொரு பெயரும் உண்டு. எனவே மலை நிலக் (குறிஞ்சி) கடவுளான முருகனுக்கும், "சிலம்பன்" என்ற பெயருண்டு. கம்பு சுழலும் போது ஏற்படும் ஓசை மற்றும் ஆயதங்கள் ஒன்றோடொன்று மோதும் ஓசை போன்று இருப்பதால், தமிழரின் தற்காப்புக் கலைக்கு "சிலம்பம்" என்ற பெயர் ஏற்பட்டது. நெல்லை மாவட்டத்தில் கடையநல்லூருக்கு மேற்கே உள்ள மலைப் பகுதிகளில் வாழும் பழங்குடியினருள் "சிலம்பரம்" என்ற பெயரும் வழக்கில் உள்ளது.

**பொது நலம் மற்றும் மருத்துவப் பயன்கள்**

பயிற்சியாளர் அல்லது சிலம்பம் மற்றும் காய் சிலம்பம் (குத்துவரிசை) போன்ற தசை விரைவு மற்றும் வளைந்து கொடுக்கும் தன்மை, கையும், கண்ணும் ஒருங்கிணைப்பு காலும்

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

கண்ணும் ஒருங்கிணைப்பு. உடல் சமநிலை, தசை ஆற்றல், வேகம், தசை வலிமை மேம்படுத்த சுகாதார நலன்கள் பெறும் வழக்கமான பயிற்சி சுற்றோட்டத் தொகுதி பொறுமை தசை வலிமை போன்ற பலன்கள் கிடைக்கும்.

**வரலாறு**

மக்கள் தன்மை சிங்கம், புலி போன்ற விலங்களிடம் இருந்து காத்துக்கொள்ளக் கையாண்ட முறையே சிலம்பம் எனப்படும் கலையாக வளர்ந்துள்ளது என்பர். தமது கைகளில் எப்போதும் இருக்கக்கூடிய சிறிய ஆயுதங்களான கம்பு (தடி) சிறு சுத்தி, கோடாரி போன்ற ஆயுதங்களைப் பயன்படுத்தி விலங்குகளிடம் இருந்து தற்காத்துக் கொள்ள இநதக் கலையைப் பயன்படுத்தினர்.

தமிழர்கள் ஆயுதம் ஏந்திப் போராட ஆரம்பித்த காலத்தில் முதலில் எடுத்தது கம்பு எனப்படும் ஆயுதமே ஆகும். இதுவே பின்னர்சிலம்புக் கலையாக வளர்ச்சி பெற்றது. ஆதிகாலத்தில் மனிதர்கள் சண்டை செய்ய ஈட்டி, சுத்தி, வேல், வாள் கம்பு போன்ற பலவிதமான ஆயுதங்களைப் பயன்படுத்தினர். அவற்றுள் மிகவும் பழமை வாய்ந்த ஆயுதம் கம்பு எனப்படும் 'சிலம்பு' ஆகும். முற்காலத்தில் இக்கலையை சத்திரியர்கள் பயன்படுத்தினர். தற்போது இது ஒரு சில பள்ளிகளிலும் தனியார் அமைப்புகளாலும் கற்றுத்தரப்படுகிறது. விளையாட்டுப் போட்டிகளில் வீர விளையாட்டாகவும் இடம்பெறுகிறது.

சிலம்புச் சுவடிகளில் குறிப்பிடப்படும் தொன்மையான சிலம்பச் சுவடு மற்றும் அடி வரிசைகள் தமிழக மூவேந்தர்களின் ஆட்சி முடிவுற்று, தமிழகம் அன்னியர்களுக்கு அடிமைப்பட்ட பின் கால மாற்றத்தால் அதன் பெயர்களும் ஆடும் முறைகளும் சிறு மாற்றமடைந்தன. வடக்கன் களரி, தெக்கன் களரி, சுவடு அடி முறை, கர்நாடகச் சுவடு, சிரமம், சைலாத், தஞ்சாவூர் குத்து வரிசை நெடுங்கம்பு என்ற பெயர்களில் என்றும் தமிழகம் மற்றும் கேரளா உள்ளிட்ட பகுதிகளில் ஆடப்பட்டு வருகின்றன.

**ஆய்வுகள்**

சிலம்பக் கலை பற்றி அகழ்வாய்வுச் சான்றுகள் மிகத் தொன்மையானவை. கி.மு.2000க்கும் முற்பட்ட ஆதிச்சநல்லூர் அகழ்வாய்வில் 32வகையான சிலம்ப ஆயுதங்கள் கண்டெடுக்கப்பட்டுள்ளன. இவை சென்னை அருங்காட்சியகத்தில் வைக்கப்பட்டுள்ளன. பிரிட்டனில் உள்ள அருங்காட்சியகம் ஒன்றில் எகிப்திய போர் வீரர்கள் பயன்படுத்திய நான்கு அடி நீளமுள்ள கம்பு வைக்கப்பட்டுள்ளது. அவர்கள் அந்தகம்பினைப் பயன்படுத்திய முறை சிலம்பத்தை ஒத்திருப்பதால் தமிழகத்தில் இருந்து எகிப்துக்கு கலாச்சாரப் பரிமாற்றத்தின் ஒரு பகுதியாக சிலம்பக்கலையும் பரவியதாக கருதப்படுகிறது.

**இலக்கியக் குறிப்புகள்**

சிலம்பம் சுமார் 5000 ஆண்டுகள் பழமையானதாகக் கருதப்படுகிறது. 2500 ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்த அகத்திய முனிவர் 64 கலைகளில் ஒன்றாக சிலம்பத்தைக் குறிப்பிடுகிறார். சிலம்பம் பற்றி தமிழ் இலக்கியத்தில், குறிப்பாக சிலப்பதிகாரத்தில் சிலம்பம் ஆடுவதற்கான கம்பு, சுத்தி போன்றவை ஒரு கடையில் விற்கப்படுவதாகவும் அவற்றைவெளிநாட்டினர் மிக ஆர்வமுடன் வாங்கிச் செல்வதாகவும் குறிப்புகள் உள்ளன. திருக்குறளில் "கோல்" என்ற பெயரிலும் கலிங்கத்துப்பரணியில், "வீசு தண்டிடை சுர்மமு ஒக்குமே" என்ற வரிகள் மூலம் "தண்டு" என்ற பெயரிலும் கம்பு குறிப்பிடப்பட்டுள்ளது. திருவிளையாடற் புராணத்திலும் சிலம்ப விளையாட்டு பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன.

கி.பி. 15-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த "பதார்த்த குண சிந்தாமணி" என்ற நூலில் சிலம்பம் விளையாடுவதால் வாதம், பித்தம், கபம் ஆகியவை நீங்கும் எனக் கூறப்பட்டுள்ளது. இவைகளைத்தவிர கம்பு சூத்திரம், குறுந்தடி சிலம்பம், நடசாரி போன்ற ஓலைச்சுவடிகளும்

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

உள்ளன. இச்சுவடிகளில் உள்ள பாடல்கள் அகத்திய முனிவர்சிலம்பம் பயின்ற பிறகே யோகக் கலை மருத்துவம் போன்ற கலைகளைப் பயின்றதாகத் தெரிவிக்கின்றன.

நாட்டுப்புறப் பாடல்களில் ஒன்றான கட்டப்பொம்மன் கதைப் பாடலில் வீரபாண்டிய கட்டபொம்மன் ஆங்கிலேயரை விரட்ட சிலம்பத்தைப் பயன்படுத்தினான் என்பதை

**“கொட்டுக்கொட்டென்றும் மேல் பொட்டிப்பகடையும்**
**கொல்வேன் என்றான் தடிக்கம்பாலே:**
**சட்டுச் சட்டென்று சிலம்ப வரிசைகள்**
**தட்டிவிட்டான் அங்கே பரதன் எல்லை”**

என்ற கும்மிப் பாடல் மூலம் அறியலாம்.

**சிலம்பின் உட்கூறுகள்**

மெய்ப்பாடம், உடற்கட்டு, மூச்சுப்பயிற்சி, குத்துவரிசை, தட்டுவரிசை, அடிவரிசை, பிடிவரிசை, சிலம்பாட்டம், வர்மம் முதலானவை சிலம்பக்கலையின் முக்கியக் கூறுகளாகும். ஒருவர் சலம்பக்கலையைக் கற்றுக் கொள்ள வேண்டுமாயின் அடிப்படையில் துவங்கி படிப்படியாக இவற்றைக் கற்பதன் மூலம் சிலம்பக் கலையின் பலவேறு உட்கூறுகளைத் தம்முள் அடையாளம்.

**சிலம்பத்தடி**

சிலம்பம் ஆட்டத்திற்கான கம்பு அல்லது தடி, மூங்கில் இனத்தைச் சேர்ந்த சிறுவாரைக் கம்பு, பிரம்பு போன்ற மரங்களில் இருந்து தயாரிக்கப்படுகிறது. இதில் சிறுவாரைக் கம்பு என்ப துநன்கு வளைந்து கொடுக்கக்கூடியது. சிலம்பத்திற்கான தடி, நிலத்தில் இருந்து ஓர் ஆளின் நெற்றிப் புருவம் வரையான உரயமுடையதாக இருக்க வேண்டும்.

**சிலம்பாட்டச் சுற்று முறைகள்**

சிலம்பாட்டத்தில் 72-க்கும் மேற்பட்ட வகைகளில் சுற்றும் முறைகள் உள்ளன. சுருள் கத்தி, தீப்பந்தம் , அடிவருசு, தொடுபுள்ளி, பிச்சுவாப் பிடிவரிசை, கோடாலிக் கேடயம் , வேல்கம்பு, சுருள் வாரல், முன் வெட்டு, பின்வெட்டு, இடையறுப்பு, மேலறுப்பு, மலாா, பின்னுருட்டு, முன்னுருட்டு போன்றன சில சுற்று முறைகளாகும். ஒற்றைச் சிலம்பத்தடி கொண்டு இரு கைகளில் பிடித்துச் சுழன்றாடுவது இரண்டு ககைளிலும் இரண்டு சிலம்பத்தடி கொண்டு ஆடுவது. என இருமுறைகளும் இதில் உண்டு.

**சிலம்பம் கலை பயிற்றுவித்தல்**

இந்தியாவில் தமிழ்நாடு மற்றும் கேரளா மாநிலங்களிலும் இலங்கை, மலேசியா, பிரான்சு, கனடா போன்ற நாடுகளிலும் சிலம்பம் பயிற்றுவிக்கப்படுகிறது. தமிழக அரசு சிலம்பத்தைப் பள்ளி விளையாட்டாக அங்கீகரித்துள்ளது. மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழகத்தின் அங்கீகாரத்துடன் வெங்காடம்பட்டி சமுதாயக் கல்லூரியில் சிலம்பம் பட்டயப்படிப்பாக நடத்தப்படுகிறது. பாளையங்கோட்டை தூயசவேரியா் தன்னாட்சி கல்லூரியில் நாட்டாா் வழக்காற்றியல் ஆய்வு மையம் தென்பாண்டி தமிழரின் “சிலம்ப வரலாறும் அடிமுறைகளும்” என்ற நூலை வெளியிட்டுள்ளது.

**பயன்கள்**

சிலம்பாட்டம் என்பது சிறந்த உடற்பயிற்சியாகும். கம்பு எடுத்து சுழற்றும்போது உடம்பில் உள்ள ஒவ்வொரு நாடி, நரம்பும், தசைகளும் இயக்கப்படுகின்றன. கம்பைக் கைளால் பிடித்து தன்னைச்சுற்றிலும் சுழற்றிச் சுற்றும்போது தம் உடலைச் சுற்றிலும் ஒரு வேல் போன்ற அமைப்பை உருவாக்கிட முடியும். ஒரே ஒரு கலத்தைக் கொண்டு அமைக்கும் இது போன்ற வேலிக்குள் வேறு ஆயுதங்களைக் கொண்டு யாா் தாக்க முற்பட்டாலும் அதனை



International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*



E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

சுழற்றும் கம்பால் தடுத்திட முடியும். உடலின் வலிமை ஆற்றல், விரைவுத்திறன், உடல் நெகிழ்தன்மை (Flexibility) ஆகியவற்றை அடைய சிலம்பப் பயிற்சி உதவுகிறது.

இது போன்ற தமிழ்களின் பாரம்பரிய கலைகளை வாழ்க்கையில் பயன்படுத்துவதால் மனதளவில் வலிமையும் உடல் அளவில் வளுவும் பெறப்படுகிறது. இதன் அருமைப் புரிந்தவர்கள் நம் கலைகளை மதித்து வாழ்ந்து வந்தனர். அதனை நாமும் பின்பற்றி வந்தால் நீண்ட ஆயுளையும் ஆரோக்கியத்தையும் பெறலாம்.

**துணைநூற்பட்டியல்**

1. பாரதியார் கவிதைகள், தமிழினி பதிப்பகம், தி.நகர், சென்னை - 17.
2. சு.வித்தியானந்தன், பண்டையத் தமிழர் போர்நெறி, வள்ளுவர் பண்ணை, சென்னை, 1971.
3. ஔவை சு. துரைச்சாமிப்பிள்ளை, முனைவர் கதிர்முருகு, சங்க இலக்கியம் மூலமம் உரையும், பத்துப்பாட்டு, சாரதா பதிப்பகம், சென்னை - 14.
4. தமிழ் கிராமிய சலங்கை ஒலி, முனைவர் சைலஜா மகாதேவன், பதிப்பகம் பள்ளிக்கூடசந்து, பாண்டிய வெள்ளாளத்தெரு, மதுரை- 625001.

International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019
Available at: www.ijtlls.com



# பெண்களுக்கு எதிரான வன்முறைகள்

## Violence against Women

**முனைவர் தி.சண்முகராஜா,** கௌரவ விரிவுரையாளர்,
இந்தியப்பண்பாட்டுத்துறை, அருள்மிகு பழனியாண்டவர் கலை மற்றும் பண்பாட்டுக்கல்லூரி, பழனி.

## Abstract

*Home, town and country women are the main reason for maintaining the position of a sister, wife and mother. From the time of man's appearance until today, if society has been in good state or in trouble, it may be of women. Women are instrumental in creating the ancient culture. Therefore, the goddesses of prosperity are the female deities in many countries. The The Tamil Godesses, Greek goddesses Sycildetona, Delphi are the Goddesses of women, mostly of Fertility or prosperity or of terror. Women who are supposed to be goddesses have been abused or murdered by a few hypocrities during the times.This article examines the violences against women.*

**Keywords:** Survey, Violence against women

ஒரு நல்ல பண்பாட்டுச் சிறப்புடைய சமூகத்தை உருவாக்குவதே பெண்தான் என்றால் அது மிகையாகாது. ஒரு சகோதரியாக, மனைவியாக, தாயாக நின்று ஆடவரைப் பேணிக்காப்பதற்கு, இல்லறம், ஊர், நாடு சிறக்க பெண்கள்தான் முக்கிய காரணமாக விளங்குகின்றனர். மனிதன் தோன்றிய காலம் முதல் இன்று வரை சமூகம் சிறப்படைகிறது என்றால் அது பெண்களால்தான். ஆதிகாலத்தில் முதன்முதலில் பயிர்த்தொழிலில் ஈடுபட்டது பெண்கள்தான். பெண்களே புராதனப் பண்பாட்டை உருவாக்குவதில் முக்கியப்பங்கு பெற்றனர். ஆகவே, செழிப்பைக் குறிக்கும் தெய்வங்கள் பல நாடுகளிலும் பெண் தெய்வங்களாகவே இருக்கின்றனர். கிரேக்க தெய்வங்களான சைபீல்டெடோனா, டெல்பி முதலியவை பெண் தெய்வங்களே. செழிப்பை வேண்டி நடத்தப்படும் பாவை நோன்பில் பெண்களே பாவையை வாழ்த்துகிறார்கள் என்று பாவை நோன்பை 'திருப்பாவை' வருணிக்கிறது. கற்பு நெறியில் சிறந்து விளங்கும் பெண்களுக்கு எதிரான வன்முறை அக்காலம் முதல் இக்காலம் வரை தொடர்ந்து நடைபெற்று வருகின்றன. தெய்வமாகப் போற்ற வேண்டிய பெண்களை இச்சமுதாயத்தில் ஒருசில நயவஞ்சகர்களால் பாலியல் வன்கொடுமைகள் செய்து கொன்றும் விடுகின்றனர். பெண்களுக்கு எதிரான வன்முறைகள் குறித்து இக்கட்டுரை ஆய்வு செய்கிறது.

**சமூகத்தில் பெண்களின் இடம்**

இந்திய சமூகம் எப்போதும் பெண்களை மதிக்கிறது. இந்து மதத்தில் ஆணும் பெண்ணும் தெய்வீக உடலின் இரண்டு பகுதிகளைக் குறிக்கின்றனர். அவர்களுக்கு இடையே மேன்மை அல்லது தாழ்வு மனப்பான்மை பற்றிய கேள்வி இல்லை. அவ்விறைவன் அர்த்தனாரிஸ்வரராக வழிபடப்படுகிறார். கார்கி, சுலாபா, மற்றும் மைத்ரேய் போன்ற பெண்களுக்கு இந்து வரலாறு சாட்சியாக உள்ளது. அதன் பகுத்தறிவு பீடம் சாதாரண மனிதர்களை விட மிக உயர்ந்ததாக இருந்தது. சரஸ்வதி, துர்கா, லட்சுமி, காளி போன்ற பல பெண் தெய்வங்கள் நாடு முழுவதும் வழிபடப்படுகின்றன. மகாபாரதத்தின் கூற்றுப்படி, பெண்ணை நேசிப்பதன் மூலம் ஒருவர் செழிப்பு தெய்வத்தை வணங்குகிறார் என்று பொருள். பயிர்களின் செழிப்பிற்கும், விளைச்சலுக்கும் காரணமாக இருக்கும் நிலம், பெண்ணாக

 
E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

உருவகிக்கப்பட்டதன் அடையாளமே வளமை வழிபாடாகும். அதனால்தான் நிலத்தை, நிலமகள் எனவும் பூமித்தாய் எனவும் குறித்தனர். மழைவேண்டி வழிபடும் தெய்வம் மாரியம்மனாக நாட்டார் வழக்கத்தில் வழிபடும் வளமை தெய்வமாகும்.

இருண்ட பக்கத்தில் ஆணாதிக்க முறை ரிக்வேத காலத்திலிருந்து தொடர்கிறது. பழக்க வழக்கங்களும் மதிப்புகளும் ஆண்களுக்கு சாதகமாக ஆண்களால் செய்யப்பட்டன. பெண்கள் இந்த பாகுபாட்டை மவுனமாக அனுபவிக்கிறார்கள். வரலாற்று ரீதியாக இந்தியப்பெண்கள் முரண்பாடான பாத்திரங்களை ஏற்றுக்கொள்ளும்படி செய்யப்பட்டுள்ளனர். மகள்கள், தாய்மார்கள், மனைவிகள் மற்றும் மருமகள்கள் என மரபு வளர்ப்பு அவர்களின் பாரம்பரிய பாத்திரங்களை திறம்பட வகிப்பதை உறுதி செய்ய பெண்ணின் வலிமை துண்டப்படுகிறது. மறுபுறம் ஏழை பெண்கள் மற்றும் உதவியற்ற பெண்கள் ஆண் பாலினத்தை முழுமையாக சார்ந்து இருப்பதை உறுதிப்படுத்த வளர்க்கப்படுகிறது.

**பெண்களுக்கு எதிரான வன்முறைகள்**

பெண் குழந்தைகள் பிறப்பு முதல் பெண்களுக்கு எதிரான வன்முறைகள் தொடங்கி விடுகிறது. தமிழகத்தில் தென்மாவட்டங்களில் பெண் குழந்தைகள் பிறந்தால் கள்ளிப்பால் கொடுத்து கொல்வது தொடர்ந்து வழக்கத்தில் உள்ளது. அடுத்ததாக வரதட்சணை கொடுமை, நாட்டில் ஒவ்வொரு 78 மணிநேரத்திலும் ஒரு வரதட்சணை மரணம் நிகழ்கிறது என்று ஒரு செய்திக்குறிப்பு கூறுகின்றது. வரதட்சணை மணமகள் வீட்டார் குறைவாக கொடுத்த காரணத்தினால் பாலியல் ரீதியாக அந்த பெண்ணை துன்புறுத்தும்போது அப்பெண் தற்கொலைக்கு துண்டப்படுகிறாள்.

பாலியல் பலாத்காரம் இது ஒவ்வொரு 34 நிமிடங்களுக்கும் ஒரு பாலியல் பலாத்காரம் நடைபெறுவதாக ஒரு செய்திக்குறிப்பு கூறுகின்றது. இது பெரும்பாலும் பள்ளி, கல்லூரி மாணவிகளைக் குறிவைத்து தாக்குகின்றது. மேலும், திருமணம் ஆன மற்றும் திருமணம் ஆகாத பெண்களுக்கு எதிராக சொந்த வீட்டிலேயே ஒரு சில நயவஞ்சக குடும்ப உறுப்பினர்களால் பாலியல் ரீதியான வன்முறை அரங்கேறு கிறது. இதனை வெளியே சொல்ல முடியாத பெண்கள் தற்கொலை செய்து கொள்கின்றனர்.

இன்று இணையம் எல்லோருக்கும் கிடைக்கக்கூடியதாக இருக்கிறது. அதே போலத்தான் அதனுடன் இணைந்து வரும் வன்முறையும். இணையம், கைப்பேசி போன்றவை சக்தி வாய்ந்த கருவிகள் மட்டுமல்ல அவை பெரிய ஆயுதங்களாகும். இந்த வன்முறை குறிப்பாக பெண்களை அதிகமான பாதிப்புக்குள்ளாக்குகிறது.

பெண்களுக்கெதிரான இந்த இணைய வன்முறை குறித்து ஐ.நா.மன்றம் ஒரு எச்சரிக்கை ஒன்றை விடுத்திருக்கிறது இந்த வன்முறை உடல்ரீதியான துஷ்பிரயோகத்தைப்போலவே அதே அளவுக்கு பாதிப்பை ஏற்படுத்தக்கூடியதாக இருக்கிறது. குறிப்பாக உலகின் மூலை முடுக்குகளில் எல்லாம் தொழில்நுட்பம் நுழையக்கூடிய இந்த நேரத்தில் இதன் தாக்கம் அதிகமாக இருக்கிறது என்று

ஐ.நா.மன்றம் கூறுகின்றது. மேலும் தற்போதைய காலகட்டத்தில் தொழில்நுட்பம் பெண்கள் மற்றும் சிறுமிகள் மீது ஊறு விளைவிக்கும் ஒரு கருவியாகிவிட்டது என்று ஐ.நா.மன்றம் எச்சரிக்கிறது.

உலகெங்கும் பல கோடி பெண்கள் பாலியல் ரீதியாக வீட்டிற்குள் நடக்கும் வன்முறைக்கு இலக்காகிறார்கள்.அதற்கு தகவல் தொழில்நுட்பம் மற்றும் சமூக ஊடகங்களின் வளர்ச்சி என்பது காரணமாய் அமைந்து புதிய வழிகளைத்தந்துள்ளது. இந்தப்பிரச்சினை குறித்து உலக அளவில் விழித்துக்கொள்ள வேண்டிய நேரம் இது என்கிறது ஐ.நா.மன்றம். உலகில் 73% பெண்கள் இணையத்தில் பாலியல் தொடர்பான வன்முறையை சந்தித்து இருக்கிறார்கள். இணையம் சுதந்திரத்தை தரும் என்ற உறுதிமொழியை இந்த இணையவழி வன்முறை குலைத்துவிட்டது பல சந்தர்ப்பங்களில் பெண்கள் மற்றும் சிறுமிகளுக்கெதிராக

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

கொடூரத்தையும் ஊறுவிளைவிக்கும் நடத்தைகளையும்தான் ஊக்குவிக்கிறது என்கிறார் ஐ.நா.பெண்கள் அதிகாரி பும்ஸிலோ ம்லாம்போ இங்குக்கோ.

பெண்களுக்கு எதிரான இணையவழி வன்முறையை உலக சுகாதார நிறுவனம் இது கொள்ளை நோய் போன்ற உலக சுகாதாரப்பிரச்சினை என்று கூறுகிறது. இதனை சமூக ஊடகங்கள் மேலும் அதிகரிக்கச்செய்கின்றன. எண்முறை தொழில்நுட்ப ஆய்வமைப்பு மற்ற வன்முறைகளிலிருந்து தொழில்நட்பம் சார்ந்த பாலியல் வன்முறைகளை கீழ்க்கண்ட நான்கு அம்சங்களில் வேறுபடுத்திக் காட்டுகிறது. அவை 1.அநாமதேயத்தன்மை 2.எல்லோராலும் பயன்படுத்தக்கூடிய நிலை 3.தூரத்திலிருந்தே ஒரு செயலை செய்யக்கூடிய நிலை 4.தானாக இயந்திரகதியில் செய்யக்கூடிய நிலை என்று கூறுகிறது. ஆனால், வன்முறையான இணைய நடத்தை என்பதில் இணையவழியில் தொந்தரவு செய்வது மற்றும் பொதுவெளியில் அவமானப்படுத்துவது, உடல்ரீதியாக ஊறுவிளைவிப்பது போன்றவை அடங்கும் இணைய வன்முறையால் பாதிக்கப்பட்டவர்கள் பெறும்பாலும் இளையவர்களாகவே இருப்பார்கள். 18 முதல் 24 வயது வரை தொழில்நுட்பம் சார்ந்த பாலியல் வன்முறை அபாயத்தை எதிர்கொள்ளும் வயதினர்.

பாதிக்கப்பட்ட பெண்கள் 64% பேர் இணைய வன்முறையைப்பற்றி சமூக பின்விளைவுகளுக்குப் பயந்து புகார் சொல்வதில்லை அப்படியே துணிந்து புகார் தந்தாலும் 76% நீதிமன்றம் அல்லது காவல்துறை போன்ற அமைப்புகள் பொருத்தமான நடவடிக்கைகள் எடுக்கத் தவறுகின்றன.

**பெண்களுக்கு எதிரான வன்முறைகள் தடுக்கும் வழிமுறைகள்**

- பெண்களுக்கு எதிரான பாலியல் வன்முறைகளுக்கு குற்றம் நிருபிக்கப்பட்டால் கடுமையான தண்டனையான தூக்கு தண்டனையை நீதிமன்றம் வழங்க வேண்டும். அதற்கான சட்டதிருத்தங்களை அரசு மேற்கொள்ளவேண்டும்.
- இணையம்,கைப்பேசி, தொலைக்காட்சி, திரைப்படம் ஆகிய அனைத்திற்கும் தனித்தனியாக தணிக்கைத்துறை ஏற்படுத்தப்பட்டு ஆபாச காட்சிகளை ஒளிபரப்ப தடைவிதிக்கவேண்டும். மேலும், அவற்றை தொடர்ந்து கண்காணித்து மீறுபவர்களுக்கு நீதிமன்றம் மூலம் தண்டனை பெற்றுத் தரவேண்டும். இத்தணிக்கைத்துறை உண்மைத்தன்மையுடன் செயல்படவேண்டும். குற்றவாளிகள் எவ்வித சூழ்நிலையிலும் தப்பிக்காதவண்ணம் இருக்கவேண்டும்.
- தற்போது இணையத்தில் ஆபாசத்தை இயக்குபவர்கள் வெளிநாட்டினர் என அரசு தப்பிக்கும் நிலை உள்ளது. இதை மாற்றிட நமது நாட்டில் சட்டதிருத்தம் செய்திட வேண்டும் என சமூக நற்சிந்தனையாளர்கள் கருதுகின்றனர்.
- கல்விக்கொள்கையில் பள்ளி, கல்லூரிகளில் அனைத்து வகுப்புகளிலும் கட்டாயம் பாலியல் கல்வி இடம்பெறச் செய்யவேண்டும். இதனை கற்பிக்கும் ஆசிரியர்கள் சமூக நற்சிந்தனையாளர்களாகவும் ஏன் அவர் ஒரு மருத்துவராக இருந்தாலும் வரவேற்கத்தக்கது.
- பெண்களுக்கு எதிரான வன்முறைகளுக்கு சகிப்புத்தன்மையை ஏற்படுத்துவதற்காக, பெண்களுக்கு எதிரான வன்முறையை முடிவுக்கு கொண்டுவருவதற்காக ஐ.நா சபை ஒவ்வொரு மாதமும் 25 ஆம் தேதி ஆரஞ்சு தினம் என அறிவித்துள்ளது. இது விழிப்புணர்வை ஏற்படுத்தும் விதமாக பெண்கள் மற்றும் சிறுமிகளுக்கு எதிராக நடவடிக்கை எடுக்கும் நாள் ஆரஞ்சு தினம் ஆகும். இந்நாளை அனைத்து நாடுகளும் பள்ளி, கல்லூரிகளில் மாணவ, மாணவியர்களை ஒவ்வொரு மாதமும் உறுதிமொழி ஏற்கச்செய்யவேண்டும்.
- பெண்களுக்கு எதிரான பாலியல் வன்முறைக்கு ஆளானவர்கள் புகார் அளிக்க ஒரு கட்டணமில்லா தொலைபேசியை எண்ணை அறிமுகப்படுத்தவேண்டும். இம்முறை தற்போது அல்போனியா நாட்டில் நடைமுறையில் உள்ளது.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

- தேசிய மனித உரிமைகள் ஆணையம் முக்கியமாக இளைஞர்களை குறிவைத்து பெண்களுக்கு எதிரான வன்முறை குறித்த விழிப்புணர்வு மற்றும் சமூக ஊடக பிரச்சாரத்தை தொடங்கியுள்ளது. இதனை அனைத்து நாடுகளும் ஊக்குவிக்கவேண்டும்.
- இணையம் மற்றும் கைப்பேசியில் ஆபாசங்கள் இருக்கும் தளங்களை தடுக்கவேண்டும்.
- பெண்களுக்கு எதிரான பாலியல் வன்முறை போன்ற சமூக நோய்களுக்கு அடிப்படையான காரணமாய் இருப்பது மது மற்றும் போதைப்பொருள்களே இதனை தடைசெய்திட வேண்டும். இந்தியா போன்ற முன்னேறும் நாடுகள் நாடு முழுதும் ஒரே சட்டத்தின் மூலம் தடை செய்திடவேண்டும். அதற்கான சட்ட திருத்தத்தை நாடு உடனடியாக மேற்கொள்ள வேண்டும்.
- பெண்களுக்கு எதிரான பாலியல் வன்முறை போன்ற சமூக நோய்களுக்கு எதிராக அரசு இயந்திரம் அறநெறியுடன் இயங்கிடவேண்டும்.

**முடிவுரை**

ஒரு நல்ல பண்பாட்டுச் சிறப்புடைய சமூகத்தை உருவாக்கும் பெண்களுக்கு எதிராக நிகழ்த்தப்படும் பாலியல் வன்முறை மற்றும் மற்ற வன்முறைகளையும், அவற்றை எவ்வழிகளில் அகற்றுவது என்றும் இதுவரையில் இக்கட்டுரையில் ஆய்வு செய்தோம். இது போன்ற சமூக கொல்லை நோய்கள் நாட்டின் பண்பாட்டையும், நாகரீகத்தையும் சீர்குலைத்து விடும். ஒரு நாடு வல்லரசு ஆக வேண்டும் என்றால் பெண்களுக்கு எதிரான வன்முறைகளுக்கு ஓர் முடிவு கட்டிட வேண்டும். இன்று உலக நாடுகள் அனைத்தும் எதிர்கொள்ளும் முக்கிய பிரச்சினையாக பெண்களுக்கு எதிரான இவ்வன்முறை பார்க்கப்படுகிறது. இதை உணர்ந்து அனைத்து நாடுகளும் தாயாக,மனைவியாக,சகோதரிகளாக ஏன் இவற்றையெல்லாம் தான்டி வளமைக்குரிய தெய்வங்களாகப் பார்க்கப்படும் பெண்களை பாதுகாத்திட வேண்டும். அதற்கு நாட்டை ஆளும் ஆட்சியாளர்கள் சுயநலம் கருதாமல் மக்கள் நலன் கருதி குறிப்பாக பெண்களுக்கு எதிரான பாலியல் வன்முறைகளுக்கு நிரந்தர தீர்வு காணவேண்டும்.

**துணைநூற்பட்டியல்**


1. திருநாவுக்கரசு,க.தா., சிந்து வெளிதரும் ஒளி, வள்ளுவர் பதிப்பகம். புதுக்கோட்டை, இரண்டாம் பதிப்பு, 1971.
2. காசிநாதன், நடன.,தமிழர் தெய்வங்கள், தென்றல் நிலையம், சிதம்பரம் - 608001.
3. சீனிவாசன், இரா., சக்தி வழிபாடு, ஜெயக்குமாரி ஸ்டோர் பப்ளிகேசன்ஸ், நாகர்கோயில், முதல்பதிப்பு, 1975.
4. சிவகுருநாதபிள்ளை,மா., சிவ வடிவங்கள், தமிழ்ப்பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 1991
5. கருப்பாயி, ஆ., நாட்டுப்புற சிறுதெய்வ வழிபாடு, செந்தமிழ்ப்பாவை பதிப்பகம், குளத்தூர், புதுக்கோட்டை, முதல்பதிப்பு, 1999.
6. சுந்தரபாப்பா, நா., ஆண்டாள் பாடல்களும் வழிபாடும், அரசிபதிப்பகம், திண்டுக்கல், 1990.
7. சேதுராமன், ஜி., தமிழ்நாட்டு சமுதாய பண்பாட்டு கலை வரலாறு, ஜெ.ஜெ.பப்ளிகேசன்ஸ், மதுரை, 1997.
8. PEF Research Centre (2014).Online Harassment.
9. West, Jessica, Cyber-Violence Against Women, Prepared for Battered Women Support Services, Vancouver, May 2014.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

# சங்ககால மகளிர் வாழ்ந்த சமுதாய சூழல்

# The Social Setup of the Women of the Sangam Age

**ச.சரவணன்,** முனைவர் பட்ட ஆய்வாளர்,
தஞ்சைப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.

## Abstract

*In the history of the Tamils, Sangam Literature is the Golden Period that show the moral vigour of the people in all walks of life. Tamil lives are endowed with the moral virtues through the traditional values. Women are the integral part of the life. Lots of evidences are to be noted on the participation of the learned women in the Sangam times. Women in Sangam times, society in those times and the setup of family are discussed in the paper. Hence, the paper traces the social setup and the state of women in the Sangam Period.*

**Keywords:** Social Setup of the Women, Women of the Sangam Age

### முன்னுரை

பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்டதாக நம் சங்ககால உலகில் ஆணும், பெண்ணும் இணைந்து வாழும் வாழ்க்கையின் நிலையையும், ஒற்றுமையையும், அவர்களுள் உள்ள ஒத்தநிலை அன்பின் மதிப்பும் உயர்வாக கருதப்படும், அவ்வாறு இல்லையெனில் அந்நாடு சிறப்படைய ஏதுவாக இருக்கும். ஏனெனில் மனித இனம் ஒரு தாளின் இரண்டு பக்கம்போல் வாழ்வு அமைத்தனர். அவ்வாறு அந்நாடும் சிறப்படைவதற்கு காரணமாயின. அதனால்தான் ஒரு நாட்டின் சிறுமைக்குத் தலையாய காரணம் அந்நாட்டின் பெண்ணுரிமைக்கு கடியப் பெறுவது ஆகும் என்று கருதும் திரு.வி.க பெண்ணுரிமை இல்லாத நாடு நோய்யுற்று போல் கிடைக்கும் மூலதனமில்லா முடங்கி கிடைக்கும் முடவன் போல் அந்நாடும் அத்தகையதாகும். இவ்வாறாக சங்க கலை மகளிர் வாழ்ந்த சமுதாயச் சூழலை இக்கட்டுரையில் காணலாம்.

### சங்கம்

கூட்டாக ஒன்று கூடி குழுவாக செயல்புரிந்து தமிழ்ப்புலவர்கள் சங்கம் அமைத்தனர் என்பது சங்க இலக்கியங்களில் எங்கும் காணப்படவில்லை. ஆனால் சங்க நூல்களைச் சொல்லக்கூடிய தொகை நூல்களில் சங்கம் என்னும் பொருளைத் தரும் சொற்களான அவை (புற.39), அவையம் (மது.492) அவைகளம் (புற.283), அவையகம் (மது.508), அறங்கெழு நல்லனு (அக.93) கூட்டம் (பதி.72) முதலான சொற்களே சங்க இலக்கியங்களில் காணப்படுகின்றன. மேலும் சமணர்களாலும், பௌத்தர்களாலும் முதன்முதலில் பயன்படுத்தப்பட்டது. அச்சொல் சங்க காலத்தில் காணப்படாவிட்டாலும் புலவர் பெருமக்கள் ஒன்று சேர்ந்து பாடலை பாடியது பற்றியும், தமிழ் நூல்களை ஆராய்ந்ததைப் பற்றியும் பல குறிப்புகள் உள்ளன. பௌத்த சமண சமயங்களில் சமய அமைப்புகளில் சங்கம் என்றும் குறித்துள்ளனர். ஆகவே சமணம் கூறிய சங்கம் என்ற சொல்லிருந்து இந்தச் சங்கம் என்றும் சொல் உறுதி யாகிருக்கலாம் என்று பல்வேறு நூல் ஆராய்ந்தவர்கள் குறிப்பிடுகின்றன.

### சங்ககாலம் - வரையறை

கி.மு.முதலாம் நூற்றாண்டைத் தொடங்கி கி.பி.மூன்றாம் நூற்றாண்டின் முற்பகுதி என்றும் வரையறுத்துள்ளனர்.[1] முச்சங்கங்கள் இருந்தன என்று இறையனார் அகப்பொருள் நூல் குறிப்பிடுகிறது. ஆனால் இதனை இவை கூறுவது ஒரு கற்பனையே என்று எஸ்.வையாபுரிப்பிள்ளை மறுக்கிறார். ஆனால் சங்க இலக்கியம் அகச்சான்றுகள் கொண்டு

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

கி.பி.இரண்டாம் நூற்றாண்டுக்குப் பிற்பட்டது எனக் குறிப்பிடுகின்றார்.[2] தெ.பொ.மீனாட்சி சுந்தரம்பிள்ளை சங்க இலக்கியம் முதல் மூன்று நூற்றாண்டுகள் எனலாம் என்கிறார் கே.கே.பிள்ளை சங்க இலக்கியம் கி.பி இரண்டாம் நூற்றாண்டுக்கு பிற்பட்டவை அல்ல என்று குறிப்பிடுகிறார். மேலும் நாம் எக்காலத்துக்கும் நுகர்ந்து மகிழும் நல் உடமைகளாக வழங்கிச் சென்றுள்ளனர். சங்கு தமிழகம் அறிந்த கண் கவரும் கடற்பொருளாகும். உள் குவிந்து அமைந்து உலகம் நலியனத்தையும் நெருங்கு திரட்டிக் கொண்டு ஓம் எண்ணும் மூல ஒலியை உண்டாகும். வடிவம் அது. பேரறிஞர் பலர் ஒன்றுகூடி உள் குவிந்து ஒன்றி நின்று ஓசை நயம் பூண்ட தமிழால் என்றும் நிலைத்திருக்கக்கூடிய மொமி,ஓவியங்களைப் படைத்தளித்த நிறுவனமே ‘சங்கம் இப்பாடல்கள் பழையனவும், புதியவனவும் காட்டுகிறது. மேலும் பாடப்பட்ட காலம் ஒன்றாகவும் பாடல் தொகுக்கப்பட்ட காலம் பிரிதொன்றாகவும் காணப்படுகிறது.[4] எனவே சிறப்புமிக்க அழியாத இலக்கண இலக்கியங்களைத் தந்த காரணத்தால் அவ்வமைப்பு விலகிய சங்ககாலத்தை தமிழ் இலக்கிய வரலாற்றின் பொற்காலம் எனலாம்.

**சமுதாயம் - சமூகம்**

மனிதன் நாளுக்கு நாள் வளர்ச்சியடைந்து சூழலுக்கு ஏற்ப தன் வாழ்க்கையைமாற்றி கொள்ளவும். உழைப்பின் சக்தியின் அடிப்படையில் தன்னை மேம்படுத்திக்கொள்ளவும் மாறுப்பட்ட கோணங்களின் காணும் போது தான் சென்னை பல்கலைக்கழகம் சமுதாயத்தை மக்களின் திரன் என்றும் சமூகத்தை திரள் என்றும் பொருள் விளக்கம் தந்துள்ளது. மேலும் ஆகபர்ன், நிம்கா ஆகியோர் ஒரு வரையறுக்கப்பட்ட மக்களின் அமைப்பே அதன் கீழ் வாழும் சமூக வாழ்க்கையின் முழுமையோ சமுதாயம் ஆகும். இவை மனிதனின் ஆளுமையின் வளர்ச்சியே என்கிறார் பாஸ்கர் கில்பர்ட்.

**சங்ககால சமுதாய அமைப்பு**

சங்ககாலம் ஒரு மாறுதல் நிலையைக் குறிப்பதாகும். அவை இனக்குழு வாழ்க்கை அழிந்து நிலவுடைமையாக மாறும் மலரும் காலகட்டத்தை குறிக்கிறது. மேலும் சங்ககாலம் வரையறுக்குட்பட்ட நிலப்பகுதிகளையும் குடியேற்றங்களையும் அதற்குரிய சொத்துரிமை அவற்றைப் பாதுகாக்கும்வகையோடு உருவாயின என்கிறார் கா.சிவதம்பி குனக்குழு வாழ்வுமுறை அழிந்து நிலவுடைமையாக மாறுகின்றது. சூழலில் பழைய சமுதாயத்தின் எச்சங்களும் நிலவுவது இயல்பே. இனக்குழு அறிவு முழுமையாக இராமல் அரைகுறையாக இருந்தால் இனக்குழு மக்களின் சிந்தனைகள் நம்பிக்கைகள் பண்பாட்டு எச்சங்கள் அதற்குறித்து உருவாகும் சமுதாயத்தில் எஞ்சி நிற்கும் எனத் தேவிபிரசாத் சட்டோ பாத்யாயா (நா.வானமாமலை, 1970:14 இலிருந்து) குறிப்பிடும் நிலையை சங்கப்பாடல்களும் காட்டுகின்றன. இந்த இனக்குழு சமுதாயத்தை கா.சுப்பிரமணியன் (1993) மிக விரிவாக ஆராய்ந்துள்ளார். எனவே உணவு கா.சுப்பிரமணியன் (பக்கம்.39)சேகரித்தலுக்கும், வேட்டையாடுதலுக்கும் மேலும் அதனைத் தொடர்ந்து மாறுதல்கள் அந்தந்தச் சூழ்நிலையைப் பொறுத்ததாயிற்று சில இடங்களில் கால்நடைப் பொருளாதரத்திற்கும், விவசாயத்திற்கு மாறின. இதனால் இனக்குழு அழிந்து முன்னேற்றம்காண வழிவத்தன என்கிறார். கா.சி.சுப்பிரமணியன்.

**சங்ககாலத்தில் குடும்பங்கள்**

சங்க இலக்கியம் காட்டுகின்ற குடும்பம் ஆண், பெண் சமுத்துவம் நிலவிய குடும்பம் இல்லை ஆண் பொருள்ளீட்டுபவனாக இருக்க பெண் ஆணைச் சார்ந்து வீட்டிலிருந்து குடும்பத்தை குறிப்பாக பிள்ளைகளைப் பேணுய வலியாக மட்டுமே இருந்துள்ளார். இனக்குழு எச்சங்களாக நிலவியதனால் சங்கச் சமுதாய பெண்ணை முதன்மைப்படுத்தப்பட்ட சூழ்நிலைகளையும் காணமுடிகிறது. இதனை

**“வல்லிற் றந்த வெண்கோட் டேற்றைப்
புனையிருந் கறுப்பின் மனையோள்
குடிமுறை படுக்கும் நெடுமலை நாட” (நற்.336 4-6)**

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

எனும் சூழலில் குடி என்பது வீடு என்றும் பொருளிலோ ஆளப்பட்டது. நகர், மனை, இல் எனும் சொற்களும் வீடு எனும் பொருளிலே ஆட்சி பெற்றுள்ளன. "நெல் ஓடை நெடுநர் கூட்டு முதல்" (புற.287.9) "வளங்கெழு திருநகர்" (அக.17:1) என நகர் வீடு எனும் பொருளிலும் ஆளப்பட்டுள்ளது என்று அறியப்படுகிறது.

**சங்ககாலச் சமுதாயத்தின் மகளிர் நிலை**

சங்க இலக்கிய நூல்களின் பெண் தன் நிலை மாறாமல் தன்னகத்துக்கே தனி சிறப்பிடத்தை பெற்றிருந்தால் சங்ககால தமிழ் வாழ்வியலில் பெண்ணுரிமை பேணப்பட்டது. ஆனால் அடிமைத்தனம் தோன்றப்படவில்லை. அதன்பிறகு அவர்களின் சிறப்பு குறையலாற்று. மேலும் முதல் உரிமை இல்லை என்பது சமண சமயக் கோட்பாடான ஒரு காரணமாகும். அந்தச் சமயம் சார்ந்த துறவிகளே வீடு, பேறு அடையமுடியும். இல்லாத்தாரும் மகளிரும் வீடுபேறு அடைய முடியாது என மகளிரை தாழ்ந்த நிலையனராகவே கருதினர். ஆனால் சங்க நூல்களில் இல்லறப் பெண்டிரை இழித்துப் பேசுவதையோ தாழ்வாகக் கருதியதையோ காண முடியவில்லை. தொல்காப்பியர் ஆடவர், பெண்டிர் ஆகிய இருபாலருக்கும் இருக்க வேண்டிய ஒப்பின் வகைகளைப் "பிறப்பே குடிமை ஆண்மை ஆண்டோடு" என்று ஏற்றத்தாழ்வின்றிச் சுட்டிக்காட்டியுள்ளார். மேலும் பண்டைத் தமிழ் சமுதாயத்தில் அனைத்துரிமைகளையும் ஆடவருக்கு நிகராகப் பெற்றிருந்தாள் என்று வ.சுப.மாணிக்கம் கூறியுள்ளார்.

**அரச மகளிர்**

அரசன் போர் செய்யும் காலங்களில் தன் இன்னுயிர் நீத்தான் அவ்வாறு நேரிடம்போது அரசி மணம் துயரப்பட்டு பிரிந்த நிலையை அடையப்போகும் போது மக்களின் வேண்டுகோளுக்கு இனங்க அரசன் செய்யும் தலைமை இடங்களின் பணிகள் அனைத்தும் ஆடை அணிகளே ஆபரணங்களோ இன்றி தோற்றப் பொலிவுடன் விளங்குபவள் ஆவாள். இவற்றால் அன்றைய அரசிலில் அரசி என அமைந்து ஆளும் தகுதி இல்லாவிட்டாலும் அரசிப் பெருந்தேவியர் பெற்றிருந்த சிறப்பிடத்தை உணரலாம். மேலும் பாடாள் திணையிலும் பதிற்றுப்பத்திலும் தேவியைப் பற்றிய செய்திகள் மிகுதியாகக் காணப்படுகின்றன.

**இல்லற மகளிர்**

சங்க கால மகளிர் பொறுமைக் குணமும் சகிப்புத் தன்மையும் கொண்டு குடும்பம் சிதைவுபடாமல் காத்துச் சமுதாய அமைதிக்கும் முன்னேற்றத்திற்கும் வழிவகுத்தனர் என்று கூறலாம். தற்கொண்டானைப் பேணியும் குடிமைக்கடன் ஆற்றியும் புதல்வரை பயந்து குடியோடு கோடாமரபினைப் பேணி இனிய வாழ்வு வாழ்ந்தனர் எனக் குறிப்பிடப்படலாம். இதனைத்தான் மதுரைக்காஞ்சியில் கள்ளோர் களிநொடை நுவல இல்லோர் என்ற வரியில் உள்ள இல்லோர் என்னும் சொல்லும் தலைவியைக் குறிக்கிறது எனலாம். இதேபோன்று திருவள்ளுவர் வாழ்க்கைத் துணை மனைவி என்று குறிப்பிட்டுள்ளார். இவ்வாறு மகளிரின் இல்வாழ்க்கை செய்திகளை இன்றும் பல்வேறு நூல்களில் காணலாம்.

**கலை மகளிர்**

சங்க காலத்தில் பெண்கள் கலை பெற்றவர்களுக்கு என்று தனி சிறப்பிடம் பெற்றனர் எனலாம் ஏனெனில் குறமகள், குறியெயினி இளவெயினி வெண்ணிக்குயத்தியர் போன்ற பெண்பாற் புலவர்களின் வரலாற்றுகளை புறநானூறு பாடல்களிலும் நற்றினைப் பாடல்களிலும் காணலாம். மேலும் ஔவையார் அரசனுக்காக தூது சென்ற செய்தியையும் அதனால் அவர்களுக்கு மதிப்பையும் அறிய முடிகிறது. அதனால்தான் என்னவோ ந.சஞ்சீவி சங்ககால பெண்பாற் புலவர்களை முப்பதின்மார்[5] எனக்குறிப்பிடுகின்றார் என அறியப்படுகிறது. பாடல் பாடுவோரை பாடினி என்றாகவும் நடன மேடையில் நடிப்பரை விறலியராகவும் குறிப்பிடப்படுகிறது.

**கையம்மை மகளிர்**

உடை நடை பாவனை ஒப்பனை போன்ற இன்ப உணர்வுகளை போன்ற அனைத்தையும் துறந்து உடம்போடு உயிர் இருந்ததற்கான நோய்யுற்று இருப்பதைப் போல

 
E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

காணப்படுகிறாள். இவ்வாறு கணவன் இறந்த பின்னர் இக்கற்பு வாழ்வு காலப்போக்கில் சமுதாயம் அவர்களை எந்தவித மங்கல விழாக்களில் கலந்துக்கொள்ளும் நிகழ்வு நிகழ்ந்ததாக கருதப்படவில்லை. ஆனால் இந்நிலை நடந்ததாக சங்க நூல்களில் காணப்படவில்லை. ஆனால் மகளிரை போற்றுவதாக மணிமேகலையில் கூறப்படுகிறது. உடன்கட்டை ஒத்தலும் இந்தியாவின் பல்வேறு இடங்களில் காணப்படுவதாக அறியப்படுகிறது.

**கைம்மை மகளிரின் நிலை**

கைம்மை நிலை பெண் உலகிற்கும் ஆண் உலகிற்கும் பொதுவானது. அந்நிலை வாழ்வில் இருபாலருள் எவர்கேனும் ஒருவருக்கு உறாமற் போகாது. உலகில் பல இடங்களில் ஆண் கைம்மையரைப் போலவே பெண்மையரைப் போலவே பெண்கைம்மையரும் வாழ்ந்து வருகின்றனர். நமது நாட்டிற் பொதுவாகப் பெண்ணுலகத்திற்கு சிறுமை அதிகம் அதிலும் கைம் பெண்களுக்குள்ள சிறுமைகள் சொல்லற்பாலன வல்ல. அச்சிறுமைகள் நினைவிறும்போது என்பு நெக்கு விடுகிறது. உள்ளங்குழைகிறது. இப்பாழ் நாட்டில் ஏன் பிறந்தோம்? என்று நினைத்து இரங்குதலும் உண்டு. பெண் மகள் கைம்மை எய்தியதும் அவள்பாலுள்ள இயற்கை ஓடிவிடுகிறதோ? உயர் போய்விடுகிறதோ? கடவுள் மறைந்து விடுகிறாரோ படைப்பில் என்ன குறைவு ஏற்படுகிறது? அவள் எதிரில் வரக்கூடாதாம்? கூட்டங்களில் போகப் கூடாதாம்? நல்வினைகளில் தலைக்காட்ட கூடாதாம்? உடையையும் உணவையும் சுருக்கல் வேண்டுமாம்!, அப்பெண் மூதேவியாய் விட்டாளாம்! கைம்மை எய்திய ஆண்மகனோ எல்லாவற்றினுங் கலந்து கொள்ளலாம். அவன் பல்லிழுந்த முதியனாயினும் பதினாறு வயது கட்டழகியை மணஞ் செய்யலாம்! என்ன வேற்றுமை? இவ்வேற்றுமை இயற்கையில் உள்ளதா? கண்டவுள் கண்டதா? இ∴து இரக்கமில்லா வன்கணானர் இடக்காலத்தில் விதித்த கொடுமை! கொடுமை! என்கிறார். திரு.வி.கல்யாணசுந்தரனார்.

**பரத்தை பெண்டிர்**

சமுதாயத் ஒரு சாதாரண முறைக் குடும்பங்களை உடையதாக மாறுதவற்கு முன்னர் புணர்ச்சி சுதந்திரம் நிலவியது. யாரும் யாருடனும் உறவு கொள்ளலாம் என்ற இந்த பொது உறவின் வெளிப்பாடுகளாக இருப்பவையே கைக்கிளையும் பெருந்தினையும் பிறப்பு, குடிமை, ஆண்டு, அருள், உணர்வு திரு என்னும் பலவற்றில் ஒத்த தலைவனும் தலைவியும் கொள்ளும் காதலுறவும் மணவுறவும் இதன் அடிப்படையிலான குடும்ப உறவும் தோன்றுவதற்கு முன்னர் நிலவிய இந்தப்புணர்ச்சி சுதந்திரமே பரத்தமையின் தோற்றுவதற்கான காரணம் என்பது அறிஞர் முடிவு[6]“காணிக்கைக்காகத் தம்மை ஒப்புக்கொடுக்கும்முறை ஆதியில் எல்லாப் பெண்களுக்குரிய கடமையாகும். பின்னால் அவர்கள் எல்லோரின் சார்பில் இந்த பூசாரிகள் மட்டும் அதைப் பின்பற்றி வந்தார்கள். மற்ற மக்கள் சமூகங்களிடையே மணமாவதற்குமுன் பெண்களுக்குப் புணர்ச்சி சுதந்திரம் அளித்திருந்தலிருந்து. ஆகவே இதுவும் குழுமணத்தின் மீதமிச்சம்தான். பொதுமகளிர்முறை வெளிப்பட்டு வளர்ந்துள்ளது(1978:106) என்கிறார் எங்கெல்ஸ். இந்தப் பொது மகளிர் முறையை ஒருதாரமணமுறைக்கு அக்கம்பக்கமாகவே ஆண்களுக்கும் மணமாகாத பெண்களுக்குமிடையே நிகழும் மணநிலைக்குப் புறம்பான புணர்ச்சி என்று மார்கன் பொருள் கொள்கிறார். (மேலது 106)எவ்வாறு ஒரு தாரமணமுறை காதல் எனும் புதிய அம்சத்தை தோற்றுவிக்கறதோ. அதுபோன்று பொதுமகளிர் முறையும் சமுதாய அங்கமாய் உருப்பெற்றுள்ளது என்று குறிப்பிடலாம். மேலும் பல்வேறு பெயர்களால் அதாவது கணிகை விலைக்கணிகை விலை நலப்பெண்டிர் கொண்டி மகளிர் பரத்தை போன்ற பெயர்களும் சங்க இலக்கிய நூல்களான “நெஞ்சு நடுக்குறூ உக்கொண்டி மகளிர் என்று மதுரைக்காஞ்சியும் “பரத்தை ஆயம் கரப்புவும் ஒல்லாது” என்று அடிகள் பரத்தை என்ற சொல் இடம்பெற்றதையும் அறியமுடிகிறது. மேலும் புறநானுற்றில் விலைநலப் பெண்டிர் என்றும் விலைக்கணியை என்ற சொல்லும் இலக்கியங்களில் காணப்படுகிறது. இதனை தொடர்ந்தே திருவள்ளுவரும் இவ்வரிகளை பொருட்பெண்டிர் இருமணப் பெண்டிர் என்றும்

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

குறிப்பிடுகின்றார். நாலாடியார் என்னும் நூலிலும் யாவர்க்கும் விளக்கமுறக் கூறுகின்ற பரத்தைப் பெண்டிரை அழைக்கப்படுகிறது.

**சங்ககாலச் சமுதாயத்தில் மகளிர்க்குழு இருந்த சமூகக் கட்டுப்பாடு**

தன் நாட்டைக் கவரக்கருதிய அரசன்மேல் படையெடுத்துச் சென்று போர்களத்திலே மடிந்ததும் மகனுடனும், கணவருடனும் தாமும் உயிர்துறந்த மகளிரையும் இறந்தப்பட்ட தம் வீரக்கணவரை மகனை மடியில் வைத்துப் புலம்பிய மகளிரையும் தமிழ்ச்சங்க நூல்களில் காணலாம். பெண்கள் போரில் நேரடியாக பங்கு பெறாதது ஏன் என்றால் தம் புதல்வரை வீர உணர்வுடன் வளர்த்து நாட்டுக்கு நல்கினர் என்றும் வீரப்புதல்வர்களை பெற்றெடுக்கும் கடமையாகவும், சங்ககால தமிழகத்துக்கு வீரத்தாய்மார்கள் பேரரசுகளை உருவாக்கியதற்கும் பெருமளவில் உதவி புரிந்துள்ளார்கள் என்பது அறியலாம்.

இணைந்தான்

**“வால்நரைக் கூந்தல் முதியோள் சிறுவன்**
**களிறு எறிந்து பட்டனன் எனினும்**
**உவகை ஈன்ற ஞான்றினும் பெரிதே”**

என்றும் அடிகள் வீரத்தாயின் செயல்களையும் அவர்கள் ஆற்றிய தொண்டுகள் பற்றியும் காணலாம்.

**முடிவுரை**

அரச மகளிர், இல்லற மகளிர், கலையுளிர் போன்றோர்களுக்கு உயர்வாக மதிப்பு கொடுத்த சமுதாயத் கணவரை இழந்த கைம்பெண்டிர்க்கும் கைம்மை மகளிருக்கும் பரத்தை பெண்டிருக்கும் மதிப்புகள் இல்லையாயினும் அவர்கள் சங்க இலக்கிய நூல் படைப்பிற்கு உறுதுணையாக இருந்தனர் என்றும் சமூகத்திற்கும், சமுதாயத்திற்கும் உதவியாக இருந்திருந்தனர் என்று அறியப்படுகிறது.

**அடி குறிப்பு**

1. சு.வித்தியானந்தம், தமிழர் சால்பு, ப.42.
2. S.VaiyapuriPillai, History of Tamil Language and Literature, p.p.5-6.
3. கே.கே.பிள்ளை, தமிழக வரலாறு – மக்களும் பண்பாடும், ப.82.
4. சோ.ந.கந்தசாமி, சங்க இலக்கியங்களில் மெய்ப்பொருள் சிந்தனைகள், புத்தொளிப் பயிற்சி வகுப்பு உரை, நாள்.11.03.1993, தமிழ்ப்பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.
5. The Oxford English Dictionary, Vol.IX, p.360.
6. சங்க இலக்கியத்தில் குடும்பம். பெ.மாதையன் ப.126.

**பார்வையில் கண்ட நூல்**

1. பெ.மாதையன். முதல் பதிப்பு: ஜீன் 2010, சங்க இலக்கியத்தில் குடும்பம் வெளியீடு: நியூ செஞ்சுரி ஹவுஸ் (பி) லிட்.,
2. திரு.வி.கல்யாணசுந்தரனார். சாரதா பதிப்பகம்,பெண்ணின் பெருமை திருவல்லிக்கேணி, சென்னை. முதற்பதிப்பு நவம்பர் 2006, மூன்றாம் பதிப்பு ஜனவரி 2005, பதிப்பு ஆசிரியர், எஸ்.கௌமாரீஸ்வரி M.A., M.L.I.S.

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com


# ஆவுடையார்கோயில் வட்டாரக் கோயில்களில் தேவகோட்டச் சிற்பங்கள்

## The Devakotta Sculptures of the Temples around Avudayar Kovil

**முனைவர் செ.சாந்தி,** கௌரவ விரிவுரையாளர்,
வரலாற்றுத்துறை, அழகப்பா பல்கலைக்கழகம், காரைக்குடி-3.

**Abstract**

*In temple studies, the study of the Devakotta Scluptures are one of the areas of interest. It mainly deals with the elegant art of sculpting and the implied meaning in it. They are the artifacts of the temples of the Tamil Temple tradition. The word 'Devakottam' denotes the statues around the Sanctum Sanotorium of the temple. It is in vogue from the Chola period, later Pandias, Cheras and the Pallavas and the idea of the paper takes the Devakotta statues in and around the temples of Avudayar Kovil. Hence, the objective of this research paper is to find out the artefacts.*

**Keywords:** Devakotta Sculptures, Temples around Avudayar Kovil

**ஆய்வுச்சாரம்**

தமிழகக் கோயில்களின் கருவறையைச் சுற்றியுள்ள தேவகோட்டங்களில் சிற்பங்களை அமைத்து வழிபாடு செய்யும் முறையானது சோழர் காலத்திலிருந்தே துவக்கம் பெற்றுள்ளது. முற்காலச் சோழர் கோயில்களில் இறையுருவம் தேவகோஷ்டத்திற்குள்ளும் அதனோடு தொடர்புடைய வேறு சிற்பங்கள் தேவகோஷ்டத்தின் இரு பக்கங்களிலும் வைக்கப்பட்டுள்ளன. இதற்கு உதாரணமாக புள்ளமங்கை பிரம்மபுரீஸ்வரர் கோயில் தேவகோட்டச் சிற்பத்தையும் சீனிவாசநல்லூர் குரங்குநாதர் கோயில் தேவகோட்டச் சிற்பங்களையும் குறிப்பிடலாம். இவ்வட்டாரக் கோயில்களுள் சோழர்காலக் கோயிலான இரும்பாநாட்டிலும், ஒக்கூரிலும் தேவகோட்டச் சிற்பங்கள் காணப்படவில்லை. எனினும் ஆதிகைலாசநாதர் கோயிலில் அமையப்பெற்றுள்ளது. பிற்காலப் பாண்டியர் கலைப்பாணியான திருப்புனவாசல், மீமிசல், கோயில்களில் தேவகோட்டச் சிற்பங்கள் காணப்படுகின்றன. சோழர்களின் கலைப்பாணியை பின்பற்றி வந்தப் பிற்காலப் பாண்டியர்களும் அவர்களைப் பேலவே தேவகோட்டங்களில் கி.பி.12ம் நூற்றாண்டிள் தொடக்கம் முதல் கோட்டங்களில் சிற்பங்களை அமைத்துள்ளனர். முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியரின் (கி.பி.1216 – 1235) எட்டாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டானது அருப்புக் கோட்டையிலுள்ள சுந்தரேஸ்வரர் கோயிலின் மேற்குப்புற தேவகோட்டத்தில் முதன் முதலில் லிங்கோத்பவ மூர்த்தியின் சிற்பத்தையும் இம்மன்னனின் 15-ஆம்ஆட்சியாண்டுக் கல்வெட்டானது இக்கோயிலின் வடக்குப்புறத் தேவகோட்டத்தில் துர்க்கையின் சிற்பத்தைய அமைத்தார் எனக் குறிப்பிடுகின்றது. இம்மன்னனைத் தொடர்ந்துவந்த பாண்டியர்களும் தேவகோட்டச் சிற்பங்களுக்கு முக்கியத்துவம் கொடுத்துள்ளனர். இவ்வட்டாரக் கோயில்களில் தேவகோட்டச் சிற்பங்கள் அதிகமாகக் காணப்படவில்லை என்றாலும் வடக்கூர் திருப்புனவாசல் மீமிசல், தீயத்தூர் போன்ற இடங்களில் வியாக்கியானத் தட்சிணாமூர்த்தியின் சிற்பம் காணப்படுகிறது. கருவறையின் மேற்புறத் தேவகோட்டங்களில் திருப்புனவாசலில் விஷ்ணுவும் ஆஞ்சநேயரும், மீமிசல் மற்றும் தீயத்தூரில் லிங்கோத்பவர் சிற்பமும் காணப்படுகின்றது. வடக்குப் புறத்தேவகோட்டங்களில் திருப்புனவாசல் மற்றும் தீயத்தூரில் பிரம்மனும், மீமிசலில் பிரம்மனும், துர்க்கையும்

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

அமைக்கப்பட்டுள்ளன. இச்சிற்பங்களை புராணப்பின்னணியோடும், படிமக்கலைக் கூறுகளோடும் பின்வருமாறு விளக்கப்படுகின்றன.

தமிழகக் கலை மரபில் கோயில்களின் சிற்பக்கலை ஒவ்வொரு காலக்கட்ட மக்களின் சமூகப் பண்பாட்டு முறைகளைச் சித்தரிக்கும் நேர்த்தியில் அமையப்பெற்றுள்ளன. நாகரிக்காலங்களில் பாறைகளில் வரையப்பட்ட ஓவியங்களிலிருந்து வளர்ச்சி நிலையில் உருவ பொம்மைகள், நடுகற்கள் என வளர்ந்து மண்ணாலும், மரத்தாலும், சுண்ணாம்புகளாலும் சிற்பங்களை உருவகப்படுத்தியுள்ளனர். மணிமேகலை மண்ணால் சிற்பம் செய்தவர்களை மண்ணீட்டாளர் எனக் குறிப்பிடுவதிலிருந்து அறியமுடிகின்றது. அகழாயவுச் சான்றுகளிலும் சுடுமண் சிற்பங்கள் கொற்கை, அரிக்கமேடு, உறையூர் போன்ற இடங்களில் கண்டெடுக்கப்பட்டுள்ளன. குறிப்பாக இலக்கியங்களில் அரண்மனை வாயில் கதவுகளில் கொற்றவையின் உருவமும், காவிரிபூம்பட்டினத்தின் வாயிற் கதவுகளில் புலியின் உருவமும் காணப்பட்டன எனக் குறிப்பிடுகின்றன.

பல்லவர்கள் காலத்தில் சிற்பங்கள் பாறைகளில் செதுக்கப் பெற்றுள்ளன. இக்காலச் சிற்பங்கள் மெலிந்த நீண்ட உடலமைப்போடும் பரந்த மார்பையும், ஒடுக்கமான இடையோடும் ஆபரண அலங்காரமின்றி மிகவும் எளிமையாகக் காட்டப்பட்டிருக்கும். முற்காலப் பாண்டியரின் சிற்பங்கள் இதே நேர்த்தியோடு சற்று வேறுபாட்டுடன் அகன்ற மார்பு, பருத்ததோள், சிறுத்தஇடை, சப்பையான மூக்கினைக் கொண்டும் காணப்பெறும். இதனைத் தொடர்ந்து சோழர்களின் காலச் சிற்பங்கள் மெல்லிய உடலமைப்பையும், மெலின இடையோடும், பட்டையான பூனூலைத் தரித்தும், வட்டமான முக அமைப்புடனும் சிரச்சக்கர பூ அலங்காரத்துடனும், அபரண அலங்காரங்களுடன் மூக்கின் நுனி அழகாக நீண்டவாறு உயிரோட்டத்துடன் நேர்த்தியாக சிற்பங்கள் அமைக்கப்பட்டன. பொதுவாக இக்காலகட்டச் சிற்பங்கள் ஆகமங்களை மையமிட்ட கரங்களும் ஆயுதங்களும் ஆடை அலங்காரங்களும் அமையப்பெற்றிருந்தன. பிற்காலப் பாண்டியர், விஜயநகரர் நாயக்கர் காலச் சிற்பங்களை நோக்கும் பொழுது வளர்ச்சி நிலையை சிற்பங்களிலையே காணமுடிகின்றது. உயர்ந்த சிற்பங்களாக, அதிக ஆபரண அலங்காரங்களுடன் நிமிர்ந்து பார்க்கும் அளவில் மிகப் பெரியதாக அமையப்பெற்றுள்ள கோயிலின் கருவறையைச் சுற்றியுள்ள தேவகோட்டங்களில் சிற்பங்களை அமைத்து வழிபாடு செய்யும் முறையானது சோழர் காலத்திலிருந்தே துவக்கம் பெற்றுள்ளது. முற்காலச் சோழர் கோயில்களில் இறையுருவம் தேவகோட்டத்திற்குள்ளும் அதனோடு தொடர்புடைய வேறு சிற்பங்கள் தேவகோட்டத்தின் இரு பக்கங்களிலும் வைக்கப்பட்டுள்ளன. இதற்கு உதாரணமாக புள்ளமங்கை பிரம்மபுரீஸ்வரர் கோயில் தேவகோட்டச் சிற்பத்தையும், சீனிவாசநல்லூர் குரங்குநாதர் கோயில் தேவகோட்டச் சிற்பங்களையும் குறிப்பிடலாம். பிற்காலப் பாண்டியர் காலக் கோயில்களான திருப்புனவாசல், மீமிசல். கோயில்களில் தேவகோட்டச் சிற்பங்கள் காணப்படுகின்றன.

சோழர்களின் கலைப்பாணியைப் பின்பற்றி வந்த பிற்காலப் பாண்டியர்களும் அவர்களைப் போலவே தேவகோட்டங்களில் கி.பி.12ம் நூற்றாண்டின் தொடக்கம் முதல் சிற்பங்களை அமைத்துள்ளனர். முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியரின் (கி.பி.1216-1235) எட்டாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டானது அருப்புக் கோட்டையிலுள்ள சுந்தரேஸ்வரர் கோயிலின் மேற்குப்புற தேவகோட்டத்தில் முதன் முதலில் லிங்கோத்தபவ மூர்த்தியின் சிற்பத்தையும்[1] இம்மன்னனின் 15-ம் ஆட்சியாண்டுக் கல்வெட்டானது இக்கோயிலின் வடக்குப்புறத் தேவகோட்டததில் துர்க்கையின் சிற்பத்தையும் அமைத்தார் எனக் குறிப்பிடுகின்றது.[2] இம்மன்னனைத் தொடர்ந்தவந்த பாண்டியர்களும் தேவகோட்டச் சிற்பங்களுக்கு முக்கியத்துவம் கொடுத்துள்ளனர். வடக்கூர், திருப்புனவாசல் மீமிசல், தீயத்தூர் போன்ற இடங்களில் வியாக்கியானத் தட்சிணாமூர்த்தியின் சிற்பம் காணப்படுகிறது. கருவறையின் மேற்புறத் தேவகோட்டத்தில் திருப்புனவாசலில் விஷ்ணுவும், ஆஞ்சநேயரும், மீமிசல் மற்றும் தீயத்தூரில் லிங்கோத்பவர் சிற்பமும் காணப்படுகின்றது. வடக்குப்

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

புறத்தேவகோட்டங்களில் திருப்புனவாசல் மற்றும் தீயத்தூரில் பிரம்மனும், மீமிசலில் பிரம்மனும், மீமிசலில் பிரம்மனும் துர்க்கையும் அமைக்கப்பட்டுள்ளனர்.

**தட்சிணாமூர்த்தி**

தட்சிணம் என்ற சொல் தெற்குத்திசையைக் குறிப்பதும் போல இச்சிற்பம் கருவறையின் தெற்குப்புறத் தேவகோட்டப் பகுதியில் தென்முகச் சிற்பமாக அமையப்பெற்றுள்ளது. தமிழ் இலக்கியங்களான புறநானூறு ஆல் அமர் கடவுள்[3] என்றும், சிலப்பதிகாரம் ஆல் அமர் செல்வன்[4] என்றும் குறிப்பிடுகின்றது.

தட்சிணாமூர்த்தியை வியாக்கியான தட்சிணாமூர்த்தி, ஞான தட்சிணாமூர்த்தி, யோக தட்சிணாமூர்த்தி, வீணாதர தட்சிணாமூர்தி என நான்கு வகையாகச் சுட்டுவர், யோகம், ஞானம், வீணாதரர் போன்ற தட்சிணாமூர்த்தியின் சிற்பங்கள் காஞ்சிகைலாசநாதர் கோயில், திருவெற்றியூர், சுசீந்திரம், காவிரிப்பாக்கம் சிதம்பரம் நடராஜர் கோயில், ஆலங்குடியிலும் காணப்படுகின்றது.

**வியாக்கியானத் தட்சிணாமூர்த்தி**

சனகர், சனந்தனர், சணாதனர், சனத்குமார் போன்ற முனிவர்கள் வேதத்தின் பொருள் விளங்காமல் இறைவனை நோக்கித் தவம் புரிந்தநிலையில் இறைவன் வேதாகமங்களின் நுட்பங்களைக் கற்பித்த வடிவமாகப் புராணங்கள் மற்றும் தேவாரங்களில் இத்தட்சிணா மூர்த்தியைப் பற்றி குறிப்பிடப்பெற்றுள்ளன.[5]

**ஆகமங்கள்**

ஆகமுறைப்படி சிற்பரத்தினம் இச்சிற்பத்தைப் பற்றி குறிப்பிடுகையில் நான்கு கரங்களுடன் வலதுகால் தொங்கவிடப்பட்டும், இடதுகால் வலது காலின் தொடையின் மீது கிடத்தப்பட்ட நிலையிலும், முனிவர்கள் சூழ அமர்ந்தவாறு காட்டப்பட்டிருக்கும் என்றும்[6] உத்திரகாமிகாகமம் இச்சிற்பத்தின் கண்ணின் பார்வை வளைந்ததாக இருக்க வேண்டுமென்றும்,[7] ரௌரவ ஆகமம் மூன்று கண், நான்கு கரம், அமைதியான முகத்தோற்றம் கொண்டதாகவும், அஜிதாகமம் சுருண்டகேசம், பாம்பு அணிகலன்களையும், ருத்ராட்ச மாலையினையும் கொண்டு முனிவர்கள் சூழ அமர்ந்தவாறு காட்டப்பட்டிருக்கும் எனக் குறிப்பிடுகின்றது. மேலும் இத்தட்சிணாமூர்த்தியைச் சுற்றி அமர்ந்துள்ள முனிவர்களின் எண்ணிக்கையைப் பற்றி ஆகமங்கள் குறிப்பிடுகையில் காமிக்காகமம் ஏழு முனிவர்களைப் பற்றியும் காரணாகமம் நான்கு முனிவர்களைப் பற்றியும், அம்சுமத்பேதாகவும் சப்தரிஷிகள் என ஏழு முனிவர்களைப் பற்றியும்[8] இவ்வட்டாரக் கோயில்களில் சோழர் கலைப் பாணியைக் கொண்ட வடக்கூர் கோயிலின் தட்சிணாமூர்த்தியின் சிற்பமே முதன்மையாகக் கருதப்படுகின்றது.

திருப்புனவாசல் கோயிலுள்ள தட்சிணாமூர்த்தியின் சிற்பமானது வியாக்கியான நிலையில் ஆபரணங்கள் அதிகமாகக் காட்டப்பட்டாமல் கம்பீரமான தோற்றத்துடன் காணப்படுகின்றது. கழுத்தில் ருத்ராக்க மாலையையும், நான்கு கரங்கள் மற்றும் அபயமுத்திரையையும் முன் இடதுக்கரம் தொங்கவிடப்பட்டவாறும் பின் வலது மற்றும் இடதுக்கரம் அக்மாலையையும் சர்பத்தை தாங்கியவாறும் அமைக்கப்பெற்றுள்ளது. காதில் மகரகுண்டலமும், தலையில் ஜடாபாரத்தின் நடுவே கங்கை காட்டப்பட்டவாறும் வலதுகால் முயலகன் மீதும் இடதுக்கால் பீடத்தின் மீது ஊன்றப்பட்ட நிலையில் உத்குடிகாசனமாகவும் காரணாகமத்தின்படி நான்கு முனிவர்கள் சூழ புலித்தோலின் மீது அமர்ந்தணாறு காட்டப்பட்டுள்ளது. இச்சிற்பம் கி.பி.12ம் நூற்றாண்டைச் சேர்ந்த சிற்பமாக உள்ளது. திருவாவடுதுறை ஆதீனத்தவர்களின் தட்சிணாமூர்த்தி என்னும் நூலில் இக்கோயில் சிற்பத்தின் எளிமையைக் குறிப்பிட்டுள்ளனர்.[9] இதைப்போல மீமிசல், வடக்கூர், தீயத்தூரிலுள்ள தட்சிணாமூர்த்தி சிற்பங்கள் மற்றக் கோயில்களில் உள்ளது போலவே தலையில் ஜடாபாரத்தையும், நான்கு கரங்களோடும் இடதுக்கால் வலதுக்காலின் தொடையின் மீது கிடத்தப்பட்டவாறும் வலதுக்கால் அபஸ்மாரத்தின் மீது ஊன்றப்பட்டு வீராசனமாக அமைந்துள்ளது. இதில் மீமிசல் கோயில் தட்சிணாமூர்த்தி சிற்பத்தின் மேல் ஆலமரமும்

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

காட்டப்பட்டவாறு முனிவர்களும் காட்டப்பட்டுள்ளனர். இதில் தீயத்தூர் கோயில் தட்சிணாமூர்த்தியின் சிற்பமானது தற்போதுள்ள் கலைப்பாணியில் காணப்படுகின்றது.

**விஷ்ணு**

திருப்புனவாசல் மற்றும் மீமிசல் கோயில்களிலுள்ள கருவறையின் மேற்குப்புறத் தேவகோட்டத்தில் விஷ்ணு மற்றும் ஆஞ்சநேயரின் சிற்பமும், மீமிசலில இலிங்கோத்பவரின் சிற்பமும் காணப்படுகின்றன. மும்மூர்த்திகளில் ஒருவரான விஷ்ணு காக்கும் தொழிலைப் புரிபவர் எனப் புராணங்கள் கூறுகின்றன. சிவன் கோயில்களில் மேற்குப் புறம் விஷ்ணுவிற்கும், வடக்குப்புறம் பிரம்மாவிற்கும் என தேவ கோட்டங்கள் அமைக்கப்படுவதுண்டு. இச்சிற்பங்கள் சோழர் காலத்திலிருந்துதான் கோட்டப்படிமங்களாக அமையப் பெற்றுள்ளன. இம்மேற்குப்புறத் தேவகோட்டத்தில் சிவனின் அணுக்கிரக படிமங்களும் இடம்பெறுகின்றன. பொதுவாக சைவக் கோயில்களில் இடம்பெறும் விஷ்ணுவின் சிற்பமானது சைவத்திற்கும், வைணவத்திற்கும் இடையேயுள்ள பிரிவினைைப் போக்குவதாகவும் இவ்விரு சமயங்களும் சோழர்களின் காலத்தில் பின்பற்றப்பட்டதைத் தொடர்ந்து சைவக்கோயிலின் மேற்குப்புறத் தேவகோட்டத்தில் விஷ்ணுவின் சிற்பத்தை அமைத்துள்ளனர். இதைப்போல பிற்காலப் பாண்டியரும் இக்கலைப் பாணியை பின்பற்றினர் என்பதற்குச் சான்றாக திருப்புனவாசல் கோயிலின் மேற்குப்புறத் தேவகோட்டத்தில் காணப்படும் விஷ்ணுவின் சிற்பம் ஸ்தானமாக நின்ற நிலையில் நான்கு கரங்களைக் கொண்டு பின் வலது மற்றும் இடது கரத்தில் சங்கு மற்றும் சக்கரத்தைத் தாங்கியும், முன் வலதுகரம் அபய முத்திரையோடும், இடதுக்கரம் ஊருஹஸ்துமாகவும் தோளில் ஸ்கந்தமாலாவும், தோள்வளை, கடகவளை தரித்தும், தலை கேசபந்தத்தால் அலங்கரிப்பது போலக் காட்டப்பட்டுள்ளது. கழுத்தில் வானமாலா, கண்டிகை சரப்பளி போன்ற ஆபரணங்களைக் கொண்டும் மார்பில் முப்புரி நூலினையும் இடையில் உதரபந்தத்தையும் தரித்துக் காணப்படுகின்றது.

**அனுமன்**

தமிழகக் கலையில் ஏறக்குறைய கி.பி.10-ம் நூற்றாண்டிலிருந்து வைணவக் குழுபடிமத்தில் ஒருவராக இடம்பெற்ற அனுமன் பின்னர் தனிக்கடவுளாக உயர்த்தப்பட்டது. இச்சிற்பம் சோழர் கலைப்பாணியில் விஷ்ணுவிற்கு அருகில் அமைப்பது வழக்கமாக இருந்துள்ளது. இதைப் போல் பிற்காலப் பாண்டியர் கலைப் பாணியிலும் இம்முறை பின்பற்றப்பட்டுள்ளதை இக்கோயிலின் மூலம் அறியமுடிகின்றன. இச்சிற்பம் நின்ற நிலையில் இடதுக்கால் பீடத்தின் மீத ஊன்றப்பட்ட நிலையிலும், வலது கால் சற்று முன் முழங்களில் வளைந்தது போலவும், பின் பாதம் சற்று குஞ்சிதமாக தூக்கிய நிலையிலும் இரண்டு கரங்களைக் கொண்டு அஞ்சலி முத்திரையேடும் கரங்களில் கடக வளைகளையும் கழுத்தில் ஆபரணங்களும் தலை கீரிட மகுடத்தால் அலங்கரிக்கப்பட்டும் காணப்படுகின்றது.

**இலிங்கோத்பவர்**

இலிங்கத்தின் மையப்பகுதியில் புடைப்பாக ருத்திரனின் சிற்பம் சந்திரசேகரின் வடிவில் சித்தரிக்கப்பட்டுள்ளன. இச்சிற்பம் இலிங்கத்திலிருந்து தோற்றம் பெற்றமையால் இலிங்கோத்பவர் என்று புராணங்களும் இலக்கியங்களும் குறிப்பிடுகின்றன. காஞ்சிபுரம் கைலாசநாதர் கோயிலுள்ள இலிங்கோத்பாவரின் சிற்பமானது பல்லவரின் கலைக்குச் சிறந்த எடுத்துக்காட்டாகும். இதைப்போல பாண்டியர் குடைவரையான திருமெய்யம், பிள்ளையார்பட்டி போன்ற இடங்களிலும் சோழர்காலக் கோயில்களில் தேவகோட்டச் சிற்பங்களாகக் காணப்படுகின்றன. கீழப்பழுவவூர், புள்ளமங்கை, திருவாவடுதுறை, தஞ்சாவூர், திருச்செங்கொட்டங்குடி, நாகை, சோழபுரம், தாராசுரம், திருவக்கரைப் போன்ற இடங்களிலும் தேவகோட்டச் சிற்பங்களாக காணப்படுகின்றன. கீழப்பழுவவூர், புள்ளமங்கை, திருவாவடுதுறை, தஞ்சாவூர், திருச்செங்காட்டங்குடி, நாகை, சோழபுரம், தாராசுரம், திருவக்கரைப் போன்ற இடங்களிலும் தேவகோட்டச் சிற்பங்களாக காணப்படுகின்றது. குறிப்பாக முதலாம் ஆதித்தன் காலம் வரை கருவறையின் மேற்குப்புறத் தேவகோட்டத்தில் அர்த்தநாரியின் சிற்பம்

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

இடம்பெற்றுள்ளது. முதலாம்பராந்தனின் காலத்திலிருந்து இலிங்கோத்பவரின் சிற்பமானது தேவகோட்டங்களில் இடம் பெற்றுள்ளது.[10] மேலும் இலிங்கத்தில் தோன்றும் சிவனை இலிங்கபுராணத் தேவர் என தமிழ் கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன என்பதை வெங்கட்ராமன் தனது நூலில் குறிப்பிட்டுள்ளார்.[11] இச்சிற்பத்தை இலிங்கப்புராண நாயகர் என்றும் பிறைசூடான் என்றும் கோபிநாதராவ் தனது நூலின் குறிப்பிட்டுள்ளார்.[12] இச்சிற்பத்தின் புராணப்பின்னணியைப் பற்றி சிவபுராணம், இலிங்கபுராணம், கந்தபுராணம், பெரியபுராணம், கூர்மபுராணம் போன்றவற்றில் குறிப்பிடப்பெற்றுள்ளன.

**புராணப்பின்னனி**

விஷ்ணு யுகத்தின் முடிவில் நித்திரையில் ஆழ்ந்திருந்த போது பிரம்மன் விஷ்ணுவின் செவிகளுக்கு அருகில் பிரபஞ்சத்தைப் படைக்கும் தொழிலைப்புரியும் நான் தான் பெரியவன் என உரைக்க அனந்தசயனனாகிய விஷ்ணு யோக நித்திரையிலிருந்து மீண்டு பிரபஞ்சத்தைக் காக்கும் தொழிலைப்புரியும் நான்தான் பெரியவன் என இருவரிடமும் மோதல் ஏற்பட இருவருக்கும் இடையில் சிவன் பேரொளியின் பிழம்பாகவானுக்கும், பூமிக்கும், இடைவெளியில்லாத அக்னித்தூண் வடிவில் உயர்ந்து நிற்கும் இவ்வடிவத்தின் அடியினையும், முடியினையும் காண்போரே பெரியவர் என சிவன் உரைக்க அதே வேளையில் இவ்வடிவத்தின் தலைப்பகுதியைக் காண்பதற்காகப் பிரம்மன் அன்னப் பறவையாக மேல் நோக்கி பறந்தும், அடியினைக் காண்பதற்காக விஷ்ணுவராக பிரம்மன் வடிவில் பூமியைத் துளைத்துக் கொண்டு கீழ் நோக்கியும் சென்றனர்.

காலங்கள் கழிந்தும் தீப்பிழம்பின் அடியினையும் முடியினையும் காண இயலாத நிலையில் பிரம்மன் மேல் நோக்கி பறந்துக் கொண்டிருந்த போது மேலிருந்து கீழ்நோக்கி சென்று கொண்டிருந்த கேடகியை கண்ட பிரம்மன் எங்கிருந்து வருகிறாய் என வினவ இலிங்கத்தின் சிரசிலிருந்து வருகிறேன் எனக் கூறியதும் பிரம்மன் கேடகியிடம் தனக்காக இத்தீப்பிழம்பின் சிரசை நான் கண்டவிட்டேன் எனப் பொய்யுரைக்க வேண்டும் என்றதும் கேடகியும் அதைப்போல பொய்யுரைக்க இருவரும் ருத்ரனின் கோபத்திற்கு ஆளானர். உடனே ருத்திரன் பிரம்மனுக்கென்று தனிக்கோயில் கூடாதென்றும், கேடகியைத் தமது பூஜையில் சேர்க்கப்படாதென்றும் கட்டளையிட்டார். விஷ்ணுவை பாராட்டி உமக்கு எங்கும் ஆலயங்கள் எழுப்பப்பட்டு வழிபாடு நடத்தப்படும் எனக் கூறினார். இதன்பின்பு உங்கள் இருவரையும் விட தானேப் பெரியவன் என நீங்கள் உணரவேண்டும் என்பதற்காகவே இப்படி ஒரு செயலை செய்தேன் என ருத்திரன் கூறியதைக் கேட்டு இருவரும் தங்களது தவறை திருத்திக் கொண்டனர். இத்தகைய நிகழ்வு நடந்தேறிய தலம் திருவண்ணாமலை ஆகும்.

சுப்ரபேதாகமம், அம்கமத்பேதாகமம், காரணாகமம் போன்ற ஆகமங்கள் இச்சிற்பத்தின் படிமக்கலைக் கூறுகளைப் பற்றியும் பிரம்மன் அன்னப் பறவையாகவும், விஷ்ணு வராகமாகவும் காட்டப்படவேண்டும் என்றும் அல்லது பிரம்மனும், விஷ்ணுவும் இலிங்கத்தின் புடைப்பாகக் கீழேயும், மேலேயும் அஞ்சலி முத்திரையுடன் காட்டப்பட வேண்டும் என்றும் ஆகமங்கள் குறிப்பிடுகின்றன. இவ்வட்டாரத்தில் பிற்கால பாண்டியர் கலைப்பாணியான மீமிசல் அர்ச்சனவனேஸவரர் கோயிலின் மேற்குப்புறத் தேவகோட்டத்தில் இலிங்கோத்பவரின் சிற்பம் அமையப்பெற்றுள்ளது. இச்சிற்பத்தில் இலிங்கத்தின் நடுவே நான்கு கரங்களுடன் நின்றநிலையில் பாதமும் தலைப்பகுதியும் பாதிஅளவு சற்று மறைக்கப்பட்டவாறும் காட்டப்பட்டுள்ளது. பின்வலது மற்றும் இடதுக் கரம் மான் மற்றும் மலுவினையும், முன்வலது மற்றும் இடதுக்கரம் அபயம் மற்றும் வரதமுத்திரையினை தாங்கியவாறு காட்டப்பட்டுள்ளது. இலிங்கத்தில் வலதுபுறத்தின் மேலே அன்னம் பறப்பது போன்றும், இடது புறத்தின் கீழேவராகம் பூமியைத் துளைப்பதும் போன்றும் காட்டப்பட்டுள்ளது. தீயத்தூரிலுள்ள இலிங்கோத்பவரின் சிற்பமானது தற்போதையக் கலைப்பாணியை ஒத்தவாறு பிரதிட்டை செய்யப்பட்டதாக அமையப் பெற்றுள்ளது.

**பிரம்மன்**

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019
Available at: www.ijtlls.com

திருப்புனவாசல் கோயிலில் கருவறையின் வடக்குப் புறத் தேவகோட்டத்தில் பிரம்மனும், மீமிசல் அர்ச்சுனவனேஸ்வரர் கோயிலில் கருவறையின் வடக்குப்புறத் தேவகோட்டத்தில் பிரம்மன் மற்றும் துர்க்கையின் சிற்பமும் காணப்படுகின்றன. இதனைக் கீழ்க்கண்டவாறு புராணங்களோடும், படிமக்கலை கூறுகளோடும் விளக்கப்படுகின்றன. பிரம்மனுக்கென்றும் தனிச் சமயங்களோ, கோயில்களோ தமிழகத்தில் வளர்ச்சி பெறவில்லை என்றாலும் படைப்புத் தொழிலை புரியும் தனிக் கடவுளாக சைவக் கோயில்களில் மும்மூர்த்திகளில் ஒருவராக கருவறையின் வடக்குப்புத் தேவகோட்டங்களில் இச்சிற்பம் இடம்பெறுகிறது. காஞ்சி கைலாசநாதர் கோயிலில் பிரம்மனின் சிற்பத்திற்கு அருகில் அன்னப்பறவை காட்டப்பட்டவாறும் அய்ஹோளாவில் உள்ள பிரம்மாவின் சிற்பம் பத்மாசனத்தில் அமர்ந்தவாறும் மகாபலிபுரத்தில் திருமூர்த்திக் குடைவரையில் சமபங்க நிலையில் அமர்ந்தவாறும் காட்டப்பட்டுள்ளது[13] பிரம்மனின் தேவியர்களாக சாவித்திரி மற்றும் சரஸ்வதியைப் பற்றி குறிப்பிடுவதோடு இவ்வகையான சிற்பங்கள் தமிழகத்தில் கிடைப்பது அரிதாகவே காணப்படுகின்றது. இலக்கியங்களில் பிரம்மனை அயன், நான்முகன், சதுர்முகன் என்றும் இளங்கோவடிகள் வேதமுதல்வன், மறைமுதல்வன்[14] என்றும் கலித்தொகை உலகைப் படைத்தவன்[15] என்றும் பெரும்பாணாற்றுப்படை நான்முகன்16 என்றும் குறிப்பிடப்பெற்றுள்ளது.

இச்சிற்பத்தைப் பற்றி ஆகமங்கள் குறிப்பிடுகையில் ரூபமந்தனம் பிரம்மாவிற்கு நான்கு முகங்களையும், ஒவ்வொரு முகமும் தனித்தனி யுகங்களுக்கும் மற்றும் நான்கு வருணங்களுக்கும் உரியது எனக் குறிப்பிடுகின்றது. சிற்பரத்தினம் பத்மபீடத்தில் நின்ற நிலையிலும், தலையில் சடாமகுடத்தையும் தரித்துக் காணப்படுவார் என்றும் ஸ்ரீதத்துவநிதி மார்பில் முப்புரி நூலினையும் வஸ்திரப் பட்டாடையையும், கீரிடமகுடத்தைக் கொண்டு காணப்படுவார் என்றும், சுப்ரபேதாகமம் பிரம்மாயின் தேவியர்களாக சரஸ்வதியையும், சாவித்திரியையும் குறிப்பிடுகின்றது.

பிரம்மன் ஹிரண்யகர்பத்திலிருந்து தோன்றினார் என்று புராணங்கள் கூறுகின்றன. ஹிரண்யம் என்பது பொன்னையும், கர்ப்பம் என்பது கருவையும் குறிப்பதாகும். பிரம்மன் விஷ்ணுவின் நாபிக்கமலத்திலருந்து வந்த தாமரை மலரின் மீது தோன்றியவர் என்றும், பொன்முட்டையிலிருந்து தோன்றியவர் என்றும் புராணங்களில் குறிப்பிடுகின்றன.

இவ்வட்டாரக் கோயில்களில் காணப்படும் பிரம்மனின் சிற்பமானது வேறுபாடு இல்லாமல் படிமக்ககலைக்கூறுகள் ஒரே மாதிரியாகவும் ஒரே காலத்தைச் சார்ந்ததாகவும் அமையப்பெற்றுள்ளன. தீயத்தூரிலுள்ள பிரம்மனின் சிற்பம் மட்டும் தற்போதைய கலையமைப்பைக் கொண்டு காணப்படுகின்றது. மேலும் திருப்புனவாசல் மீமிசலில் உள்ள பிரம்மனின் சிற்பங்கள் நின்ற நிலையில் நான்கு கரங்களுடனும், நான்கு தலைகளுடனும் காட்டப்பட்டுள்ளன. தலையை ஜடாமகுடங்கள் அலங்கரிக்கின்றன. பின் வலது மற்றும் இடது கரம் அக்கமாலையையும், கமண்டலத்தையும் தாங்கியவாறு முன்வலது மற்றும் இடது கரம் அபய, வரத முத்திரையைக் கொண்டும், கழுத்தில் கண்டிகைச் சரப்பளி, சவடி, மார்பில் யக்ஞோபவிதமும், வயிற்றில் உதரபந்தமும் இடையில் தாரகைச்சும்மையும் பீதாம்பர ஆடையைத் தரித்தும் காணப்படுகின்றது. தோள், மாலை, தோள்வளை, கடகவளை போன்ற ஆபரணங்களும் இச்சிற்பத்தை அலங்கரிக்கின்றன. இச்சிற்பங்கள் பிற்காலப் பாண்டியர்களின் கலைப்பாணியைக் கொண்டு அமையப்பெற்றுள்ளன.

**துர்க்கை**

சிந்துச் சமவெளி நாகரிகக் காலந்தொட்டே தாய்த் தெய்வ வழிபாடு மக்களின் வழக்கத்திலிருந்து வந்ததற்கான சுடுமண் படிமங்கள் அகழாய்வுச் சான்றுகளின் மூலம் கிடைக்கப்பெற்றுள்ளன17. இத்தாய் தெய்வ வழிபாடே பெண் தெய்வ வழிபாடாகவும் கொற்றவையின் வழிபாடாகவும் பழமையான வழிபாடாகவும், தோற்றம் பெற்றுள்ளன. சங்க காலத்தில் பாலை நிலத் தெய்வமாக வணங்கப்பட்ட கொற்றவை பிற்காலத்தில் துர்க்கை என அழைக்கப்பட்டுள்ளது. இக்கொற்றவை காட்டில் வாழும் மறவர்களால் போற்றப்படுபடுவள் என்று அகநானூறும், கானமர் செல்வி[18] என்று திருமுருகாற்றுப்படையும், வெற்றிவேல் போர்க்

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

கொற்றவை என்று குறுந்தொகையும், சூலப்படையைத் தாங்கியசூலி என்றும் கொற்றவையின் கோட்டம் காட்டிலே அமைந்திருக்குமென பட்டினப்பாலையும் குறிப்பிடுகின்றன.

சிலப்பதிகாரத்தில் மதுரைக் காண்டம் வேட்டுவவரி என்ற காதையில் கொற்றவையை அமரி, குமரி, கவுரி, சமரி என்னும் பெயர்களில் அழைக்கப்படுவதையும் காணலாம். கலைமானை வாகனமாகக் கொண்டதனால் பாய்கலைப்பாவை எனவும் கூறப்படுகிறாள். மேலும் கொற்றவை எருமைத் தலையின் மீது நிற்கும் அமைப்பானது காணத்தெருமைக் கடுந்தலை மேல் நின்றாயாய் என்னும் வரிகளின் மூலம் குறிப்பிடப்பெற்றுள்ளது[19].

கொற்றவையின் புராணப் பின்னனியை நோக்கும் போது மகின் என்ற அசுரன் சிவனை நினைத்து அனைவரையும் விடத் தான் மட்டுமே பெரியவன் என்றும் மரணமில்லாத வரம் வேண்டும் என்றும் ஒரு பெண்ணினால் மட்டுமே தமக்கு அழிவு நேரிட வேண்டும் என்னும் வரங்களைக் கேட்டுக் கடுந்தவம் புரிந்தான். சிவனிடம் வேண்டிய வரங்களைப்பெற்று தேவர்களைத் துன்புறுத்தினான். இதனால் தேவர்கள் கோபமடைந்து சிவனிடம் கூறவும் சிவன் ஒரு பெண்ணின் முக அமைப்பை உருவாக்கி அப்பெண்ணின் உருவமைப்பிற்கு விஷ்ணு கரங்களைக் கொடுத்து, யமன் தலைமுடியைக் கொடுத்தும் அனைத்துத் தேவர்களிடமிருந்து ஆயுதங்களைப்பெற்று ஒரு வீரப்பெண்ணாக உருவெடுத்து மகிசனைக் கொன்று மகிசாசுரமர்த்தினியாகவும் மகினின் தலையின் மீது நின்றநிலையில் துர்க்கை எனவும் புராணங்களில் குறிப்பிடப்பெற்றுள்ளன. காசியப்பசில்பசாஸ்திரம் துர்க்கையின் சிற்பம் நான்கு கரங்களைக் கொண்டு பத்மபீடத்தில் நின்றநிலையில் காட்டப்படவேண்டுமெனவும்[20] சில்பரத்தினம் அருகம் புல்லின் இதழ் போன்ற கருமை நிறமுள்ளவள் என்றும் எருமைத் தலையின் மேல் நின்ற நிலையில் எட்டுக் கரங்களைக் கொண்டு அமைக்கப்பட வேண்டும் எனவும் குறிப்பிடுகின்றன.

மாமல்லபுரம் திரௌபதி ரதத்தின் கருவறையின் பின்புறச் சுவர் பகுதியில்பரிவாரங்கள் சூழ நின்ற கோலத்தில் துர்க்கையின் புடைப்புச் சிற்பம் இடம்பெற்றுள்ளது[21] விசயாலயச் சோழன் தஞ்சையில் துர்க்கைக்கு நிசும் பசூதனி என்னும் பெயரில் கோயில் ஒன்றை கட்டியுள்ளான் என்பதைத் திருவாலங்காட்டுச் செப்பேடுகள் குறிப்பிடுகின்றன[22]. முற்காலச் சோழர் கல்வெட்டுகளில் சில காடுகாள் என்றும் துர்க்கா[23] என்றும் புள்ளுலூர் கோயிலில் துர்க்கைக்கு சிவபிராமணர் ஆராதனை செய்ததையும்[24], உத்திரமேரூரில் துர்க்கைக்கு விளக்கெரித்தல் செலவினங்களுக்காக நிலம் வழங்கப்பட்டதையும் கல்வெட்டுக்கள் குறிப்பிடுகின்றன. சேர மன்னர் போரில் ஈடுபடுவதற்கு முன் துர்க்கையை வழிபட்டுச் செல்வதென்பது மரபாக இருந்துள்ளது என்பதை இலக்கியங்களின் மூலம் அறியமுடிகின்றன. வங்கான மக்கள் காளியாகத் துர்க்கையை வழிபட்டுள்ளனர் என்பது குறிப்பிடத்தக்கது. பொதுவாக துர்க்கை மகினை அழிக்கும் சிற்பத் தொகுதியாகவே பாறைகளில் சித்தரிக்கப்பட்டுள்ளன[25].

இவ்வட்டாரத்தில் மீமிசல் அர்ச்சுனவனேசுவரர் கோயிலில் மட்டுமே கருவறையில் வடக்குப்புறத் தேவகோட்டத்தில் இச்சிற்பம் எருமைத் தலையின் மீது ஸ்தானகமாக நின்றநிலையில் நான்கு கரங்களைக் கொண்டுக் காணப்படுகின்றது. பின் வலது மற்றும் இடது கரத்தில சங்குச்சக்கரத்தையும், வலது மற்றும் இடது கரத்தில் அபய, வரத முத்திரையினைக் கொண்டு விஷ்ணு துர்க்கையாகக் காட்டப்பட்டுள்ளது. தலையில் கரண்ட மகுடமும், கழுத்தில் கண்டிகை, சரப்பளி, மர்புக்கச்சையுடனும், தோள்மாலை, தோள்வலை, கரங்களில் கடக வளையையும், இடையில் தாரகைச்சும்மையோடும், பீதாம்பர ஆடையுடனும், கால்களில் காப்புகளுடனும் அலங்கரிக்கப்பட்டுள்ளது. இச்சிற்பம் பிற்காலப் பாண்டியர்களின் கலைப்பாணியைக் கொண்டு அமையப்பெற்றுள்ளது.

**முடிவுரை**

தனது சிந்தனை ஓட்டத்தில் புராணங்களையும் இதிகாசங்களையும் எழுதிய மனிதன் கடவுளர்களை நேரில் கண்டதும் போலும், காண்பது போலும் எடுத்துரைத்துள்ளனர். இவற்றைக் கற்பனை நயமா இல்லை நம்பிக்கையின் வெளிப்பாடா என சிந்திக்கத்

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

தூண்டுவனவாக அமைந்துவிடுகின்றன. இஸ்லாமிய மதத்திற்கென குரானும், கிறித்துவ மதத்திற்கென புனிதவேதாகமும், இந்து மதத்திற்கென் பகவத்கீதையும் என ஒவ்வொரு மத்தினரைப் பற்றி அறிவதற்கும் அவர்களின் கடவுள் கோட்பாடுகளைப் பற்றித் தெரிந்து கொள்வதற்கும் இந்நூல்கள் முக்கியத்துவம் பெறுகின்றன. இந்து மதத்தினரிடையே உருவான சமயக் கோட்பாடுகள், சமணம், பௌத்தம், சைவம், வைணவச் சமயங்கள் தோற்றம் பெற்றன. இவற்றுள் சமணமும், பௌத்தமும் வடஇந்தியா முழுவதிலும் சைவ மற்றும் வைணவம் தென்னிந்தியா முழுவதும் பின்பற்றப்படுகின்றன. இச்சமயங்களைத் தென்னிந்தியாவில் நாயன்மார்களாலும் ஆழ்வார்களாலும் வளர்க்கப்பட்டதோடு மன்னர்களும் சைவ வைணவ சமயங்களைப் பின்பற்றி சிவனுக்கும் விஷ்ணுவுக்கும் கோயில்களை எடுப்பித்துள்ளனர். இவ்வாறு உருவாக்கப்பட்ட கோயில்களின் சான்றுகள் தமிழக வரலாற்றிற்கு முக்கியத்துவம் பெறுகின்றன. இதற்கு ஆவுடையார்கோயில் வட்டாரக் கோயில்களும் சிறந்த எடுத்துக்காட்டாக அமையப் பெறுகின்றன.

**நூற்பாட்டியல்**

1. Krishnasastri.H,South Indian Image of God and Goddesses, New Delhi,1980
2. தங்கவேல். கோ, இந்தயிக் கலை வரலாறு, புதுடெல்லி, 1997.
3. சுப்பிரமணிய சாஸ்திரி, சரஸ்வதிய சித்ரகர்ம சாஸ்திரம், வாணி விலாசம், திருவரங்கம், 1960.
4. சுப்பிரமணிய சாஸ்திரி. எஸ்.என்.,ஸ்ரீ தத்துவநிதி, சரஸ்வதி மகால் நூலகம், தஞ்சாவூர், 1964-66.
5. சுந்தரமூர்த்தி. மா, தமிழகக் கோயிற் கலைகள், சென்னை, 1976.
6. தேவநாதச்சாரியார், சில்பரெத்தினம், சரஸ்வதி மகால் நூலகம், தஞ்சாவூர், 1961.
7. சோமசுந்தரம் பிள்ளை. ஜே.எம், சோழர் கோயிற் பணிகள், ஆசரியர் நூற்பதிப்பகம், சென்னை, 1950.
8. நடராஜன். எஸ், ஆலயங்களும் ஆகமங்களும், சென்னை, 1989.
9. பரஞ்சோதி முனிவர், திருவிளையாடற் புராணம், இரண்டாம் பதிப்பு, கழக வெளியீடு, சென்னை, 1979.
10. சீனிவாசன். கே.ஆர், தென்னிந்தியக் கோயில்கள், நேஷனல் புக் டிரஸ்ட் ஆப் இந்தியா, புதுடெல்லி, 1966.
11. Agni Purana, Anandasrama (ed.) Sanskrit Series, Poona,1900.
12. Aryana, K.C., Hanuman in Indian Art and Mythology, Delhi,1979.
13. பாலசுப்பிரமணியன். கு.வெ, கலித்தொகை, நியூ செஞ்சரி புக் ஹவுஸ், சென்னை, 2004.
14. பாலசுப்பிரமணியன், குடவாயில், தமிழகக் கோயில் கலை மரபு, சரஸ்வதி மகால் நூலகம், தஞ்சாவூர், 2005.
15. பாலசுப்பிரமணியன். எஸ்.ஆர், சோழர் கலைப்பாணி, சென்னை, 1946.
16. பாலசுப்பிரமணியன். எஸ்.ஆர்., முற்காலச் சோழர் கலையும் சிற்பமும், சென்னை, 1966.
17. நாகசுவாமி, இரா.சந்தரமூர்த்தி, தமிழகக் கோயிற் கலைகள் தமிழ்நாடு அரசுத் தொல்பொருள் ஆய்வுத்துறை, சென்னை, 1963, சரஸ்வதி மகால் நூலகம், தஞ்சாவூர், 2005.
18. Banerjee, J.N., Devlopment of Hindu Iconography, Calcutta,1956.
19. Barrett Douglas., Early Chola Architecture and Sculpture, Faber & Raber Ltd., London, 1974.

E-ISSN: 2581-7140

Vol. 2: Issue - 1, July 2019

Available at: www.ijtlls.com

20. David Kinsley, Hindu Goddess Visons of the Divine feminine in the Hindu Religious, Chennai,1996.
21. சிவமணி. எஸ், திருக்கோயில்களும் சைவத் திருமுறைகளும், சென்னை, 2007.
22. Gopinatha Rao., T.A.. Elements of Hindu Iconography Vol.I & II, Motilal Banarsidas,Madras,1914, Chennai, 1996.
23. Kalpana Desai, Iconography of Vishnu, New Delhi, 1973.
24. Kramrisch, Stella, The Hindu Temple(2vols) Motilal Banarsidas, New Delhi, 1976-1980.
25. துளசி இராமசாமி, தமிழகக் கலைச் செல்வங்கள், சென்னை, 1990.
26. Shulman David, Tamil Temple Myths, Princeton University press, New Jersey, 1989.
27. விஷ்ணு புராணம், பிரேமா பிரசுரம், சென்னை, 1988.
28. Silapadikaram, U.V.Swaminatha Iyer(ed.,) Madras, 1947.
29. Urmila, Khajuraho, Sculptures and their significance, Delhi, 1964.
30. Vishudharmottara Purana, Gaikwad Oriental Series, Barada, 1958.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

# ஆற்றுப்படை இலக்கியங்களில் இயற்கையின் சிறப்பு

# The Uniqueness of Nature in 'Aatrupadai' Literature

**பொ.சிவசங்கரி,** ஆய்வியல் நிறைஞர்,
பாரதிதாசன் உயராய்வு மையம், பாரதிதாசன் பல்கலைக்கழகம், திருச்சிராப்பள்ளி - 24

## Abstract

*In the article we can see the importance of nature described in Aatrupadai Literature one of the "Pathupattu" collection in sangam literature. New ideas about the harmony between nature and people of Sangam Period are also been described in the paper. Imageries about sun, rain, land, flower and mountains by the sangam poets were also pointed out with noted evidences. Hence, this paper unfolds the significance and role of nature in the chosen domain area.*

**Keywords:** Aatrupadai Books, Nature, Importance of Nature in 'Aatrupadai' Literature

**முன்னுரை**

இயற்கையே இலக்கியங்களின் முதல் பாடுபொருளாக அமைகின்றது. கற்பனைக்கும் உவமைக்கும் நிலைக்களனாக இயற்கையின் தனித்துவத்தையும் மேன்மையையும் முழுமையாகக் கொண்டதாக முதற்பொருளும் கருப்பொருட்களும் விளங்குகின்றன.

மலை, காடு. வயல், கடல், மணல் என்பன ஐந்தும் இயற்கைச் சூழலைத் தீர்மானிக்கும் இன்றியமையாத ஐந்து நிலப்பிரிவுகளாக அமைகின்றன. இவை ஐந்தும் சேர்ந்தவை நிலம் என ஒரே பூதமாகி நின்றன. ஐம்பூதங்களில் தீ, நீர், காற்று, ஆகாயம் ஆகிய நான்கு பூதங்களும் ஐம்பூதங்களின் இயக்கமே இயற்கையைக் கட்டுப்படுத்துகின்றன.ஆற்றுப்படை இலக்கியங்களில் காணப்படும் இயற்கையின் சிறப்புகளை ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**இயற்கை சொற்பொருள் விளக்கம்**

"இயற்கை" என்ற சொல் பண்டு இயல்பு என்னும் பொருளில் இடம்பெற்றதாகக் தெரிகின்றது. **"இயற்கைப் பொருளை இற்றெனக் கிளத்தல்"** என்னும் தொல்காப்பிய நூற்பாவுக்கு உரைகண்ட சேனாவரையர், இயற்கைப்பொருள் என்பதற்குத் "தன்னியல்பில் திரியாது நின்ற பொருள்" என விளக்கம் தருகின்றார்.

**இயற்கை பற்றி அறிஞர்களின் கருத்து**

ஜே.சீ.'ரீப் என்ற அறிஞர் தம்முடைய கவிதைகளில் இயற்கை கூறுகளைப் பற்றிய நூல் ஒன்றில் **"இயற்கையுலகமும் மனித உலகமுமே கவிஞன் பணிபுரியும் களங்கள்"** என்று குறிப்பிடுகின்றார். "மனித இயல்பும் இயற்கை உலகமே கவிஞனின் இரு பொருள்கள்" என்று கூறும் ஸ்டா.ஃ.போர்டு புருக் என்ற ஆசிரியர் இவற்றுள் மனிதனைப் புறக்கணித்து இயற்கையையோ அல்லது இயற்கையைப் புறக்கணித்து மனிதனையோ முழுமையாகப் பாடுவது குறையுடையது என்று குறிப்பிட்டுள்ளார்.

**இளங்கோவடிகளின் கருத்து**

"**மாமழை போற்றும் மாமழை போற்றுதும்**" என்று மழையினையுமே வழிபடு கடவுளாகப் போற்றியுள்ள தன்மையினைக் காணமுடிகின்றது. "உலகுதொழு" மண்டிலம் எனும் தொடர்

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

கதிரவனைத் தொழும் நிலையினை உணர்த்துவதாய் உள்ளது. காப்பிய ஆசிரியர்கள் இவ்வியற்கை அழகினைத் தம் காப்பியங்களில் மிக விரிவாக எடுத்தியம்பியுள்ளனர். பக்தி இலக்கியங்கள் இறைவன் ஐம்பெரும்ப்பூதங்களாயும் கதிர்களாயும் விளங்கும் நிலையினைப் இயம்புகின்றன.

**“நீராய் நிலனாய்த் தீயாய்க் காலாய் நெடுவானாய்ச்**
**சீரார் சுடர்கள் இரண்டாய்” (திருமுருகு.பா.165)**

இறைவன் இலங்குவதாய் நம்மாழ்வார் குறிப்பிடுகிறார்.

**நக்கீரனின் கருத்து**

கவிதையில் இயற்கைப் புனைவு என்ற தொடருக்குக் கவிதையில் இயற்கையை அழகு வடிவமான இயற்கைக்கு மேலும் அழகு கூட்டிக் கவிதைகளில் காட்டுவது என்றும் இங்கு பொருள் கொள்ளப்படுகிறது.

**“இயற்கையின் எழிலைக்**
**கை புனைந்தியற்றாக் கவின் பெறுவனப்பு” (பாரதியார்,கவிதை தொகுதி)**

கைபடாதது எதுவோ அது இயற்கை. இயற்கை அழகு மிக்கது. இயற்கையின் பேரெழியை வியந்து பாடுகின்றார்.

**சங்க கால இயற்கை**

மனிதன் இன்று அறிவியலில் பல சாதனைகளைப் படைத்து வருகிறான். நாகரீகத்தின் புறஅழகின் உச்சியிலிருக்கிறான். இயற்கைக் காட்சிகள் அவனுடைய சிந்தனைகளை மாற்றிக் தன்பால் ஈர்க்குந்தன்மைப் பெற்றிருக்கின்றன. இயற்கையினைக் கண்டு ஒதுங்கிக் செல்லும் மனிதன் இல்லை எனலாம். சங்ககாலப் புலவர்கள் காட்டும் இயற்கையும் பாவேந்தர் காட்டும் இயற்கையும் இங்கு இடம் பெறுகின்றன.

சங்க காலப் பாடல்கள் காதலையும் வீரத்தையும் பற்றியே பேசுகின்றன.காதல் வீரம் ஆகியவற்றினிடையே இயற்கையும் நிலையான இடம் பெறுகிறது.

**சங்ககால மக்களின் வாழ்வு**

சங்க காலத் தமிழ் மக்கள் இயற்கையோடு இணைந்து வாழ்க்கை நடத்தி வந்தனர். வான்,கோள், மலை, அருவி, காடு, ஆறு, கொடி, செடி, வயல், கடல், கானல், விலங்கு, பறவை என உலகில் இயற்கை பரந்து விரிந்து காணப்படுகிறது. இயற்கையோடு அவர்கள் உறவும், உரிமையும் கொண்டு வாழ்ந்து வந்தனர். இயற்கையின் வளமும், வனப்பும் ஆற்றலும், கருணையும் அவர்களைப் பெரிதும் கவர்ந்தன.

வாழ்வு தழைக்கவும், வைப்பம் நீங்கவும் உழவரெல்லாம் பொன்னேர் பூட்டவும் நகரப் பெண்களின் செப்புக் குடங்கள் நிறையவும் ஏரி, குளங்கள் வழிந்தோடும் படியும், பூவும், காயும், மரமும், தழையும், நனையும் படியும் வந்த மழையின் பொதுவுடைமையைப் பாடவந்த கவிஞர்.

**“இல்லார்க்கும் செல்வர்கள் தாமே**
**என்பாருக்கும் தீயவர் மற்றும்**
**நல்லார்க்கும் முகிலே சமமாய்**
**நல்கும் செல்வம் நீ யற்றோ” (குறும்.பா.68-4)**

என்று விளித்துப் பாடியுள்ளார். நல்லவர்க்கும், தீயவர்க்கும் வேறுபாடில்லாமல் பெய்யும் மழையைக் கவிஞர் வாழ்த்தியும் பாடியுள்ளார்.

**சங்க புலவர்களின் கூற்று**

சங்க காலப் புலவர்கள் தமது வறுமை நிலை நீங்க மன்னைப் பாடி பரிசில் பெற்று வந்தனர். இவர்கள் பழுமரம் தேடிச் செல்லும் பறவை போல இயல்புடையவர்கள் ஓர் அரசனைப் பற்றிய உண்மையான புகழினைப் பாடி பரிசுகள் பெற்ற வந்த பாணர், பொருநர், சிறுபாணர், பெரும்பாணர், கூத்தர் மற்றும் பிற புலவர்கள் தான் பெற்றுப் பொருட்களையும் மற்றொரு புலவர்களிடம் தீ அம்மன்னைப் பற்றி புகழ்ந்துக் கூறி பரிசு பெற்று வந்த

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

மன்னனுடைய ஊர். இயற்கை வளம் போன்றவையும் அகம், புறம் ஆகிய காதல், வீரம் பேசப்பட்டிருப்பினும் இடைஇடையே இயற்கையும் நிலையான இடம் பெறுகின்றது. புலவர்கள் அரசரை வாழ்த்திப் பாடும் போது முதலில் நாட்டு வளம், மலைவளம் முதலான இயற்கைப் பற்றியே பாடியுள்ளார்.

சங்கப் புலவர்கள் இயற்கையுடன், வாழ்வினையும் இணைத்துப் பாடுகின்றனர். அகம், புறம் என்ற இருநிலைகளிலும் இயற்கை இடம் பெறுகின்றது. ஆனால் இயற்கைக்கு என்று தனியாகப் பாடல்கள் இடம் பெறவில்லை. இயற்கையுடன் இணைந்த வாழ்க்கையினையே மேற்கொண்டதால் இயற்கையை வாழ்க்கையுடனேயே சேர்த்துப் பாடுகின்றனர்.

**வருணனைப் பொருட்கள்**

சங்கப் புலவர்கள் இயற்கையை வாழ்க்கையுடன் இணைத்தே பாடுகின்றனர். கருப்பொருள், உரிப்பொருள் ஆகியவற்றுடன் இயற்கை இடம் பெறுகிறது. இயற்கையை இயற்கையாக வருணிக்கும் இலக்கியநெறி சான்றோர் செய்யுட்களில் இல்லையாயினும் அக்காலப்புலவர்கள் இயற்கை உலகினைத் தமது பாக்களுக்கு இன்றியமையாப் பின்னணியாகக் கொண்டு பாடினர் என்ற கைலாசபதியின் கூற்று இதனை வலியுறுத்துகின்றது.

**ஞாயிறு வருணனைகள்**

பத்துப்பாட்டில் புலவர்கள் இயற்கையை வணங்கி நூலின் தொடக்கத்தில் இயற்கைப் பொருளான ஞாயிற்றை வருணித்துக் கூறியுள்ளனர். ஞாயிறு தெய்வமாகவும் வணங்கப்படுகிறது. இருளை நீக்கி ஒளியைத் தரும் பகலவன் என்பர்.

**“உலகம் உவப்ப வலன்ஏர்பு திரிதரு**
**பலர்புகழ் ஞாயிறு கடல்கண் டாஅங்கு**
**ஓஅற இமைக்கும் சேண்விளங்கு அவிர்ஒளி”** (திருமுருகு.பா.13)

உலகில் வாழும் உயிர்கள் எல்லாம் மகிழும்படி மேருமலையை வலமாக எழுந்து, பற்பல சமயத்தவரும் புகழ்கின்ற ஞாயிறு கீழ் கடலிடத்தே எழுக் கண்டாற்போன்று இடையீடு இன்றி எக்காலத்தும் விளங்குவதும். மிக நெடுந்தூரத்தில் விளங்கிப் பிரகாசிப்பதுமாகிய ஒளியினை உடையவன் ஞாயிறு என்று வருணிக்கின்றார்.

**ஞாயிற்றின் சிறப்பு**

ஞாயிற்றின் தோற்றத்தினால் தான் இந்த உலகம் இயங்குகின்றது. ஆகாயத்தில் ஞாயிற்றின் கதிர் விரியும் விடியற்பொழுதில் துயில் உணர்ந்து எழுக என்ற சூரியனின் தோற்றம் விடியலை உணர்த்துகின்றது. **“வான்கண் விரிந்த விடியல் ஏற்றெழுத்து” (மலைப்படு பா257)** என்று மலைபடுகடாம் புதிய சிந்தனைகளைப் பதிவு செய்கின்றார்.

ஆகாயத்தில் திரியும் ஞாயிற்றின் கதிர்களால் சுடப்படாத அகன்ற இடத்தில் உடையதாகக் குன்று விளங்குகின்றது. **“ஞாயிறு தெறாஅ மாகநனந்தலை” (மலைப்படு.பா.272)**

பொருநராற்றுப்படையில் ஞாயிறு கடலிலே தோன்றியவுடன் கடற்பரப்பிலே தன் கதிரைப் பரப்பிப் பின்னர் மெல்ல விண்ணிலேறி உலகினைத் தன் ஒளியுள் அகப்படுத்திக் கொண்டதை,

**“பல்வ மீமிசைப் பகற்கதிர் பரப்பி**
**வெல்வெஞ் செல்வன் விசும்பு படர்ந்தாங்கு**
**பிறந்து தவழ்”(பொருநா்.பா.135-137)**

இவ்வாறாக ஞாயிற்றின் தோற்றம் இருந்ததாகச் சுட்டப்படுகின்றது. புறநானூறு பாடல்,

**“மாக்கடல் நிவந்து எழுதரும்**
**செஞ்ஞாயிற்றுக் கவினை மாதோ**”(புறம் 4:15-16)

சூரியனின் கதிர்களை வருணிக்கின்றார்.

**மழையின் பயன்கள்**

வாழ்வு தழைக்கவும், வெப்பம் நீங்கவும், உழவரெல்லாம் பொன்னேர் பூட்டவும், நகரப்

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

பெண்களின் செப்புக் குடங்கள் நிறையவும், ஏரி குளங்கள் வழிந்தோடும் படியும், பூவும், காயும், மரமும், தழையும் படியும் வந்த மழையின் பொதுவுடைமையைப் பாடவந்த கவிஞர்,

**“இல்லார்க்கும் செல்வர்கள் தாமே**
**என்பாருக்கும் தீயவர் மற்றும்**
**நல்லார்க்கும் முகிலே சமமாய்**
**நல்கும் செல்வம் நீ யன்றோ”**

என்று விளித்துப் பாடியுள்ளார். நல்லார்க்கும் தீயவர்க்கும் வேறுபாடில்லாமல் பெய்யும் மழையைக் கவிஞர் வாழ்த்தியும் பாடியுள்ளார்.

**நிலத்தின் அமைப்புகள்**

நாம் வாழ்வதற்கு ஏற்ற இடமாக அமைவது நிலமாகும். அதன் அமைப்பினை தொல்காப்பியர் வரையறை செய்கிறார்.

**“நடுவண் ஐந்திணை நடுவனது ஒழிய**
**படுதிரை வையம் பாத்திய பண்பே” (தொல் அகத்:948)**

மருதம் நெய்தல் பாலை என்ற ஐவகை நிலங்களில் பாலை நீங்கக் கடலால் சூழப்பெற்ற இந்நில உலகுத்தைப் பகுத்துக் கொண்டனர் என்கிறார்.

**பூக்கள் பற்றிய வருணனைகள்**

குறிஞ்சி நிலத்திற்கும் கூதிர்காலத்ததிற்கும், யாமப் பொழுதிற்கும் உரிய பூக்கள் பிற நிலப்பூக்களுடன் மயங்கிக் காணப்படுதல். ஒவ்வொரு நிலத்திற்கும் தனித்தனிப் பூக்களை தொல்காப்பியம் வரையறுத்துக் கூறுகின்றதை,

**“எந்நில மருங்கிற் பூவும் புள்ளும்**
**அந்நிலம் பொழுதொரு வாரா ஆயினும்**
**வந்த நிலத்தின் பயத்த ஆகும்” (தொல் அகம் 948)**

குறிஞ்சிப் பாட்டில் கபிலர் 99 வகை மலர்களைப் பற்றி சுட்டுகிறது.

**“……வள்இதழ்**
**ஒண் செங்காந்தள் ஆம்பல் அனிச்சம்**
**தண்கயக் குவளை குறிஞ்சி வெட்சி**
**செங்கோடு வேரி, தேமா மணிச்சிகை**
**உரிதுநாறு அமிழ்கொத்து உந்தூழ் கூவிளம்**
**…மாஇருங் குருத்தும் வேங்கையும் பிறவும்**
**அரக்கு விரித்த பருஏர்அம் புழகுடன்**
**மால் அங்கு உடைய மலிவனம் மறுகி**
**வான்கண் கழீஇய அகல் அறைக்குவைஇ” (குறிஞ்சி 62-98)**

பெரிய இதழ்களையுடைய ஒள்ளிய சிவந்த காந்தட் பூ, ஆம்பல் பூ, அனிச்சம் பூ, குளிர்ந்த குளத்தில் பூத்த செங்கழுநீர்ப்பூ, குறிஞ்சிப் பூ, வெட்சிப் பூ, செங்கொடு வேரிப்பூ, தேமாம் பூ, செம்மணி பெருமூங்கிற் பூ, வில்வப் பூ, வாகைப்பூ, வெட்பாலை பூ, பயனிப்பூ, மகிழம் பூ, காயாம் பூ, மஞ்சாடிப் பூ, தும்பை பூ, அவரைப் பூ, இலவம் பூ, பீர்க்கம் பூ, நாகப்பூ, இருவாச்சிப்பூ, குருந்தம்பூ, ஆத்திபூ, தாழம் பூ, மல்லிகைப்பூ, மாம்பூ, புனலிப்பூ, பாலைப்பூ, வாழைப்பூ, வள்ளிப்பூ, நெய்தல் பூ, எருக்கம் பூ, கரந்தைப் பூ, காட்டுப்பூ, இது போன்ற பல வகைகள் கபிலர் எடுத்துரைக்கின்றனார்

**மலர்களின் தோற்றம்**

**“ஆடுவண்டு இமிரா அழல் அவிர்தாமரை**
**நீடு இரும் பித்தை பொலியச் சூட்டு” (பெரும் 481-482)**

வண்டுகள் மொய்க்காத தீயிடத்தே கிடந்த மலர்ந்த வெண் பொற்றாரையை நீண்ட கரிய மயிரிடத்தை அழகு பெறச் சூட்டுக என்பதை

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

**"முட்தாள சுடர்த் தாமரை**
**கள் கமழும் நறு நெய்தல்**
**வள் இதழ் அவிழ் நீலம்**
**மெல் இலை அரி ஆம்பலொடு**
**வண்டு இறை கொண்ட கமழ்பூம் பொய்க்கை" (மதுரை - 249-253)**

இலைகளுக்கு மேலாக வளர்ந்துள்ள முள்ளையுடைய தாள்களைக் கொண்ட ஒளியுடைய தாமரைப் பூவினையும் மெல்லிய இலைகளையும் வண்டுகளையும் உடைய ஆம்பல் பூக்களோடு வண்டுகள் தங்குதல் உடைய மணம் நாறும் பிற பூக்களை கொண்ட பொய்கை ஓடையில் பூத்திருக்கின்ற பூக்களை வகைப்படுத்திக் கூறுகின்றார்.

**"இருஞ்சேற்று அகல்வயல் விரிந்துவாய் அவிழ்ந்த**
**முள்தாட் தாமரைத் துஞ்சி வைகறைக்**
**கள்கமழ் நெய்தல் ஊதி காமரு சுனைமலர்" (திருமுருகு.72-73)**

கரிய சேற்றினையுடைய அகன்ற வயலில் விரிந்து மலர்ந்த முள் பொருந்திய தாள்களையுடைய தாமரை மலரில் இரவெல்லாம் உறங்கி வைகறைப் பொழுதில் மணம் கமழ்கின்ற நெய்தல் மலரில் தேனை உண்டு சூரியன் தோன்றிய பின்னர். மகளிரின் கண்கள் போல மலர்ந்த அழகிய சுனைப் பூக்களை உடைய நாடு என்று நக்கீரர் வருணிக்கிறார்.

**குன்றம் பற்றிய வருணனைகள்**

மலையும் மலை சார்ந்த இடம் குறிஞ்சி நிலம், கடவுள் முருகனைச் சுட்டுவர்,

**"மாயோன் மேய காடுறை உலகமும" (தொல். அகத்.5)**

என்று நிலத்திற்குரிய தெய்வத்தை இலக்கண நூல் கூறுகிறது.

**"மந்தியும் அறியா மரன்பயில் அடுக்கத்து**
**கரும்பும் மூசாச் சுடர்ப்பூங் காந்தள்**
**பெருந் தண் தண்ணி மிவைந்த சென்னியன்" (திருமுருகு.42-44)**

குரங்குகளும் முற்றிலும் ஏறிப் பயின்று அறிய முடியாத மரங்கள் நெருங்கிச் செழித்துள்ள பக்கமலைச் சாரலில் உள்ள வண்டுகளும் மொய்க்காத சுடர்போல சிவந்த காந்தள் பூக்களால் தொடுத்துக் கட்டிய குளிர்ந்த பெரிய மாலையை அணிந்த திருமுடியை உடையவனாக விளங்குகிறான் முருகன்.

துகில் அணிந்த அல்குலம் ஆடிய சாயலும் உடைய மகளிர் அகிற்புகை ஊட்டுதற் பொருட்டு விரித்துக் கூந்தலைப் போன்று மயில் தன் தோகையை விரித்துக் ஆடுவதற்குக் காரணமான கருமேகங்கள் மஞ்சின் இடையை தவழ்கின்ற குன்றம் . அக்குன்றத்தில் நீண்டு நிறைந்து விளங்குவதால் இடியேறு கூட தான் அப்பால் செல்லும். யாராலும் எளிதில் ஏறுதற்கு அரிதான முடியுடைய குன்றம் இதனை,

**"............மென்தோள்**
**துகில் அணி அல்குல் துளங்கு இயல் மகளிர்**
**அகில் உண விரித்த அம்மென் கூந்தலின்**
**மணிமயில் கலாபம் மஞ்சுஇடைப் பரப்பி**
**துணிமழை தவழும் துயல்கழை நெடுங்கோட்டு" (சிறுபாண. 261-265)**

என்று சிறுப்பாணாற்றுப்படை கூறுகின்றது. சங்கப் பாக்கள் குன்றத்தின் வளமையும் சிறப்பினையும் எடுத்துரைத்துள்ளது.

**முடிவுரை**

இயற்கை விளக்கம் ,இயற்கையும் பல்வேறு கவிஞர்களும், இலக்கியத்தில் இயற்கை, சங்கப்புலவர்களின் இயற்கை பாடுபொருட்கள் விளக்கியுள்ளனர்.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

ஞாயிறு, மழை, நிலங்கள் போன்றவற்றின் வருணனைகள் சங்கப்பாடல்கள் விளக்கப்பட்டுள்ளன. புக்கள்,குன்றம் போன்ற இயற்கைப் பொருட்களை சங்க இலக்கியத்தில் வருணித்துள்ளார்.

**பார்வை நூல்கள்**

1. மாணிக்கவாசகன். ஞா - *பத்துப்பாட்டு.* உமா பதிப்பகம், சென்னை.
2. புலியூர்க் கேசகன் - *குறுந்தொகை.* சாரதா பதிப்பகம், சென்னை.
3. புலியூர்க் கேசகன் - *புறநானூறு.* சாரதா பதிப்பகம், சென்னை.
4. இளம்பூரணார் - *தொல்காப்பியம்.* சாரதா பதிப்பகம், சென்னை.
5. சிலப்பதிகாரம் - *மணிவாசகர்.* பதிப்பகம், சென்னை.

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019
Available at: www.ijtlls.com


# ஊடகங்களில் தமிழ்ப் பண்பாடு

# Tamil Culture in Media

**முனைவர் ம.சியாமளா,** உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை,
கிருஷ்ணசாமி மகளிர் அறிவியல் கலை (ம) மேலாண்மையியல் கல்லூரி, கடலூர்.

## Abstract

*The impact of social media on people and their behaviour is enormous. In my opinion, this impact is predominantly positive, but it must be borne in mind that there may be negative aspects as well. There is too much unfiltered rubbish in social media like Tamil T.V, Dramas, Movies, Radio, Internet oriented apps and websites and Whatsup, Face Book or Twitter- therefore it enforces many stupid and uniformed discussions. This article explains that poor online behaviour is now affecting real life. Social interactions spurred on when high profile people engage in negative communication in online.*

**Keywords:** Tamil Culture in Media, Journalism, Internet, Modern Generation

**முன்னுரை**

பண்பாடு என்பது மக்களால் ஆக்கப்பெற்ற கருவியாகும். இந்த ஊடகத்தைக் கொண்டு தங்கள் தேவைகளை நிறைவு செய்து கொள்கின்றனர் என்பார் மாலிகோ சுக்கி. தலைமுறை, தலைமுறையாக மக்கள் குழுவாகச் சேர்ந்து கற்ற நடத்தை முறைகளும், பழக்க வழக்கங்களும், மரபுகளும் சேர்ந்த ஒரு தொகுதியே பண்பாடு என்பார் லெப்பியர். பண்பாடு என்பது மக்கள் அனைவரும் கூட்டாகச் சேர்ந்து செயற்படும்போது உண்டாகும் நடத்தை முறைகளின் சேர்மமாகும் என்பார் ஆடம்சன் ஓவல்.

சமூகங்கள் பண்பாடுகளை உருவாக்குகின்றன. பண்பாடு, சமூகம் என்பன ஓர் அமைப்பை விளக்கும் இரு குறியீட்டுச்சொற்களாகும். இச்சொற்கள் சமுதாய அமைப்புகளையும், ஒழுக்க முறைகளையும், பழக்க வழக்கங்களையும் குறிப்பிடுவதற்கு அமைந்தனவாகும். நாகரிகம் என்பதற்கும் பண்பாடு என்பதற்கும் ஒரே பொருளைக் கூறி வந்தாலும் மக்களின் அழகுக்கலை ஆர்வத்தை நாகரிகம் என்றும் குறிப்பிடுவர். வாழ்க்கையின் ஒவ்வொரு நிலையும் பண்பாடு எனப்படும்.

மேல்நாட்டறிஞர் டெய்லர் பண்பாடு என்றால் என்ன என்பதற்குத் தரும் பின்வரும் விளக்கம், **உலகின் பல பகுதிகளிலும் வாழ்கின்ற மக்களின் வாழ்வியல், உறைவிடம், உணவுப்பழக்கம், நம்பிக்கைகள், வாழிபாடுகள், தலைமை முறைகள், சடங்குகள்** விரிவானதும் செறிவானதுமாகும்.

**பண்பாட்டின் இயல்புகள்**

எளிதில் வரையறுத்துக் கூறமுடியாத எந்தவொன்றிற்கும் அதன் இயல்புகளை எடுத்துரைத்தால் உண்மைகள் புலனாகும். அந்த அடிப்படையில் பண்பாட்டின் இயல்புகள் பலவற்றுள் இவண் சில குறிப்பிடத்தக்கதாகும்.

1. பண்பாடு என்பது காலந்தோறும் மாறிவரும் இயல்புடையதாகும். இடத்துக்கு இடம் வேறுபாடும் தன்மை உடையதாகும்.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

2. பண்பாடு என்பது ஒழுகும் முறையாகும். ஒழுகும் முறையே ஒழுக்கமாகும். ஒழுக்கம் என்ப துநன்மை எது? தீமை எது? என அறிந்து நன்மையைக் கடைபிடிக்கும் முறையாகும். ஒழுக்கம் என்பது ஒவ்வொருவரும் நடந்து கொள்ளும் முறையாகும். மேற்சுட்டிய கருத்துக்களின் அடிப்படையில் ஒழுக்கம் என்பது மக்கள் கூட்டத்தில் ஒருவன் பிறர் தன்னிடம் எப்படியெல்லாம் நடந்து கொள்ள வேண்டும் என்று கருதுகிறார்களோ அதே போன்று அவன் எல்லோரிடமும் நடந்து கொள்ள வேண்டும் என்பதே ஒழுக்கம் என்பதன் வரையறையாகும்.
3. பழக்கமும் வழக்கமும் பண்பாட்டின் பாற்படும். பழக்கம் வழக்கம் என்பன மனிதன் உண்பது, உடுத்துவது, தொழில் செய்வது, உறங்குவது போன்றவற்றை மையமாகக் கொண்ட நடைமுறைகளாகும். காலையில் நீராடல், கடவுளைத் தொழுதல், பணிகளை மேற்கொள்ளல், மாலையில் கடவுளை வணங்குதல், உண்டி கொள்ளுதல், உறங்குதல் இவையெல்லாம் அன்றாடப் பழக்க வழக்கங்களாகும்.
4. மக்களின் பழக்கங்கள் என்பது ஒரு தனிமனிதரால் - ஒரு குடும்பத்தினரால் - ஒரு ஊராரால் - ஒரு சமுதாயத்தினரால் - ஒரு நாட்டினரால் - ஒரே தன்மையில் மேற்கொள்ளப்படும் நடைமுறை செயல்பாடுகளாகும். பழக்கங்கள் என்ற தன்மையில் பன்னெடுங்காலம் ஒரு கூட்டத்தாரால் பின்பற்றப்பட்டு வர நேர்ந்தால் அவை வழக்கங்கள் என்னும் பெயரை ஏற்கும்.
5. பண்பாடும், நாகரிகமும் பின்னிப் பிணைந்ததாகும். நாகரிகம் என்பது மக்கள் ஒன்று கூடி வாழ்வதற்கானப் பழக்கவழக்கங்களையும் செயல்முறைகளையும் அறிவின் துணைக்கொண்டு உருவாக்கிக் கொள்ளப்படும் ஒன்றாகும். விலங்குகள் ஒன்று கூடி வாழ்வதில்லை. செயல்முறை அறிவின் துனை கொண்டு அறியும் தன்மை விலங்குகட்கு இல்லை. இத்தன்மையிலேயே உலகம் தோன்றிய காலந்தொட்டு விலங்குகள் உள்ளன. ஆனால் மனிதன் பன்னெடுங்காலமாகக் கூடியே வாழ்ந்து வருகின்றான். செயல்முறை அறிவின் துணைக்கொண்டு அறிவை வளர்த்துக் கொண்டே வருகின்றான். செயல்முறையின் காரணமாகப் பெற்ற அறிவு வளர்ச்சியே நாகரிக வளர்ச்சி எனப்படும்.
6. பண்பாட்டின் இயல்புகளும் ஒழுக்கம், பழக்கம், வழக்கம், நாகரிகம் போன்றவை குறிப்பிடத்தக்கனவாகும். இவையெல்லாம் ஒரே தன்மை உடையவனாக இருப்பதில்லை. ஒவ்வொன்றும் வெவ்வேறு இயல்புடையவை. ஒவ்வொன்றும் காலந்தோறும் மாறிவிடும் தன்மை உடையன.

மேற்குறிப்பிட்ட கருத்துக்களின் அடிப்படையில் பண்பாட்டின் இயல்புகள் வரையறுக்கத் தக்கனவாகும்.

பல்வேறு வாழ்வியல் கூறுகளாக உள்ளவை முதிர்ச்சியும் வளர்ச்சியும் பெற்று தனிமனித வாழ்விலும் சமுதாய வாழ்விலும் மடிந்து போனவை பண்பாடு அல்லது கலாச்சாரம்.

பண்பாடு என்பது ஒரு தனிப்பட்ட இயல்பன்று. பல்வேறு கூறுகளின் ஒன்றுபட்ட தன்மையே பண்பாடு எனப்படும். செயல்முறை அறிவின் துணை கொண்டு ஒவ்வொரு கூறும் வளர்ச்சி பெற்றுள்ள நிலையே பண்பாடு எனப்படும்.

7. பண்பெணப்படுவது பாடறிந்து ஒழுகுதலாகும். பாடு அறிந்து ஒழுகுதல் என்பதே பண்பு ஆகும். பாடறிந்து ஒழுகுதல் என்பதற்குப் பொருள் செயல்பாடு அறிந்து அல்லது பட்டறிவு கொண்டு அது விளைவாக ஏற்பட்ட அறிவைப் பின்பற்றி நடத்தல் என்பதாகும். இவ்வடிப்படையில் தமிழர் பண்பாடு என்பது வழிவழியாகப் படிந்து போய்விட்ட ஒழுக்கம், பழக்கம், வழக்கம் நம்பிக்கைகள் போன்றவற்றை ஒழுகும் வாழ்வியல் முறையாகும். இவ்வாறு ஒழுகுவது அல்லது நடப்பது மரபு எனப்படும். மரபு என்பது செவி வழியாகவும் வாய்மொழியாகவும் பன்னெடும் காலத்துக்கு முன்னர்த் தொன்றுதொட்டு நம்பப்பட்டும் பின்பற்றப்பட்டும் வருவதாகும்.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

8. பண்பாட்டில் மரபும் மக்களும் குறிப்பிடத்தக்கதாகும். மரபு என்பது செவி வழியாகவும் வாய்மொழியாகவும் காக்கப்பட்டு பின்னர் எழுத்து வடிவில் ஆக்கப்பட்டு வேதங்கள், சாத்திரங்கள், புராணங்கள் போன்ற பெயர்களில் மக்களிடையே நிலைநிறுத்தப்பட்டுவது என்பது குறிப்பிடத்தக்கது.

ஒரு நாட்டின் பண்பாடு என்பது காலக் கண்ணோட்டத்தில் அரசியலும் ஆட்சியும் சுட்டி உரைப்பதாகும். தமிழர் பண்பாடு என்பது பல்லவர் ஆட்சியில் சோழர் ஆட்சியில் பிற்காலப் பாண்டியர் காலத்தில் என்பன போன்று சுட்டி உரைப்பதாகும். பண்பாட்டுத் தமிழின் பரப்பில் பாரத நாட்டுப் பண்பாடும் பண்டைத் தமிழர் பண்பாடும் சுட்டத்தக்கதாகும்.

பாரதப் பண்பாடு மொழி உணர்வையும் சமய உணர்வையும் அடிப்படையாகக் கொண்டதாகும். அன்பு, பக்தி, அருளுடைமை போன்றவற்றில் பெருமையைக் காட்டுவது பாரதப் பண்பாடாகும். இப்பண்பினை இந்திய இலக்கியங்கள் காலந்தோறும் பதிவு செய்துள்ளன என்பது வரலாற்றுண்மையாகும். இது மட்டுமல்ல இனம், மொழி, சமயம் எனப்பலவற்றில் வேறுபட்டாலும் மெய்ஞ்ஞானத்தாலும் பண்பாட்டாலும் ஒன்றுபட்டவர்கள் இந்திய மக்கள் என்பதை காலந்தோறும் பல நிலைகளில் நிரூபித்து வருகின்ற பெருமையும் பாரதப் பண்பாட்டிற்கு உண்டு.

தமிழர்களுடைய பண்பாடுகளுள் தலைசிறந்த பண்பாடு உலகம் முழுவதையும் தாயகமாகக் கொள்ளுவதற்கும் உலகம் முழுமையும் உறவு கொள்வதே தமிழருடைய பண்பாடாகும்.

தெய்வப் புலவர் திருவள்ளுவர், நெற்றிக் கண்ணைக் காட்டினும் குற்றம் குற்றமே என்று கூறிய நக்கீரர், கவிச்சக்கரவர்த்தி கம்பர், தொண்டர் சீர் பரவுவார் சேக்கிழார் பெருமான் போன்றோரின் உலகளாவியப் பார்வை உளம் கொள்ளத்தக்கதாகும்.

ஆதி பகவன் முதற்றே உலகு, உலகம் உவப்ப, உலகம் யாவையும் தாமுளவாக்கலும் உலகெலாம் என்றே தத்தம் நூல்களைத் தொடங்கி புத்தம் புதுமலராய்ப் பண்பாட்டின் இலக்கணத்திற்கு இலக்கியமாய் விளங்கினர்.

உலகம் முழுவதையும் தாயகமாகக் கொள்ளுவதும், உலகம் முழுமையும் நட்புறவு கொள்ளுவதும் தமிழர்களுடைய கொள்கை ஆகும். எனவே தான் புறநானூற்றுப் புலவர் கணியன் பூங்குன்றனார் யாதும் ஓரே யாவரும் கேளிர் என்று பாடினார்.

இக்கொள்கையைக் காலந்தோறும் தமிழ் இலக்கியங்கள் பதிவு செய்து வருகின்றன என்பது மறுக்கவோ மறைக்கவோ முடியாத உண்ரமையாகும். பண்பாட்டுத் தமிழ் இலக்கியப் பரப்பு துலக்குகின்ற உண்மையும் இதுவேயாகும்.

**ஊடகங்கள்**

உணவு, உடை, உறையுள் போன்றே ஒவ்வோரு உயிருக்கும் தகவல் உயிருக்கும் தகவல் தொடர்பு இன்றியமையாததாகும். அறிவியல் வளர்ச்சியின் விளைவாக மனிதன் உலகின் எந்த மூலையில் நடக்கும் நிகழ்வுகளையும் உடனுக்குடன் தான் இருக்கும் இடத்திலிருந்து கொண்டே தெரிந்து கொள்கிறான். தொலைக்காட்சி, வானொலி, இதழ்கள், கணினி போன்றவை இன்று மக்களின் வாழ்க்கையில் நீங்கா இடம்பெற்றுத் திகழ்கின்றன. ஆறு வயது குழந்தை முதல் அறுபது வயது முதியவர் வரை உள்ள அனைவரையும் தன் பக்கம் ஈர்க்கும் ஆற்றல் ஊடகங்களுக்கு உண்டு. ஆனால் அத்தகைய ஊடகங்களோ பண்பாட்டையே கெடுத்து மனித வாழ்க்கையும் கெடுக்கின்றன.

- அச்சு ஊடகம்
- மின் ஊடகம்
- கணினி ஊடகம்

இன்று முகத்திற்கு முகம் முள்வேலி போட்டுக் கொண்டவர்களாக! அகத்திற்கு அகம் அணைகட்டி அன்பு வெள்ளத்தைத் தடுத்துக் கொண்டர்களாக நம்மை நம் இனத்தை யார்

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

பழித்தாலும் நமக்கென்ன, அவனைத் தானே பழித்தார்கள் என்று சொல்லி வீணாக வெறுமையாய் இருக்கின்ற மனப்பான்மையை வளர்த்துக் கொண்டார்கள். அதனால் தான் இன்றைய ஊடகங்கள் தமிழ் இனத்தின் பண்பாட்டு உணர்வுகளை இறையாண்மையை எவ்வளவு கொச்சைப்படுத்தினாலும் அதைக்கண்டு வெகுண்டெழுந்து பார்த்துக் கொண்டிருக்கிற கீழ்த்தரமான நிலைக்கு வந்துவிட்டோம்.

பண்பாடு என்பது பயனற்றுப் போன ஒன்றாக தன்மானம் இழந்து போனதாக துளிர்விடாத மொட்டை மரங்களாக தூக்கிலிடப்பட்ட பிணங்களாகத் தொங்கி கொண்டிருக்கிறது.

வண்ணத்திரையாயினும் சரி, சின்னத்திரையாயினும் சரி பெண்கள் இனத்தையே கொச்சப்படுத்துமளவு காட்டப்படுவது அநீதியாக வளர்ந்துவிட்டது.

***நரித்தனம் மிக்க ஒருசில நாக்குப் பொரிக்களின் வாக்கிலே-தினம்***
***நடம்புரியும் நஞ்சு கலந்த வார்த்தைகள் பெண்மையைக் கொச்சைப் படுத்துகிறது!***
***வெறிபிடித்த சில ஆண்களின் பார்வைகள் கூட-இன்று***
***வன்மையைக் காட்டி பார்வையால் கற்பழிப்பது தொடர்கிறது.***

மாதாந்திர, வாராந்திர இதழ்களின் நடுப்பக்கங்களிலும் பெண்களைக் கேவலப்படுத்தும் வகையில் ஆபாசமான கவர்ச்சிகரமான நடிகைகளின் படங்களை இளைஞர்கள் முதல் முதியவர் வரை உள்ளோரின் உணர்ச்சிகளுக்கு தீனியாக தந்து கொண்டிருக்கிறார்கள். இதுவா தமிழ் பண்பாடு.

இடைக்காட்டி, தொடைக்காட்டி, தொப்புள் காட்டி ஆயிரக்கணக்கோர் முன்பு ஒயில் நடைக்காட்டி தங்கள் அழகை ஆபாசமாக வெளிப்படுத்தி உலக அழகியாக, ஊர் அழகியாக பவணி வருவதை பெருமையாக கருதும் பெண்ணினத்தின் பண்பாடு சீர் அழிந்து போவதாக சொல்வதில் தவறில்லை. தனியார் வானொலிகளில் அறுவை ஜோக் சொல்லி வளர்ந்து வருவதும் காதலனுக்கு தூது விடுவதும் அறிவியலுக்கு பொருந்தாத ஆபாசத்தனமாக கொள்ள வேண்டியுள்ளது. இதையெல்லாம் வளர்த்து விட்டு வர்க்க ரீதியாக பொருள் சேர்ப்பது மீடியாக்கள் தானே.

என் குழந்தை மிகச் சிறந்த முறையில் படிக்கிறான் பாருங்கள், என்பதை விட இதோ கவர்ச்சிகரமான ஆடை அணிந்து என் மகள் ஆடுகிறாள் பாருங்கள் என்று சொல்வதை இன்றைய பெற்றோர் பெருமையாக கருதுகிறார்கள். இவர்கள், பண்பு என்பதை உணரா அறிவிலார் என்றால் அது மிகையாகாது.

இப்படிப்பட்டவர்களுக்காக நம் முன்னோர்கள் அறிவியல் இலக்கியங்களைப் படைத்தளித்தார்கள். ஓரடியில் உலகை அளந்த ஔவை இதற்காகவா ஆத்துசூடி எழுதி அருளினார். எந்த ஊடகத்தை பார்த்தாலும் ஆபாசம், அரைகுறை ஆடை அணிகலன்கள், அலங்காரம், அர்த்தமில்லாத ஆர்பரிப்புகள், போதை தரும் போதனைகள் மிகச் சிறப்பான சாதனைகளுக்கு ஊக்கம் தரலாம். மிகச் சிறந்த சிந்தனையாளர்களின் படைப்புகளுக்கு அங்கீகாரம் தராமல் வேத வேதாந்த தமிழ் மறைகள் கேட்பாரற்றுப் போக சிற்றின்பக் கவிராயர்களின் பாடல்கள் வண்ணத்திரைகள் மூலம் கோலோய்ச்சும் அவல நிலை அரங்கேறிவிட்டது என்பதை எவரும் மறக்க முடியாது. இப்படித்தான் இன்றைய பண்பாடு தொன்மை இழந்து, நன்மை இழந்து அறநெறிகள் அற்றுப்போய் மிகச்சிறந்த கல்வியாளர்கள், ஆசிரியப் பெருமக்களின் இதயம் நோக வலிவிழந்து, வாழ்விழந்து போய் கேட்பாரற்றுக் கிடக்கிறது.

அழகுச் சாதனங்களின் அணிவகுப்பாய் இயற்கைக்கு வேறுபட்ட முகத்தோற்றங்களும், முடி அலங்காரங்களும் நோய்கள் தாக்குவதற்கான நுழைவாயிலாக அமைந்துவிட்டன. அழையா விருந்தாளியாக வந்திறங்கிய மேலைநாட்டு பண்பாட்டு உணர்வுகளில் தம்மை

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

ஈடுபடுத்திக் கொண்ட இளைஞர்கள் இளம்பெண்கள் போதை மாத்திரைகளுக்கு அளாகிப் போனது தான் இன்றைய யாதார்த்த நிலை. சதைப்பிடித்தமான இறுக்கமான ஆடை அணிவதையே பண்பாடாக நினைக்கும் நிலை உருவாகிவிட்டது. அருந்தமிழ்ப்பண்பாடும் ஆன்றோர்கள் ஆக்கி வைத்த பண்புடைய மரபுவழி கலாச்சாரமும் வேர்கள் இற்றுப் போன மரங்களாகி வீழ்ந்துவிட்டது.

ஒருவனுக்கு ஒருத்தி என்ற தத்துவத்தையே தலைகீழாக மாற்றிவிட்டது இன்றைய ஊடகங்கள். குறிப்பாக வண்ணத்திரையும், சின்னத்திரையும் ஒரு மனைவி மட்டும் அல்லாது பிறபெண்களைக் குறிப்பாகத் திருமணமான பெண்களைக் காதலிக்கும் எண்ணங்களைத் தூண்டுவதும் ஊடகங்களின் பண்பாடாகிவிட்டது.

அன்றைய வெண்திரையில் வலம் வந்த எசு.ஏ. நடராசன், பி.சு.வீரப்பா, எம்.என். நம்பியார் போன்ற வில்லன் கதாப்பாத்திரங்களை மிஞ்சும் அளவு கொடூரம் நிறைந்தவர்களாகச் சின்னத்திரையில் வரும் பெண் கதாபாத்திரங்களைக் காட்டுவது என்பது மகளிர் மாண்பை மாசுபடுத்துவதைப் போல் உள்ளது.

**அச்சு ஊடகம்**

இலக்கிய வளமும், இலக்கண வளமும், சொல் வளமும் நிறைந்த நம் செம்மொழி இந்தியாவின் பிற மாநிலங்களிலும், மலேசியா, இலங்கை, சிங்கபூர், இலண்டன், அமெரிக்கா, மொரிசியசு, தென்னாப்பிரிக்கா போன்ற நாடுகளிலும் பரவலாகப் பரவி இருக்கின்ற இன்றைய சூழ்நிலையில், புலம் பெயர்ந்த உலகத் தமிழர் அனைவரையும் இணைக்கும் நல் பாலமாக ஊடகம் அமைகிறது. சீகன்பால்கு என்பவரால் 1712 இல் தமிழ்ப் பதிப்புத்துறை ஆரம்பிக்கப்பட்டது என கூறலாம். இதனால் இந்திய மொழிகளுள் முதன்முதலில் அச்சேறியவை தமிழ்நூல்களே என்கிற பெருமை நமக்கு உண்டு. தமிழ் இதழ்கள் நாளிதழ், வார இதழ், மாத இதழ் எனப்பலவாறாக இன்று வெளிவருகின்றன. அவைகள் ஆன்மீக இதழ், சினிமா இதழ், சோதிட இதழ், மருத்துவ இதழ், வேளாண்மை இதழ், பங்குச்சந்தை இதழ், மகளிர் இதழ் என பிரிந்து தனித்தனிப் பிரிவுகளாக வெளிவருகின்றன. இத்தகைய அச்சு ஊடகத்தின் சமூகப் பங்களிப்பு ஆரம்ப காலத்தில் இருந்ததற்கும், தற்போது இருக்கும் நிலைக்கும் மிகுந்த வேறுபாடு இருக்கிறது. ஆங்கிலேயர் ஆட்சி காலத்தில் தேச விடுதலையை முன்னிறுத்தி பத்திரிக்கை சஞ்சரிகைகள் வெளிவந்தன. தேசத் தலைவர்களின் எழுச்சி மிகு கட்டுரைகள், செய்திகள் மக்களை விடுதலை இயக்கத்திற்கு அழைத்து சென்றன. விடுதலைக்குப் பின்னர் படிப்படியாக இதழ்கள் தடம் மாறி சினிமா, அரசியல் போன்ற செய்திகள், கட்டுரைகள், படங்கள் ஆகியவற்றிற்கு முக்கியத்துவம் அளித்து வியாபார நோக்கில் செல்லுகின்றன.

**மின் ஊடகம்**

பண்டைத் தமிழர்கள், கலை, கலாச்சாரம் ஆகியவற்றிற்கு முக்கியத்துவம் அளித்தனர். அந்த வகையில் ஓவியம், கட்டிடக்கலை, நாட்டியம், நாடகம் போன்ற கலைகளுக்கு அடுத்ததாக வந்ததுதான் நவீன மின்னியியல் ஊடகம். அதன் மூலம் திரைப்படக்கலை, தொலைக்காட்சி, வானொலி போன்ற தகவல் சாதனங்கள் வந்தன. 1895 ஆம் ஆண்டு எடிசன் திரைப்படக் கருவியை நல்நோக்கில் கண்டுபிடித்தார். ஆனால், இன்று வரும் திரைப்படங்கள் நம் தமிழ்க் கலாச்சாரம், பண்பாடு போன்றவற்றைத் தலை குனிய வைக்கும் வகையில் அமைந்து வருகின்றன. வக்கிரப் பார்வை காட்சிகளும், பெண்ணியத்தின் கண்ணியத்தைக் கெடுக்கும் வண்ணம் பாலியல் காட்சிகளும் இடம் பெறுவதால், படம் எடுப்பவர்களுக்கு வேண்டுமானால் இலாபம் கிட்டலாம். ஆனால் இதைப்பார்க்கும் இளைய சமுதாயம் நிச்சயம் வரும் காலத்தில் பாழ் அடைய வாய்ப்புள்ளது. தொலைக்காட்சிகளில் இன்று வரும் தொடர் நாடகங்களில் தமிழ்ப் பண்பாடுகளுக்கு ஒவ்வாத வகையில் கதாபாத்திரத்தை வைத்து பண்பாட்டைச் சீரழிகிறார்கள்.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

1950-70 களில் நாட்டு நடப்புச் செய்திகளை வானொலி மூலம் அறிந்த காலம் போய், தற்போது தமிழ்மொழியை எந்தளவிற்குக் கொலை செய்ய முடியுமோ அந்த அளவிற்கு வட்டாரத் தமிழில் கொச்சையாகப் பேசுவது மட்டுமன்றி சினிமா பாடல்கள் மற்றும் சினிமா நிகழ்ச்சிகளுக்கு இதற்கு முக்கியத்துவம் தருகிறார்கள்.

- சின்னத்திரை
- வெள்ளித்திரை

**சின்னத்திரை**

சின்னத்திரை நிகழ்ச்சிகள் யாவும் முதன்முதலில் தூர்தர்சனால் வழங்கப்பட்டது. ஆனால் தற்போது ஒவ்வொரு நிகழ்ச்சிக்கும் தனி அலைவரிசை அமைத்து உலகில் நடக்கும் அனைத்து விஷயங்களையும் நம் இல்லத்தில் கொண்டு சேர்க்கும் ஒரு சாதனமாகத் திகழ்கிறது. தொலைக்காட்சி என்பது ஒரு பயன்பாட்டு பெட்டகமாகத் திகழ்கிறது என்ற ஜே.எல்.பார்ட் அவர்களின் கருத்து ஈண்டு குறிப்பிடத்தக்கது. 24 மணி நேரமும் ஏதோ ஒரு நிகழ்ச்சிகளை வழங்குவதால் மக்களிடையே உள்ள பேசும் திறம் மற்றும் மக்களிடையே பழுகும் திறமைகளைக் குறைத்து கொண்டு வருகின்றது. இதன் விளைவு தொலைக்காட்சி இப்போது ஒரு தொல்லைக்காட்சியாக மாறிவிட்டது என்று ஒரு புதுக்கவிஞர் தனது புத்தகத்தில் குறிப்பிடுமளவிற்கு இச்சாதனம் பெயரிழந்துள்ளது.

கோயில் இல்லாத ஊருக்கு அழகில்லை என்ற பழமொழி, இன்று தொலைக்காட்சி இல்லாத வீட்டிற்கு அழகில்லை என்ற நிலைக்கு வந்துள்ளது. கிராமங்களில் ஊர் மக்கள் கூடும் இடங்களில் ஒரு பொதுத் தொலைக்காட்சி என்ற நிலைமாறி ஒருவீட்டிற்கு இரண்டு,மூன்று தொலைக்காட்சி என்றநிலை இன்று ஏற்பட்டுள்ளது. உலக நடப்புகளைத் தெரிந்து கொள்ள பயன்பட்டு வந்த தொலைக்காட்சி, இன்று மக்களின் அதிகப்படியான நேரத்தை வீணடித்துத் தன்பால் ஈர்த்து அவர்களை அடிமைப்படுத்தும் சாதனமாக மாறியுள்ளது.

சின்னத்திரையில் ஒளிபரப்படும் நிகழ்ச்சிகள் பட்டித்தொட்டிகளில் வாழும் மக்களின் வாழ்க்கையைத் தலைகீழாக மாற்றிவிட்டன. உடை, பழக்கவழக்கங்கள், பண்பாடு போன்றவற்றில் பெரிதும் தாக்கத்தை ஏற்படுத்தியுள்ளன. இலக்கியங்கள் காலத்தைக் காட்டும் கண்ணாடி என்ற நிலை மாறி, 'கையும் காலும் தூக்கத் தூக்கும் ஆடிப்பாவை போல்' மக்களின் வாழ்க்கையை எதிரொளிக்கின்றது.

- விளம்பரங்களில் பண்பாட்டுச் சீர்கேடு
- நாடகங்களில் பண்பாட்டுச் சீர்கேடு
- பொழுதுபோக்கு நிகழ்ச்சிகளில் சீர்கேடு

**விளம்பரங்களில் பண்பாட்டுச் சீர்கேடு**

விளம்பரம் என்பது புதிதாக வரும் ஒரு பொருளை மக்களுக்கு அறிமுகப்படுத்துவதே. ஆனால் தற்பொழுது விளம்பரங்களே மக்கள் வாழ்க்கையில் ஓர் அங்கமாக மாறிவிட்டன. உணவுப்பொருட்கள் முதல் அலங்காரப்பொருட்கள், வாகனங்கள் என ஏராளமான விளம்பரங்கள் ஒளிப்பரப்படுகின்றன. அவற்றுள் சில முகம் சுழிப்பதாகவும், அருவறுக்கத் தக்கதாகவும் காணப்படுகின்றன.

பெண்ணை ஒருமோகப் பொருளாகப் பயன்படுத்தி இழிப்படுத்தும் நிலை இன்றைய விளம்பரங்களில் அதிகமாகக் காணப்படுகின்றது. ஆண்கள் உபயோகப்படுத்தும் பொருள்களுக்குக் கூட பெண்கள் இல்லாமல் விளம்பரங்கள் இல்லை. ஒருவனுக்கு ஒருத்தி என்பது தமிழ்ப்பண்பாடு. ஆனால், இன்றோ அப்பண்பாட்டைச் சீரழிக்கும் வகையில் விளம்பரங்கள் சித்தரிக்கப்படுகின்றன. ஆண்கள் பயன்படுத்தும் வாசனை திரவியங்களை அறிமுகப்படுத்தும் விளம்பரம் ஒன்றில் அப்பண்பாட்டுச் சீர்கேடு காணப்படுகின்றது.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

திருமணமான பெண் ஒருத்தி தன் அண்டை வீட்டில் உள்ள ஆடவன் ஒருவன் தன் மேல் வாசனை திரவியத்தைத் தெளித்துக் கொள்ளும் போது ஏற்படும் வாசனையில் மயங்கி தன் நிலை மறந்து தன் ஆடை நழுவி விழுவது கூட தெரியாமல் நிற்பதாகவும், தவறான உணர்ச்சியைத் தூண்டுவதாகவும் அவ்விளம்பரம் ஒளிப்பரப்பப்படுகிறது. குளிர் பானம் விளம்பரம் ஒன்றில் காதலன் ஒருவன் காதலியிடம் பேசிக் கொண்டிருக்கும் போதே மற்றொரு பெண்ணை எப்படிப்பார்த்து இரசிக்கலாம் என்ற இழிவான நிலையானது எடுத்துக்காட்டப்படுகின்றது.

பற்பசை விளம்பரம் ஒன்றில் ஆண் பெண் அதிக நேரம் முத்தமிடுகின்ற அளவுக்குப் புத்துணர்ச்சியை ஏற்படுத்துவதாகவும், பற்பசையின் வாசனையால் கவரப்பட்டுப் பெண் ஆணிடம் நெருங்கி வருவதாகவும் விளம்பரங்கள் தயாரிக்கப்படுகின்றன.

ஆண்களின் இரு சக்கர வாகனம் ஒன்றை அறிமுகப்படுத்தும் விளம்பரம் ஒன்றில் சாலையில் இரு ஆடவர் பெண்களை ஏற்றிக் கொண்டு தனித்தனியாகச் செல்ல இரண்டு பெண்களும் போட்டி போட்டுக் கொண்டு நடனமாடிக் கொண்டு அருவருக்கத்தக்க உடையுடனும் உடல் அசைவுகளுடனும் செல்வதாகத் தயாரிக்கப்பட்டுள்ளது. இத்தகைய விளம்பரங்களைக் குடும்பத்துடன் பார்க்கும் போது தர்ம சங்கடமான நிலை ஏற்படுகிறது.

**நாடகங்களில் பண்பாட்டுச் சீர்கேடு**

நாடகம் என்பது சமூகத்தில் நடக்கும் அவல நிலைகளை மக்களுக்கு எடுத்துக்காட்டி மக்களிடம் விழிப்புணர்வு ஏற்படுத்துதல் என்ற நிலை மாறி நாடகத்தைப் பின்பற்றி மக்கள் தங்கள் வாழ்க்கையை மாற்றிக் கொள்ளும் நிலை தான் இன்றைய சூழலில் அதிகமாகக் காணப்படுகிறது.

பெண்ணுக்குப் பெண்ணே எதிரியாகச் சித்தரிக்கப்படுவது அதிகமாகக் காணப்படுகிறது. கள்ள உறவு, காதலித்து ஏமாற்றுவது, இரண்டு மனைவிகளுடன் வாழ்கை நடத்துவது, பணத்திற்காகக் கொலைச்செய்வது போன்ற வன்முறைச் சம்பவங்கள் அதிகமாக இடம்பெறுகின்றன.

இல்லத்தரசிகளின் அதிகப்படியான நேரத்தை வீணடிப்பது சின்னத்திரையில் ஒளிபரப்பப்படும் நாடகங்களே. இதனால் மக்களிடம் பொழுது போக்கிற்காக நூல்களைப் படிக்கும் பழக்கம் குறைந்து விட்டது. ஒரே கதையை மையமாகக் கொண்டு ஏராளமான நாடகங்கள் இரண்டு ஆண்டுகளாகத் தொடர்கின்றன.

தான் செய்த தவறிலிருந்து தன்னைக் காத்துக் கொள்ள தன் மகளுக்கே பைத்தியக்காரப் பட்டம் கட்டும் தந்தை, திருமணம் செய்யாமலேயே தன் காதலனிடம் ஏமாந்து குழந்தை பெற்று தன்குடும்பத்துடன் வாழும் பெண், அண்ணனுக்கு நிச்சயம் செய்யப்பட்ட பெண்ணைத் தான் அடைய நினைக்கும் தம்பி, தன் காதலுக்காக வீட்டிலுள்ள நகை, பணம் அனைத்தையும் எடுத்துக் கொண்டு வீட்டை விட்டு வெளியேறி காதலனால் ஏமாற்றப்பட்டு அனைத்தையும் இழந்து வீடு திரும்பும் பெண், திருமணமான முறைப்பையனை மீண்டும் திருமணம் செய்து கொள்ளத் துடிக்கும் பெண் போன்ற பண்பாட்டைச் சீரழிக்கும் கதாப்பாத்திரங்கள் தான் இன்றைய சின்னத்திரங்கள் தான் இன்றைய சின்னத்திரை நாடகங்களில் அதிகம் காணப்படுகின்றன.

**பொழுதுபோக்கு நிகழ்ச்சிகளில் சீர்கேடு**

தொலைக்காட்சியில் ஒரு நாளில் அதிக நேரம் பொழுது போக்கு நிகழ்ச்சிக்காகவே ஒதுக்கப்படுகின்றன. தொலைக்காட்சி வழி உரையாடி விருப்பப்பாடலைக் கேட்டல். பிறந்தநாள் வாழ்த்து, அன்பே அன்பே போன்ற நிகழ்ச்சிகள் இளைஞர்களின் வாழ்க்கையைப் பெரிதும் கெடுக்கின்றன. நிகழ்ச்சித் தொகுப்பாளர்களின் உடைகள் மிகவும் தரம் குறைந்ததாக உள்ளன. நூறாவது நாள், நூற்றைம்பதாவது நாள் என தொலைப்பேசியில் தொகுப்பாளர்களிடம் பேசுவதை அநேக இளைஞர்கள் விரும்புகின்றனர். தங்கள் வேலைகளையெல்லாம் பெரிதாக நினைக்காமல் அவர்களிடம் பேசி நேரத்தை வீணடிப்பதுடன்

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

பண்பாட்டையும் கெடுக்கின்றன. திரைப்பட நடிகைகள் போன்று உடையணிந்து கொண்டு சிறுவர் சிறுமியர் இணைந்து நடனமாடுவது, சின்னத்திரை நட்சத்திரங்கள் ஆடுவது போன்ற நிகழ்ச்சிகளெல்லாம் சமூகத்திற்கு எவ்வித கருத்தையும் எடுத்துச் சொல்வதில்லை.

பண்டிகைகள், விழாக்கள் போது ஒளிப்பரப்படும் ஒரு சில பண்பாடு சார்ந்த நிகழ்ச்சிகளும் நடிகர், நடிகைகளைக் கொண்டே நடத்தப்படுகின்றன. சிறப்புத் திரைப்படங்கள், நடிகர், நடிகைகளின் பேட்டி போன்ற நிகழ்ச்சிகளே அதிக நேரம் ஒளிப்பரப்பப்படுகின்றன. அவையே மக்களின் எதிர்பார்ப்புகளையும் இன்று மாற்றிவிட்டன. பட்டிமன்றங்கள் என்ற பெயரில் சமூகப் பண்பாட்டுச் சிந்தனைகள் இன்றும் ஓரளவு மக்களிடம் ஏற்படுத்தப்படுகின்றன. அரைகுறை உடைகள் அணிந்து ஆணும் பெண்ணும் ஒன்று சேர்ந்து நடந்து ரும் அழகிப் போட்டிகள் மக்களிடம் பெரும் பாதிப்பை ஏற்படுத்துகின்றன. இன்றைய தொலைக்காட்சி நிகழ்ச்சிகளில் மிகவும் சீர்கேட்டு நிகழ்ச்சிகளாக பிக்பாஸ், உங்கள் வீட்டுமாப்பிள்ளை, சொப்பணசுந்தரி போன்ற நிகழ்ச்சிகளாக உள்ளன.

**வெள்ளித்திரை**

ஒவ்வொரு சினிமாவும் மக்களுக்கு நல்ல கருத்துக்களையே கூறும் என்று சொல்ல முடியாது. அதே சமயத்தில் ஒவ்வொரு சினிமாவும் ஒவ்வொன்றைச் சமுதாயத்திற்குக் கற்றுக் கொடுக்கிறது. அவற்றுள் கற்றுக் கொடுப்பதைக் காட்டிலும் இளைஞரைப் பற்றிக் கெடுப்பதே அதிகம். சான்றாகக் கடந்த சில வருடங்களாக பத்தாவது, பதினொன்றாவது மற்றும் பன்னிரண்டாம் வகுப்பு பயிலும் பள்ளி மாணவர்களிடையே காதல் வரும் என்பதை மறைமுகமாக வண்ணத்திரையின் மூலம் வெளிஉலகிற்கு வெளிச்சம் போட்டு காண்பிக்கிறது. படிக்கும் மாணவர்களைக் கெடுக்கும் வகையிலும் என்று கூறலாம்.

இது மட்டுமல்லாமல் பல திரைப்படங்களில் வன்முறை, கலவரம், திருடக்கற்று கொள்வது போன்ற சமூக விரோதக் செயல்களையும் செய்து காண்பித்து திரைப்படமாக உருவெடுப்பது முட்செடிகளைப் பாதையில் வளர்ப்பது போன்றமைந்துள்ளது. மேலும், அதற்கு நல்விருந்துகள் பல வழங்கப்பட்டிருப்பது பாதையில் முட்களை வளர்ப்பது போன்றமைந்துள்ளது. மேலும் அதற்கு நல்விருதுகள் பல வழங்கப்பட்டிருப்பது பாதணியின்று முட்பாதையில் நடப்பதாக அமைகிறது. இது போன்ற செயல்கள் வன்மையாகக் கண்டித்து களைப்பட வேண்டும்.

அன்று ஒரு மானை ஒரு புலி அடிப்பதைப் போன்ற ஓவியத்தையும் பால் கிண்ணம் கவிழ்ந்ததைப் போல் ஒரு ஓவியத்தையும் கிண்ணத்தல் உள்ள பாலைப் பூனை குடிப்பதைப் போன்ற காட்சியை மட்டுமே கற்பழிப்புக் காட்சிகளில் காட்டினார்கள். இன்று, ஒரு பெண்ணைப் பலாத்காரம் செய்வதை இரியலிசம் என்ற பெயரில் பார்க்கக் கூச்சப்படும் வகையிலும் எழுதுவதற்கே அச்சம் தரும் வகையிலும் கோரமாகக் காட்டுகிறார்கள்.

சண்டைக் காட்சிகள் வக்கிரமாகக் காட்டப்படுவதால் சின்னஞ்சிறு குழந்தைகள் 5 வயது நிரம்பிய குழந்தைகள் ஒரு குச்சியைத் துப்பாக்கி போல் கத்தியைப் போல் கையில் வைத்துக் கொண்டு விளையாடுவது ஒவ்வொரு குடும்பத்திலும் பெருகிவிட்டது.

டுமீல் என்று சொல்லிச் சுடுகிறான் 5 வயது பேரன். தாத்தா நெஞ்சில் கை வைத்த படி அய்யய்யோ என்று கூறி நிற்கிறார். அதைக் கண்ட பேரன் தாத்தா நான் சுட்டால் நீங்க கீழே விழுந்து செத்துப் போக வேண்டும். இது கூட உங்களுக்குத் தெரியவில்லையே என்று கூறுமளவு தீய கலாச்சாரம் குழந்தைகளைக் கூட விட்டு வைக்காமல் பற்றிக் கொண்டது. இரண்டு வரி திருக்குறளை ஒரு வருட காலம் படித்தும் ஆசிரியர் முன் ஒப்புவிக்க இயலாத மாணவன் ஆபாசமான சினிமாப் பாடலை சின்ன வீடு வேணுமா? பெரிய வீடு வேணுமா? என்ற இரட்டை அர்த்தமுள்ள பாடலை இரண்டு மணி நேரம் படம் பார்த்துப் பாடுவதற்குத் தன்னை ஆட்படுத்திக் கொள்கிறான் என்றால் எத்தகைய தீங்கான பாதிப்பை இளைய சமுதாயத்திடம் ஊடகங்கள் ஏற்படுத்தியுள்ளது என்பதைப் பெரியவர்கள் புரிந்து கொள்ள வேண்டும். ஔவைத் தமிழில் அன்னை ஆரோக்கியமாக எழுதிய “அறம் செய்யவிரும்பு ஆறுவது சினம்

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

“என்பதெல்லாம் மறைந்து மானாட! மயிலாட என்பது புது அறமாக, பண்பாடாக வளர்ந்துவிட்டது.

ஒரு மிட்டாயி வாசத்தை நுகர்ந்த பெண் ஒருவனுடன் ஓடுதாக ஒரு விளம்பரம் காட்டப்படுகிறது. ஒரு சோப்பு விளம்பரத்திற்காக ஒரு இளம்பெண் ஆடைகளை அவிழ்த்துவிட்டு குளியலறையில் குளிப்பது போலவும் அப்பெண்ணுடன் ஒருஇளம் வாலிபனும் குளிப்பதாகக் காட்டப்படுவதும் கேவலமானதாகத் தெரியாத நிலை வளர்ந்துவிட்டது. இல்லை இல்லை வளர்த்துவிட்டனர் தொலைக்காட்சி நடத்துவோர்.

விவகாரத்து வழக்குகள் அதிகமாகி விட்டன. விரும்பியவனோடு அவன் நல்லவனா கெட்டவனா என்று அறியாமல் ஓடிப்போய் விடுவது என்பது சாதாரணமாகிவிட்டது. பெண்மையை இழந்தபின் தற்கொலை செய்து கொள்வதும் காதலனுடன் களிப்புறவேண்டி கணவனைக் கொலை செய்வதும் நிரந்தர நிகழ்வாகி நீதிமன்றங்களில் வழக்காகப் பதிவு செய்யும் நிலை வளர்ந்துவிட்டது.

**கணினி ஊடகம்**

இணையம் என்பது அறிவியல் தொழில் நுட்பத்தின் மிகப் பெரிய பரிசு எனக்கூறலாம். பல ஆக்கப்பணிகளும், தகவல் தொடர்புக்கும் இணையம் நல்ல தகவல் சாதனம். இன்று இணையம் மூலம் உலகம் சுருங்கி விட்டது. காரணம் உலக உருண்டை. இன்று இணையம் நம் கையிலே! தமிழ் இணையதளம் மூலம் புலம் பெயர்ந்த தமிழர்களை ஒன்றாக இணைக்க முடியும். புதுப் பயணீகள் தமிழில் வந்து கொண்டுதான் இருக்கின்றன. இணையதளங்களில் ஆபாசக் காட்சிப்படங்கள் பெருமளவில் இன்று தங்குதடையின்றி வருகின்றன. இதைத் தடுக்க வேண்டும் என பல உலகநாடுகள் இன்று அறை கூவல்கள் விடுத்து வருகின்றன.

**முடிவுரை**

முடி மன்னர்கள் ஆட்சியின் போது கூட இப்படிப்பட்ட பண்பாடு சிதைவுகள் நிகழவில்லை. இன்று குடியாட்சி எனன்கிறோம். இதில் குடிகாரக் கணவரிடம் சிக்கி உதைப்படும் பெண்களின் எண்ணிக்கை தான் உயர்ந்து கொண்டிருக்கறது. இனி என்றும் இவர்களும் இவர்களை ஆட்டிப்படைக்கும் மீடியாக்களும் மாறப்போவதில்லை.பண்பாடுகள் மீளப்போவதில்லை. அழுகிய பழமாகிப் போன இவர்களால் சமுதாயத்திற்கும் இந்த நாட்டிற்கும் உலகிற்கும் எவ்வித பயனும் இருக்கப் போவதில்லை. இனிமேல் பிறக்கும் குழந்தைகளுக்காவது தொன்மை வாய்ந்த பண்பாட்டு உணர்வுகளை ஊட்டும் வகையில் பெற்றோர்களும் ஆரம்பப்பள்ளி ஆசிரியர்களும் கவிஞர்களும் கதையாள்வோரும் செயல்பட்டு ஆத்திச்சூடியும் வள்ளுமும் கட்டாயப் பாடமாகக் கொணரப்பாடுபட்டால் இவற்றில் தேர்வு பெற்றவர்களுக்கு முன்னுரிமை அளக்கப்பட்டால் மட்டுமே தமிழினத்தின் பண்பாடும் கலாச்சாரமும் இறையாண்மையும் காப்பாற்றப்படும்.

**துணைநின்ற நூல்கள்**

1. ரவி. ந.ம.வீ – ***நவீன நாடகங்களும் ஊடகங்களும்*** - உலகத்தமிழ்ராய்ச்சி நிறுவனம் 2010.
2. கௌதம சித்தார்த்தன - ***உலக சினிமாவும் தமிழ் அடையாளமும்*** - எதிர் வெளியீடு 2015.
3. ராமசாமி. அ - ***தமிழ் சினிமா காட்டப்படுவதும் காண்பதும்*** - உயிர்மை 2015.
4. ராமசாமி. அ - ***தமிழ் சினிமா அகவெளியும் புறவெளியும்*** - காலச்சுவடு 2015.
5. ஆர். டி.எக்ஸ் - ***சின்னத்திரை சில்மிஷம்*** - நக்கீரன் 2014.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019
Available at: www.ijtlls.com

6. சுரேஷ்.எம்.ஜி - ***உலகம் போற்றும் திரைப்படங்கள் ஒரு பின் நவீனப் பார்வை*** – தாமரை பப்ளிகேஷன்ஸ் – 2015.
7. வீரய்யா .ஏ.எல் - ***நாடகமும் சினிமாவும்*** - வானதி பதிப்பகம் 2012.
8. மௌலவி காத்தான்குடி பௌஸ் - ***ஊடகங்களில் உதித்த உபதேசங்கள்*** ஷைனி பதிப்பகம் - 2007.
9. ரூபன் மரியாப்பிள்ளை - ***ஊடக நேர்காணல் - ஓர் ஆய்வு*** – பிசப் சவுந்தரம் பத்திரிக்கை இயல் நிலையம் 2004.
10. யுகபாலசிங்கம்.வே - ***ஊடக அனுமானம் ஓர் அறிமுகம்*** - மெய்யிற் கல்வி அகம் 2000.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

# நாட்டுப்புறச் சிறுவர் பாடல்களில் சமுதாய அமைப்பு

# Social Order in Folkloristic Children Songs

**முனைவர் அ.சுகந்தி அன்னத்தாய்,** உதவிப்பேராசிரியர்,
தமிழ்த்துறை, எஸ்.டி.என்.பி மகளிர் வைணவக் கல்லூரி, சென்னை - 44.

## Abstract

*Folklore literature replicates the social order and folklore literature plays a fundamental role in analyzing and exhibiting the societal settings of folklorists. Folklore children songs encompass the nuances of societal momentous entities like family, caste, creed, culture, civilization etc. This paper focuses on how folklore children's songs uphold the societal ideologies and its accomplishment of thoughts to the society.*

**Keywords:** *Naladiyar*, Nature, Natural Life, Environmentally Friendly

சமுதாயத்தோடு நெருங்கிய தொடர்புடையதாக நாட்டுப்புற வழக்காறுகள் விளங்குகின்றன. நாட்டுப்புறங்களில் சிறுவர்கள் தங்கள் மன உணர்வுகளையும், பழக்கவழக்கங்களையும் பாடல்களின் வழியும், விளையாட்டுகளின் மூலமும் வெளிப்படுத்துகின்றனர். தங்களின் கருத்துகளைப் பிறரிடம் பரிமாற்றம் செய்வதற்கும், சிறுவர் சிறுமியர் என இருபாலரும் பால்பாகுபாடின்றி பழகுவதற்கும் ஒரு வடிகாலாக இப்பாடல்கள் அமைகின்றன. இச்சிறுவா் பாடல்களில் காணலாகும் சமுதாயத்தின் கூறுகளான குடும்பம், சாதி, சமயம், நாகரிகம், பண்பாடு எனப் பல்வேறு பகுதிகளையும் இக்கட்டுரை எடுத்துரைக்க முனைகின்றது. இக்கட்டுரையாளர் திருநெல்வேலி மாவட்டம் சங்கரன்கோவில் வட்டத்தைச் சார்ந்த தேவர்குளம், மேல இலந்தைக்குளம் என்ற இரு கிராமங்களில் வளர்ந்தவர். இவர் சிறுவயதாக இருக்கும்போது தம் உடன்பிறந்தாரோடும் நண்பர்களோடும் விளையாடி, பாடி மகிழ்ந்த பாடல்களை நினைவுகூர்ந்து அப்பாடல்களையே இவ்வாய்வின் மூலமாகக் கொண்டுள்ளார்.

**சமுதாயம் என்பது மக்கள் சேர்ந்து வாழும் அமைப்பு ஆகும்** [1] என்பார் சி.சத்தியசீலன். சமுதாய மக்களிடையே இலக்கியங்கள் எழுந்த போதும் அவை அவர்களைப் பற்றியதாகவே விளங்கியது. **இலக்கியங்கள் பாமர மக்களிடையே முகிழ்ந்த போதும் அவை மனித வாழ்வை ஒட்டியே முழுமையாக இலங்குவதால் அவர்தம் வரலாறு பெருமளவில் வெளிப்படுகின்றது**[2] என்று சா.வளவன் தம் கட்டுரை ஒன்றில் குறிப்பிட்டுள்ளார். **மனிதனின் முழுமையை நாட்டுப்புறப் பாடல்கள் செம்மையாகப் படம் பிடித்துக் காட்டுகின்றன**[3] என்பார் மீ.அ.மு. நாசீர் அலி அவர்கள். அவ்வகையில் அப்பாடல் வகைகளில் ஒன்றான இந்நாட்டார் சிறுவர் பாடல்களும் மனிதச் சமுதாய வாழ்வை சித்தரிக்கின்றன.

### உறவுமுறை

சமுதாயத்தின் அடிப்படைக் கூறுகளுள் ஒன்று குடும்பம். அக்குடும்பத்தின் நெருங்கிய தொடர்புடையது உறவுமுறை. உறவினர்கள் இடையே ஏற்படும் உறவின் அடிப்படையில் சு.சண்முகசுந்தரம் உறவினை ஆறு[4] வகைப்படுத்துவார்.

1.அன்பு கொள்ளும் உறவு
2.போராட்ட உறவு
3.மதிக்கத்தக்க உறவு
4.கேலிக்குரிய உறவு

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

5.தழுவல் உறவு

6.தள்ளல் உறவு

**அன்பு கொள்ளும் உறவு**

மிகுந்த அன்பும் பாசமும் கொண்ட நெருங்கிய உறவினர்களிடையே கொள்ளும் உறவு அன்பு கொள்ளும் உறவாகும். பெற்றோர் - குழந்தைகள், பாட்டன் - பாட்டி, பேரன் - பேத்தி, மாமன் - மருமகன், அத்தை - மருமகள், உடன்பிறப்புக்கள் ஆகிய உறவுகள் இடையே இவ்வன்பு நிலை காணப்படுகின்றது.

**பாட்டன் பாட்டி**

பாட்டன், தாத்தா, பேரனார் என்று பாட்டனையும், ஆத்தா, அப்பத்தா என்று தந்தையை பெற்றவளையும், ஆச்சி, பொன்னத்தா என்று தாயைப் பெற்றவளையும் 'பாட்டி' என்று பொதுவாகவும் பாட்டியைக் குழந்தைகள் அழைப்பர். இவ்விருவர் இடமும் குழந்தைகள் கேலி செய்யும் உரிமை கொள்கின்றனர். சிறுவர்கள் தாத்தா உறவினைக் கேலி செய்து, தாத்தா தாத்தா தண்ணிக்குள்ள தவள ரெண்டும் பொந்துக்குள்ள என்ற பாடலைப் பாடுகின்றனர். பாட்டி உறவினை கேலி செய்யும் விதமாக,

**"பாட்டி பாட்டி எங்க போற**
**விறகு பொறக்கப் போறேன்"**

எனத் தொடங்கும் பாடல் அமைகிறது. இப்பாடல் சிறுவர்கள் பொழுதுபோக்கிற்காக விளையாடும்போது பாடுவது ஆகும். இப்பாடலில் சிறுவர்கள் பாட்டியை ஏமாற்ற முனைவதும் பாட்டி அவர்களை விரட்டுவதுமாக இறுதியில் முடிகிறது. பாட்டி தன் பேரக் குழந்தைகளிடம் மிகுந்த அன்பு கொண்டவர். அதே நேரத்தில் கண்டிக்கும் உரிமையும், மீறினால் தண்டனை அளிக்கும் உரிமையும் அவளுக்கு உண்டு என்பதையே சிறுவர்கள் இப்பாடல் வழி உணர்த்துகின்றனர்.

**மாமன் உறவு**

குழந்தைகளிடம் மாமன் கொள்ளும் அன்பும் அக்கறையும் சிறப்பானது எனலாம். குழந்தைகளும் மாமனிடம் உரிமையுடன் பழகி கேலி செய்து விளையாடும் இயல்பு கொண்டுள்ளனர்.

**"தொந்தி மாமா வந்தாராம்**
**தொப்பிய கழத்திப் போட்டாராம்"**

என்ற பாடலில் மாமனின் உருவத்தையும் அவர் சறுக்கி விழுந்த நிகழ்ச்சியையும் கேலியுடன் பாடி மகிழ்கின்றனர். 'மழை பெய்யுது மழை பெய்யுது' என்ற மற்றொரு பாடலில்,

**"தேடி வந்த மாமனுக்கு**
**முறுக்கு கொடுங்க**
**சும்மா வந்த மாமனுக்குச்**
**சூடு போடுங்க"**

என்று உரிமையுடன் கேலி செய்கின்றனர். குழந்தைகள் தன் மாமனிடம் ஏதாவது ஒன்றினை எதிர்பார்ப்பார். அவர்கள் அதனைக் கொண்டு வந்தால் மகிழ்ச்சியோடு அவர்களை வரவேற்பர். இல்லை என்றால் அவர்களுக்கு மதிப்பு குறையும் என்பதை இப்பாடல் உணர்த்துகிறது

**அத்தை உறவு**

ஒரு பெண் தன் உடன் பிறந்தானின் குழந்தைகள் மீது அன்பு செலுத்த தவறுவதில்லை. குழந்தைகளும் அத்தையின் உறவை மிகுந்த விருப்பத்தோடு ஏற்றுக் கொள்கின்றனர். சில குழந்தைகள் முதன்முதலில் பேசிப்பழகும் போது, 'அத்த அத்த' என்று 'அத்தை' என்ற சொல்லையே உச்சரித்துப் பழகுகின்றன.

**"மாம்பூ மகிழம்பூ**
**மாமியார் வீட்டு மல்லிகப்பூ**

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019
Available at: www.ijtlls.com

**அத்த செத்த நெய்யுது**
**மாக் கொழுக்கட்டை**
**மஞ்சக் கொழுக்கட்டை**
**மாமியார் கொடுத்த**
**பிடிகொழுக்கட்டை"**

என்ற பாடல்கள் இதற்குச் சிறந்த உதாரணங்கள் ஆகும்.

**இறைபக்தி**

குழந்தைப் பருவத்திலேயே இறைபக்தி நம்பிக்கை ஆகியன பெரியவர்களால் கற்றுக்கொடுக்கப்படுகின்றன. 'கைவீசம்மா கைவீசு' என்ற பாடலில்

**"கோவிலுக்குப் போகலாம் கைவீசு**
**கும்பிட்டு வரலாம் கைவீசு"**

என்று இறை உணர்வு ஊட்டப்படுகிறது. இறைவனின் தோற்றமும் குழந்தைகளின் இதயங்களில் குத்தப்படுகிறது. 'சங்கு சக்கர சாமி வந்து ஜிங்கு ஜிங்குன்னு ஆடிச்சாம்' என்ற பாடல் திருமாலின் உருவத்தினைப் படம்பிடித்துக் காட்டும் பாடலாகும். 'யானை யானை அழகர் யானை' என்ற பாடலில், வரும் 'அழகரும் சொக்கரும் ஏறும் யானை' என்ற வரியில் வைணவக் கடவுளான அழகரையும், சைவ கடவுளான சொக்கநாதரையும் ஒருங்கே இணைத்துக்கூறும் இயல்புக் காணப்படுகிறது.

**தெய்வ நம்பிக்கை**

மக்களின் வாழ்க்கையின் அடிப்படையாய் அமைந்தது தெய்வ நம்பிக்கை ஆகும். காலம் காலமாக நம்பிக்கை காப்பாற்றப்பட்டு வருகிறது. தெய்வத்திற்குக் காணிக்கை செலுத்துவதும் நேர்த்தி செய்வதும் மக்களிடையே வழிவழியாக நிலவி வருகிறது

**"ஒத்த ரூபா கிடைச்சிது**
**கோவிலுக்குப் போட்டேன்**
**வெள்ளை வெள்ளை கொக்கே**
**வெள்ளாட்டங் கொக்கே**
**மாரியாத்தா கோயில்ல**
**மஞ்சத் தண்ணி ஊத்துறேன்**
**எனக்கொரு வெள்ள போடு"**

என்ற பாடல் வரிகள் இதனைக் காட்டுகின்றன.

**தேரோட்டம்**

**தெய்வங்களை தேரில் அமர்த்தி அழகு செய்து தெருத்தோறும் எடுத்துச் செல்வதனை தேரோட்டம்** [5] என்பர் என்று சு.சண்முகசுந்தரம் குறிப்பிடுவார். இத்தேரோட்ட நிகழ்ச்சி சிறுவர்களுக்கு மகிழ்ச்சி அளிப்பதாக அமைந்தது. தங்கள் பாட்டுகளில் அதனை நினைவுபடுத்துகின்றனர். 'மாரி மாரி ஒன்னு' என்ற எண்ணுப்பெயர் பாடலில் ஐந்தாவதாகத் தேரைக் குறிப்பிடுகின்றனர்.

**திருவிழா**

புதிய ஆடைகள், உறவினர்கள் வீட்டிற்கு வருதல், தின்பதற்குப் பண்டங்கள் ஆகிய காரணங்களால் சிறுவர்கள் பெரிதும் இன்பம் அடைகின்றனர். மகிழ்வுடன் சிறுவர்கள் கொண்டாடும் விழாக்களில் ஒன்று கார்த்திகை தீப திருவிழா ஆகும். நெருப்புக் கட்டைகளைத் தட்டி அதிலிருந்து சிதறும் மத்தாப்பு பூ போன்ற அனல் பொறிகளைக் கண்டு ரசிக்கின்றனர். அப்போது சிறுவர்கள்,

**"சோளப்பொறி சொங்குப் பொறி**
**நாளை வந்த மாப்பிள்ளைக்கு நாளிப்பொறி"**

என எனப் பாடி மகிழ்வர்

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

**சாதி**

'சாதிகள் இல்லையடி பாப்பா' என்று சிறுவர்களுக்கு அறிவுரை வழங்கிச் சென்றார் பாரதி. ஆனால் சாதி அமைப்பு சமுதாயத்தில் நீங்கா இடம் பெற்று விட்டது. அவற்றால் சமுதாயத்தில் பல தீமைகள் விளைகின்றன. "தீண்டாமையை வளர்த்தல், பரம்பரை தொழில் வரையறை மூலமாக இடம் பெயரா நிலையையும் தேக்க நிலையையும் உருவாக்குதல் சண்டைகளை வளர்த்து குழு உணர்வுகளை வளர்த்தல், நாட்டுணர்ச்சியைக் குறைத்தல் போன்ற தீமைகளையும் சாதி அமைப்பு உருவாக்கிவிடுகிறது"[6] என்று சண்முகசுந்தரம் குறிப்பிடுவது ஈண்டு நோக்கத்தக்கது ஆகும்

கிராமங்களில் சாதிப் பிரிவுகளின் பாதுகாப்பாளர்களாக விளங்கும் பெரிய மனிதர்களில் சிலர் உழைப்பவர்களிடையே அச்சாதிப் பிரிவினைகளும், முரண்பாடுகளும் நீடிக்க வேண்டும் என்று விரும்புவர்களாக உள்ளனர். இதனை கலைக்களஞ்சியம். 'ஒரு சாதியைச் சேர்ந்த உறுப்பினர் அல்லது பலர் சமுகத்தால் ஒப்புதல் அளிக்கப்படாத செய்கைகளைச் செய்து விட்டால் அவர்களை நெறிமுறைப் படுத்திச் சமூகக் கட்டுப்பாட்டை ஏற்படுத்தச் சாதிமுறை உதவி புரிகிறது' எனச் சுட்டுகிறது.

**சாதி அமைப்பு**

திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ள சாதியினரை **தலை சாதியர், இடை சாதியர், கடை சாதியர்**[7] என மூன்று வகைப்படுத்துவார் சண்முகசுந்தரம் திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள தேவர்குளம் வட்டாரத்தில் இம்மூவகை சாதியினரும் வாழ்ந்து வருகின்றனர் என்பதை கள ஆய்வின் வழி அறிந்து கொள்ள முடிந்தது. பார்ப்பனரும் வெள்ளாளரும் தலை சாதியினராகக் கருதப்படுகின்றனர். இவர்கள் இப்பகுதியில் குறைவாகவே வாழ்கின்றனர். மறவர், கோனார், செட்டியார் போன்றோர் இடை சாதியினராக கருதப்படுவர். இவ்வட்டாரத்தில் மறவர் அதிகமாகவும் மற்றவர்கள் குறைவாகவும் வாழ்கின்றனர். பள்ளர், பறையர் கடை சாதியினராக கருதப்படுகின்றனர். இப்பகுதியில் இவர்கள் பரவலாகக் காணப்படுகின்றனர். நாட்டுப்புறச் சிறுவர்கள் தாம் என்ன ஜாதியை சேர்ந்தவர்கள் என்பதை சிறு வயதிலேயே அறிந்துள்ளனர். அச்சிறுவர்கள் தாங்கள் பாடும் பாடல்களில் சாதிப் பெயரைக் குறிப்பிட்டு பிறரைக் கேலி செய்கின்றனர்.

**"எட்டெட்டும் பதினாறு**
**ஓங்கப்பன் கோனாரு"**
**"கோனாரையா கோனாரு**
**கொளத்துக்குப் போனாரு"**
**"பட்டம் பறக்குது**
**பள்ளிக்கூடம் தொறக்குது**
**கோனார் வீட்ல**
**கொய்யாப் பழம் தொங்குது"**

என்ற பாடலில் கோனார் சாதியினைச் சிறுவர்களைக் குறிப்பிட்டு கேலி செய்யும் நிலையை அறியமுடிகிறது.

**"மொட்ட பாப்பாத்தி**
**ரொட்டி சுட்டாளாம்'"**

என்று மொட்டை அடித்துக் கொண்டுள்ள சிறுமியரைப் பார்த்து, பிற சிறுவர்கள் பாடுவதுண்டு. இங்கு 'பாப்பாத்தி' என்று குறிப்பிடப்படுவது, பிராமண விதவையைக் குறிப்பதாகும்,

**"தத்தைக்கா புத்தைக்கா**
**தவளச் சோறு**
**எட்டு எருமை**

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

**பன்னி வந்து நீராட**
**பறையன் வந்து நெல்லு குத்த**
**கூப்பிடுங்க கொல போடுங்க**
**குறத்தி மவா கை எடுங்க"**

பறையர் சாதியும் குறத்தி சாதியும் குறிப்பிடப்படுகிறது.

**தொழில்**

பெரும்பாலும் உழவுத் தொழிலிலே இம்மக்கள் ஈடுபடுகின்றனர். வாழும் மண்ணிற்கேற்பவும், பருவ மழைக்கு ஏற்பவும் ஏற்ற பயிர்களைப் பயிர் செய்கின்றனர். காய் கனிகள், மிளகாய்ப் பயிர், தானிய வகைகள் ஆகியவற்றைப் பயிர் செய்கின்றனர். அதனாலேயே சிறுவர்கள் தங்கள் பகுதியில் விளைந்த பொருள்கள் பற்றி அதிகம் பாடல்களில் குறிப்பிடுகின்றனர். ஆடு மாடுகளை வளர்த்த அவர்கள், மேய்ச்சல் தொழிலில் அவற்றை ஈடுபடுத்தினர். 'குலை குலையா முந்திரிக்கா' என்ற பாடலில்,

**"சுற்றிவருபவர் : என்னாட்டைக் காணோம்**
**குழுவினர் : தேடிப் பிடிச்சிக்கோ"**

என்றும், 'ஆடு புலி' விளையாட்டில்,

**"புலி : சங்கிலி புங்கிலி கதவத் திற**
**பிள்ளைகள்: நான் மாட்டேன் வேங்கப் புலி**
**புலி: ஆட்டுக் குட்டியைக் கண்டீங்களா?"**

என்றும் பாடுகின்றனர்.

**நாகரிகம்**

"நாகரிகத்தின் சிறப்பினை உணவு, உடை, உறையுயுள், கருவிகள், அணிகலன், வாகனங்கள், மணிகள், பயன் பொருள்கள், விளையாட்டுகள், ஒப்பனைகள், அளவு முறைகள், பொழுது குறிப்புகள் போன்றவற்றின் வழியாக அறிந்து கொள்ளலாம்"[8] என்பார் சு.சண்முகசுந்தரம்.

**உணவுப்பொருட்கள்**

பால், பழம், தயிர் சோறு, பருப்புச் சோறு போன்ற உணவு வகைகள் குழந்தைகளுக்கு அடிப்படை உணவாக வழங்கப்பட்டன. அப்பம், அவல், ரொட்டி, கொழுக்கட்டை, அப்பளம், முறுக்கு, கடலை மிட்டாய், பணியாரம் போன்ற பண்டங்கள் சிறுவர்களால் விரும்பி உண்ணப்பட்டன. இச்செய்திகளைப் பல பாடல் வழி அறியலாம்.

**"கடலை மிட்டாய்ப் பொட்டணமாம்**
**நான்கு பேருக்குக் காணுமாம்**
**திங்க... நீங்க... இங்க... வாங்க!"**

**வாகனங்கள்**

நாட்டுப்புற மக்கள் பயன்படுத்திய வாகனங்கள் எளிமையானவை. மாட்டு வண்டிகள், சக்கடா வண்டி பயன்படுத்தப்பட்டன. ஆனாலும் ஆங்கிலேயரின் வரவால் வாகனங்களின் வளர்ச்சியாக கார், ரெயில் கப்பல் போன்ற வாகனப் பெயர்களைப் பாடலில் பாடி மகிழ்ந்தனர்,

**நாணயங்கள்**

வாழ்வில் புழங்கிய நாணயங்களைப் பற்றி பாடல்களில் குறிப்பிடுகின்றனர். சல்லி, துட்டு, காலணா, பணம், பைசா, ரூபாய் போன்ற பல பெயர்களில் பணத்தை வழங்கி வந்தனர். 'குத்தடி குத்தடி சைலக்கா' என்ற பாடலில் 'பைசா' என்ற சொல் பயன்படுத்தப்படுகிறது. 'மொட்ட பாப்பாத்தி' என்று பாடலில் 'காசு' என்ற சொல்லும் 'பாட்டி பாட்டி என்ன தேடுத' பாடலில் 'துட்டு' என்ற சொல்லும் நாணயத்தைக் குறிக்கப் பயன்படுத்தப்படுகிறது.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

**பண்பாடு**

**மனிதனின் அறிவு நம்பிக்கை, கலை முதலியன தாம் பண்பாடு ஒழுக்கம், பண்பு, சட்டப் வழக் பாடாக மலர்கின்றது** [9] என்பார் டெய்லர். பண்பாட்டுக் கூறுகளைக் கொண்டதாகச் சமுதாயம் விளங்குகிறது. சமுதாயத்தில் வாழும் மக்களிடையே சில பழக்க வழக்கங்கள் இருந்து வந்தன.

**திருமண உறவு**

மாமன் மகளை, அத்தை மகளைத் திருமணம் செய்துகொள்ளும் பழக்கம் காணப்பட்டது. திருமண விழா பெரியோர்களுக்க் மட்டுமல்லாமல் சிறுவர்களுக்கும் மகிழ்ச்சிச் தருவதாக அமைந்துள்ளது. பறவைகளையும், விலங்குளையும் மணமக்களாக்கி சிறுவர்கள் பாடல் பாடி மகிழ்வர். அப்பாடல்கள் வழி மணவிழா முறையினையும், அதனை சிறுவர் உன்னிப்பாகக் கவனித்து உள்ளனர் என்பதையும் அறியமுடிகிறது.

**"காக்காவுக்கும் காக்காவுக்கும் கல்யாணம்**
**காக்காவுக்கும் நரிக்கும் கல்யாணம்**
**சந்தனம் தெளித்து, முழங்க மணவிழா"**

**வரதட்சணை**

பெண்வீட்டார், மாப்பிள்ளைக்கு வரதட்ணை வழங்கி வறுமைக்கு ஆளாகினர் என்பதனையும் சிறுவர்கள் தங்கள் பாடல்களில் சுட்டிக் காட்டுகின்றனர்.

**"பெண்ணைப் பெத்தா ஆத்தா வாரா**
**ஓட்ட வண்டியில**
**மாப்பிள்ளையைப் பெத்த ஆத்தா வாரா**
**மாட்டு வண்டியில"**

என்று பெண், மாப்பிள்ளை வீட்டு வசதியை முரண்படுத்தி வேறுபடுத்திக் காட்டுகின்றனர்.

**விதவையர் நிலை**

விதவைகளுக்குச் சமுதாயம் கொடுக்கும் மதிப்பு குறைவானதே. இழிந்த பொருளாக்கி ஒதுக்கி வைக்கும் பழக்கம் இருந்தது. மங்கலம் குறைக்கப்பட்டு, அமங்கலமாக்கிப் பல கொடுமைகளை சமூகம் இழைத்ததை 'மொட்டப் பாப்பாத்தி' என்ற பாடல் வரி உணர்த்தும்.

**களவு**

பிறருடைய பொருள்களைக் கவர்ந்து செல்லும் பழக்கம் காணப்பட்டது. திருடர்களைப் பிடிப்பதும், அத்திருடர்களுக்கு உரிய தண்டை அளிப்பதும் சமூகத்தில் நிகழ்ந்தது. 'கள்ளன் - போலீஸ்' என்ற விளையாட்டு மூலமாகவும், 'இதாரு கொம்பு' பாடலின் இறுதியில், 'கள்ளனை - வெட்டவா? குத்தவா?' என்று கூறுவதில் இருந்து இதனை அறியலாம்.

**சமையல் கலை**

நாட்டை ஆளும் உரிமை கொடுக்கும் இக்காலக் கட்டத்திலும் பெண்களுக்கு உரிய கலையாக சமையல் வலியுறுத்தப்படுகிறது. சிறுவயதிலேயே சமையல் செய்வதில் வல்லவர்களாகப் பெண்கள் விளங்கினர். பெண்கள் செய்யும் சமையல் வகையினைப் பல பாடல்கள் காட்டுகின்றன.

**"தோசையம்மா தோசை**
**அரிசி மாவும் உளுந்த மாவும்**
**அரைச்சு சுட்ட தோசை"**
**"பரங்கிக் காயைப் பறித்து**
**பட்டையெல்லாம் சீவி**

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

**பாவக்கா பாவக்க**
**பச்சை பச்சை பாவக்க**
**பாலூத்தி பொறி பொறிக்க"**

**நகரங்கள்**

பம்பாய், கல்கத்தா போன்ற பெரிய நகரங்கள், தஞ்சாவூர், மயிலாப்பூர், தூத்துக்குடி, செங்கோட்டை, திருக்காங்குடி போன்ற பல்வேறு நகரங்களின் பெயர்கள் இவர்கள் பாடும் பாடல்களில் காணப்படுவதல் இவர்களின் நகரங்கள் மற்றும் ஊர்கள் பற்றிய அறிவினை அறிந்து கொள்ள முடிகிறது.

**"சென்னை பம்பாய் கல்கத்தா**
**செவிட்ல இரண்டு கொடுக்கட்டா**
**திருச்சி பம்பாய் கல்கத்தா**
**திருப்பி ரெண்டு கொடுக்கட்டா"**

**தலைவர்கள்**

நாட்டை ஆளும் தலைவர்கள் பற்றியும் சிறுவர்கள் அறிந்திருந்தனர். 'அதோ பார் ரோடு' என்ற பாடலில், 'எங்க மாமா நேரு' என்று நேருவும், மற்றொரு பாடலில், 'எம்.ஜி.ஆர் சண்ட பார்வதி கொண்ட' என்று எம்.ஜி.ஆரும் குறிப்பிடப்படுகின்றனர்.

**வரலாற்று அறிவு**

தங்கள் நாட்டை முகலாயர் ஆட்சி செய்ததன் விளைவாக, 'துலுக்கர்' என்ற சொல்லைப் பாடலில் பயன்படுத்தினர். 'ஒரு குடம் தண்ணி எடுத்து ஒரு பூப் பூத்தது' என்ற பாடலில்,

**"இம்புட்டு பணம் தாரேன்**
**விடுடா துலுக்கா"**

என்று பாடுகின்றனர்.

**முடிவுகள்**

பண்பாட்டின் எல்லா நிலைகளிலும் மக்களால் பின்பற்றப்பட்டுவரும் உறவுமுறைகள், பழக்க வழக்கங்கள், சமய வழிபாட்டு முறைகள், நாகரிகம், பண்பாட்டுக் கூறுகள் ஆகிய சமுதாய உட்கூறுகளை வெளிப்படுத்தும் நிலைக்களனாக இச்சிறுவர்பாடல்கள் அமைந்துள்ளன. இது போன்ற நாட்டுப்புற வழக்காறுகளை சேகரிப்பதும் பாதுகாப்பதும், தமிழர் பண்பாட்டை உலக அரங்கில் நிலைநிறுத்தும் முயற்சியாக அமையும் என்பது ஆய்வாளர் கருத்தாக அமைகிறது.

**அடிக்குறிப்புகள்**

1. சி.சத்தியசீலன், நாட்டுப்புற இலக்கிய ஆய்வுகள், ப.63.
2. தே.லூர்து.,(ப.ஆ) நாட்டார் வழக்காற்றியல் ஆய்வுகள்., தொகுதி 1, ப.261.
3. மீ.அ.மு.நசீர் அலி., நாட்டுப்புறப் பண்பாட்டியல்., ப.105.
4. சு.சண்முகசுந்தரம், திருநெல்வேலி மாவட்ட நாட்டுப்புறப் பாடல்களில் சமுதாய அமைப்பு, ப.140.
5. மேலது., ப.236.
6. மேலது.,ப.160-161.
7. மேலது., ப.160.
8. மேலது., ப.251.

E-ISSN: 2581-7140

Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

9. தே.லூர்து., மு.நூ., ப.270.

**துணைநூற்பட்டியல்**

1. சி.சத்தியசீலன்., நாட்டுப்புற இலக்கிய ஆய்வுகள். சென்னை. 1998.
2. தே.லூர்து., (ப.தி) நாட்டார் வழக்காற்றியல் ஆய்வுகள்., தொகுதி 1, பாரிவேள் பதிப்பகம், பெருமாள்புரம், 1981.
3. சு.சண்முகசுந்தரம்., திருநெல்வேலி மாவட்ட நாட்டுப்புறப் பாடல்களில் சமுதாய அமைப்பு.. காவ்யா பதிப்பகம். சென்னை. 1996.

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019
Available at: www.ijtlls.com


# குறுந்தொகை மாந்தர் கூந்தற் பெருமை

## The Pride of Women's Tress in *Kurunthokai*

**கோ.சுகன்யா,** உதவிப்பேராசிரியர்,
தமிழ்த்துறை, பூசாகோஅர கிருஷ்ணம்மாள் மகளிர் கல்லூரி, கோயம்புத்தூர் - 641004.

## Abstract

*This paper presents the important aspects and vital role of 'Manthaar Kunthal' (hair of wwomen) in the twentieth century. It also talks about how it was described in the Epic "Kurunthogai"with different hair styles adopted in the olden days. The various terms used for the hair styles are quoted in the Sanga Illakkiyam are listed as well as evidenced that how the kunthal was associated in many ways in the ancient days. It was revealed that the kunthal colour had compared with black soil and also equalized as the pillow for their spouse. It is also highlighted that the kunthal has treated as the symbol for love and some of their cultural activities. Moreover, it is briefed on the methods that are used to beautify their hairs by the ancient Tamil ladies with cited examples.*

**Keywords:** *Kurunthogai*, Women Hair style, Kunthal (Hair) as symbol of love

### முன்னுரை

சங்க காலத்தில் தோன்றிய இலக்கியங்கள் பத்துப்பாட்டு, எட்டுத்தொகை என்று பகுக்கப்படுகின்றன. இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பிருந்தே, தமிழ் நிலத்தில் மக்கள் வாழ்ந்து வந்துள்ளனர். அந்தக் காலத்தில் வாழ்ந்த மக்களைப் பற்றியும், அவர்களது வாழ்க்கை முறை பற்றியும், அவர்கள் செய்த தொழில் பற்றியும், அவர்கள் பின்பற்றி வந்த கலாச்சாரங்கள், அவர்கள் அணிந்த அணிகலன்கள் ஆகியவற்றைப் பற்றியும் அறிந்து கொள்ள உதவும் அடிப்படையான ஆதாரமாக நமக்குக் கிடைப்பன சங்க இலக்கியங்களாகும்.

அவ்வகையில் சங்க கால மகளிர் தங்கள் கூந்தலை எவ்வாறு அலங்காரம் செய்து கொண்டனர் என்பது பற்றியும், கூந்தலின் வேறு பெயர்கள் பற்றியும் எட்டுத்தொகை நூல்களில் ஒன்றான குறுந்தொகை நூலில் பெண்களின் கூந்தல் பற்றிக் கூறப்பட்டுள்ள செய்திகளையும் சான்றுகளுடன் இக்கட்டுரையில் காண்போம்.

### கூந்தலின் வேறுபெயர்கள்

தமிழ் இலக்கியங்களில் கூந்தலைக் குறிப்பதற்குப் பல்வேறு சொற்கள் பயன்பட்டுள்ளன. கூழை, ஓதி, சிரியல், சுரியல், கோதை, குரல், கூரல், கொப்பு, முச்சி, சிகழிகை, மராட்டம், பரிசாரம், குந்தளம், விலோதம், மிஞ்சிகம், தம்மிலம் என்பன அவற்றுள் சிலவாகும். குறுந்தொகையில் கூந்தல் "ஐம்பால்" என்ற சொல்லால் குறிக்கப்படுகிறது.

**"இவனிவ ளைம்பால் பற்றவு மிவளிவன்**
**புன்றலை யோரி வாங்குநள் பரியவும்"** (குறுந்.229:1-2)

### கூந்தல் பகுப்பு

இலக்கியங்களில் புலவர்கள் குறிப்பிட்டுள்ள கூந்தல் பகுப்புகள் பல. உச்சி முடிப்பு, சுருட்டி முடிப்பு, தொகுத்து முடிப்பு, பனிச்சை, பின்னல், பின்செருகி முடிப்பு, வகுத்து முடிப்பு, விரித்து முடிப்பு, முடித்து விரித்தல் எனப் பல வகைப் பகுப்புகள் இருப்பினும் பொதுவாக

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

முடி, குழல், கொண்டை, பனிச்சை, சுருள் ஆகிய வகைகள் ஐம்பால் அல்லது ஐம்பால் முடி எனப்படுகிறது.

புணர்ந்து நீங்கும் தலைவன், தன் நெஞ்சிற்கு சொல்லியதாக வரும் ஓரம் போகியார் பாடிய பாடல், தலைவி ஐம்புலனுக்கும் இன்பம் தருபவள். அவள் சிக்கில்லாத தலைமுடியைச் சீவி முடித்திருப்பாள். ஒளிரும் நெற்றி உடையவள் எனப் பராட்டுகின்றான்.

**"ஒடுங்கீ ரோதி ஒண்ணுதற் குறுமகள்**
**நறுந்தண் ணீரள் ஆரணங் கினளே" (குறுந்.70:1-2)**

இங்கே ஓதி என்றது ஐவகைக் கூந்தல் பகுப்பில் ஒன்றாகிய சுருளை குறித்து வந்தது.

**கூந்தலின் இயற்கை மணம்**

இயற்கைப் புணர்ச்சியின் போது, தலைவியின் நலம் பாராட்டி தலைவன் தன் அன்பு தோன்றக் கூறிய பாடலில், தலைவியின் இயல்பினை எடுத்துக்கூறிய தலைவன், தலைவியின் இயல்பினை "மயில் இயல்" என்கிறான். தலைவியைத் தான் சந்தித்த போது தலைவியின் முகத்தில் தெரிந்த முறுவலும், தழுவிய போது உணர்ந்த அவள் உடலின் மென்மையும், கூந்தலில் நுகர்ந்த மணமும் தலைவனின் இயல்பான மன உணர்வினைக் காட்டும் இனிய பாடலானது.

**"கொங்குதேர் வாழ்க்கை அஞ்சிறைத் தும்பி**
**காமஞ் செப்பாது கண்டது மொழிமோ**
**பயிலியது கெழீஇய நட்பின் மயிலியற்**
**செறியெயிற்று அரிவை கூந்தலின்**
**நறியவும் உளவோநீ அறியும் பூவே" (குறுந்.2)**

தும்பி, நீ அறியும் பூக்களுள் அரிவையின் கூந்தலைப் போல நறியவும் உளவோ? கூறுவாய் என்று தும்பியிடம் கேட்பதாக அமைந்த பாடலில் தலைவியின் கூந்தல் இயற்கை மணமுடையது என்கிறார் இறையனார். பெண்களின் கூந்தலுக்கு இயற்கை மணம் உடையதென்பதை, குறுந்தொகையின் பல பாடல்கள் உணர்த்துகின்றன.

**"கூந்தல்............**
**நன்னெறி யவ்வே நறுந்தண் ணியவே" (குறுந்.116:1-4)**
**"கைவள் ளோரி கானந் தீண்டி**
**எறிவளி கமழும் நெறிபடு கூந்தல்" (குறுந்.199:3-4)**
**"நறுமென் கூந்தல்" (குறுந்.270:8)**
**"நாறிருங் கூந்தல்" (குறுந்.272:8)**
**"கூந்தல் வேய்ந்த விரவுமல ருதிர்த்துச்**
**சாந்துளர் நறுங்கதுப் பெண்ணெய் நீவி" (குறுந்.312:5-6)**

**கூந்தலில் பூச்சூடுதல்**

சங்க கால மகளிர் தங்கள் கற்புக்கு அறிகுறியாக முல்லை மலரைத் தலையில் சூடுதல் மரபு. அதனடிப்படையில் மகளிர் தம் வீடுகளில் முல்லைக் கொடிகளை வளர்த்து அதை ஒளி வீசுகின்ற மாலை அல்லது இரவுப் பொழுதில் சூட்டி மகிழ்ந்தனர் என்பதை,

**"எல்லுறு மௌவ னாறும்**
**பல்லிருங் கூந்தல் யாரளோ நமக்கே" (குறுந்.19:4-5)**
**"கூந்தல் வேய்ந்த விரவுமல ருதிர்த்துச்" (குறுந்.312:5)**

தலைவி தன் கூந்தலில் பலவாகக் கலந்த மலர்களை அணிந்திருந்தமை புலப்படுகிறது. கூந்தலில் ஆம்பல் மலரைச் சூடிக்கொண்டதை,

**"கூந்தல் ஆம்பல் முழுநெறி அடைச்சி" (குறுந்.80:1)**

என்ற பாடல் விளக்கும்.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

**கூந்தற் சிறப்பு**

சங்கப் புலவரான இளங்கீரனார் என்னும் புலவர் குறுந்தொகையில் கூந்தலின் பெருமை பேசுகிறார். ஊழின் வலிமையால் தலைவியைக் கண்டு காதல் கொள்கிறான் ஒரு தலைவன். அவள் அருகில் நின்று பேசும்போது கூந்தலின் தன்மையை உணர்ந்து கூறுகின்றான்.

**"யானயந் துறைவோ டேம்பாய் கூந்தல்**
**வளங்கெழு சோழ ருறந்தைப் பெருந்துறை" (குறுந்.116:1-2)**

நான் விரும்பும் தலைவியுடைய கூந்தல் நாள் மலரின் தேன் பாயும் கூந்தல் என்கிறான் இன்னொரு தலைவன். போர்க்கடமை முடித்து வீட்டிற்குத் திரும்புகிறான். மின்னியும் முழங்கியும் ஆரவாரத்துடன் மழை பெய்கிறது. அப்பொழுது மழையை வாழ்த்துகின்றான். செய்வினை முடிந்த செம்மல் உள்ளத்தோடு இவளைப் பொருந்தினேன். தலைவி தன் கூந்தலில் சூடிய குவளையினது அரும்புகள் மணக்கின்ற நல்ல மெல்லிய கூந்தல் பாயலில் இருந்தேன் என்று கூறுகின்றான்.

**"……..குவளை**
**குறுந்தா ணாண்மலர் நாறும்**
**நறுமென் கூந்தல் மெல்லணை யேமே" (குறுந்.272:8)**

ஒருசிறைப் பெரியன் என்ற புலவர் பாடிய இப்பாடலில், தலைவி பெறுதற்கரியவள். அவளது மணம் வீசுகின்ற கூந்தலையும், தோளையும் மீண்டும் தழுவுதல் அரிது என்று தன் தோழனிடத்துக் கூறுகிறான்.

**கூந்தலுக்கு களிமண் தேய்த்தல்**

குறுந்தொகை மாந்தர் தம் கூந்தலுக்கு எண்ணெய் தேய்த்தலும், எண்ணெய் பசை நீங்க களிமண் தேய்த்துக் குளித்தலையும் நீராடல் வழக்கமாகக் கொண்டிருந்தனர் என்பதை,

**"ஊர்க்கும் அணித்தே பொய்கை பொய்கைக்குச்**
**சேய்த்தும் அன்றே சிறுகான் யாறே**
**இரைதேர் வெண்குரு கல்ல தியாவதும்**
**துன்னல்போ கின்றாற் பொழிலே யாமெம்**
**கூழைக் கெருமண் கொணர்கஞ் சேறும்**
**ஆண்டும் வருகுவள் பெரும்பே தையே" (குறுந்.113)**

போன்ற குறுந்தொகைப் பாடலடிகளால் பெண்கள் தம் கூந்தலில் களிமண்ணைத் தேய்த்து என்ணெய் நீங்கக் குளித்தனர் என்ற செய்தி கூறப்படுகின்றது.

**பிற செய்திகள்**

குறுந்தொகைப் பெண்கள் தம் கூந்தலைப் பேணி, வளர்த்து, சீவி, நறுமணப்புகை காட்டி, பலவித பூக்களைச் சூடி மணமாக வைத்திருப்பர். "மனவுக் கோப்பன்ன நன்னெடுங் கூந்தல்" (குறுந்.23:2) என்றும், "நரத்த நாறும் குவைஇருங் கூந்தல் (குறுந்.52-3), "இரும்பல் கூந்தல் இயலணி கண்டே" (குறுந்.165-5) என்றும், "இவள் ஒலிமென் கூந்தல் உரியவா நினக்கே" (குறுந்.225:6-7), குவளை நாறும் குவையிரும் கூந்தல்" (குறுந்.300-1), "நெடும்பல் கூந்தல் குறுந்தொடி மகளிர்" (குறுந்.384-2), "நீர்வார் கூந்தல் ஓரை மகளிர்" (குறுந்.401:2-3) என்றும் குறுந்தொகைப் புலவர்கள் பெண்களின் கூந்தற் பெருமை பேசுகின்றனர்.

**நிறைவுரை**

குறுந்தொகைப் பாடல்களால் சங்ககாலப் பெண்கள் தங்கள் கூந்தலை எவ்வாறு அழகுபடுத்திக் கொண்டனர் என்பது தெரிகிறது. பெண்ணிற்கான பண்பாட்டு அடையாளங்களுள் ஒன்றாக கூந்தல் கருதப்படுகிறது. ஆண்களின் தலைமுடி "ஓரி" என வழங்கப்பட்டது. பெண்களின் கூந்தலுக்கு இயற்கை மணம் உண்டா? இல்லையா என்ற விவாதம் எழுகின்றது. கூந்தல் அளகம், பித்தை, ஓதி, கூழை, முச்சி, கதுப்பு, ஐம்பால் என பல பெயர்களால் குறிப்பிடப்படுகிறது. கூந்தல் நுண்ணிய கருமணலுடன் ஒப்பிடப்படுகிறது. பெண்ணின் கூந்தல்

E-ISSN: 2581-7140

Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

தலைவன் துயிலும் தலையணை என்பது தெரிகிறது. பெண்ணின் கூந்தல் பேசப்பட்ட அளவிற்கு வேறு உறுப்புகள் பேசப்படவில்லை என்றே தோன்றுகிறது.

**பயன்பட்ட நூல்**

1. குறுந்தொகை மூலமும் உரையும் - டாக்டர் உ.வே. சாமிநாதையர், இரண்டாம் பதிப்பு, கபீர் அச்சுக்கூடம், சென்னை-1947.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

# கேரள நாட்டார் வழக்காறுகளில் வேலன் வெறியாட்டு

## 'Velan Veriaattu' (Fiery Dance) in Kerala Folklore

**முனைவர் நா.செந்தில்**, முனைவர் பட்ட ஆய்வாளர்,
தமிழ்த்துறை, கேரளப்பல்கலைக்கழம், திருவனந்தபுரம்.

**Abstract**

*Sangam literature is the compilation of Tamil poems, which were written in the ancient period. These compiled poems were written on the basis of type of land (Thinai) they had lived. These poems are still keeping their individual traditions of people within the boundaries as mentioned in the 'Tholkappiyam'. Nowadays those boundaries had broken. The region 'Tamizhagam' mentioned in the 'Tholkapiyam' included today's Tamil Nadu, Kerala, South East of Karnataka and Southern region of Andhra Pradesh. Slang, Culture, Functional practices of people belonged to the region 'Tamizhagam' have changed in different aspects now, but not completely. It is interesting to note that, even now some of the people follows those slang, culture, functional practices, etc. especially the folklore of Kerala. If we compare the folklore of Kerala with Sangam Literatures, we can realize the cultural maturity of Tamil, traditional continuations and the changes within it. This chapter deals with the traditional folk performances like Theyyattam of Kerala and its relation to Sangam references in particularly the relations of Velan Veriyaattu and Theyyaattam.*

**Keywords:** 'Velan (Priest of Lord Muruga) Veriaattu (Fiery Dance)', Kerala Folklore

தமிழ் இலக்கிய வரலாற்றிலும் சமூக வரலாற்றிலும் சங்க காலம் பொற்காலமாகக் கருதப்படுகிறது. சங்க இலக்கியங்கள் காட்டும் சமூக வாழ்வியல் நெறிகள், பண்பட்ட தமிழரின் சமூக நெறிப்பாடுகளைப் பெருமிதத்துடன் எடுத்துரைக்கின்றன. 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்ற உலகளாவிய பார்வை கொண்டுள்ள சங்கப் பாடல்கள், காதலின் மென்மையான உணர்வுகளையும், போரின் வெளிப்பாடான வீர நிகழ்வுகளையும், மன்னர்களுக்கு அறிவுரை கூறும் புலவர்களின் வலிமையையும், பல்வேறு அனுகுமுறைகளில் எடுத்துக்காட்டுகின்றன.

சங்க இலக்கியங்கள் பாடப்பட்ட காலம், வேந்தர்களின் உதவியோடு அவை தொகுக்கப்பட்ட காலம், அத்தொகுப்பு நூல்களுக்குப் பல்வேறு மரபைச் சார்ந்தவர்கள் உரையெழுதிய காலம், அந்நூல்களும் உரைகளும் தலைமுறை தலைமுறையாகக் கையாளப்பட்டு பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் சி.வை.தாமோதரம் பிள்ளை, உ.வே.சாமிநாதையர் போன்றவர்களால் அச்சுவடிவம் ஏற்றப்பெற்ற காலம் என வழி வழியாக வழங்கப்பட்ட இவ்விலக்கியங்கள் பல்வேறு அறிஞர்களாலும், வரலாற்று ஆசிரியர்களாலும், கோட்பாட்டாளர்களாலும் ஆய்வுக்கு உட்படுத்தப்பட்டுள்ளன.

சங்க காலத் தமிழகம் என்பது இன்றைய தமிழகம் மட்டுமல்லாது அதனைச் சுற்றியுள்ள கேரளம், கர்நாடகம், ஆந்திரம் போன்ற பிற மாநிலப் பகுதிகளையும் உள்ளடக்கியது என்னும் கருத்து வரலாற்றாய்வாளர்களால் மெய்ப்பிக்கப்பட்டதாகும். பரந்துபட்ட நிலப்பரப்பில் எழுந்த இவ்விலக்கியப் பதிவுகள் அக்காலச் சூழலில்

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

நடைமுறையில் காணப்பட்ட பழக்க வழக்கங்கள், பண்பாடு, மரபு சார்ந்த நம்பிக்கைகள், சடங்குகள் எனப் பல்வேறுபட்ட சமூகக் கூறுகளைக் கொண்டுள்ளன.

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு மேலான பழமை வாய்ந்த இப்பனுவல்கள் தற்கால அரசியல், பொருளாதாரம், மொழி போன்றவற்றின் வளர்ச்சியில் பழந்தமிழகத்தின் எல்லைகள் உடைக்கப்பட்டு மொழி வாரியான மாநிலங்களாக வடிவம் பெற்றுள்ளன. இவற்றுள் மலையாள மொழியைத் தாய்மொழியாகக் கொண்ட கேரள மாநிலத்தில் மேற்குறிப்பிட்ட தமிழ்ச் சமூகத்தின் பண்பாட்டு மரபுகள் சில நாட்டுப்புற வழக்கங்களாகச் செயல்பட்டுவருகின்றன. எனவே அவற்றுள் குறிப்பாக வேலன் வெறியாட்டு மரபை விளக்கும் வகையில் இவ்வாய்வுக்கட்டுரை அமைகின்றது.

**வேலன் வெறியாட்டு**

பழந்தமிழரின் தனித்தன்மையினை எடுத்துக்காட்டும் வழிபாட்டு மரபு வேலன் வெறியாட்டு. வழிபாடு நடத்துபவன் வழியாக இறைவன் வெளிப்படுவான் என்ற நம்பிக்கையின் அடிப்படையில் தோன்றிய வழிபாடு ‘வெறி’ எனவும் வெறியயர்தல் எனவும் அறியப்படுகிறது. “‘வெறி’ என்ற சொல்லுக்கு வெறுவுதல், கலக்கம், வெறியாட்டு, வட்டம், அஞ்சுதல், கதனம், வேலனாட்டம், வெறிநாற்றம், பேய், துருவை, கள், பிசாசம், ஆடு, சுறா ஆகிய பெயர்களைத் தருகின்றது சூளாமணி நிகண்டு”[1]. ‘மருந்தாலும் பிறவற்றாலும் நீங்காத நோய் வெறியாட்டத்தால் நீங்கும்’ என்ற நம்பிக்கையின் அடிப்படையில் வெறியாட்டயர்தல் நடத்தப்பட்டுள்ளது. காதல் வயப்பட்ட பெண்ணின் உடல்நலம் குன்றியதால் அதனைத் தீர்க்கும் வகையில் செய்யப்படும் வழிபாட்டுச் சடங்காகவே இது அமைகிறது. சங்க இலக்கியங்களில் குறிப்பிடப்பட்டுள்ள முருக வழிபாட்டின் பெரும்பகுதியும் வெறியாடல் நிகழ்வின் தொடர்பாகவே அமைந்துள்ளது.

கா.கைலாசபதி அவர்கள் வெறியாடல் பற்றிக் கூறுகையில், “வெறியாட்டு என்பது பெரும்பான்மை முருக பூசை செய்யும் வேலன் என்பவனும், சிறுபான்மை தேவராட்டி என்னும் குறமகளும் தெய்வமேறி ஆடுங் கூத்தாகும். வேலன் ஆடுங் கூத்தை வேலனாடல் என்பர். முருக பூசை செய்வோன் முருகனுக்குரிய வேலை ஏந்தி அதைத் தனக்கு அடையாளமாகக் கொண்டிருப்பதால் அவனுக்கு வேலன் என்னும் பெயர் வந்தது.

அவன் தெய்வம் ஏறி ஆடுவதனால் வெறியாட்டாளன் என்றும், அந்த ஆவேசத்தால் குறிசொல்லுவதனால் படிமத்தான், தேவராளன், சன்னதக்காரன் எனப் பலவாறாகவும் அழைக்கப்படுகிறான். அவன் ஆடும் போது கண்ணி கடம்பம், காந்தள், கார் காலத்துக் குறிஞ்சி, அலரி ஆகிய முருகனுக்குரிய மலர்களுள் ஒன்றை அணிந்து கொள்வான். முருகனே அவன் உடலில் நின்று ஆடல் புரிகின்றான் என்பது பக்தர்களின் கொள்கையாதலால் அவனை ‘வெறிபுரிஏதில் வேலன்’ என்றும், ‘பொய்யாமரபினூர் முதுவேலன்’ என்றும் நூல்கள் கூறும்”[2] என்று கூறியுள்ளார். தொல்காப்பியர் காலத்திற்கு முன்பே வெறியாட்டு பெருவழக்காக இருந்துள்ளது என்ற செய்தியினை,

> **“வெறியறி சிறப்பின் வெவ்வாய் வேலன்**
> **வெறியாட் டயர்ந்த காந்தளும்”** [3]

என்ற நூற்பா வழி வெறியாட்டிற்குரிய இலக்கணத்தைத் தொல்காப்பியர் சுட்டியுள்ளார். மேலும்,

> **“வெய்ய நெடிதுயிரா வெற்பன் அறிநினையா**
> **ஐயநனி நீங்க ஆடினாள் – மையல்**
> **அயன்மனைப் பெண்டிரொடன்னை சொல் அஞ்சி**
> **வியன்மனையுள் ஆடும் வெறி”** [4]

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019
Available at: www.ijtlls.com

என்று புறப்பொருள் வெண்பாமாலை, தலைவன் மீது உண்டான மையலினால் தலைவிக்கு ஏற்பட்ட பசலை நோயினை அறியும் பொருட்டு நடத்தப்பெறுவது வெறியாட்டாகும் எனக் குறிப்பிட்டுள்ளது.

**கேரளத்தில் வேலன் வெறியாட்டு மரபு**

அக இலக்கியங்கள் தலைவியின் காதல் நோய் நீங்க நடத்தப்பட்ட வழிபாட்டு மரபு வேலன் வெறியாட்டு. இவ்வழிபாடு தமிழர் வழிபாட்டு முறையில் மிகப்பழமை வாய்ந்தது. மனிதன்மேல் தெய்வம் ஏறி வருவதுண்டு என்ற நம்பிக்கையின் அடிப்படையில் உருவானது. காதல் கொண்ட தலைவியின்பால் உள்ள தீயசக்திகளை விரட்ட ‘வேலன்’ என்ற பூசாரி, வரவழைக்கப்பட்டு நடத்தப்பட்ட வழிபாட்டு முறைகளை விளக்குவது.

இதில் வேலன் என்போன் தீய சக்திகளை விரட்ட முருகனை வழிபடுகின்றான். தரையில் களம் அமைத்து, அக்களத்தில் ஆட்டினை அறுத்து இரத்தத்தினைத் தினை அரிசியுடன் கலந்து சிவந்த மலர்கள் பல சேர்த்துக் களத்திலிட்டு மந்திரங்கள் கூறி வழிபடுகின்றான். காலத்தால் பிந்தியவை என்று அறிஞர்களால் கூறப்பட்ட திருமுருகாற்றுப்படை, கல்லாடம் போன்ற நூல்களில் வெறியாடல் பற்றிய விரிவான வருணனைகள் காணப்படுகின்றன.

இத்தகைய வழிபாட்டு மரபு தமிழ்நாட்டில் வழக்கிழந்து காணப்படினும் தமிழகத்தின் அண்டை மாநிலமான கேரளத்தில் வடக்கு மலைநாடு என்று அழைக்கப்பட்டிருந்த கண்ணூர், காசர்கோடு, கோழிக்கோடு, வயநாடு போன்ற மாவட்டங்களில் ‘திறயாட்டம்’, ‘தெய்யாட்டம்’ என்ற பெயர்களில் ஒரு கிராமியக் கலைவடிவமாக நடத்தப்பட்டு வருகின்றன. இந்நிகழ்வில் வேலன், பாணன், என்ற பழங்குடி சமூகத்தினரே வழிபாடு நடத்துபவர்களாக இருக்கின்றனர்.

இவர்கள் நடத்தும் வழிபாட்டு முறைகளில் சிற்சில மாற்றங்களுடன் பண்டைய வேலன் வெறியாட்டு மரபு கலந்திருக்கின்றன. களம் அமைத்தல், களத்தில் வைக்கப்படும் பூசைப் பொருட்கள், உயிர்ப்பலி கொடுத்தல், வேலன் அணியும் ஆடை அலங்காரங்கள், வழிபாட்டு முறைகள் என பல்வேறு தன்மைகளில் ஒற்றுமைகள் காணப்படுகின்றன. வேலனாட்டத்தின் எச்சமாகக் கேரளத்தில் நடைபெறும் இவ்வழிபாடு பழந்தமிழரின் பண்பாட்டையும் பழக்கவழக்கங்களையும் வெளிப்படுத்தும் விதமாக அமைந்துள்ளன.

சங்க இலக்கியங்களில் குறிப்பிட்டுள்ள வேலன் வெறியாட்டு நிகழ்வைத் ‘தெய்யாட்டம்’ என்ற கேரள நாட்டுப்புறக் கலைவடிவம் எங்ஙனம் பிரதிபலிக்கின்றது என்பதைப் பற்றி பி.எல். சாமி அவர்கள் ‘வேலன் வழிபாடு’ என்ற கட்டுரையில் விவரித்துள்ளார். இக்கருத்தை மேலும் விரிவாகக் கேரள வரலாற்றுத்துறை பேராசிரியர் கே.கே.என் குறுப்பு என்பவர் ஆராய்ந்துள்ளார். இவர் தெய்யாட்டம் தோற்றம் என்பன பற்றிக் கூறுகையில் “சங்க காலத்திலிருந்து வீரக்கல் வழிபாடும் வேலன் வெறியாட்டமும் பிற்காலத்தில் ஒன்றுபட்டு ஒரு தனி நடனமானது. அதாவது வேலன் வெறியாட்டம் உருமாற்றம் பெற்று ‘தெய்யம்’ என்று வழங்கப்பட்டது”.[7] வேலன் வெறியாட்டம் தற்காலத்தில் தமிழகம், கேரளம், கர்நாடகம் போன்ற மாநிலங்களில் எவ்வாறு அழைக்கப்படுகின்றன என்பதைக் கீழ்வரும் அட்டவணையின் மூலம் தெரிந்துகொள்ளலாம்.

**தமிழகத்தில்**




**கேரளத்தில்**



E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

சி.எம்.எஸ். சந்தேர என்பவர் "தெய்யாட்டத்தில் தெய்வம் ஏறி ஆடப்படுவது 'கோமரம்' என்று சொல்லப்படும் பூசாரியிலிருந்தாகும்" என்று கூறியுள்ளார். இங்ஙனம் திராவிட வழக்கத்தில் உள்ள சாமியாட்டம் என்பது கேரளத்தில் 'வெளிச்சப்பாடு' அல்லது 'கோமரம்' ஆட்டமாகப் பரவப்பட்டதாகவும், வடகேரளத்தில் இந்த கோமர ஆட்டம் பிற்காலத்தில் தெய்யாட்டமாக வளர்ச்சி பெற்றுள்ளது என்றும் கூறியுள்ளார்.

**வேலன் வெறியாட்டமும் தெய்யாட்டமும்**

தலைவியின் காதல்நோய் நீங்க நற்றாய் ஏற்படுத்திய வேலன் வெறியாட்டுச் சடங்கில் நடத்தப்பட்ட வழிபாட்டு முறைகள் பல்வேறு முறையில் சங்க இலக்கியங்கள் பதிவு செய்துள்ளன. இவை அனைத்தும் இரண்டாயிரம் ஆண்டுக்கு முன் வாழ்ந்த தமிழர்களின் பண்பாட்டை எடுத்துரைப்பனவாக உள்ளன. பண்டைய தமிழகம் இன்று அரசியல், பொருளாதாரம், கலாச்சாரம், பண்பாடு போன்றவற்றால் பல பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டு மொழிவாரிய மாநிலங்களான பொழுதும், சங்ககால வேலன் வெறியாட்டு மரபு சிற்சில மாற்றங்களுடன் கேரளம், தமிழகம், கர்நாடகம் போன்ற மாநிலங்களில் நிகழ்த்தப்பட்டு வருகின்றன. இவற்றுள் அந்தந்த மொழி கலாச்சாரம் கலந்திருப்பினும் பெரும்பாலும் சங்ககால இலக்கியங்கள் குறிப்பிட்ட வேலன் வெறியாட்டு முறையை ஒத்துள்ளன. எனவே தற்கால வேலன் தொடர்பாகக் கேரளத்தில் நடத்தப்படும் தெய்யாட்டம் எத்தன்மையில் பொருந்தியுள்ளன என்பதைக் கீழ்வருமாறு விளக்கப்படுகிறது.

வேலன் வெறியாட்டுக்களம் அமைக்கப்பட்ட இடங்களை திருமுருகாற்றுப்படை காடு, காவு, துருத்தி (ஆற்றின் மையப்பகுதி) மன்றம், பொதியல், கடம்ப மரம் என்று ஆறு இடங்களைச் சுட்டியுள்ளது. (திரு.222) இவ்விடங்களில் வேலன் வழிபாடு நடத்துபவனாக வேடம் இட்டு வெறியாட்டு நடத்தியுள்ளான்.

கேரளத்தில் இன்று நடத்தப்பட்டு வரும் 'தெய்யம்' அல்லது திற ஆட்டங்கள் திருமுருகாற்றுப்படையில் குறிப்பிடப்பட்டுள்ள வேலன் அமைக்கப்பட்ட வெறிகளங்கள்களுக்கான இடங்களில் 'கடம்பமரம்' என்ற இடம் தவிர மற்றுள்ள ஐந்து இடங்களும் தெய்யாடுகளமாக உள்ளன. தியர்கள் என்று அழைக்கப்படும் ஈழவர்கள் நடத்தப்படும் தெய்யாட்டக்களத்தை 'கழகம்' என்றும், மற்ற பிற இனத்தவர்கள் நடத்தப்படும் இடங்களை மன்னம் (மன்றம்) என்றும், அழைக்கப்படுகின்றன. மேலும் தறை, காவு, மண்டிய (புதர்), அறை, துருத்தி (கழிமுகம்) என்ற இடங்களிலும் தெய்யாட்டம் நடத்தபடுகின்றது.

தேர்வு செய்யப்பட்ட இடங்களில் அமைக்கப்படும் களம் முன்பாக மூங்கில் துண்டுகளால் செய்யப்பட்ட பல பிரிவுகளைக் கொண்ட உருவமும் வைக்கப்பட்டிருந்தது இதனைச் சங்க இலக்கியங்கள் 'பல்பிரப்பு' என்று சுட்டியுள்ளது என உரையாசிரியர்கள் விளக்கம் தருகின்றனர். தெய்யம் நடத்தப்படும் களத்தின் முன்பும் வாழைமட்டைத் துண்டுகள் பயன்படுத்திப் பல கட்டங்களால் பிரிக்கப்படும் உருவமும் செய்யப்படுகின்றன. இதில் சமஅளவு கொண்ட பனிரெண்டு பிரிவுகள் காணப்படுகின்றன. இங்ஙனம் அமைக்கப்படும் வடிவம் 'களம்' என்று அழைக்கப்படுகிறது. இக்களத்தின் மேல் வழிபாடு நிகழ்த்துபவனாகிய வேலன் தெய்வத்திற்கு வேண்டிய பலிபொருட்களைத் தூவுகிறான். மேலும் வேலன் அமைக்கும் களம் பல்வேறு நிலைகளில் அமைக்கின்றன. அக்களமானது சதுரமாகவோ, வட்டமாகவோ இருக்கலாம். இன்று இங்ஙனம் அமைக்கும் களங்களை 'யந்திரம்' என்ற பெயரால் குறிப்பிடுகின்றனர். கடிவனூர் வீரனின் மனைவியான செம்மரத்தியின் நினைவாக நிகழ்த்தப்படும் தெய்யாட்டக்களத்தில் அமைக்கப்படும் யந்திரம் வாழைத்தண்டுகளால் அறுபத்து நான்கு பகுதிகளாகப் பிரிக்கப்படுகிறது. இங்ஙனம் பிரிக்கப்படும் பிரிவானது சங்கப்பாடல்கள் குறிப்பிட்டுள்ள 'பல்பிரப்பு' என்பதற்கு ஒத்துள்ளமை இங்கு குறிப்பிடத்தக்கதாகும்.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019
Available at: www.ijtlls.com

வெறியாட்டுக் களத்தில் செந்நிற மலர்களையும், வெள்ளரிசியும் குருதியில் கலந்து தூவுவான், செச்சை மலர்களால் ஆன கண்ணியை அணிந்திருப்பான் (திரு.208), (குறுந்.53), (அகம்.22), என்பதைப் பழம் பாடல் வழி அறிகின்றோம். மலைநாட்டு வேலன் நடத்தப்படும் தெய்யாட்டம், திரையாட்டங்களிலும் சில மதச்சடங்குகளிலும் செச்சி என்னும் மலரைப் பயன்படுத்துவதோடு வழிபடுவோருக்கு பிரசாதமாகவும் வழங்கப்படும். 'செச்சி' என்று சங்க இலக்கியங்களில் குறிப்பிடப்பட்டுள்ள மலரை இன்று தெச்சிப்பூ, வெட்சிப்பூ, செச்சிப்பூ என்ற பெயர்களிலும் அழைக்கப்படுகின்றது. மேலும் தென்னை ஓலை, கடம்ப மலர்கள், சந்தனம், மஞ்சள் ஆகிய வழிபாட்டுப் பொருட்களை வேலனால் சடங்கின்போது பயன்படுத்தப்பட்டதைத் திருமுருகாற்றுப்படை விவரிக்கின்றது. இவற்றுள் கடம்ப மலர்களைத் தவிர பிறபொருட்கள் எல்லாம் தெய்யாட்டம் அல்லது திரையாட்டத்தின்போது பயன்படுத்தப்படுகின்றது.

வெறியாடும் வேலன் படிமத்தான் என்று அழைக்கப்பட்டிருந்தான். இப்படிமத்தான் சிவப்பு, வெள்ளை நிற ஆடையை அணிந்துகொண்டு, கச்சு, கழல், வெட்சிமாலை என்பனவற்றைப் புனைந்து விளங்குவான் என்று (*குறுந்தொகை, பரிபாடல், கலித்தொகை*) சங்கப்பாடல்கள் விளக்கியுள்ளன. மலைநாட்டு வேலனும் சங்கப் பாக்களில் குறிப்பிட்ட படிமத்தான் போன்று ஒன்றுக்கொன்று முரண்பட்ட நிறங்களான சிவப்பு, வெள்ளை நிற ஆடைகளை அணிந்துகொண்டு, காலில் கழலும், கையில் சிவந்த நிறத்தாலான காப்பும் கட்டியவனாக தெய்யாட்டம் நிகழ்த்துகின்றான்.

மெல்லிய தோளைக் கொண்ட கன்னியின் துன்பம், வெறியை உடைய முருகனால் வந்தது என்று வேலன் கூறி, நடுஇரவில் முருகனை வரவழைப்பதும், செந்தினையினை இரத்தத்தில் கலந்து தூவி வழிபடுவதும் ஆட்டுக்குட்டியினை அறுத்து, நோயுற்ற பெண்ணின் நெற்றியில் தடவி, முருகக் கடவுளை வணங்கி பலியாகக் கொடுத்தல், தலையில் உயரமான தோற்றங்கொண்ட தலையணியை அணிந்துகொண்டு பல்வேறு தெய்வங்களை போற்றிப் பாடுதல் என்றெல்லாம் குறுந்தொகை, அகநானூறு, நற்றிணை, திருமுருகாற்றுப்படை போன்ற சங்க நூல்களில் விவரிக்கப்பட்டுள்ளன. கேரளத்தில் நடத்தப்படும் வேலன் தொடர்பான வழிபாட்டு முறைகளிலும் மேல் குறிப்பிட்டதைப் போன்று அனைத்து வழிபாட்டு முறைகளும் மேற்கொள்ளப்படுகின்றன. இங்ஙனம் வேலன் வழிபாடு மற்றும் தெய்யாட்டச் சடங்குகளையும் சங்கப்பாடல்களுடன் ஒப்பிட்டுப் பார்க்கும் பொழுது, மரபுவழிப்பட்ட வேலன் வெறியாட்டு நிகழ்வானது கேரள மாநிலம் வடக்கு மலபார் பகுதிகளில் தொடர்ந்து நீடிப்பது சங்ககால முருகவழிபாட்டின் தொடர்ச்சியாக விளங்குகின்றது.

**மேற்கோள்கள்**

1. சிங்காரவேலு முதலியார், அபிதான சிந்தாமணி,ப.1828
2. கைலாசபதி.கா, பண்டைத்தமிழர் வாழ்வும் வழிபாடும்,ப.18
3. தொல்., புறத்.நூ.5
4. சோமசுந்தரனார். பொ.வெ, புறப்பொருள் வெண்பாமாலை, ப.312
5. சஞ்சீவன் அழிக்கோடு, தெய்யத்திலெ ஜாதி வழக்கம், ப.332
6. மேலது., ப.333
7. பி.எல். சாமி அவர்கள் 'வேலன் வழிபாடு'

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019
Available at: www.ijtlls.com


# பாரதியின் பன்முகச் சுவடுகள்

## Bharathi's Multifaceted Trails

**முனைவர் கோ.செந்தில் செல்வி,** உதவிப்பேராசிரியர்,
தமிழ்த்துறை, அக்சிலியம் கல்லூரி காட்பாடி, வேலூர் - 6.

## Abstract

*Bharathi is a man of different dimensions. He had struggled for the freedom of our motherland. He was a great reformer who wanted to abolish caste system. As an activist, he had written many developmental schemes for country's ancient, courtesy, religious, poetry, art and philosophy. His literary works brings us the religious view, patriotic view and literary view of our country. Bharathi had created the base for National identity security, family, women education, women development and society's reformation. He had worked and struggled hard for the development of Tamil society and Tamil language. This essay has experimented on all the achievements of Bharathi entitled "Bharathi's Multifaceted trails"*

**Keywords:** Bharathi, Multifaceted Trails

**முன்னுரை**

நீடுதுயில் நீக்கப் பாடி வந்த நிலா. பாட்டுத்திறத்தாலே வையத்தைப் பாலித்திடச் செய்த பாவலர் பாரதி. கவிதைத்திறம், கற்பனை உணர்வு, சர்வதேசப் பார்வை, சமதர்மநெறி, தத்துவ வித்தகத் தெறிவு ஆகிய அனைத்தையும் கொண்டு புதிய சிந்தனைகளை தம் படைப்புகளில் தேக்கிக் காட்டியது போல் தமிழுக்கு புதிய சொற்களை தந்த சிறப்பு அவர் தம் படைப்புக்கு உண்டு. பாரத தேசத்தின் பாதுகாப்பு குடும்பநலம், பெண்கல்வி, பெண் முன்னேற்றம், சமூக சீர்திருத்தம் என நாட்டுப்பற்றுக்கு நாற்றங்கால் இட்டவன், தமிழுக்கும், தமிழகத்திற்கும் தனிப்பெருமைச் சேர்த்தவர் பாரதி ஆவார். இங்ஙனம் பல்வேறு துறைகளிலும் காலடி பதித்த பாரதி செய்த அனைத்து சாதனைகளையும் 'பாரதியின் பன்முகச் சுவடுகள்' என்றும் தலைப்பில் விளக்குவதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**பாரதியும் சூழலும்**

இயற்கையின் வனப்பில், சுற்றுச்சூழலில் பிறந்து வளர்ந்தவன் எனவே இயற்கையை நன்கு உணர்ந்தவராகிறார். நிலம் செழுமையாகவும், நீர் தூய்மையாகவும், காற்று மாசின்றி இருப்பதை கண்டும், துள்ளித்திரியும் விலங்கினங்களையும், காடுகளையும், கண்டு அவற்றோடு ஒன்றிக் கலந்து கரைந்து போனவன் பாரதி.

**மொழிப்புலமை**

தமிழைப் போல இனிதான மொழிஇல்லை என்ற நிலையான உறுதிப்பாட்டைக் கொண்டு தமிழை உயிருக்குயிராய் நேசித்தவர் பாரதியார். தமிழ்மொழிமீது தீராதப்பற்று கொண்டவராகத் திகழ்ந்தபோதும், சமஸ்கிருதம், இந்தி, தெலுங்கு, ஆங்கிலம், பிரெஞ்சு ஆகிய மொழிகளிலும் நன்கு தேர்ந்தவராக திகழ்ந்தார். வடமொழியிலிருந்து கீதை, பதஞ்சலி, யோகசூத்திரம், வேத ரிஷிகளின் கவிதை ஆகியவற்றையும் தமிழில் மொழிப் பெயர்ததுள்ளார்.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

**பாரதியின் சுதந்திர தாகம்**

**"என்று தணியும் இந்தச் சுதந்திர தாகம்**
**என்று முடியும் எங்கள் அடிமையின் மோகம்"**

என்று சுதந்திர தாகத்தை இன்றைய இளைய சமூகத்திற்கும் ஊட்டும் வகையில் விடுதலைக்காகப் போராடிய வீரர்களின் தியாக உணர்வை எடுத்தியம்பினார். இவர் தம் புரட்சிப் பாடல்களின் வாயிலாக அன்று முழங்கியதை இன்று உணர்ந்து வாங்கிய சுதந்திரத்தை பல இன்னல்கள் ஏற்பட்டாலும் ஒற்றுமையாக இருந்து பாரதத்தைக் காக்க வேண்டும் என்னும் மனவலிமையை ஒவ்வொருவருக்கும் ஏற்படுத்தி சென்றவர் பாரதி. பாரதியின் சுதந்திர உணர்வு சொல்லுதற்கோ, எழுதுதற்கோ முடியாத அளவிற்கு உணர்ச்சி பிழம்பென செந்தழலை தான் செல்லும் இடமெல்லாம் செலுத்தியது என்றே சொல்ல வேண்டும்.

**"சொந்த நாட்டிற் பிரர்க்கடிமை செய்தே**
**துஞ்சிட்டோம் இனி அஞ்சிடோம்**
**எந்த நாட்டினும் இந்த அநீதிகள்**
**ஏற்குமோ? தெய்வம் - பார்க்குமோ?**
**வந்தே மாதரம் என்னுயிர் போகும் அரை**
**வாழ்த்துவோம் - முடி தாழ்த்துவோம்**
**எந்த மாயிரு ரன்னையைப் போற்றுதல்**
**ஈனமே? அவ மானமே?**
**பொழுதெல்லாம். எங்கள் செல்வங் கொள்ளை கொண்டு**
**போகவோ? நாங்கள் சாகவோ?**
**அழுது கொண்டிருப்போமோ? ஆண்பிள்ளைகள்**
**அல்லமோ? ஊயிர் வெல்லமோ? - பாரதியார்**

நாமக்கல் கவிஞர் இராமலிங்கம் பாரதியாரின் கவிதைப் பண்புகளையும், சொல்வீச்சையும் சொல்லும் போது,

**"படித்தறியா மிக ஏழைக் கிழவனேனும்**
**பாரதியின் பாட்டிசைக்கக் கேட்பானாகில்**
**துடித்தெழுந்து தன் மெலிந்த தோலைத்தட்டித்**
**தொலைமிகுந்த கந்தலுடை வரிந்து கட்டி**
**எடுத்தெரிய வேண்டுமிந்த அடிமை வாழ்வை**
**இப்பொழுதே இக்கணமே என்றென்றார்த்து**
**அடித்துரைத்தே ஆவேசம் கொள்வானென்றால்**
**இப்பாட்டின் பெருமை சொல் யாரோ வல்லார். - நாமக்கல் கவிஞர்**

இவர் தம் பாடல் அன்றைய நமது நாட்டின் நிலைப்பாட்டினை நன்கு படம்பிடித்து விளங்குவனவாகவும், இந்த நிலையில் பாரதியின் பாடலைக் கேட்டால், முடியாத நிலையில் உள்ளவனும் முயன்று வெற்றிக் கொள்ள முனைவான் அதுவே புரட்சிக்கவியின் நடை, வீரம், உணர்வு பலரையும் நோக்கியது என்பதைவிட அவனது கவிதை அனைவரையும் அவன் பக்கம் ஈர்த்தது.

**தீர்க்கதரிசி**

பாரதி ஓர் தீர்க்கதரிசி, விடுதலை உணர்வை மக்களிடையே ஊட்டியவன். சுதந்திரத்திற்காக பாடுபட்டக் காலகட்டத்திலேயே அவன் ஆனந்த சுதந்திரம் அடைந்து விட்டோம் என்று பாடினான்.

**"ஆடுவோமே பள்ளுப் பாடுவோமே**
**ஆனந்த சுதந்திரம் அடைந்துவிட்டோமென்று"**

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

இந்திய மக்கள் அனைவரும் சகோதர நேயத்தோடு வாழவேண்டும் என்று முழங்கியவர். ஒரு கவிஞன் சமுதாயத்தை திருத்திடவும், குற்றத்தை எடுத்துரைக்கவும் தயங்காதிருக்க வேண்டும் என்று தம் கவிதைகளில் எடுத்துரைத்துள்ளார் இதனையே வள்ளுவனும்,

**"ஒல்லும் வகையான் அறவினை ஓவாதே**
**செல்லும் வாயெல்லாஞ் செயல்" - திருக்குறள் 32**

எடுத்தியம்மியுள்ளார். பாரதி வெறும் கற்பனை உலகத்தில் சஞ்சரித்தவன் அல்ல. சமுதாய மேம்பாட்டினையும், விடுதலைமார்க்கத்தையும் உணர்த்திய தீர்க்கதரிசி. தம் பூமியில் இருந்துக் கொண்டு நம்நாட்டை பாழ்படுத்திக் கொண்டிருந்த பகைவராம் வெள்ளையர்களுக்கும். பாரதி,

**"பகைவனுக்கு கருள்வாய் - நன்னெஞ்சே**
**பகைவனுக் கருள்வாய**
**புகை நடுவினில் தீயிருப்பதை**
**பூமியிற் கண்டோமே**

என்ற வரிகளில் தன் உள்ளத்தைச் சுட்டிக்காட்டுகின்றார்.

**பாரதியின் அன்புள்ளம்**

குழந்தை உள்ளம் படைத்தவன் பாரதி. அவனுடைய செயல்கள் குழந்தைத்தனமாக இருக்கும் எல்லா உயிர்களிடத்தும் அன்புக்காட்டுவார். ஒருமுறை கழுதைக் குட்டிதனை தம் தோளில் வைத்து அதற்கு முத்தமிட்டார். இதனைக்கண்டு சிலர் வியப்பு அடைந்தார். அவள் மகளோ இங்ஙனம் செய்தால் தங்களை பித்து பிடித்தவர் என ஏசுவார்களோ என்ற போது உரக்க சிரித்துக் கொண்டு 'பித்தன்' என்பது சிவபெருமானை அல்லவா குறிக்கும் எனவே ஏன் வருத்தமடைய வேண்டும் என்றார். ஏழைகளிடம் இரக்கம் கொண்டவர். ஓர்பாம்பாட்டி நல்ல உடையின்றி இருந்த சமயம் அவனுக்குத் தன் ஆடையைக் கொடுத்தார். இதுபோன்ற செயல்களால் இவரின் அன்புள்ளம் தெரிய வருகிறது.

**சாதியை சாடிய பாரதியார்**

சாதி இரண்டொழிய வேறில்லை"

என்னும் தாரக மந்திரத்தை நாடு கொண்டிருந்தாலும் இன்றும் நாட்டில் சாதிக் கொடுமைகள் ஒழியவில்லை சுதந்திரம் அடைந்து பல ஆண்டுகள் கடந்தும் இன்னும் சாதி கொடுமைக்கு விடுதலை அளிக்க முடியவில்லை என்பதை,

**சாதியிலே மதங்களிலே சமய நெறிகளிலே**
**சாத்திரச் சண்டையிலே, கோத்திரச் சந்தடியிலே**
**சாதியிலே அபிமானித்து அலைகின்ற உலகீர்! நீர்**
**அலைந்து அலைந்து அழிதல் அழகல்லவே - பாரதியார்**

சமுதாய சீரழிவுகளை தாங்கிகொள்ள இயலாமல் சாதியைச் சாடியவர் பாரதியார்.

**பெண்ணியச் சிந்தனைகள்**

பெண் என்பவள் ஆடவனின் சொற்படி கேட்டு, அவனுக்கு அடிமையாகவும் ஓர் போகப் பொருளாகவும் விளங்குவதாக நினைக்கும் இச்சமுக அமைப்பையே வெறுத்து ஒதுக்கியவர். நாட்டிற்கு விடுதலை எந்த அளவு இன்றியமையாததோ அந்த அளவு பெண்ணின் சுதந்திர போக்கு மிகவும் இன்றியமையாதது என்று தம் கவிதையின் வாயிலாக எடுத்தியம்புகிறார்.

**"மாதர் தம்மை இழிவு செய்யும்**
**மடமையைக் கொளுத்துவோம்**
**வையவாழ்வு தண்ணில் எந்த**
**வகையினும் நமக்குளே**
**தாதரென்ற நிலைமை மாறி**
**ஆண்களோடு பெண்களும்**

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

**சரிநிகர் சமானமாக**
**வாழ்வமிந்த நாட்டிலே**

பெண்கள் ஆண்களுக்கு சரிநிகர் சமானம் என்று ஏட்டில் எழுதியும் பேசியும் சும்மா இருந்தால் போதாது வாழ்க்கையில் சரிசமமாக பெண்களை போற்ற வேண்டும் என்று கூறுகிறார்.

**பாரதிகண்ட புதுமைப்பெண்**

ஆத்திசூடியில் பெண்களின் உயர்வினைக் குறிப்பிடுகிறார். "தையலை உயர்வு செய்" என்று பாடுகிறார். பெண்களின் நிலையைக் கண்டுவேதனை அடைந்தார். பாரதி படைத்த புதுமைப்பெண்கள் தாழ்வு நீங்கி, சமத்துவம் பெற்று ஆணுக்கு சரிநிகராக படித்து, வேலை வாய்ப்பில் முன்னேறிச் சென்று கொண்டு இருக்கிறார்கள். இன்று ஆண்களைவிடவும் பெண்கள் எல்லாத்துறைகளிலும் முன்னேறிச் சென்று கொண்டிருக்கின்றார்கள், இதனை

**"ஏட்டையும் பெண்கள் தொடுவது தீமை என்று**
**எண்ணி இருந்தவர் மாய்ந்து விட்டார்**
**வீட்டுக்குள்ளே பெண்ணைப் பூட்டி வைப்போம் என்ற**
**வித்தை மனிதர் தலைகவிழ்ந்தார்.**
**பட்டங்கள் ஆள்வதும் சட்டங்கள் செய்வதும**
**பாரினில் பெண்கள் நடத்த வந்தோம்**
**எட்டும் அறிவினில் ஆணுக்கு இங்கேபெண்**
**இளைப்பில்லை காணென்று கும்மியடி - பாரதியார்.**

இவ்வடிகள் மூலம் புதுமைப் பெண்களாக பெண்களை பாரதி படைத்து காட்டுவதோடு நிமிர்ந்த நன்னடையும். நேர் கொண்ட பார்வையும் யார்க்கும் அஞ்சாத நெறிகளையும் ஞானச் செருக்கு கொண்டு வாழும் பாவையர்களாக படைத்து காட்டுகிறார்.

**"நிமிர்ந்த நன்னடை நேர் கொண்ட பார்வையும**
**நிலத்தில் யாருக்கும் அஞ்சத நெறிகளும்**
**நிமிர்ந்த ஞானச் செருக்கு மிருப்பதால்**
**செம்மை மாதர் திறம்புய தில்லையாம்". – பாரதியார்**

அறியாமை இருளில் அவலமெய்தாமல் வாழத் துடிக்கின்ற பெண்களை புதுமைப் பெண்களாகப் படைத்துக் காட்டுகிறார். தங்கள் உரிமைகளையும், தமக்கு தேவையான சீர்திருத்தங்களை பெண்கள் தாமே தேடிக் கொள்ள வேண்டும் என்பதையும் தெளிவாக கூறியுள்ளார்.

**தமிழ்மீது கொண்ட காதல்**

இந்தியர்கள் ஆங்கிலேயே அரசாங்கத்திடம் பணிப்புரிந்தாலும் அவர்களுக்குரிய சலுகைகளும், அனைத்து உரிமைகளும் மறுக்கப்பட்டு இருந்தது. மக்கள் ஆங்கில மொழிக்கு அதிக செல்வாக்கு இருந்ததால் அம்மொழியைப் பயில அதிக ஆர்வம் காட்டினார்கள். இதனால் தாய்மொழியின் செல்வாக்கு குறைந்தது. இதனால் வெகுண்டெ ழுந்தார் பாரதி.

இவர் பிறமொழி புலமை பெற்றவராக திகழ்ந்தாலும், தமிழைத் தன் உயிராக நேசித்தவர். தமிழின் பெருமைதனை

**"வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து**
**வான்புகழ் கொண்ட தமிழ்நாடு நெஞ்சை**
**அள்ளும் சிலப்பதி காரமென்றோர் மணி**
**யாரம் படைத்த தமிழ்நாடு"**

என்று தமிழ் இலக்கியங்களின் சிறப்புகளைப் போற்றுகிறார். இவைமட்டுமின்றி மக்கள் புதிய கலைகள் தமிழில் தோன்றுவதற்கு முயற்சிகள் எடுக்க வேண்டுமென்று

**"சென்றிடு வீர் எட்டுத்திக்கும் கலைச்**

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

**செல்வங்கள் யாவுங் கொணர்ந்திங்கு சேர்ப்பீர்"**

என அனுபவத்தை ஊட்டுகிறார்.

**"மந்திரம் கற்போம் வினைத் தந்திரம் கற்போம்**
**சந்திரமண் டலத்தியல் கண்டு தெளிவோம்"**

என்று அறிவியலில் உலகநாடுகளுக்கு நிகராக விளங்கவேண்டுமென்று விரும்பியவர். பாரதி பிறமொழியிலுள்ள நூல்களையும், மொழிப்பெயர்த்து நம் தமிழ்மொழியில் இல்லாத நூல்களே இல்லையென்ற நிலை உருவாக வேண்டும் என்று விரும்பியவர்.

**"பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள்**
**தமிழ்மொழியில் இயற்றல் வேண்டும்"**

மகாகவி பாரதியார் அவர்கள் சமுதாயம், சுதந்திர உணர்வு, தேச பாதுகாப்பு, குடும்பநலம், தமிழ்மீது கொண்ட பற்று, சாதியை சாடியவிதம், பெண்ணியம் இங்ஙனம் பன்முகச் சுவடுகளை புனைந்து புதுயுகம் கண்டவர். சங்கப் புலவர்கள் உலகை நோக்கிக் கூறியது போலவே இவரும் தம் பார்வையை உலகை நோக்கியதாகவே இருக்க செய்தவர். "ஆர்கலி உலகத்து மக்கட்கெல்லாம்" என்று கூவி அழைத்து கூடலூர் கிழார் கூறியது போலவும்." யாதும் ஊரே யாவரும் கேளிர்" என்ற பூங்குன்றனார் கூறியது போன்றும் விரிந்த இவ்வுலகில் தன் விசாலப்பார்வையை விரித்தவர் என்பதை உணரலாம். உலகமக்கள் அனைவரும் உயர்நிலை அடைய வேண்டும் என்று விரும்பியவர். சாதி, பேதம் மனிதனை உயர்வடைய செய்யாது நல்ல உள்ளமும், சிறந்த அறிவும் பெற்று வீழ்ந்து கிடக்கும் மனிதர்களை நிமிர்த்தி முழு மனிதனாக தந்த முண்டாசுக் கவிஞன் பாரதி. சர்வதேச சிந்தனையாளராகவும், ஒப்பில்லாத சமுதாயம் கண்ட ஓர் புலவனாகவும், நோக்கும் திசையெல்லாம் நாமன்றி வேறில்லை என்ற இலட்சிய நோக்கோடு வாழ்ந்தவர் என்பதை இக்கட்டுரை வாயிலாக அறியலாம். பாரதி பற்பல கோணங்களில் தம்மை தகவமைத்துக் கொண்டவர் என்பதை உணர முடிகிறது.

**பார்வை நூல்கள்**

1. சுப்பிரமணிய பாரதி.சி. பாரதியார் கவிதைகள் புதுமைப்பெண்.
2. பரிமேலழகர் உரை, திருக்குறள். 23 பாரதிபதிப்பகம் சென்னை.
3. ம.ரா. போ. குருசாமி, பாரதி பாடல்கள் ஆய்வுப்பதிப்பு.
4. குமாரசாமி, சி.என். பென்னிய நோக்கில் பாரதி.
5. பாரதியார் படைப்புகளில் பல்சுவை – தொகுப்புநூல்.
6. மகாகவி பாரதியார் கட்டுரைகள், பூம்புகார் பதிப்பகம், சென்னை.
7. தாமரை பாரதி நூற்றாண்டு சிறப்பிதழ் 1981 டிசம்பர் மலர்.
8. நாமக்கல் கவிஞர் இராமலிங்கம் தமிழ்ப்பணி முனைவர் சா.வளவன் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

# குறிஞ்சி நில மக்களின் வாழ்வியல்

# Life Style of the People in Kurunji Land

**முனைவர் இரா.சொர்ணபமிலா,** உதவிப்பேராசிரியர்,
தமிழ்த்துறை, தெ.தி.இந்துக்கல்லூரி, நாகர்கோவில் - 629002.

## Abstract

*The ancient Sangam literature had witnessed the life style of the people in five phases of lands as Kurunji, Mullai, Neithal, Palai and Marutham. The first land surface is mountains and hills and the places is termed as kurunchi. Kurunchil and in particular deals a lot about nature. Life style and culture of the people of Kurunji is bonded with more of nature. Nature and their life style became inseparable and they dwell in a form where both intermingled together. The staple food of them was honey, root food, fruits and vegetable which they found humpty in their natural surroundings. They prepared their costume from the barks of the trees and leaves which again proved to be very natural. They lived in shelters made of bamboos and the roof are thatched with grass. They lived in the valleys of the mountains and made the land into cultivable land in convenient with their agricultural operation. They grow their own food cultivated, harvested and used for food. Both men and women were found to be brave and hard working as they were experts in hunting and foresting. Nature was their belief and so they worshipped the same as their supreme power. They loved nature immensely. Hence the dwellers of Kurunchi lived a life style to care, love and rear the places around the mountain and mountain valleys.*

**Keywords:** Life Style, Kurunji Land, Classical Tamil Land, Society

**முன்னுரை**

காலத்தை எக்காலத்திற்கும் வென்று நிற்கக் கூடியது. சங்க இலக்கியம் அன்று மக்களின் வாழ்வியல் முறையை வைத்து அன்பின் ஐந்திணை என்று வகுத்தனர். அவை குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்பனவாகும். குறிஞ்சி நில மக்களின் வாழ்வியலானது இயற்கை வேறு, வாழ்க்கை வேறு என்று பிரித்துணர முடியாத அளவிற்கு இயற்கையோடு ஒன்றிய இயல்புடையதாகும். உணவு முறைகள், பழக்கவழக்கங்கள், நம்பிக்கைகள் அனைத்தும் பன்முகத்தன்மையோடு பிறதிணை மக்களின் வாழ்வியல் முறையிலிருந்து முற்றிலும் மாறுபட்டு அமைகின்றன.

**உணவு**

உணவு இல்லையெனில் உடல் நலிவுறும், உடல் நலிவுற்றால் வாழ்வில் உரமும், ஆக்கமும் இல்லாதொழியும் இதனை உணர்ந்த குறிஞ்சி நில மக்கள் உணவின் மேன்மையினை அறிந்திருந்தனர்.

குறிஞ்சி நிலத்தவரின் உணவுமுறைகள் இரண்டு நிலைகளை உடையது. காய்கனிகள் முதலிய அவியல் உணவினை உட்கொள்ளும் நிலை ஒன்று விலங்குகளை வீழ்த்திப் பதமாக்கி உண்ணும் நிலை பிறிதொன்று.

**தினையரிசி உணவு**

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

குற்றிய தினையரிசியை, பழந்தமிழர் உணவு சமைக்க பயன்படுத்தினர் என்பதை,

**"ஆய் தினை யரிசி யவைய லன்ன**
**வேய்வை போகிய விரலுளர் நரம்பிற்" (பொரு.பா.16-17)**

என்று குற்றிய தினையரிசியை யாழின் நரம்பிற்கு உவமையாகக் கூறப்பட்டதன் வாயிலாக அறியலாம். வளமை சார்ந்த வயல்களில் விளைந்த முற்றிய நெற்கதிர்களை நெடுந்தொலைவிலிருந்து கொண்டு வரச்செய்து அவற்றைப் பெரிய தண்டினையுடைய ஆம்பல் மலராகிய அவியலோடு சமைத்து உண்டர் என்பதை,

**"செழுஞ் செய்ந் நெல்லின் விளைகதிர் கொண்டு**
**தடந்தாா் ஆம்பல் மலரொடு கூட்டி" (குறிஞ்.பா.17-18)**

குறிஞ்சிப்பாட்டு வாயிலாக அறியலாம். குறிஞ்சி நிலத்தவரின் பொதுவான உணவாக தேனும், கிழங்கும் நிறையக் கிடைத்தன.

**ஊன் உணவு**

குறிஞ்சி நில மக்களின் உணவுகளில் முதன்மையானது ஊன் உணவு அதனைக் கூறும்போது,

**"பரூஉக்குறை பொழிந்த நெய்க்கண் வேலையொடு**
**குரூஉக்கண் இறடிப் பொம்மல் பெறுகுவீா்" (மலை.பா.168-169)**

அதாவது நெய்யில் பொறித்த வெந்த பெரிய தசையினையும், இறடிப் பொம்மலாகிய தினையரிசிச் சோற்றினையும் உணவாகப் பயன்படுத்தியதை அறிய முடிகிறது. சிறுகுடிப் பகுதியானது செழிப்புடன் இருந்தது. அரிசியும், நெய்யும், மாமிசமும் கலந்து உணவு சமைக்கப்பட்டது.

**"பைந்நிணம் ஒழுகிய நெய்ம்மலி அடிசில்" (குறிஞ்.பா.204)**

முள்ளம் பன்றியினைக் கொன்ற வீரர், அதன் தசையை உடும்பின் தசையோடு சேர்த்து வேக வைப்பதால் உண்டாகும் மணம் தெரு எங்கும் மணம் வீசியதை புறநானூறு கூறுகின்றது.

**தழையுடை**

மலைசார்ந்தப் பகுதியில் வாழ்ந்த மக்கள் குறிப்பாகக் குறிஞ்சி நிலக்குறவர் மகளிர் தழையுடை அணிந்தமையைச் சங்கப் பாடல்கள் கூறுகின்றன.

**"குன்றக்குறவன் காதன் மடமகள்**
**வண்டு படு கூந்தற் றண்டழைக் கொடிச்சி" (ஐங்.பா.256:1-2)**

எனும் பாடலில் குன்றத்தின் கண் உறையும் குறவனுடைய அன்பு கொழுமிய இளமகள் வண்டுகள் மொய்க்கின்ற நறுமணமுடைய கூந்தலையும், தழையாடையையும் உடையக் கொடிச்சி இருந்தாள் என்பதையும் அறியமுடிகிறது.

அழகிய பல பூக்களால் விரவி தொடுக்கப்பட்ட மாலையையும், தழையால் ஆகிய ஆடையை அணிந்த நிகழ்வை நற்றிணை,

**"பல்பூம் பகைத்தழை அடங்கும் அல்குல்" (நற்.பா:8-2)**

எனவும்,

**"ஆம்பூந் தொடலை அணித்தழை அல்குல்" (புறம்.பா:341-21)**

என புறநானூறும் சுட்டுகின்றன.

**சிறுகுடில்கள்**

சங்க காலத்தில் வாழ்ந்த பழங்கால மக்கள் மிக எளிமையான வாழ்க்கை வாழ்ந்தனர். இனிமை வாய்ந்த நறுமணம் பொருந்திய, சிறுகுடில்களில் இருந்தனர் என்பதை,

**"தூவொடு மலிந்த காய கானவர்**
**செழும்பல் யாணர்ச் சிறுகுடிப் படினே" (மலை.பா:155-156)**

எனும் அடிகளால் அறியமுடிகின்றது.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

பாணர்கள் செல்லும் வழியிலே மூங்கிலாலும், புல்லாலும் வேயப்பட்ட குடில்கள் அமைந்திருந்தனர் என்ற செய்தியினை,

**"அகலுள் ஆங்கண் கழிமிடைந்து இயற்றிய**
**புல்வேய் குரம்பைக் குடிதொறும் பெறுகுவீர்" (மலை.பா:438-439)**

என மலைபடுகடாம் சுட்டுகின்றது. இப்பாடல் வரிகள் மூலம் மூங்கிலும், புல்லும் கட்டுமானக்கலைப் பொருள்களாகப் பயன்படுத்தப்பட்டுள்ளதை அறியமுடிகின்றது.

**முழைஞ்சு என்னும் குகைகள்**

பழந்தமிழர்கள் பாதுகாப்பு நல்கக் கூடிய உறைவிடமாகக் குகைகளைக் கருதினர். பாணர்கள் தம் பயணத்தைத் தொடர முடியாத நிலையில் தம் இல்லத்தில் தங்குதல் போல குகைகளில் தங்கிச் சென்றனர்.

**"இல்புக் கன்ன கல்லளை விதியின்" (மலை.பா:360)**

**வேட்டையாடுதல்**

குறிஞ்சி நில மக்கள் வேட்டையாடுதலைப் பெரிதும் விரும்பினர். உணவிற்காகவும், பொழுது போக்கிற்காகவும் வேட்டையாடுதலை மேற்கொண்டனர். நிலத்திலிருந்தும், மலையிலிருந்தும் அம்பினை எறிந்து விலங்கினைக் கொன்றனர்.

குறவன் வேட்டையாடுதலுக்குச் செல்லும் முன் வேங்கை மரத்தின் பொன் போன்ற பூங்கொத்துக்களைச் சூடியும், மூங்கிலால் செய்யப்பட்ட வளைந்த வலிமை பொருந்திய வில்லைத் தோளில் மாட்டியும், பலாப்பழத்தின் சுளையினின்றும் விளைந்த தேனையும் (தேறல்) குடித்துவிட்டு வேட்டையாடச் சென்றவன் காட்டு மல்லிகையின் குளிர்ந்த புதிரானது அசையும் படி அதனுள் பதுங்கியிருந்து முள்ளம் பன்றியை அம்பு எய்து கொன்றான் என்பதை நற்றிணை,

**"ஏனல் காவலர் மாவீழ்த்துப் பறித்த**
**பகழி அன்ன சேயரி மழைக்கண்" (நற்.பா. 13:3-4)**

என்கிறது. குறவர்கள் வேட்டையாடும்போது வேட்டைநாய், கவண்கல் வீசுதல், பன்றிப்பொறி, ஊதுக்கொம்பு போன்றவற்றையும் பயன்படுத்தினார்கள்.

**பன்றிக் கற்பொறி**

தினைப்புனத்தைப் பன்றி அழிப்பதிலிருந்து தடுப்பதற்காக குறவர்கள் பெரிய பன்றியைப் பிடிக்க கல்லாலான பெரிய பொறிகளைப் பயன்படுத்தினர்.

**"விளைபுனம் நிகழ்த்தலின் கேழல் அஞ்சிப்**
**புழைதொறும் மாட்டிய இருங்கல் அரும்பொறி" (மலை.பா:193-194)**

பன்றிக் கற்பொறி மட்டுமன்றி குறவர்கள் பன்றியைப் பிடிக்க நிலத்தைத் தோண்டி அதில் இலை தழைகளால் மூடி வைத்து பன்றியைப் பிடித்துக் கொன்றனர் என்பதை *மதுரைக்காஞ்சி*,

**"சேணோன் அகழ்ந்த மடிவாய்ப் பயம்பின்**
**வீழ்முகக் கேழல் அட்ட பூசல்" (மதுரைக்.பா. 294-295)**

என்கிறது.

**தேன் எடுத்தல்**

உயரமான மரங்களில் தேனீக்களால் கட்டப்பட்ட அடையிலிருந்து தேனிணைப் பிரித்து எடுத்தலைக் குறிஞ்சி நில மக்கள் தொழிலாகக் கொண்டுள்ளனர்.

குறிஞ்சி நிலமக்கள் தேனெடுக்க கண்ணேனினைப் பயன்படுத்தினர். கணுக்களிலே அடி வைத்து ஏறிச்செல்லும்படி அமைந்துள்ள மூங்கிலினை இரண்டாகக்கட்டி செங்குத்தான மலையில் ஏறி தேனினை எடுக்கப்பயன்படுத்தினர்.

**"கலைகையற்ற காண்பின் நெடுவரை**
**நிலைபெய்து இட்ட மால்பு நெறி ஆகப்**
**பெரும்பயன் தொகுத்த தேங்கொள் கொள்ளை" (மலை.பா. 315-317)**

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

தேனீக்கள் சந்தன மரங்கள் போன்ற உயர்ந்த கிளைகளில் கூடுகளை அமைத்தன. இக்கூட்டை அழித்துக் கிடைக்கும் மலைத்தேன் மிகவும் சுவையானது ஆகும்.

**பெண்கள் காவல் புரிதல்**

பொன் போன்ற மலர்ந்த வேங்கைப் பூக்களால் செறிவாகத் தொடுக்கப்பட்ட மாலையை அணிந்த கொடிச்சியானவள் தழலினைச் சுற்றியும், தட்டையினை அடித்தும், அசோகின் தழையாலான ஆடையினை உடுத்திக் கொண்டு தினைப்புனம் காத்தனர் என்ற செய்தியினை அகநானூறு,

**“தழலை வாங்கியும் தட்டை ஒப்பியும்**
**அழல்ஏர் செயலை அம்தழை அசைஇயும்**
**குறமக் காக்கும் ஏனல்”**

என்கிறது. நற்றிணையும்,

**“கொடிச்சி காக்கும் அடுக்கற் பைந்திணை”** **(அகம்.பா. 188:11-13)**

என கொடிச்சியானவள் தினைப்புனம் காத்த செயலைக் குறிப்பிடுகின்றன.

**விரிச்சி கேட்டல்**

தெய்வங்களை அழைத்துப் பாடுதலைச் செய்யும் கட்டுவிச்சியர் முறத்தில் நெல்லை வைத்துத் தெய்வங்களைப் பாடி எண்ணிப் பார்த்து குறிகூறுவர். கட்டுவிச்சியர் பெரும்பாலும் பொய்யையே கூறுவராதலின் அவர் “பொய்வல் பெண்டிர்” எனப்பட்டனர். இதனை *அகநானூறு,*

**“.........முதுவாய்ப்**
**பொய் வல் பெண்டிர் பிரப்பு ஊர்பு இரீஇ”** **(அகம்.பா. 98:8-9)**

என்கிறது. தெய்வம் ஏறிக்குறிக் கூறும் கட்டுவிச்சி சங்குமாலை அணிந்திருப்பாள். மேலும் சுளகில் (முறம்.) நெல் எறிந்து குறி பார்த்து உரைப்பாள். குறி பார்த்துச் செல்லும் குறமகளிர் பரிசிலும் பெறுவர்.

**மழை இயக்கத்தை அறிதல்**

குடம் போன்ற காயை உடைய அசினிப் பலா மற்றும் பிற மரங்களின் கிளைகளிலிருந்த மின்மினியை விளக்காகக் கொண்டு குறவர்கள் மழை முகிலின் இயக்கத்தை அறிந்தனர்.

**“பல்கிளைக் குறவர் அல்கு அயர்முன்றில்**
**குடக்காய் ஆசினிப் படப்பை நீடிய**
**பல்மர உயர்சினை மின்மினி விளக்கத்து**
**செல்மழை இயக்கம் காணும்” (நற்.பா. 44:8-11)**

**வெறியாடல்**

வெறியாட்டு என்பது மிகப் பன்னெடுங் காலத்தற்கு முன்பே தமிழ்ச் சமுதாயத்தில் வேரூன்றி விட்ட முருக வழிபாட்டு நிகழ்ச்சியாகும். தொல்காப்பியர் வெறியாட்டு எடுக்கும் வேலனைப் பற்றிக் குறிப்பிடுகிறார்.

**“வெறியறி சிறப்பின் வெவ்வாய் வேலன்**
**வெறியாட்டு அயர்ந்த காந்தளும்”** **(தொல்.புறம்.நூ. 60:1-2)**

குறிஞ்சித்திணைப் பாடல்களில் குறிப்பிடப் பெறுகின்ற வேலன் பெரும்பான்மை அகத்துக்கே உரியவனாகிறான். வெறியாடும் வேலன் அகன்ற பெரிய பந்தலின் கீழ் வெண்மையான பனந்தோட்டினைக் கடம்ப மலரோடு சூடி தானத்தோடு முருகக் கடவுளின் பெரும் புகழினைத் துதித்து, பாவை போல கைவீசி வெறியாடுவதை அகநானூற்றுப் பாடல் வரியால் அறியலாம்.

**“வெண்போழ் கடம்பொரு சூடி இன்சீர்”** **(அகம்.பா. 98:16)**

தினை அரிசிச் சோற்றுடன் குருதியைக் கலந்து வேலனுக்குப் பலியிடுதலும், ஆட்டின் குட்டியைப் பலியிட்டு, அதன் குருதியைத் தலைவியின் நுதுலில் நீவுதலும் ஆகிய வெறியாட்டு முறைகள் குறிக்கப்பட்டுள்ளன.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

வெறியாட்டும் களம் மணலாலும், மலர் மாலைகளாலும் அழகுறுத்தப்படுதல் வழக்கமாகும். வெறியாட்டில் தலைவியின் நோயினைப் போக்க ஒரு பரமம் செய்து, அதில் கழற்சிக்காய் இரண்டினைக் கண்களாகப் பதித்து, வேலனிடம் கொடுக்க, அவன் அதனைத் தூக்கிக் கொண்டு வெறியாடுகிறான். வெறியர் களத்தில் வெறியாடுபவன் வேல் கொண்டு ஆடுவதால் வேலன் எனப்பட்டான்.

**கர்ப்பம் உற்ற பெண்ணின் வீரம்**

குறிஞ்சி நிலத்தில் கர்ப்பம் உற்ற பெண், யானை தாக்கினாலும், பாம்பே தன் மேல் ஊர்ந்து சென்றாலும், வானத்தில் கடுமையான இடி இடித்தாலும் பயப்படாமல் இருக்கின்ற வீரம் நிறைந்த ஆற்றல் உடைய வாழ்க்கையை வாழ்ந்தனர்.

**“யானைத் தாக்கினும் அரவு மேல் செலினும்**
**நீலநிற விசும்பின் வல்ஏறு சிலைப்பினும்**
**சூல்மகள் மாறா மறம் பூண் வாழ்க்கை” (பெரும்.பா. 134-136)**

**வள்ளைப்பாட்டு**

வள்ளைப்பாட்டு, உலக்கைப்பாட்டு எனவும் கூறப்படும். தினையைக் குற்றும் மகளிர் இசையினைப் பாடிக்கொண்டு தினைக் குற்றினர்.

**“தினைக்குறு மகளிர் இசைபடு வள்ளையும்” (மலை.பா. 342)**

தினைக்குற்றுவதற்கு சந்தன மரத்தை உரலாகவும், முத்து நிறைந்த யானையின் தந்தத்தை உலக்கையாகக் கொண்டு மாறி மாறி உயர்த்திக் குற்றுவர். அப்போது வள்ளைப்பாட்டு இசைக்கப்படும்.

**“பாடுகம் வா வாழி தோழி வயக்களிற்றுக்**
**கோடு உலக்கையாக, நல் சேம்பின் இலை சுளகா**
**ஆடுகழை நெல்லை அறை உரலுள் பெய்து இருவாம்**
**பாடுகம் வா வாழி தோழி நல்தோழி பாடுற்று” (கலி.பா. 41:1-4)**

**முடிவுரை**

மனிதன் இயற்கையோடு இயைந்த வாழ்வியலைத் தான் சங்க இலக்கியம் சந்தங்களோடு எடுத்து உரைக்கிறது. அன்றைய மனிதன் இயற்கையை தெய்வமாக வழிபட்டான். உணவு, உடை, இருப்பிடம், பழக்கவழக்கங்கள் அனைத்தும் இயற்கையை சார்ந்து இன்புற்று இருந்தன. ஆனால் இன்றைய மனிதர்களாகிய நாம் காட்டை அழித்து இன்பத்தை தேடுகிறோம். குறிஞ்சி தான் ஐவகை திணைகளுக்கும் முன்னோடி. குறிஞ்சி நில வளம் குன்றினால் இம்மண்ணில் மழையின்றி பிற திணை நிலங்களும் தன் அழகை இழக்கும். குறிஞ்சி நில வாழ்வியல் நிகழ்வானது மனித வாழ்வின் நிழல்களாக படர்ந்திருத்தலே நன்மை பயக்கும்.

**துணைநூற்பட்டியல்**

1. **சங்க இலக்கிய நூல்கள் முழுவதும் உரையுடன்,** நியூசெஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, 2007.
2. இராசேந்திரன், ம., **தொல்காப்பியம்,** உலகத் தமிழராய்ச்சி நிறுவனம், தரமணி, சென்னை - 600 113, 2007.
3. சுப்பிரமணியன், ச.வே., **பத்துப்பாட்டு,** கோவிலூர் மடாலயம், கோவிலூர் - 630 307, 2003.

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

# இசைப் புகழோங்கும் நாலாயிர திவ்விய பிரபந்தம்

## The Musical Fame of *Naalaayira Thivya Prabantham*

**கி.தேன்மொழி,** முனைவர் பட்ட ஆய்வாளர்,
பாரதிதாசன் பல்கலைக்கழகம், திருச்சி.

## Abstract

*We cherish the Tamil language as it is the best of the three in the poetry, music, drama. Tholkappiyam and Sangam literature show that both music and musical instruments are intertwined with the lives of the Tamil people. During the Bhakti literary period, the Nayanas of the Saivites and the Vaishnavites were cultivating musical Tamil. Music is no longer the apex of the Panniru Alvaar of Naalaayira Thivya Prabantham enlightenment; Kannan has sung a great deal of music as a musical instrument. They have sung the traditional songs in the song 'Prabantham'. There are many songs that have a tradition of folklore. This article is titled "Naalaayira Thivya Prabantham of Music." Greetings in this article include world classical and musical background, musical instrument, Poochi kattuthal, Panthuvali ragam, Asaaveri Ragam, Pilahari ragam, Yamuna kalayani ragam and paga dhalam, adhi dhalam, Jambai dhalam, Neeradal, flute, thumburuveenai, kinnaram, Veingulal of instrumens, Multiple tools, etc. The reason for being sung such songs is that they should continue to touch people's minds with a sense of humor. Also, this article explores the way in which the music of the music and the development of the music through the songs of Thirumaal was praised by the off-the-beaten songs in the deep 'Naalaayira Thivya Prabantham'.*

**Keywords:** Musical Fame of *Naalaayira Thivya Prabantham*

**முன்னுரை**

இயல் இசை நாடகம் என்னும் மூன்றிலும் சிறந்திருப்பதால் தமிழ் மொழியை முத்தமிழ் என்று போற்றுகின்றோம். தமிழ் மக்களின் வாழ்வோடு இசையும் இசைக் கருவிகளும் இரண்டறக் கலந்துள்ளன என்பதற்குத் *தொல்காப்பியம்* மற்றும் சங்க இலக்கியங்கள் சான்று காட்டுகின்றன. பக்தி இலக்கியக் காலத்தில் சைவ சமயத்தைச் சார்ந்த நாயன்மார்களும், வைணவ சமயத்தைச் சார்ந்த ஆழ்வார்களும் இசைத் தமிழை வளர்த்தனர். ஆழ்வார்கள் பன்னிருவர் நாலாயிர திவ்வியப் பிரபந்தத்தில் இசை இனிமையும் திருமாலின் பக்திநெறியை வளர்க்க வழி வகுத்தனர். ஆழ்வார்கள், இசைக் கருவிகள் என்ற வகையில் கண்ணன் குழலிசையைப் பெரிதும் பாடியுள்ளனர். ஆழ்வார்கள் பாடலில் மரபமைப்பில் இசை பயின்று வருமாறு பாடியுள்ளனர். நாட்டுப்புற மக்களின் மரபைக் கொண்ட பல பாடல்களும் உண்டு. இக்கட்டுரை ஆழ்வார்கள் வழி 'இசைப் புகழோங்கும் நாலாயிர திவ்விய பிரபந்தம்' என்னும் தலைப்பில் இக்கட்டுரை அமைகின்றது.

**பல்லாண்டு**

பல்லாண்டு வாழுமாறு வாழ்த்துவது உலகியல் மரபு. இவ்வாழ்த்து குழந்தைப் பருவத்திலேயே தொடங்கி விடுகின்றது.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

**"திண்ணார் வெண்சங்குடையாய் திருநாள்**
**திருவோணமின் றேழுநாள்முன்**
**பண்ணோர் மொழியாரைக் கூவிமுளையட்டிப்**
**பல்லாண்டு கூறுவித்தேன்"**

என்ற பாடலில் யசோதை பண் போன்று இனிய மொழி பேசும் மடவாரோடு கண்ணனுக்குப் பல்லாண்டு கூறியதாகப் பாடுகின்றார் பெரியாழ்வார்.

**பெரியாழ்வார்**

**"பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு பலகோடி நூறாயிரம்**
**பல்லாண்ட திண்டோள் மணிவண்ணா! உன் சேவடி செவ்வி திருக்காப்பு"**

என்று இறைவனுக்குப் பல்லாண்டு பாடப்படும் சிறப்போடு இசை இனிமையையும் காணமுடிகின்றது. பல்லாண்டு என்பதை யாண்டுநிலை என்று பன்னிரு பாட்டியல் குறிப்பிடுகின்றது. இவ்வகை இலக்கிய மரபே பின்னாளில் தனி இலக்கிய வகையாக வளர்ச்சி பெற்றுள்ளது.

**தாலாட்டு**

உலகமெங்கும் தாய்மையுணர்வின் வெளிப்படையாகத் தாலாட்டுப் பாடல்கள் பாடப்படுகின்றன. ஆனால் பாடலின் இசையும் அமைப்பும் இடத்திற்கு இடம் வேறுபடுகின்றன. தமிழில் தாலாட்டும் இசை "ஆரிராரோராராராரோ" என்ற தொடக்கத்துடன் நீலாம்பரிராகத்தில் அமைவது. இவ்வகையில் பெரியாழ்வார்,

**"சங்கின் வலம்புரியும் சேவடிக் கிண்கிணியும்**
**அங்கைச் சரிவளையும் நாணுமரைத்தொகும்**
**அங்கண் விசும்பில் அமரர்கள் போத்தந்தார்**
**செங்கட் கருமுகிலேதாலேலோதேவகிசிங்கமேதாலேலோ" (பெ.ஆழ்.1-3-4)**

என்று தேவகியின் மைந்தனைத் தாலாட்டுகின்றார். இசைக்கு முதன்மை அளித்து, சொல்லும் பொருளும் அதற்கேற்றவண்ணம் நடக்கின்றன. தாலாட்டிசைக்காக ஈற்றடி நீண்டு முடியுமாறு அமைந்துள்ளார். குழந்தை கண்ணன் பிறந்ததை மகிழ்ச்சியோடு கொண்டாடும் நிலையை,

**"ஓடுவார் விழுவார் உகந்தலிப்பார்**
**நாடுவார் நம்பிரான் எங்குற்றானென்பார்**
**பாடுவார் களும் பல்பறைகொட்டநின்று**
**ஆடுவார்களும் ஆயிற்றாய்ப் பாடியே" (பெ.ஆழ்.1-2)**

என்றுபாடியுள்ளார்.

**இச்சிக் காட்டுதல்**

பெரியாழ்வார் கண்ணனுக்குப் "இச்சிக் காட்டுதல்" என்றொருவகை இசைப்பாட்டைப் பாடுகின்றார்.

**"காயுநீர் புக்குக் நம்பேறிநாளியன்**
**தீயபயணத்தில் சிலம்பார்க்கபாய்ந்தாடி**
**வேயின் குழலூதிவித்தகனாய் நின்ற**
**ஆயன் வந்துச்சிகாட்டுகின்றான் அம்மனே!" (பெ.ஆழ்.2-1-3)**

என்று பந்துவராளி ராகத்தில் பக தாளத்தில் அமைந்த இப்பாடல் ஈற்றடி நீண்டு வருகின்றது. இவ்வாறு பத்துப் பாடல்கள் குழந்தைக்குப் éச்சிக் காட்டி அச்சுறுத்தும் பாங்கில் பாடப்பட்டுள்ளன. குழந்தை கண்ணனுக்குக் காது குத்துதல் வேண்டும் என்று தாயுள்ள அன்போடு பத்துப் பாடல்களைப் பாடியுள்ளார் பெரியாழ்வார்.

**"போய்ப்பாடுடையநின்தந்தையும் தாழ்த்தான் பொருதிறற்கஞ்சன் கடியன்**
**காப்பாருமில்லை கடல் வண்ணா! உன்னைத் தனியேபோயெங்கும் திரிதி**

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

**பேய்ப்பார் முலையுண்டபித்தனே கேசவநம்பீஉன்னைக் காதுகுத்த**
**ஆய்ப்பாலர் பெண்டுகளெல்லாரும் வந்தார் அடைக்காய் திருத்திநான்**
**வைத்தேன"** (பெ.ஆழ்.2-3-1)

என்னும் இப்பாடல் அசாவேரிராகம், ஆதிதாளத்தில் அமைந்துள்ளது. இவைபோன்று கண்ணனை நீராட வருமாரு அழைக்கின்றார்.

**"கன்றுகளோடச் செவியில் கட்டெரும்புபிடித்திட்டால்**
**தென்றிக் கெடுமாதில் வெண்ணெய்திரட்டிவிழுங்குமாகாண்டன்**
**நின்றமராமரம் சாய்த்தாய்! நீபிறந்ததிருவோணம்**
**இன்றுநீராடவேண்டும் என்பிரான் ஓடாதேவாராய்"** (பெ.ஆழ்.2-4-2)

என்று திருவோணத்தில் பிறந்த கண்ணனைப் பிலஹரிராகம், ஜம்பைத் தாளத்தில் பாடி நீரோட அழைக்கின்றார். இப்பாடல்களைக் கேட்பவர்களுக்குக் கண்ணன் செயல்கள் கண்முன் நிற்கும் தன்மைய ஆழ்வார்கள் இத்தகைய பாடல்களைப் பாடியமைக்குக் காரணம் இறையுணர்வு வளமுடன் பார்த்து மக்கள் மனதைத் தொடர்ந்து தொடவேண்டும் என்பதே ஆகும் என்று (ஏ.என்.பெருமாள் தமிழர் இசை ப.398) ஆய்வாளர்கள் கூறுகின்றார்கள்.

**பண்ணிசைப் பாடல்கள்**

திவ்விய பிரபந்தங்களில் பண்களுடன் கூடிய பாடல்கள் பல உள்ளன. பண் என்பதற்குப் பல வகையான விளக்கங்கள் கூறப்படுகின்றன. இசைத் தொடர்புடைய ஒலியமைப்பினை பண் என்று கூறுவர். தலை, மிடறு, நெஞ்சு, மூக்கு, இதழ், பல், நா, அண்ணம் முதலிய எட்டுத் தாளங்களாலும் எடுத்தல், படுத்தல், நலிதல், தம்பித்தம், குடிலம், ஒலி, உருட்டு, தாக்கு முதலிய எட்டு கிரியைகளாலும் இசைக்கப்படுகின்றன. நம்மாழ்வார் பாடிய திருவாய்மொழியில் முதிர்ந்த குறிஞ்சிப் பண் ஏழொத்து கமாஸ்ராகம், ஆதிதாளத்தில் அமைந்த

**"உயர்வறவுயர் நலம் உடையவன் யவனவன்**
**மயர்வறமதிநலம் அருளினன் யவனவன்**
**அயர்வுறுமவர்கள் அதிபதியவனவன்**
**துயரறுசுடரடிதொழுதெழென் மனனே!"** (திருவாய் 1-1-1)

என்னும் இப்பாடலில் இனிமையைக் காணமுடிகின்றது.

**பெரியதிருமொழி:**

திருமங்கையாழ்வார் பாடிய பெரிய திருமொழியில் யமுனாகல்யாணி ராகத்தில், திரிபுடை தாளத்தில் அமைந்த பாடல் திருவேங்கடத்தின் சிறப்பினைக் கூறுகின்றது.

**"பேசுமின் திருநாமம் எட்டெழுத்தும் சொல்லிநின்றுபின்னரும்**
**பேசுவார் தம்மைஉய்யவாங்கிப் பிறப்பறுக்கும் பிரானிடம்**
**வாசமாமலர் நாறுவார்பொழில் சூழ்நரும் உலகுக்கெலாம்**
**தேசமாய்த் திகிழும் மலைத் திருவேங்கடம் அடைநெஞ்சமே"** (பெரியதிரு.1-8-9)

என்னும் இப்பாடல் தாளத்திற்கேற்ப சொல்லடுக்கினைப் பெற்றுள்ளது. ஆழ்வார்கள் பண்ணிசையால் மிகவுயர்ந்த கருத்துடையவர்கள். நாலாயிர திவ்விய பிரபந்தத்தில் இசைக் கருவிகள் குறித்து அதிகம் இல்லையென்றாலும் ஒருசில இடங்களில் பல கருவிகள் பற்றியசெய்திகள் இடம்பெற்றுள்ளன. கண்ணன் குழலிசை இசைக்கிறான்.

**"மன்னரஞ் சும்மது சூதனன் வாயில் குழலோசைசெவியைப் பற்றிவாங்க**
**நன்னரம் புடையதும் புருவோடு நாரதனும் தந்தம் வீணைமறந்து**
**கின்னரமிதுனங்களும் தத்தம் கின்னரம் தொடுகிலோமென்றனரே"**(பெரி.திரு.3-6-5)

இப்பாடலில் புல்லாங்குழல்,தும்புருவீணை,கின்னரம் ஆகிய பண்ணிசைக் கருவிகள் குறிப்பிடப்படுகின்றன.

**"மேட்டின் மேதிகள் தலைவிடும் ஆயர்**

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

**வேய்ங்குழல் ஓசையும் விடைமணிக்குரலும்**
**ஈட்டிய இசைதிசைபரந்தனவயலூர்" (திருப்பள்ளி-4)**

என்று தொண்டரடிப் பொடியாழ்வார் வேய்ங்குழலின் இசையினிமையைக் கூறுகிறார். பெரியாழ்வார்,

**"திருமால் யவராயிற் குரலோசை**
**கோவிந்நன் குழல்கோடு ஊதினபோது" (பெரியாழ் திரு. 3-6-1, 3-6-2)**

என்று பத்துப்பாடல்களில் கண்ணன் வேய்ங்குழல் தற்சிறப்பைப் பாடுகின்றார்.

**முடிவுரை**

ஆழ்வார்கள் நாலாயிரதிவ்வியப் பிரபந்தத்தில் திருமாலின் சிறப்பினை இனிய இசைப்பாடல்களில் போற்றியுள்ளனர். அவர்கள் பாடலின் வழி இசைக்கருவிகள் பற்றியும் அறியமுடிகிறது. பண்ணமைப்பில் சிறப்பான வளர்ச்சியையும் காணமுடிகின்றது.

**துணை நூல்கள்**

1. முனைவர். ஜெகத்ரட்சகன், நாலாயிர திவ்யப் பிரபந்தம், ஆழ்வார்கள் ஆய்வு மையம், சென்னை, 1993.
2. முனைவர்.இ.அங்கயற்கண்ணி, தமிழக இசையும் ஆய்வும், கலையகம் வெளியீடு, தஞ்சாவூர், மு.ப - டிசம்பர் 2002.
3. மு.அருணாசலம் தமிழ் இசை இலக்கிய வரலாறு, கடவு பதிப்பகம், மதுரை, 2009.
4. முனைவர்.வீ.பா.கா.சுந்தரம், தமிழிசைக் கலைக் களஞ்சியம், பாரதிதாசன் பல்கலைக்கழகம், திருச்சி, 1992.
5. ஏ.என்.பெருமாள் 'தமிழர் இசை' ப.398.

E-ISSN: 2581-7140

Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

# தஞ்சைவாணன் கோவையில் கற்பியல் காட்டும் பிரிவு நிலைகள்

## Chastity and Valediction Forbidding in *Thanjaivanan Kovai*

**முனைவர் க.நாகேஸ்வரி,** உதவிப்பேராசிரியர்,
தமிழ்த்துறை, தெ.தி.இந்துக்கல்லூரி, நாகர்கோவில்.

**Abstract**

*Kovai Literature is one of the minor literary genre in Tamil Literature. Thanjaivanan Kovai gets special attestation for its delineation of Tamil cultural traits. In Kovai literature, secret love, marriage and chastity are the three inner segments in Thanjaivan Kovai. This article specifies about the virtues found in the selected literature.*

**Keywords:** Valediction Forbidding, *Thanjaivanan Kovai*, Tamil literature

இலக்கிய உலகில் தனக்கென தனி நிகர் கொண்டு திகழ்வது சிற்றிலக்கியங்களாகும். நூல் அறிவும், உலக அறிவும் நிரம்பிய புலவர் பெருமக்களுடைய பல திறப்பட்ட கற்பனைத் திறங்களை சிற்றிலக்கியங்கள் வாயிலாக அறிந்து கொள்ளலாம். அன்றைய கால அரசர்கள், அமைச்சர் படைத்தலைவர் வள்ளர் முதலானவர்கள் அறம், வீரும் திருப்பணிச் சார்ந்த கருத்துக்களை அறிந்து கொள்ளவும் 96 வகை சிற்றிலக்கியங்கள் பயன்படுகின்றன. இந்நூற்கள் அளவில் சிறியனவும், பெரியனவுமாக அமைந்திருந்ததால் மக்கள் தம் அறிவின் மென்மை, வன்மைக்கேற்ப இவற்றைக் கற்று தமிழறிவும், தமிழ் ஆர்வமும் பெறுவதற்கு இவை உதவிபுரிகின்றன. இத்துணைப் பெருமைவாய்ந்தவை சிற்றிலக்கியங்கள்.

**முன்னுரை**

96 வகை சிற்றிலக்கியங்களுள் ஒவ்வொரு இலக்கியத்திற்கும் தனித்தனி வரையறைகள் காணப்படுகின்றன. அவற்றுள் கோவை இலக்கியங்களும் ஒன்றாகும். கோவை நூல்கள் கடவுளர், அரசர், சிற்றரசர், பெருமக்கள் போன்றவர்களைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு இவர்களின் ஆட்சிக்குட்பட்ட நாட்டில் தலைவன், தலைவியரது ஒழுக்கம் நடைபெறுவதாகப் பாடப் பெறும் அத்தகைய கோவை நூலிற்கான இலக்கணம், பல்வேறுபட்ட கோவை நூல்களுள் தஞ்சைவாணன் கோவையின் சிறப்பியல்பும் அதன் கற்பியல் பகுப்பில் கூறப்பட்டுள்ள கருத்துக்களை எடுத்துரைப்பதே இவ்வாய்வுகட்டுரையின் நோக்கமாகும்.

**கோவை - இலக்கணம்**

அன்பும், பண்பும், அறிவும், திருவும் முதலானவற்றில் தம்முள் ஒப்புடையவராய் விளங்கும் தலைவனும், தலைவியும் ஊழ்வினை வயத்தால் தாமே எதிர்ப்பட்டு மனங்கலந்து களவில் ஒழுகுதலும் பின்னர் திருமணமாகிக் கற்பில் ஒழுகுதலுமாகிய இருநிலைகளையும் புனைந்துரை, உலகியல் எனும் இருதிறத்தினும் எடுத்துரைக்கும் நூல் கோவை எனப்படும்

**பல்வேறுபட்டகோவை இலக்கியங்கள்**

தமிழ் மொழியில் திருக்கோவையார், தஞ்சைவாணன் கோவை, பாண்டிக்கோவை, வெங்கைக் கோவை, கோடீச்சரக் கோவை, சீர்க்காழிக் கோவை என பல்வேறு கோவைகள் உள்ளன. அதில் தஞ்சைவாணன் கோவை சிறப்புப் பெற்றது.

**தஞ்சைவாணன்கோவையின் சிறப்பு**

பொய்யாமொழிப் புலவரால் எழுதப்பட்ட நூல், தஞ்சைவாணன் கோவையாகும். இந்நூல் 13-ம் நூற்றாண்டைச் சார்ந்தது. சிவகங்கை மாவட்டத்தில் உள்ள தஞ்சாக்கூரில்

E-ISSN: 2581-7140

Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

வாழ்ந்த சந்திரவாணன் என்னும் சிற்றரசனைப் பாட்டுடைத்தலைவனாகக் கொண்டு எழுதப்பட்டது. தஞ்சைவாணன் பாண்டிய நாட்டை ஆண்ட குலசேகரபாண்டியனின் படைத்தலைவனாகவும் அமைச்சராகவும் இருந்ததோடு மாறை என்னும் நாட்டை ஆண்டு வந்ததாகவும் *தஞ்சைவாணன் கோவை* கூறுகின்றது.

**நுலமைப்பு**

கோவை நூல்கள் அனைத்தும் அகப்பொருள் இலக்கியமாக எழுதப்படும். தமிழ் மரபிற்கு ஏற்ப இது தலைவன், தலைவியின் அகவாழ்க்கையைக் கூறுகின்றது. இந்நூல் களவியல், வரைவியல், கற்பியல் என்று மூன்றுபகுப்புகளைப் கொண்டது. இந்நூல் களவியல் 18 பிரிவுகளில் 86 பாடல்களும், கற்பியலில் 7 பிரிவுகளில் 59 பாடல்களும் மொத்தம் 425 பாடல்கள் அடங்கியுள்ளன. இந்நூல் கட்டளைக் கலித்துறை எனும் பாவகையால் எழுதப்பட்டுள்ளது. நாற்கவிராகநம்பி இயற்றிய அகப்பொருள் விளக்கம் என்னும் இலக்கண நூலை மையமாகக் கொண்டு தஞ்சைவாணன் கோவைப் படைக்கப்பட்டது. இந்நூலின் மூன்று பகுப்புகளுள் கற்பியலில் இடம் பெறுகின்ற பிரிவு நிலை விளக்கப்பட்டுள்ளது.

**கற்பியல்**

பிறர் அறியாத படி களவின்கண் பழகி வந்ததலைவனும் தலைவியும் ஊரார் அறியத் திருமணம் செய்து கொண்டு இல்லறம் நடத்துவது கற்பாகும். போலி வினைத் தருகின்ற சிறப்பினை உடையது கற்பாகும். இது தலைவன், தலைவியா் கூடலால் தோன்றும் உள்ள மகிழ்ச்சி. அது சிறக்கத் தோன்றும் ஊடல், அவ்வூடலை உணர்த்தல், தலைவன் தலைவியைப் பிரிதல், ஆகியவற்றுடன் பிறவும் பொருந்தியது என்று நம்பி அகப்பொருள் கூறுகின்றது.

**“பொற்பமைசிறப்பின் கற்புஎனப்படுவது**
**மகிழ்வும் ஊடலும் ஊடல் உணர்த்தலும்**
**பிரிவும் பிறவும் மருவியதுஆகும்.” (அக.வி.பா.எ 200)**

என்ற வரிகளால் அறிந்து கொள்ள முடிகின்றது.

இல்வாழ்க்கையில் தலைவன், தலைவி ஆகிய இருவரும் கூடி மகிழ்ந்து இல்லின் கண் வாழும் வாழ்க்கையின் சிறப்பினைக் கூறுவதாகும். இதனை,

**“கிழவோன் மகிழ்ச்சிகிழத்திமகிழச்சி**
**பாங்கிமகிழ்ச்சிசெவிலிமகிழ்ச்சியென்**
**நீங்குநால்வகைத் தில்வாழ்க்கையை” (அக.வி.பா.எ.202)**

என்ற வரிகள் சான்று பகிர்கின்றன. அக இலக்கியங்களில் பிரிவு நிலை என்பது தலைவன், தலைவி வாழ்க்கையில் இணைந்த ஒன்று. தலைவன் வினை முடித்தல், பொருளீட்டல், கற்றல் பொருட்டு தலைவியை பிரியும் நிலையை பிரிவு நிலை எடுத்துரைக்கின்றது. இதில் பெரும்பாலும் தலைவி, தலைவனை எண்ணி இருக்கும் பிரிவாற்றாமை பெரிதும் இடம் பெறுகின்றது. ஓதற்பிரிவு, காவற்பிரிவு, தூதிற்பிரிவு, துணைவயிற்பிரிவு, பொருள் வயிற் பிரிவு, பரத்தையர் பிரிவு போன்ற பிரிவுநிலைகள் இடம் பெறுகின்றன.

**ஓதற் பிரிவு**

ஆரிய கலைகளை கற்பதற்காகத் தலைவன் தலைவியைப் பிரியும் பிரிவே ஓதற் பிரிவு எனப்படும். மல்யுத்தத் தொழிலில் வல்லமை கொண்ட தோளினை உடையவனாகிய தஞ்சைவாணனின் பழமையான புகழாகிய நல்ல விதியினை அகன்ற பூவுலகில் உள்ளோர் நாவில் பயிராக வைத்தவனது வைகை நாடு போன்றவள். கல்வியாகிய பெரிய கடலை நீந்திக் கரை கண்ட தலைவர் திசைகளில் கற்றவர்களின் முன் தாம் கற்ற கல்வியால் உண்டான புகழ் வித்தை விதைக்க எண்ணி வெயில் மிக்க பாலை வழியில் செல்லத் துணிந்தார். இதனை,

**“மல்வித்தகங்கொண்டதோளுடையான் தஞ்சை**
**வாணன்தொல்சீர்**

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

**சொல்வித்தவென்றழலார்சுரம் போகத் துணிந்தனரே" (த.வா.கோ.பா.408 (1-41)**

என்றவரிகள் சான்றுபகர்கின்றன.

**காவற் பிரிவு**

உள் நாட்டில் ஏற்படும் கலகங்களை அடக்குதல், விழாவில் ஏற்படும் பெரிய கூட்டங்களைக் கட்டுப்படுத்தல், இயற்கை சீற்றங்களால் மக்களுக்கு ஏற்படும் துயரைப் போக்குதல், பகைவர்களால் நாட்டிற்கு ஏற்படும் தீமைகளைத் தடுத்தல் என்பன போன்றவற்றிற்கு தலைவன் தலைவியைப் பிரியும் பிரிவுகாவற் பிரிவுஎனப்படும். வானுலகப் பதவிக்கு உலகில் தவம் செய்து ஒருவர் வராதவாறு துன்பம் செய்து காவல் இருந்த திலோத்தமை முதலான பெண்கள் கண்களைத் தொலைவில் பார்க்காமல் காவலாகக் கொண்டு அருளப்பட்ட அழகியனையும் வாணனின் தஞ்சைநாட்டில் அருளப்பட்ட அழகினையும் வாணனின் தஞ்சைநாட்டில் பாடலைத் தன் வாயில் இருந்து போகவிடாமல் காவல் கொண்ட மொழியினையும் சிறந்தவாயிதழையும் உடைய கிளியை போன்றவள் காவலர் கடுமையான கடல் சூழ்ந்த மண்ணைக் காவல் காக்கும் மனம் உடையவராயினர்.

இதனை,

**"விண்காவல் கொண்டதிலோத்தமைதான்முதல்திலோத்தமைதான் முதல் மெல்லியலார்**
**பண்காவல் கொண்டமொழிச் செய்யவாயிழைப்பைங்கிளியே (த.வா.கோ. பா.1-6)**

என்ற வரிகள் காவற் பிரிவிற்கு சான்று பகிர்கின்றன.

**துாதிற்பிரிவு**

இரு அரசர்கள் தம்முள் மாறு கொண்டு போரிடத் துணிவர் அவ்விருவரின் பகையைத் தணிவித்து போரைக் கைவிடச் செய்தவற்குச் செல்வதே தூது ஆகும். அவ்வாறு செல்பவரைத் தூதர் என உரைப்பர். சொல்லில் வல்லவராகிய நாவலர்களின் பெரிய தாகத்தையும், வலிமையான பசியினையும் தீர்த்தருளிய தஞ்சவாணனி தென்மாறை நாட்டில் சந்திரன் மேல் அம்பு கிடந்தது போன்று முகத்தின் மேல் கண்களை உடையவள். இரு பெருவேந்தர்களும் பாசறை நோக்கிச் சென்று தங்கி இருக்கத் தலைவர் தூது செல்லத் துணிந்தார். இதனை,

**"துாதாகஅன்பர் செலத்துணிந் தாரென்றுஞ் சொற்புலவோர்**
**.....போதாகவம்புகல் வோரிகலார்தம் புரம்பகவே" (த.வா.கோ.பா. எ. 414 (1-4))**

என்ற வரிகள் பகிர்கின்றன.

**துணைவயிற் பிரிவு**

நட்புரிமையுள்ள மன்னனுக்கு பகை மன்னர் துன்பம் செய்தபோது அத:தன்பம் தீர்க்கத் தலைவர் மன்னனின் துணையாகப் பிரிந்து செல்லல். புனி பெய்யும் நீரைப் பொழிகின்ற குளுமையான கருங்குவளை மாலை அணிந்த அழகிய தோள்களை உடைய வாணனின் தமிழ்த் தஞ்சை நாட்டில் வாழ்கின்ற வெண்மை நிறம் பொருந்திய பாலின் இனிமையைக் கொண்ட சிவந்த வாயினையும், அன்னம் போன்ற நடையினையும் உடையவள். நம் மன்னர் தமக்கு நட்பான மன்னருக்குப் பகை வந்தால் அதன் துன்பத்தைத் தணிக்கும் பொருட்டாகக் கருதி நல்லுதவிக் குணத்தினாலே சென்றார். இதனை,

**"நண்பானமன்னர் கிடர்தணிப் பானெண்ணிநல்லுதவிப்**
**...வெண்பால் நலஙடகொள் செவ் வாயன்னமேயன்னமென்னடையே**
**(த.வா.கோ. பா.எ 417 (1-4)**

என்ற வரிகள் மெய்ப்பிக்கின்றன.

**பொருள் வயிற்பிரிவு**

தலைவனும் தலைவியும் இணைந்து வாழும் பொருட்டு பொருளீட்ட தலைவன் பிரிந்து செல்வது பொருள் வயிற் பிரிவு ஆகும்.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

நல்ல நீண்ட பிறை போல நெற்றியினை உடையவள். மேகத்தை அணிந்த மதில்கள் சூழ்ந்திருக்கும் மாறை நாட்டில் வரத்தினால் பிறந்த வாணனின் குலத்துக்கு உரியவனாகிய தஞ்சை மன்னனை எண்ணாதவர்கள் போலத் தனியாகநாம் இருக்கத் தன் மனத்தைப் பொருளிளல் வைத்துத் தம் கணவர் பிரியும் பொருட்டாக கூறினார் என்பதனை,

**"மஞ்சைப் புனைமதில் மாறைவரோதயன் வாணர்பிரான்**
**...பிஞ்சைப் புரைநுத் லாய்பிரிவானின்றுபேசினாலும்" (த.வா.கோ.பா.எ.420 (1-4)**

என்றவரிகளால் அறிந்துகொள்ளலாம்.

**பரத்தையர் பிரிவு**

பரத்தையர் பிரிவு என்பது தலைமகன் பரத்தையின் மேல் கொண்ட காதல் காரணமாக தலைவன், தலைவியை பிரிந்து செல்லுதல் பரத்தையர் பிரிவாகும். பரத்தையர் பிரிவுயாது என்பதை தஞ்சைவாணன் கோவையும் கூறுகின்றது. விளங்கும் சூழலுடைய பரத்தையர் அறிவைக் கொள்ளை கொள்ளும், பொருட்டாகக் கொங்கையாகிய யானையுடன் திருவிழாச் செய்யும் வீதியும் வண்டாகிய பறைகள் ஆரவாரிக்க வயலூரனைச் சூழ்ந்தனர். ஆதலால், மாறையர் காவலனாகிய வாணன் தென் தஞ்சையிலிருக்கும் வாணுதற்கு இம்முறைமை புலவி செய்வதற்குக் காரணமாம்.

**"மாறையர் காவலன் வாணன்தென் தஞ்சையில் வாணுதற்கின்**
**...சூறையர் சூறைகொள் வான்வயலூரனைச் சூழ்ந்தனரே. (த.வா.கோ)**

என்ற வரிகள் சான்றுபகிர்கின்றன.

**தொகுப்புரை**

- 96 வகை சிற்றிலக்கியங்களுள் கோவை இலக்கியமும் ஒன்றாகும். இக்கோவை இலக்கியங்கள் அகப்பொருள் இலக்கியமாகத் திகழ்கின்றன.
- கோவை நூல்களுள் தஞ்சைவாணன் கோவை சிறப்புமிக்கது.
- இந்நூலினை பாடியபுலவர், நூலின் உட்பிரிவுகள் அறிந்து கொள்ள முடிகின்றது.
- களவியல், வரைவியல், கற்பியல் என்னும் பிரிவுகளுள் கற்பியலில் இடம் பெறுகின்ற பிரிவு நிலைகள் விளக்கப்பட்டுள்ளது.
- தலைவன் - தலைவியின் கற்பு வாழ்க்கையில் இடம் பெறுகின்ற பிரிவு நிலைகளின் வாயிலாக பிரிவாற்றாமை உணர்ந்து கொள்ள முடிகின்றது.
- கற்பியலில் பிரிவு நிலை மட்டுமின்றி கூற்றுநிலைகளும் இடம் பெறுகின்றன.

**அடிக்குறிப்புகள்**

1. அகப்பொருள் விளக்கம் (பா.எ.200) ப.எண. 125.
2. மேலது பா.எ.202, ப.எ. 126.
3. தஞ்சைவாணன்கோவை, ப.எ. 163.
4. மேலது ப.எ 164.
5. மேலது ப.எ 165.
6. மேலது ப.எ 166.
7. மேலது ப.எ 167.
8. மேலது ப.எ 309.

**துணைநூல்**

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

# சங்க இலக்கியம் உணர்த்தும் பொருளின் முதன்மை

## The Importance of Wealth (porul) as Enunciated by Sangam Literature

**முனைவர் ஐ.பபீதா,** உதவிப்பேராசிரியர்,
தமிழ்த்துறை, அக்சிலியம் கல்லூரி, காட்பாடி, வேலூர் - 632006.

**Abstract**

*Sanga Ilakkiyam (Literature) is the way to learn about ancient Tamils and understand their life. The spirit expresses the cultural environment of the people of that time and the noble nature of giving to others. In the qualified Sangam literature of monastic literature, the world has a lofty purpose that no other language has, and that it has the quintessence of charity, meaning, pleasure, and the life of all, and the life of all. All these elements are recorded in the human minds through literature, so that all people should live with the heavenly life of the hereafter with the worldly life of this world. The people of the Sangha have come to realize that it is the primary means of fulfilling the need, to indulge in pleasure, to make ARAM for others, to cause suffering and to destroy the enemy. The ancestors thought that the wealth they earned from their efforts was greater than the wealth they sought. The war plays a major role in fulfilling material needs. They gave great meaning to the war and gave it to others. And so did the admiration. This article explores the essence of the subject, highlighting the need for material to further the existence and consciousness of world life.*

**Keywords:** Importance of Wealth (porul), Enunciated in Sangam Literature

### முன்னுரை

பழந்தமிழர்கள் குறித்து அறிந்து கொள்வதற்கும் அவர்களின் வாழ்வியலைப் புரிந்து கொள்வதற்கும் வழிவகை செய்வது சங்க இலக்கியங்களே. ஆவை அக்கால மக்களின் பண்பாட்டு சூழலியலையும் பிறருக்கு கொடுத்து உதவும் உன்னத தன்மையையும் அழகியலோடு வெளிப்படுத்தி நிற்கின்றது. செம்மொழி இலக்கியம் என்ற தகுதி பெற்ற சங்க இலக்கியத்தில் உலக மொழிகளில் எம்மொழிக்கும் இல்லாத பாகுபாடான அகம் புறம் என்ற உயரிய நோக்கத்தைப் பெற்று விளங்குவதோடு, அறம், பொருள், இன்பம், வீடுபேறு என்ற உறுதிப்பொருள் நான்கினையும் பெற்று அனைவரின் வாழ்வியலையும் இந்த உறுதிப்பொருளோடு இயங்க வைத்திருக்கும் பாங்கு பாராட்டுதற்குரியது. மக்கள் அனைவரும் இம்மைக்கான இவ்வுலக வாழ்வியலோடு மறுமைக்கான வீடுபேற்றை பெற வேண்டும் என்ற அடிப்படையில் இந்த உறுதிப் பொருட்கள் நான்கும் இலக்கியத்தின் ஊடாக மனித மனங்களில் பதிவு செய்யும் வகையில் பாடல்கள் அமைந்துள்ளன. உலக வாழ்க்கையில் இல்லறத்தையும் அறத்தையும் மேற்கொண்டு ஒழுக பொருள் இன்றியமையாத் தேவை என்பதனை முன்னிறுத்தி இக்கட்டுரையானது பொருளின் முதன்மையை மிக நுட்பமாக ஆராய்ந்து செல்கின்ற வகையில் அமைந்துள்ளது.

### பொருளின் முதன்மை

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

பொருளின் முதன்மையை உணர்ந்த மக்கள் இல்லற வாழ்விற்கு பொருள் இன்றியமையாதது என்பதைக் கருதி பொருள் வயின் பிரிவை மேற்கொண்டனர். பெரும் பொருளைப் பெற்றுத்தருவதில் போர் முதன்மை பங்குவகித்ததால் போரிலும் ஈடுபட்டனர். கைப்பற்றிய பொருளை பிறருக்கும் கொடுத்தனர்.

இல்லாதவர்க்கும் கொடுத்தோம்பி வாழ்ந்த இவ்வாழ்வின் நீட்சியாக கொடை உருவாகின்றது. இனக் குழு வாழ்விலிருந்து உற்பத்தி சார்ந்த நுகர்வு வாழ்க்கைக்கு சமுதாயம் வளர்ந்தபோது, மிகை உற்பத்தி வழியே உடைமைச் சிந்தனையும், உடைமை வழியே நுகர்வின் மீதான பெருமிதமும் அமைந்தது. நுகர்வு, உணவுத் தேவை என்ற எல்லைத் தாண்டி பிற இன்பங்களுக்காகவும் பொருள் தேவையை விரித்தது.

பண்டமாற்று வணிகமானது நகர நாகரீகத்தில் சந்தை வணிகமானது. இங்கு ஒரு நிலப்பகுதியிலிருந்து மற்றொரு நிலப்பகுதிக்குச் செல்லாமலேயே தம் நிலத்தில் விளைந்த பொருளுக்கு பதிலாக வேற்று நிலப்பொருளை வணிக வீதியில் பெற்றனர். இதனால் விளை பொருள்கள் பண்டமாற்றாதல், பிறநுகர் பொருள்கள் பணமாற்றாதல் என்று பொருளின் தேவை விரிவதை உணர முடிகின்றது. பொருள் இருந்தால்தான் பிறருக்குக் கொடுத்துத் தானும் வாழ முடியும் என்பதாலும், இல்லற வாழ்க்கைக்கு பொருள் இன்றியமையாதது என்று உணர்ந்ததாலும் பொருள் ஈட்டி வரும் பொருட்டு தலைவன் தலைவியை விட்டு செல்கின்றான். பொருள் இல்லையாயின் உலகத்திலுள்ள இன்பங்கள் எதையும் துய்க்க முடியாது என்பதனை,

**"இல்லோன் இன்பம் காமுற் றாஅங்கு" (குறுந்.120:1)**

என்கிறார் பரணர்.

பொருள் தேவையே ஒருவனை பாவ நெறியிலும் செல்லச் செய்கிறது என்ன தான் அறத்தை முதன்மையானது என்று போற்றினாலும், அவ்வறமும் பொருள் இல்லாமல் போனால் இல்லாமல் போகிறது, எனவே தான் எக்காலத்தும் பாவநெறியில் செல்லாத வாழ்க்கையும், பிறர் வீட்டு வாயிலின் சென்று நின்று இரவாத மேம்பாடும் ஆகிய இவ்விரண்டும் பொருளாலேயே ஆகும். இதனை,

**"அறன் கடைப் படாஅவாழ்க்கையும்,என்றும்
பிறன் கடைச் செலாஅச் செல்வமும், இரண்டும்
பொருளின் ஆகும்" (அகம்.155:1-5)**

என்கிறார் பாலை பாடிய பெருங்கடுங்கோ.

தன்னைச் சேர்ந்தவர்களின் துன்பத்தை கண்டபோது அஞ்சி, நெகிழ்ந்து உருகி, அதைப் போக்கி இன்புற்று வாழும் தன்மையே சான்றோர் சிறந்த செல்வமாக போற்றினர். இதனை,

**"சான்றோர் செல்வம் என்பது,சேர்ந்தோர்
புன்கண் அஞ்சும் பண்பின்
மென்கட் செல்வம் என்பதுவே" (நற்.120:7-9)**

என்று *நற்றிணை* கூறுகிறது. அவ்வாறே ஆயினும் சேர்ந்தோர் துன்பத்தைப் போக்கவும் பொருள் தேவைப்படுகிறது. இதனை,

**"ஈதலும் துய்த்தலும் இல்லோர்க் கில்லை" (குறுந்.63)**

என்கிறார் உகாய்க்குடிக் கிழார்.

தம் பகைவரின் செருக்கினை அழித்தற்கும், தம்மை சேர்ந்தோர்க்கு ஒரு தீங்கு நேருமிடத்து உதவி செய்வதற்கும் பொருள் தேவை என்று உணர்ந்த தலைவன் பொருள் தேடிப் பிரிந்துள்ளான் என்பதை,

**"செறுவோர் செம்மல் வாட்டலும் சேர்ந்தோர்க்கு
உறும் இடத்துஉய்க்கும் உதவிஆண்மையும்
இல் இருந்துஅமைவோர்க்கு இல் என்றுஎண்ணி
நல் இசைவலித்தநாணுடைமனத்தர்**

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

**கொடுவில் கானவர் கணைகுடத் தொலைந்தோர்" (அகம்.231:1-5)**

என்னும் அகநானூற்றுப் பாடல் அடிகள் குறிப்பிடுகின்றன. அவ்வளவில் இன்றி, உறவினரின் துன்பத்தைப் போக்க உதவுவதால் சுற்றத்தையும் பெருக்குவதாகப் பொருள் அமைகிறது. இதன் காரணமாகவேதன் சுற்றத்தைப் பெருக்கிக் கொள்ள போர் மேற் சென்று பொருளீட்டும் சோழனை,

**"கேள் கேடுஊன்றவும்,கிளைஞர் ஆரவும்**
**கேள் அல் கேளிர் கெழீஇயினர் ஒழுகவும்**
**ஆள்வினைக்குஎதிரியஊக்கமொடுபுகல் சிறந்து**
**ஆரங் கண்ணிஅடுபோர்ச் சோழா" (அகம்.93:1-4)**

என்னும் அப்பாடல் அடையாளப்படுத்துகிறது.

அகநானூற்றின் கருத்திற்கு அரண் செய்வதாக திருக்குறளும், பொருள் தம் பகைவன் தருக்கினை அறுக்கும் கூரிய படைக்கலமாகப் பயன்படும் என்பதனை,

**"செய்கபொருளைச் செறுநர் செறுக்கறுக்கும்**
**எஃகதனிற் கூரியது இல" (குறள்.759)**

என்ற குறட்பாவினாலும் உணரலாம்.

தம் சுற்றத்தார் பொருள் இல்லாது இருப்பதையும், பகைவர் பெருஞ் செல்வத்துடன் இருப்பதையும் கண்டு கவலையுற்றுக் கொண்டிருப்பது தீயைப் போன்றதுஎன்றும், அத்தீயை அணைக்கும் மழை போன்றது பொருள்தேடும் முயற்சிஎன்று இருங்கோன் ஒல்லையான் செங்கண்ணார் குறிப்பிடுகின்றார். இதனை,

**"நட்டோர் இன்மையும்,கேளிர் துன்பமும்**
**ஒட்டாதுஉறையுநர் பெருக்கமும்,காணூஉ**
**ஒருபதிவாழ்தல் ஆற்றுதில்ல**
**பொன் அவிர் கணங்கொடுசெறியவீங்கிய**
**மென்முலைமுற்றம் கடவாதோர் என**
**நள்ளென் கங்குலும் பகலும் இயைந்து இயைந்து**
**உள்ளம் பொத்தியஉரம்சுடு கூர்எரி**
**ஆள்வினைமாரியின் அவியா" (அகம்.279:1-8)**

எனும் பாடல் அடிகள் உணர்த்துகின்றன.

இங்ஙனம், இல்லறத் தேவையை நிறைவு செய்தல், இன்பத்தை துய்க்கச் செய்தல், அறத்தைச் செய்தல், பிறர் துன்பத்தைப் போக்குதல், பகைவரின் செருக்கை அழித்தல், சுற்றத்தைப் பாதுகாத்தல் பெருக்குதல் ஆகியவற்றிற்கு பொருளே முதன்மையாவதை உணர முடிகின்றது.

**பொருள்வயிற் பிரிவு**

அகவாழ்வில் பொருள் தேவையால் ஏற்படும் பிரிவை அறம் முதலியவற்றை செய்ய, ஒள்ளிய பொருளாக்குதற்கு முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என சொல்லிய நால்வகை நிலத்தவரும் தம் தலைவியைப் பிரிந்து செல்வர் என்று குறிப்பிடுகின்றார் தொல்காப்பியர். இதனை,

**"மேவியசிறப்பின் ஏனோர் படிமைய**
**முல்லைமுதலாச் சொல்லியமுறையாற்**
**பிழைத்ததுபிழையாதாகல் வேண்டியும்**
**இழைத்தஒண்பொருள் முடியவும் பிரிவே" (தொல். பொருள்.நூற்.30)**

எனும் நூற்பா உணர்த்துகின்றது.

முன்னோர்கள் தேடி வைத்த பொருளை தான் நுகர்ந்தும், பிறருக்கு கொடுத்தும் வாழும் பெருஞ்செல்வம் உடையவர்களாயினும் அவர்களைச் செல்வர்கள் என்று சான்றோர்

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

மதிப்பதில்லை. தன் முயற்சியால் பொருள் தேடாது முன்னோர் பொருளை நுகர்தல் இரத்தலை விட இழிவானது என்று கருதினர். ஆதலால் முயன்று பெற்ற தலைவியோடு காதல் இன்பம் நுகர்கின்ற இளமைப் பருவத்தும் பொருள் தேடிப் பிரிகின்றனர். இதனை,

**"இளமைபாரார் வளநசைஇச் சென்றோர்**
**இவனும் வாராரெவணரோவெனப்**
**பெயல்புறந் தந்தபூங்கொடிமுல்லைத்**
**தொகுமுகையிலங்கெயிறாக**
**நகுமேதோழிநறுந்தண் காரே" (குறுந்.126)**

என்னும் தலைவி கூற்று பாடல்வழி உணர முடிகின்றது. அவ்வாறு பிரிந்த காலத்து இருவருக்கும் ஏற்படும் காமவேட்கையை பிறர் அறியுமாறு வெளிப்படாமல் காத்து ஆற்றியிருத்தலே கற்பொழுக்கமாகும்.

**போரின் இன்றியமையாமை உணர்தல்**

பொருள் தேவையை நிறைவு செய்வதில் உற்பத்தியை விட பிறர் பொருளை கைப்பற்றலே எளிமையாகவும் பெருமளவு கிடைப்பதாகவும் இருந்தது. ஆதலால் பிறர் பொருளைக் கைப்பற்றுவதற்கு வலிமையுடைய வீரர்கள் ஒன்றாகத் திரண்டு அவர்கள் தலைவன் வழி நடத்து சென்று பிறர் பொருளைக் கைப்பற்றினர். அது போரென்றானது. அவ்வாறு கைப்பற்றிய பொருளை பிறருக்கும் கொடுத்ததால், சமூகத்தில் போர் முதன்மை அங்கத்தை வகிக்கத் தொடங்கியது. அகவாழ்க்கைக்குத் தேவையான புறவாழ்க்கைத் சூழலில் போர் முதன்மையாகக் கருதப்பட்டது. எனவே தான் மனித வாழ்வியலுக்கு இலக்கணம் வகுத்த தொல்காப்பியர் அகம் புறம் என இரண்டாகப் பிரித்து புறத்தில் போரை முதன்மையாக்கி அதற்கு துறைகளை வகுத்து இலக்கணம் விளக்குகின்றார்.

**தொகுப்புரை**

தம்மிடம் உள்ள பொருளை பிறருக்கு கொடுப்பதே கொடையாகும். செல்வத்தைப் பெற்ற தன் பயன் பிறருக்குக் கொடுத்துப் புரப்பதுவே என்ற நிலையில் கொடை சமுதாயத்தில் தோற்றம் பெறுவதைக் காண முடிகின்றது.

இல்லறத் தேவையை நிறைவு செய்வதற்கும், இன்பத்தை துய்ப்பதற்கும், அறத்தையும் செய்வதற்கும், பிறர் துன்பத்தைப் போக்குதற்கும், பகைவரின் செருக்கை அழித்தற்கும், சுற்றத்தைப் பாதுகாத்து உறவை பெருக்கிக் கொள்வதற்கும் பொருளே முதன்மை என்பதை உணர்ந்தனர்.

முன்னோர்கள் தேடித்தந்த பொருளை தான் நுகர்ந்தும் மற்றவர்க்கு தந்த போதிலும் சான்றோர்கள் அத்தகையவர்களை செல்வர்கள் என்று மதிக்கவில்லை, தன் முயற்சியால் பெறுகின்ற பொருளே உயர்வானது என்றதால் பொருகளைத் தேடிப் பிரிகின்றனர்.

பொருள் தேவையை நிறைவு செய்வதில் போர் முதன்மை வகிக்கின்றது. பொருளுக்காக நடந்த போரில் பெரும்பொருள் பெற்று பிறருக்கு கொடுத்தனர். அதனால் புகழும் அடைந்தனர்.

பொருளானது சமுதாயத்தில் உறவுகளை வளப்படுத்த துணை நிற்பதால் கொடுக்கும் மனப்பான்மை சங்க சமுதாயத்தில் மிகுதியாகவே காணப்பட்டது என்பதனை இக்கட்டுரை தெளிவாக்குகின்றது.

**பார்வை நூல்கள்**

1. குறுந்தொகை மூலமும் உரையும், உ.வே. சாமிநாதையர், உ.வே.சா.நூல் நிலையம், ஐந்தாம் பதிப்பு, 2000, சென்னை.
2. நற்றிணை மூலமும் உரையும், கதிர். மகாதேவன், கோவிலூர் மடாலயம், முதற்பதிப்பு 2003, கோவிலூர்.

E-ISSN: 2581-7140

Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

3. அகநானூறு,அ. மாணிக்கம், வர்த்தமானன் பதிப்பகம், முதற்பதிப்பு 1999, சென்னை.
4. தொல்காப்பியம், புலியூர் கேசிகன், பாரிநிலையம், இரண்டாம் பதிப்பு 2009, சென்னை.
5. சங்ககாலசமுதாயம், க.சுப்பிரமணியன், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், நான்காம் பதிப்பு 1971, சென்னை.
6. திருக்குறள், ப. சாமியப்பன், சரண் புக்ஸ், முதற் பதிப்பு 2014, சென்னை.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

# அநீதியான வெப்ப மிகுதியதை அகற்றிக் காத்திடும் நீதியாகிய மழை

## The Just Rain that Saves from the Unjust Heat

**முனைவர் செ.பாண்டியம்மாள்,** தலைவர் (ம) உதவிப்பேராசிரியர்,
தமிழ்த்துறை, வியாசா கலை மற்றும் அறிவியல் மகளிர் கல்லூரி, வாசுதேவநல்லூர் - 627758.

**Abstract**

*When the heat is high, the sky becomes clouded and by condensation process the rain falls. It is the nature of the rain, when the heat of the heat is so great. There is no doubt that everything described in this article is an event in our whole life with nature. Thiruvalluvar has a broader purpose in depicting nature and it power on us. His concept on rain reveals us how rain is very important in our life. Today, in the extreme level of pollution in all levels and the deforestation deliberately made by the human beings has led to the earth in deep water crisis.*

**Keywords:** Just Rain, Unjust Heat, Thirukkural, Thiruvalluvar, Importance of rain

**முன்னுரை**

திருவள்ளுவர் என்பவர் இரண்டாயிரம் ஆண்டுகளுக்க முன் தமிழகத்தில் அவதரித்த தெய்வீகப் புலவர் ஆவார். வெப்பம் மிகுதியான பொழுது வானத்தில் மேகம் தோன்றி மழை பெய்வது இயல்பு. அதுபோல் அநீதியான வெப்பம் மிகுதியானபோது, ஞானமாகிய வானத்தில் அருளாகிய மேந்தோன்றி, நீதியாகிய மழை 1330 முறை பெய்ந்தது, பெய்கின்றது, பெய்யும். ஆந்த நீதி, நீர், பள்ளம், மேடு முதலிய எல்லா இடங்களிலும், இன்னும், தேங்கி நிற்கிறது.அறவுலகம்,பொருளுலகம், இன்ப உலகம் என்ற மூன்று உலகங்களும் செழித்தன. அம்மேகம் வேறு யாருமல்ல, நம் தெய்வப்புலவர் திருவள்ளுவர். அம்மழை நீர் தான் திருக்குறள். உலகத்தை உள்ளத்தைத் திறக்கும், திருத்தும் திறவுகோல். மனசாட்சியை முன்னிறுத்தி மெய்மொழியை வெளிப்படுத்திடும் முப்பால் வேதம்.இன்றைய சமுதாய வாழ்வியல் ஒழுக்கலாறுகளுக்கு மிகவும் இன்றியமையாத இலக்கியம் இதுவெனல் மிகா. வள்ளுவர் வழியில் வாழ்வியல் நெறிகளை இன்றைய சூழலுடன் இணைத்து விளக்கமுறை ஆய்வைப்பயன்படுத்தி இக்கட்டுரையில் ஆய்வுக் கருத்துக்கள் பதிவு செய்யப்பட்டுள்ளது. இக்கட்டுரையில் விளக்கியுள்ள அனைத்தும் நமது எதார்த்த வாழ்வில் நிகழும் நிகழ்வுகளே என்பதில் சிறிதும் ஐயமில்லை.

**அறங்களை இடித்துக் கூறுமியல்பு**

திருவள்ளுவர் பரந்த நோக்கம் உள்ளவர். எந்த மதத்தையும் சாராது, பொது நிலையில் நின்று, ஏனோரும், வானோரும் ஒபபுக்கொள்ளுகின்ற முறையில் திருக்குறளைப் பாடி உதவியருளினார். யார் மனமும் நோவாது அறங்களை இடித்துக் கூறும் இயல்புடையவர்.

**மூன்று பிரிவு**

மனிதர்களில் மூன்று பிரிவுகள் உண்டு. மனிதரில், 1. மனிதரில் விலங்கு, 2. மனிதரில் மனிதர் மற்றும் 3. மனிதரில் தேவர்.

**மூன்றின் விளக்கம்**

1. அசை உள்ளம் படைத்தவன் - விலங்கு
2. அன்புள்ளம் படைத்தவன் - மனிதன்

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

3. அருள் உள்ளம் படைத்தவன் - தேவன்.

**தேவன் - பொருள் விளக்கம்**

தேவன் என்ற சொல்லுக்கு ஒளியுடையவன் என்பது பொருள். திவ்ய என்ற பகுதியடியாகத் தேவன் என்ற சொல் பிறந்தது என்பர்.

**விலங்கு - பொருள் விளக்கம்**

தக்கென வாழ்கின்றவன் விலங்கு. ஆசை வாழ்க்கை இருள் சூழ்ந்தது.

**மனிதன் - பொருள் விளக்கம்**

பாதி தனக்காகவும், பாதி பிறருக்காகவும் வாழ்கின்றவன் மனிதன். அன்பு வாழ்க்கை இன்ப மயமானது.

**தேவன் - பொருள் விளக்கம்**

பிறருக்கு என்றே வாழ்கின்றவன் தேவன். அருள் வாழ்க்கை ஒளிமயமானது.

**எடுத்துக்காட்டு :**

**ஆசை வாழ்க்கை இருள் சூழ்ந்தது - விலங்கு**
**அன்பு வாழ்க்கை இன்ப மயமானது - மனிதன்**
**அருள் வாழ்க்கை ஒளி மயமானது - தேவர்**

திருவள்ளுவர் மனிதரில் தேவர். ஆதனால் அவரைத் திருவள்ளுவ தேவர் எனப் பெரியவர்கள் கூறுவார்கள்.மற்றும் தெய்வப் புலமை என்று திருவள்ளுவரையும் சேக்கிழரையுமே குறிப்பிடுவது ஆன்றோர் மரபு.

**ஒன்றே முக்கால் அடி**

ஞானத்தின் திருவுருவாகிய தட்சிணாமூர்த்தி,சனகாதி முனிவர்கள் நால்வர்க்குச் சகல வேத ஆகம புராணங்களின் முடிவாகிய உட்பொருளைத் தமது திருககரத்தால் சின்முத்திரையாகக் காட்டி உபதேசித்தருளினார்.நிறைந்த அறிவுள்ளவர்கள் குறிப்பாலும், சுருங்கிய சொற்களாலும் விளக்கி விடுவார்கள்.பல்லாயிரம் சொற்களால் சொல்ல வேண்டியதைப் பேரறிஞர்கள் சில சொற்களால் அழகாகவும், அருமையாகவம் சொல்லுவார்கள். திருமால் குறளாகி (குள்ள வடிவினராகி) இரண்டு அடிகளால் மூன்று உலகங்களையும் அளந்தார். திருவள்ளுவர் ஒன்றே முக்கால் அடியால் பதினாறு உலகங்களையும் அளந்துவிட்டார்.

**கடவுள் வாழ்த்து**

முதலாவதாக திருவள்ளுவர் **'கடவுள்'** வாழ்த்து என்று கூறினார். 'கடவுள்' என்ற சொல் **'செலுத்துவது'** என்ற பொருள் பயக்கும். கடவுதல் - செலுத்துதல், செய்வது செய்யுள் என வந்ததுபோல், உலகங்களையும் உயிர்களையும் செலுத்துவது கடவுள், உயிர்க்குயிராய் நின்ற பொருள் கடவுள்.

**உதாரணம்**

ஒரு வண்டியைச் செலுத்துகின்றவன் அந்த வண்டிக்குள்ளேயே இருந்து செலுத்துவது போல், கடவுள் உடம்புக்குள், உயிருக்குள் நின்று இவற்றைச் செலுத்துகின்றான். எள்ளுக்குள் எண்ணெயைப்போல், உயிருக்கு உயிராய் இறைவன் இருக்கின்றான்.

**"உரைசேரும் எண்பத்துநான்கு நூறாயிரமாம் யோனி பேதம்**
**நிரைசேரப் படைத்தவற்றின் உயிர்க்குயிராய் ஆங்காங்கே நின்றான்"**

என்கின்றார் திருஞான சம்பந்தர். ஆகவே, திருவள்ளுவர் இறைவனைக் கடவுள் என்ற சொல்லாலேயே உணர்த்தினார். கடவுளை ஏன் நாம் வாழ்த்தவேண்டும் என்ற ஒரு வினா எழும். நாம் வாழ்த்தியா கடவுள் வாழப்போகின்றார்? **எ**ப்பொழுதும் அழிவற்ற பொருளாக, இன்பவடிவினராக, எல்லாம் செய்ய வல்லவராக, முடிவில்லாத ஆற்றலுடையவராக இருப்பவர் கடவுள். அப்படியிருக்க அவரை வாழ்த்துவது எதற்கு?

**இறைவனை வாழ்த்தினால் அனைத்துயிர்களும் வாழும்**

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019
Available at: www.ijtlls.com

ஒரு நூலில் ஆயிரம் மணிகளைக் கோர்த்து வைத்திருக்கின்றது. ஆயிரம் மணிகளையும் அசைக்க வேண்டுமானால் ஒவ்வொரு மணியாகப் பிடித்து அசைப்பது அறிவுடைமையாகாது ஆயிரம் மணிகளுக்குள்ளும் ஊடுருவி நிற்கும் நூலைப்பிடித்து அசைத்தால் ஆயிரம் மணிகளும் தாமே அசையும். அதுபோல் எல்லா உயிர்களுக்குள்ளும் உயிருக்குயிராய் ஊடுருவி நிற்கும் இறைவனை வாழ்த்தினால் எல்லா உயிர்களும் வாழும்.

**உயிர்களிடத்தில் கருணை**

இந்த அரிய கருத்தையொட்டியே திருவள்ளுவரும்,

**“மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார்**
**நிலமிசை நீடு வாழ்வார்”**

என்று கூறினார். ஆன்மாக்களின் இதய தாமரையாகிய தகராகாச புண்டரீகத்தில் விளங்குகின்ற எம்பெருமானை வாழ்த்தி வணங்கி வழிபடுவார் என்றும் இன்புற்று நீடுவாழ்வார். எல்லாவுயிர்களும் ஈசன் கோயில்கள், ஆதலின் அனைத்தையும் ஓம்புதல் வேண்டும். இதுவே ஆன்றோர்கள் தொகுத்த அறங்கள் அனைத்திலும் தலையாயது என்று கூறுகின்றார்.

**“பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல் நூலோர்**
**தொகுத்தவற்றுள் எல்லாம் தலை.”**

உயிர்களிடத்தில் அளவு கடந்த கருணை வைத்தாலன்றி, கடவுள் கருணையைப் பெற முடியாது என்பது வள்ளுவரின் முடிந்த முடிவான கருத்து. அவர் கூறும்போது அந்தக் கருத்தைச் சிறதுகூட மயங்க வைக்காது தெளிவாகத் தெரிவிப்பார்.

**“ஒன்றாக நல்லது கொல்லாமை. மற்றதன்**
**பின்சாரப் பொய்யாமை நன்று.”**

இவ்வாறு திருவள்ளுவர் அநேக அறங்களை அழகாகவும், ஆழமாகவும், தெளிவாவும், இனிமையாகவும் கூறியுள்ளார்.

**பகுப்பின் சிறப்புத் தன்மை**

இது அறம், பொருள், இன்பம் என்னும் முப்பாலையும் 133 அதிகாரங்களையும், 1330 பாடல்களையும் கொண்டது. திருக்கறள் சிந்தைக்கு இனியது. சேவிக்கு இனியது. வந்த வினைக்கு மருந்தாக இருந்து உதவுவது.சுருங்கச் சொல்லல், விளங்க வைத்தல் என்ற அழகுகளையுடையது திருக்குறள். மிக விரிந்த கருத்துக்களை மிகச் சுருங்கிய சில சொற்களால் கூறும் திறமுடையது திருக்குறள்.

**திருமாலும் திருக்குறளும்**

**“ஒருமுறைக்குப் பத்து முறைகூறு”** என்று ஆன்றோர்கள் கூறுவார்கள். திருக்குறளும் ஒவ்வொரு பொருளைப் பற்றிப் பத்துப் பத்துப் பாடல்களாகக் கூறுகின்றது. கோயில்களில் பெரு விழாவும் கொடியேற்றி பத்து நாட்கள் கொண்டாடப்படுகின்றது. திருமாலும் உலகம் உய்யுமாறு பத்துமுறை அவதாரஞ்செய்தார்.

**திருக்குறளின் தனிச்சிறப்பு**

‘**அ**’, கரத்தில் தொடங்கி ‘ன்’கரத்தில் முடியும் சிறப்பு திருக்குறளின் தனிச் சிறப்பாகும் இனி தமிழ் எழுத்துகளில் முதல் எழுத்து ‘**அ**’ இறுதி எழுத்து ‘**ன்**’. திருக்குறளில் முதற் குறள் அகரத்திலேயே தொடங்குகின்றது.

**“அகர முதல எழுத்தெல்லாம் ஆதி**
**பகவன் முதற்றே உலகு”.**

இறுதிக் குறள் ‘**ன்**’ என்ற எழுத்தில் முடிவு பெறுகின்றது.

**“ஊடுதல் காமத்திற் கின்பம் அதற்கின்பம்**
**கூடி முயங்கப் பெறின்”.**

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

இதனால் தமிழ் எழுத்துக்களில் முதல் எழுத்தில் தொடங்கி, முடிவு எழுத்தில் முடிகின்ற நூல் இந்த நூல் ஒன்றுதான்.

**அரிய நூல்**

இது தன்னிலையில் அனைத்துணையும் சிதையாததும், பாடபேதம் இல்லாததும் ஆகிய நூல். இது இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் தமிழகம் செய்த தவப் பயனாய் எழுந்த அரிய நூல். இதில் அடங்காத நீதி ஒன்றுமில்லை. கணவனும் மனைவியும் கூடி வாழ்வது எதன் பொருட்டு? என்ற வினாவை எழுப்பிக் கொண்டு, அந்த வினாவுக்கு அருமையாக விடை கூறுகின்றது திருக்கறள்.

**கடமைகளுள் மேலான கடமை**

நாயகனும் நாயகியும் வீட்டில் இருந்து செல்வதை ஓம்பி வாழ்கின்ற காரணம் விருந்தினரை ஓம்பி உதவி செய்யும் பொருட்டே என்று கூறுகின்றது திருக்குறள்.

**“இருந்தோம்பி இல்வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி**
**வேளாண்மை செய்தற் பொருட்டு”**

விருந்தோம்புவதே மேலான கடமை.

**“விருந்து புறத்தாற் தானுண்டல் சாவா**
**மருந்தெனினும் வேண்டற் பாற்றன்று”**

இனி, அரிய திருக்குறள் ஒன்றைச் சிந்திப்போம்

**“செல் விருந்தோம்பி வருவிருந்து பார்த்திருப்பான்**
**நல்விருந்து வான தவர்க்கு”**

பரிமேலழகர் இதற்கு ‘தன்கட்’ சென்ற விருந்தைப் பேணிப் பின் வெல்லக் கடவ விருந்தைப் பார்த்து தான் அதனோடு உண்ணவிருப்பான்’ என்று உரை எழுதியிருக்கின்றார். செல்விருந்து என்றற்கு **‘தன்னை நாடிச் சென்ற விருந்து’** என அது பொருள் தருகின்றது. இதனினும் மேலான பொருள் ஒன்றை இங்கு கூறுகின்றேன். நமது நாட்டில் இருந்த சில ஞானிகள் ஆகார(உணவு உண்ணும் காரியங்களில்) விஷயத்தில் அஜகரம் என்ற விருத்தியை மேற்கொண்டார்கள். அஜகர விருத்தி என்றால் மலைப்பாம்பு உணவை நாடி எங்கும் செல்வதில்லை. அது இருக்கும் இடத்திற்கு யதேச்சையாக ஒரு பிராணி வருமானால் அதனைப்பிடித்து அருந்தும். அதுபோல அந்த ஞானிகள் எங்கும் உணவைத் நாடிச் செல்லமாட்டார்கள். அவர்கள் தன்னிச்சைபோல் சென்று கொண்டிருப்பார்கள் அவர்களைத் தேடிக் கொடுபோய் உணவ தரவேண்டும். இந்த வகையில்,சேர்ந்தவர் பட்டிணத்து சுவாமிகள்,

**“இருக்குமிடந் தேடி என்பசிக்கே யன்னமள்**
**உருக்கமுடன் கொண்டு வந்தால் உண்பேன் - பெருக்க**
**அழைத்தாலும் போகேன் அரனே என் தேகம்**
**இளைத்தாலும் போகேன் இனி”**

என்று கூறுவதிலிருந்து அவர் அஜகர விருத்தியை மேற்கொண்டவர் என்பது தெளிவாகின்றது. எனவே, செல்விருந்து என்றால் வீடுதேடி வராது. தன் விருப்பம்போல் செல்லுகின்ற சிவஞானிகளைத் தேடி உணவு வந்து ஓம்புதல் வேண்டும் என்று பொருள் கொள்ளவேண்டும். இவ்வாறு செல்விருந்து ஓம்பியும் வருவிருந்தை எதிர்பார்த்து ஆதரித்தும் உதவுகின்ற தரும குணசீலனைத் தேவர்கள் தமக்கு நல்விருந்து என எதிர்பார்த்து உபவசரித்து சிறப்பு செய்வார்கள் என்று பொதுமறை கூறுகின்றது. இவ்விதம் அரிய பெரிய கருத்துக்களை விளக்கி நமக்கு நலன் செய்கின்ற அமுதத் தமிழ் திருக்குறள். இதனை படிக்கக்கூடாது. படிப்பது என்பது அழகும், அருமையும் இன்றிப் படிப்பது ஆகும். ஓதுவது என்பது காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி ஓதுவதாகும்.

**முடிவுரை**

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

எனவே திருக்குறளை ஓதுதல் வேண்டும். திருக்கறள் உண்மை மொழியாகும். **"திருவள்ளுவதேவர் வாய்மை என்கின்ற பழமொழியை ஓதியே உணர்ந்து"** என்கிறார் அருணகிரிநாதர். ஆகவே, வானோரும் போற்றும் திருக்குறளை ஏனோரும் ஓதி உணர்ந்து நலத்தைப் பெற்று உய்வார்களாக.

**உதவி புரிந்த நூற்கள்**

1. திருக்குறள். மூலமும் பரிமேலழகருரையும், கழக வெளியீடு, சென்னை, 1982.
2. க.த.திருநாவுக்கரசு, திருக்குறள் நீதி இலக்கியம், சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை, 1977.
3. க.த.திருநாவுக்கரசு, திருக்குறளும் இந்திய அறநூல்களும், மணியகம், சென்னை, 1977.
4. பெரியபுராணம். கற்பகம் பல்கலைக்கழக வெளியீடு. (பன்னிருதிருமுறை ஆய்வு மன்றம்)
5. கழகத் தமிழ் அகராதி. கழக வெளியீடு, சைவ சித்தாந்தக் கழகம் திருநெல்வேலி.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

# அகநானூற்றில் வரலாற்றுச் செய்திகள்

## Historical Matters Found in *Agananooru*

**முனைவர் இரா.பாலகிருஷ்ணன்,** இணைப்பேராசிரியர்,
தமிழ்த்துறை, பாரத் உயர்கல்வி (ம) ஆராய்ச்சி நிறுவனம், சென்னை.

### Abstract

*Ancient Literature helps us to know the Tamil history. This Ancient Literature consists of so many literary works like Purananooru, Pathitrupathu etc. Apart from these two Agananooru was the famous historical work. Agananooru deals about the life of Chera, Chola and Pandia Kings and it says about famous early voting method- kudavolai system. Agananooru also convey the relationship of Greek people with Tamil peoples and old economic system with Egypt. It also deals about the history of Nandas (North Indian People) and Yavanas (Foreigners) who came here for trade.*

**Keywords:** Historical Matters, *Agananooru*, Ancient Tamil Literature

தமிழ்ப் புலவர்கள் பலரால் பாடப்பட்ட சங்ககாலப் பாடல்கள் காலப்போக்கில் மறைந்தும் மக்களால் மறக்கப்பட்டும் வருவதைப் புலவர்கள் கண்டனர். அவற்றைத் தொகுத்துப் போற்றிப் பாதுகாப்பதில் ஆர்வம் காட்டினர். அதற்கு அரசர்களும் வள்ளல்களும் துணைநின்றனர். பாடல்களை மணியாரம் போலத் தொகுப்பதற்குப் புலவர்கள் கைக்கொண்ட வரையறைகள் பலவாகும். தமிழக வரலாற்றை அறிவதற்குரிய சான்றுகளுள் முதல்நிலைப் பெறுவன சங்க இலக்கியங்களாகும். அத்தொகுப்பில் இடம்பெற்ற புறநானூறும் பதிற்றுப்பத்தும் வரலாற்றுக் களஞ்சியங்களாகக் குறிக்கப்படுகின்றன. புறநானூற்றுக்கு இணையாக வரலாற்றுச் செய்திகளை மிகுதியாக எடுத்துரைக்கும் நூல் அகநானூறு. இதில் குறிக்கப்படும் வரலாற்றுச் செய்திகள் பெரும்பாலும் சங்ககாலப் புலவர்களால் உவமைகளாக எடுத்தாளப்பட்டுள்ளன.அவற்றை ஆய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

***அகநானூறு***

அகவாழ்வைப் பற்றிப் பேசுகின்ற முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல், பாலை என்னும் ஐந்திணைகளை அடிப்படையாகக் கொண்டு தொகுக்கப்பட்ட பாடல்களின் தொகையாக விளங்குவது *அகநானூறு*. பெயரிலேயே அகம் என்னும் ஒழுக்கத்தை அடிப்படையாகக் கொண்ட பெருமை அகநானூற்றிற்கு மட்டும் உரியது. இந்நூலுக்கு அகம், அகப்பாட்டு, நெடுந்தொகை, பெருந்தொகை நானூறு என்னும் பல பெயர்கள் உள்ளன. அகநானூறு என்பதனைப் பொருளால் பெற்ற பெயர் என்று மயிலைநாதர் குறிப்பிடுகிறார். இந்நூல் பதின்மூன்று அடிமுதல் முப்பத்தோர் அடிவரையிலான நானூறு நெடிய பாடல்களைக் கொண்டுள்ளது. இதன் கடவுள் வாழ்த்துப் பாடல் பாரதம் பாடிய பெருந்தேவனாரால் இயற்றப்பட்ட சிறப்பிற்குரியது. சிவபெருமானைப் போற்றும் வண்ணம் அமைந்த இக்கடவுள் வாழ்த்துப் பலவகைச் சிறப்புகளைக் கொண்டது. அகநானூற்றைத் தொகுத்தவர் உப்பூரிகுடிகிழார் மகனார் உருத்திரசன்மனார் ஆவார்.இதனைத் தொகுப்பித்தவன் பாண்டியன் உக்கிரப்பெருவழுதி ஆவான். இந்நூற்கு அமைந்த பாயிரத்தைப் பாடியவர் இடையல்நாட்டு மணக்குழயான் பால்வண்ண தேவனான வில்லவதரையன் ஆவான்.

**அகநானூற்றின் பாடல் சிறப்பு**

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

அகப்பொருளைப் பற்றிப் பேசும் நூல்களுள் தனிச்சிறப்பு வாய்ந்தது அகநானூறு. பாடல் எண்ணினைப் பார்த்த அளவில் திணையின் பெயரை மனத்திற்குக் கொண்டு வரும் வண்ணம் ஒரு வரிசை முறையில் பாடல்களை அமைத்திருப்பது இந்நூலின் தனிச்சிறப்பாகும். 1, 3, 5, 7, 9 என்னும் ஒற்றைப்படை எண்ணால் குறிக்கப்படும் பாடல்கள் பாலைத்திணையைப் பற்றியவை. 2, 8, 12, 18 என்னும் எண்களைக் கொண்டமைந்த பாடல்கள் குறிஞ்சித்திணைக்கு உரியவையாகும். 4, 14, 24, 34 என நான்கை ஈறாகக் கொண்ட பாடல்கள் முல்லைத்திணைப் பாடல்களாகும். 6, 16, 26, 36 போன்ற வரிசைமுறையில் அமைந்த பாடல்கள் அனைத்தும் மருதத்திணையைப் பற்றியவை. 10, 20, 30, 40 என்னும் பத்தின் மடங்காகி வருபவை அனைத்தும் நெய்தல் திணைக்கு உரிமை பூண்டவை. இவ்வெண் பற்றிய சிந்தனையை,

**"ஒன்றுமூன் றைந்தொன்பான் பாலை ஓதாது**
**நின்றவற்றில் நான்கு நெறிமுல்லை அன்றியே ஆறாம் மருதம் அணிநெய்தல்**
**ஐயிரண்டு கூறாதவை குறிஞ்சிக் கூற்று"**

என்னும் வெண்பா எடுத்துரைக்கிறது.

**"பாலைவியம் எல்லாம் பத்தாம் பனிநெய்தல்**
**நாலு நளிமுல்லை நாடுங்கால், - மேலையோர் தெரும் இரண்டிடட்டு, இவை**
**குறிஞ்சி செந்தமிழின் ஆறு மருதம் அகம்"**

என்னும் வெண்பாவும் இயற்றப்பட்டுள்ளது. இப்பாடல்களிலிருந்து அகநானூற்றுக்குரிய நானூறு பாடல்களைப் பழப்போர் மனத்தில் நிலைபெறச் செய்வதற்குப் பண்டைத் தமிழ்ப் புலவர்கள் எடுத்துக்கொண்டுள்ள முயற்சியின் கடுமை புலனாகிறது. புலவர்கள் பலர் கூடியிருந்து ஒவ்வொரு நூல்களையும் தொகுப்பதற்கு மேற்கொண்ட முயற்சிகளையும் இப்பாடல்கள் உணர்த்துகின்றன.

**மூவேந்தர்**

சேர, சோழ, பாண்டியராகிய மூவரும் சங்க காலத்தில் சிறப்பபுப் பெற்றிருந்தனர். மூவேந்தர்களின் தலைநகரம் கருவூர்,உறையூர், மதுரை என்பனவாக விளங்கின என்னும் கருத்தைக் கணக்காயனார் மகனார் நக்கீரனார் குறிப்பிடுகிறார் (பா.93). மூவேந்தர்களும் தன்கீர்க் கட்டுப்பட்டுக் கிடந்த சிற்றரசர்களிடம் திறை பெற்றனர் என்பதை மாமூலனார் பதிவுசெய்கிறார். தமிழ்கெழு மூவர் காக்கும் மொழிபெயர் தேஎயம் (பா.31) என்பது அவர்தம் தொடராகும்.

**சோழர்**

சோழர்களுள் சிறந்து விளங்கியவன் கரிகால்வளவன். வெண்ணிப் போரில் கரிகாலனிடம் தோல்வியடைந்த சேரலாதன் வடக்கிருந்து உயிர்விட்டான் (பா.55). சோழ மன்னனை எதிர்த்த சேரரும் பாண்டியரும் பருவூர்ப் போர்க்களத்தில் உயிர் துறந்தனர் (பா.96). வாகை என்னும் ஊரில் ஒன்பது குறுநில மன்னர்களை வென்றான் (பா.125). வெண்ணிப் போரில் பதினொரு வேளிர்களை வெற்றி கொண்டான் (பா.246). ஆரிய படைகளைச் சோழர் படை சிதற அடித்ததைப் பாவைக் கொட்டிலார் பதிவு செய்துள்ளார் (பா.336). சோழன் கிள்ளி வளவன் பாண்டியன் மாறனை வெற்றி கொண்டான். அதனை அறிந்து கோதை மார்பன் என்னும் சேரன் மகிழ்ச்சி கொண்டதை நக்கீரர் எடுத்துக் கூறுகிறார் (பா.346). ஆதிமந்தியின் கணவன் ஆட்டனத்தியைக் காவிரி வெள்ளம் அடித்துச் சென்றது என்னும் செய்தி பாணரால் எடுத்துரைக்கப்படுகிறது (பா.76).

**சேரர்**

சேரர்க்குரியது கொல்லிமலையாகும் (பா.33). உதியஞ்சேரலாதன் பிறர் நாட்டை வெற்றி கொண்டு தன் எல்லையைப் பரவலாக்கினான் (பா.65). குடநாட்டை ஆட்சி செய்தவன் குட்டுவஞ்சேரல் (பா.91). சேரன் செங்குட்டுவன் கடல் நடுவில் தன் பகைவர்களை முறியடித்தான் (பா.212). உதியஞ்சேரல் தன் முன்னோர்களுக்காகப் பெருஞ்சோறு அளித்துப்

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

பிதிர்கடன் முடித்தான் (பா.233). இவன் பிறர் நாட்டை வெற்றி கொண்டு சேரர் எல்லையை விரிவாக்கினான் (பா.65). சேரர்களின் படைத்தலைவனாகிய பிட்டன் குதிரைமலைத் தலைவனாவான் (பா.143). இவன் வீரனாக விளங்கியதோடு வள்ளலாகவும் விளங்கினான் (பா.77). சேரலாதன் இமயத்தில் விற்கொடியைப் பொறித்தவன் (பா.127).

**பாண்டியன்**

பாண்டியன் நெடுஞ்செழியன் தலையாலங்கானத்துப் போரில் ஏழு அரசர்களை வெற்றி கொண்டான் (பா.36). சேர சோழரையும் புறங்கண்டான் (பா.116). தன் படையுடன் சேரர் துறைமுகமாகிய முசிறியைத் தாக்கினான் (பா.57). பசும்பூண் பாண்டியன் கொங்கரை வெற்றி கொண்டு பல நாடுகளைக் கைப்பற்றினான். அவ்வெற்றியை மதுரையில் கொண்டாடினான் (பா.253) என்பன பாண்டியரைப் பற்றி அகநானூறு கூறும் செய்திகளாகும்.

நன்னனுக்குரியது பாழி என்னும் நகரமாகும். அது மிகுந்த கட்டுக் காவலை உடையது (பா.15). கொடை வள்ளலாகத் திகழ்ந்தவன் தித்தன். அவன் அழகு பொருந்திய ஐயையின் தந்தை ஆவான் (பா.6). பொதியமலைக்கு உரிமை உடையவன் திதியன். இவன் போர்த் தொழிலுக்குரிய வில்லை உடையவன். இனிய இசையை எழுப்பும் யாழினையும் வைத்திருந்தான் (பா.25). முள்;ர்த் தலைவன் காரி. இவன் கொல்லிமலைத் தலைவன் ஓரியைக் கொன்று அப்பகுதியைச் சேரனுக்குக் கொடுத்தவன் (பா.210).

**அரிய செய்திகள்**

*அகநானூறு* பண்டைத் தமிழ்ச் சமுதாய மக்களின் இயல்பினை அறிந்து கொள்வதற்குப் பெரிதும் துணை செய்கிறது. சங்க காலத்தில் மன்னராட்சி நடைபெற்ற போதிலும் மக்கள் உறுப்பினர்களைக் குடவோலை முறையில் தேர்ந்தெடுத்தனர் என்பதனை மருதன் இளநாகனார் காட்டுகிறார் (பா.77). மீன் பிடிக்கப் பயன்படுத்தப்பட்ட தூண்டில் கொடுவாய் இரும்பு என அழைக்கப்பட்டதை மதுரை நக்கீரர், கொடுவாய் இரும்பின் கொளிரை துற்றி (பா.36) என்பதன் மூலம் காட்டுகிறார். மக்கள் செருப்பு அணிந்திருந்த செய்தியை மதுரை இளநாகன் எடுத்துரைக்கிறார் (பா.34). பழங்காலத்தில் செருப்பிற்கு அடிபுதைத் தொடுதோல் என்னும் பெயர் இருந்ததை மாமூலனார் எடுத்துக் காட்டுகிறார் (பா.101). மக்கள் கஞ்சி தோய்த்த ஆடைகளைப் பயன்படுத்தியதையும் அதனை அழுக்கு நீங்கத் துவைத்துக் கொடுத்தவள் வண்ணார் குலப்பெண் என்பதையும் மதுரை இளநாகனார் எடுத்துரைக்கிறார் (பா.34). மக்கள் கண்ணாடியாகிய நிழல்காண் மண்டிலத்தைப் பயன்படுத்தினர் என்பதை அந்தி இளங்கீரனாரின் கூற்றுப் புலப்படுத்துகிறது (பா.71). பனங்குருத்தால் ஆகிய குடையினை மக்கள் பயன்படுத்தினர் (பா.121). மக்களிடம் பல்லிச் சகுனம் பார்க்கும் வழக்கம் இருந்ததைக் காவன்முல்லைப் பூதரத்தனார் எடுத்துரைக்கிறார் (பா.151).

தலைவன் பிரிந்து சென்றவிடத்துக் கோடிட்டு நாட்களை எண்ணுதல் (பா.61). மகளிரின் குறிஞ்சிப் பண்ணைக் கேட்டுக் காட்டு யானை உறங்குதல் (பா.102). தலைவன் பரத்தையோடு காவிரியில் நீராடுதல் (பா.166). பெண்கள் உப்பிற்கு விலையாக நெல்வாங்கியது (பா.140). உமணர் உப்பைக் கழுதைமேல் வைத்து விற்பதற்கு எடுத்துச் செல்லுதல் (பா.207) போன்ற செய்திகள் அகநானூற்றுப் பாடல்களில் இடம்பெற்றுள்ளன. கிரேக்க நாட்டிலிருந்து மரக்கலங்களில் பொன்னைக் கொண்டுவந்த யவனர் அதற்கு மாற்றாக மிளகினை வாங்கிச் சென்ற செய்தியை எருக்காட்டுத் தாயங்கண்ணனார

**"யவனர் தந்த வினைமான் நன்கலம்**
**பொன்னொடு வந்து கறியொடு பெயரும்"**
**வளங்கெழு முசிறி (பா.149)**

எனக் குறிப்பிடுகின்றார். மகத நாட்டை ஆட்சி செய்தவர்கள் மௌரியர். இவர்கள் தென்திசையில் உள்ள மலைகளைச் சமப்படுத்தித் தேர்செல்லப் பாதைகளை அமைத்தனர் என்னும் அரிய குறிப்பை உமட்டூர்கிழார் மகனார் பரங்கொற்றனார் குறிப்பிடுகிறார் (பா.69). அப்பாடலில் மௌரியர் என்னும் சொல் தமிழ் இயல்பிற்கேற்ப மோரியர் என

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

எடுத்தாளப்பட்டுள்ளது.

பண்டைய காலத்தமிழர்களிடம் வேரூன்றி இருந்த வழிபாடுகளில் ஒன்று போரில் இறந்த வீரர்களின் நினைவினைப் போற்றும் வகையில் எடுக்கப்படும் நடுகல் வழிபாடாகும். இதனைக் காட்சிஇ கால்கோள்இ நீர்படைஇ நடுகல்இ பெரும்படைஇ வாழ்த்து எனத் தொல்காப்பியம் கூறுவதிலிருந்து தொல்காப்பியர் காலத்திற்கு முன்பு இருந்தே இந்நடுகல் வழிபாடு இருந்துள்ளது. இறந்தவர்களுக்குக் கல்நடும் வழிபடும் முறை கி.பி 11 ஆம் நூற்றாணடு வரை இருந்துள்ளது என அறிஞர்கள் கண்டுள்ளனர் எனத் தட்சிணாமூர்த்தி குறிப்பிட்டுள்ளார். அகநானூற்றுப் பாடல் ஒன்றில்இ கற்களில் வீரனின் பெயரும் அதில் அணிமயிற் பீலியும் மலர் மாலைகளும் சூட்டப்பட்டுஇ அவ்விடத்தைச் சுற்றி வேலை நட்டுக் கேடயங்களை நிறுத்தி இருந்ததைஇ

**“நல்லமர் கடந்த நாணுடை மறவர்**
**பெயரும் பீடும் எழுதி அதர்தொறும்**
**பீலி சூட்டிய பிறங்குநிலை நடுகல் (அகம்-67)**
**வேலூன்று பலகை வேற்றுமுனை கடுக்கும் (அகம்-131)**

எனஎடுத்துரைக்கிறது.

**உலகநாடுகளோடு தமிழர்களின் வாணிகம்:**

தென்னிந்திய வாணிகம் கி.மு.3000-இல் எகிப்து வரையும் பரவியிருந்தது என்பதற்கான சில அகச்சான்றுகளும் உள்ளன. திருவாளர் ‘ஸ்காப்’ அவர்கள், “கிரேக்கர்கள், தங்கள் காட்டு மிராண்டித் தன்மையிலிருந்து விடுபட்டு வெளிப்படுவதற்கு ஆயிரமாயிரம் ஆண்டுகட்கு முன்னரே, எகிப்தும் பழைய இந்திய நாடுகள் பலவும் நிலபேறுடையனவாகிவிட்டன. தங்கள் தங்கள் நாட்டு விளைபொருள்களையும், செய்பொருள்களையும் கைம்மாற்றிக் கொள்ளும் ஒரு பெரு வணிக முறை, பொருள்களை மாற்றிக்கொள்ளும் மைய இடத்தைப் பெரிய வளைகுடாவின் தலைப்புக்கு அணிதாகக் கொண்டு வளர்ந்திருந்தது. அப்பகுதி மக்களாம் பல்வேறு அராபியப் பழங்குடியினர். குறிப்பாகப் புரிந்து கொள்ளமாட்டாப் புதிராக விளங்கும் சிவப்பு மனிதராம் பொயினீஷியப் பழங்குடியினர்தாம் அப்பொருள்களைக் கொண்டு சென்றவர் அல்லது பண்டமாற்றுச் செய்த இடைத்தரகராவர். (தமிழர் வரலாறு – புலவர் க.கோவிந்தன் ப.26)சங்க இலக்கியங்களில் பல இடங்களில் தமிழர் வெளிநாடுகளுக்குச் சென்று வணிகம் செய்ததைப் பற்றிய குறிப்புகள் உள்ளன.

அயல்நாட்டுப் பயணிகளின் நூல்களும் தென்னிந்திய வாணிகம் பற்றி உறுதிபடுத்துகின்றன. அயல்நாடு சென்றது மட்டுமின்றி தமிழர்கள் கடல்மூலமாக வங்க நாட்டில் அமைந்திருக்கும் தாமரலிப்தி(இது கங்கை, வங்காள விரிகுடாவில் கலக்குமிடம்) துறைமுகம் வழியாகக் கங்கையை அடைந்து கங்கை நதியில் தமது கலங்களைச் செலுத்தி வடநாடுகளின் உள்நாட்டுத் துறைமுகங்களில் அவற்றை நிறுத்தித் தனது வணிகத்தை அங்கும் நிலைநாட்டினர் என்பதையும் சங்கப் பாடல்கள் மூலம் அறிகிறோம். தமிழர்கள் தமது கப்பல்களில் கங்கை வழியாகப் பாடலிபுத்திரம் வரை சென்றனர் நந்தமரபினர் அழகுடன் விளங்கிய பாடலிபுரத்தில் கங்கைநீரில் பெரிய பொற்குவியலை மறைத்து வைத்திருந்தனர் என்பதைத் தம் பாடலில் எடுத்துரைக்கிறார் மாமூலனார்.

**“பல்புகழ் நிறைந்த வெல்போர் நந்தர்**
**சீர்மிகு பாடலிக் குழீஇக் கங்கை**
**நீர்முதற் கரந்த நீதியங் கொல்லோ” (பா.265)**

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன.

மௌரியர் காலத்தில், கி.மு.4-ஆம் நூற்றாண்டில் ஆண்ட அரசன் நந்தன் அரசு செல்வத்தைக் கங்கைக் கரையில் புதைத்திருந்தான் என்றும், இதைச் சாணக்கியன் தோண்டி எடுத்து, குதிரைகளில் கட்டி, பாடலிபுத்திர வீதிகளில் ஓட்டிச் சென்று மக்களைச் சென்றடையச் செய்தான் என்று வரலாற்றுக் கதைகள் கூறும். அவ்வாறு புதைத்திருந்த

E-ISSN: 2581-7140

Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

செய்தியினை மாமூலனார் பாடல் தெளிவுபடுத்துகிறது என்கையில் தமிழ்நாட்டு வணிகர் அங்கு ஆற்றின் மூலமாக வணிகத்திற்கு சென்றிருக்க வேண்டுமென்பது உறுதியாகின்றது. அகநானூறு, புறநானூற்றிற்கு இணையாக மூவேந்தர், குறுநில மன்னர்களின் வரலாற்றுச் செய்திகளை எடுத்துரைக்கிறது.மேலும் தமிழர்கள் கிரேக்கர்களோடு கொண்ட வணிகத்தொடர்பை அறிய முடிகிறது.தமிழர்களின் வாணிகம் எகிப்து வரை பரவி இருந்ததையும் நந்தர்கள் பற்றிய சிறப்புறப் பதிவாக்கியுள்ளது.

**பார்வை நூல்கள்**

1. கோவிந்தன். கு. *தமிழர் வரலாறு*, திருமகள் நிலையம், சென்னை-1970.
2. செயபால். இரா. *அகநானூறு மூலமும் உரையும்* (முன்னுரை), நீயூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை-2004.
3. சோமசுந்தரனாா பொ.வே. *அகநானூறு*, சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை-1970.
4. தெட்சணாமூர்த்தி, *தமிழர் நாகரிகமும் பண்பாடும்*, ஐந்திணை பதிப்பகம், சென்னை-2005.
5. வரதராசன், மு, *தமிழ் இலக்கிய வரலாறு*, சாகித்திய அகாதமி, புதுதில்லி -2012.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

# *கலித்தொகை* பகரும் திணைமயக்கச் சூழலியல் - ஓர் மீள்பார்வை

## Ecology Elicited by *Kalithogai*- An Overview

**சு.பிரகாஷ்,** உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை,
டாக்டர் எஸ்.என்.எஸ். இராஜலட்சுமி கலை அறிவியல் கல்லூரி, கோயமுத்தூர் - 641049.

**Abstract**

*'Ecology' is a science that describes the relationship between an organism and its environment. As the ancestral thinking of the Tamil ancestors came to be known, the close connection between the Tamils and the ecology be known better. This article is a re-imagining of the ecology of conservation. It discusses the importance of our heroic dynasty, the ecological state of the peoples of the Sangam, the importance given to the abolish famine. This is a basic study from the literature 'Kalithogai' to understand the ecology of the peoples of the Tamil society, the nucleus of which is the most basic. Exploring the way in which these sources interpret the ecology of the Tamil people of the time, the way in which the natural behavior of the people living on the land, and the interplay of the elements. This article analyses the biological changes of the natural environment through the meteorological state of the material.*

**Keywords:** Ecology, *Kalithogai*- An Overview

**முன்னுரை**

ஓர் உயிரினத்திற்கும், சுற்றுப்புறத்திற்கும் உள்ள உறவைப் பற்றி விளக்கும் ஓர் அறிவியல் துறையை 'Ecology' என்றழைப்பர். இச்சொல் கிரேக்க மொழியிலிருந்து பெறப்பட்ட சொல்லாகும். 'Oikos' என்றால் கிரேக்கத்தில் 'வாழிடம்' அல்லது 'வீடு' என்று பொருள்படுகின்றது. 'Logy' என்பதற்கு இயல் என்று பொருள். 'Oikos' மற்றும் 'Logy' ஆகிய இவ்விரண்டு சொற்களையும் சேர்த்து 'Ecology' 'சூழுலியல்' என்ற சொல்லாக 'ஹன்ஸ் ரெய்ட்டன்' என்பவர் (1868) அறிமுகப்படுத்தினார். ஆனால், தமிழில் திணை என்ற சொல்லுக்கு 'ஒழுக்கம்', 'முதல், கரு, உரிப்பொருளுடன் கூடிய வாழ்வியல் அல்லது 'திணையியல்' 'சூழலியல்' என்று பொருள்படுகின்றது. தொல்காப்பியர் நிலங்களைச் 'சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே' (தொல்.பொருள்.4) எனும் அடிகள் இடம்பெறும் நூற்பா மூலம் முன்னோர்களின் ஐந்திணைச் சூழலியல் சிந்தனைகளைப் பகருவதால் தமிழர்களுக்கும், சூழலியலுக்கும் உண்டான நெருங்கிய தொடர்பை நாம் அறியலாம். கலித்தொகை பகரும் திணைமயக்கச் சூழலியல் பற்றி மீள் பார்வை செய்யும் விதமாய் இந்தக் கட்டுரை அமைகின்றது. அவற்றைப் பற்றி இனி நாம் காண்போம்.

**வீரத்தமிழ்க் குடியும் சங்க இலக்கியமும்**

**"கற்றோன்றி மண்தோன்றாக் காலத்தே வாளோடு**
**முற்றோன்றி மூத்த குடி" (கரந்தைப் படலம்)**

என்று புறப்பொருள் வெண்பாமாலை நமது வீரத்தமிழ்க் குடியின் முதன்மையைப் பறைசாற்றுகின்றது.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

காலத்தால் அழிக்க முடியாத சங்க இலக்கியங்கள் கி.மு. 5 ஆம் நூற்றாண்டு முதல் கி.பி. 1 ஆம் நூற்றாண்டு வரையிலான கால கட்டத்தைச் சார்ந்தது. எட்டுத்தொகையும், பத்துப்பாட்டையுமே சங்க இலக்கியங்கள் என்று வழங்கப்படுகின்றது.

இவ்விலக்கியங்கள் அக்காலகட்ட மக்களின் வாழ்வியலைப் படம்பிடித்துக் காட்டுவனவாக உள்ளன. மேலும், அக்கால மக்கள் இயற்கையோடு இயைந்து வாழ்ந்ததையும், காதலுக்கும், வீரத்திற்கும், அறத்திற்கும் முக்கியத்துவம் தந்து வாழ்ந்ததையும் நமக்குப் போதிக்கின்றது.

ஒரு மொழியின் வளமையை அந்நாட்டில் விளங்கும் இலக்கியங்களையும் அவை பறைசாற்றும் பண்பாட்டினையும் வைத்தே அளவிடப்படுகின்றது. அந்த வகையில் காலத்தால் முற்பட்ட நம் சங்க இலக்கியங்கள் அகத்திணையையும், புறத்திணையையும் கொண்டுள்ளது.

தலைமக்களின் ஒத்த அன்பினைப் பறைசாற்றும் *நற்றினை, குறுந்தொகை, அகநானூறு, கலித்தொகை, ஐங்குறுநூறு* முதலியன அகத்திணைகளென்றும், மன்னர்களின் உடல்வலிமை, கொடைத்திறன், நாட்டு வளம், இயற்கை வளம், அறச்செயல்கள், நம்பிக்கைகள், பழக்கவழக்கங்கள், பண்பாடு முதலானவற்றைக் கூறும் *புறநானூறு, பதிற்றுப்பத்து, பரிபாடல்* முதலானவை புறத்திணைகளெனவும் வகுக்கப்பட்டுள்ளது. இதே போன்றுதான் பத்துப்பாட்டும் வகுக்கப்பட்டுள்ளது.

**திணைகள்**

நச்சினார்க்கினியர் திணையை ஒழுக்கம் என்பர். இளம்பூரணர் திணையென்பதற்கு 'பொருள்' என்று கூறுவர். திணையினை அகத்திணையென்றும் புறத்திணையென்றும் வகுக்கப்பட்டுள்ளது. அகத்திணையில் தலைமக்களின் ஒருமித்த காதல் வாழ்வினையும், புறத்திணையில் மன்னர்களுக்கிடையேயான மாறுபாட்டினையும் காணலாம்.

அவற்றில் கைக்கிளை, ஐந்திணை, பெருந்திணை முதலான ஏழுதிணைகளை அகத்திணைகளென்று கூறுவர். இதில் கைக்கிளை என்பது தலைமக்களின் ஒருதலைக் காமத்தையும் ஐந்திணை என்பது குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல் நிலப்பகுதியில் வாழும் தலைமக்களின் ஒருமித்த அன்பு வாழ்க்கையினையும், பெருந்திணை என்பது தலைமக்களின் வேறுபட்ட பொருந்தாக் காமத்திணையும் கூறுகின்றது.

வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை, காஞ்சி, பாடாண் முதலான ஏழுதிணைகளைப் புறத்திணைகளென்று கூறுவர். புறத்திணையில் தலைமக்கள் மற்றும் பாட்டுடைத் தலைவனின் பெயரோ அல்லது குடிப்பெயரோ புலப்பட்டு நிற்கும். ஆனால், அகத்திணையில் அவ்வாறு பெயர் வெளிப்பட்டு நிற்காது என்பதை,

> **"மக்கள் நுதலிய அகனைந் திணையும்**
> **சுட்டி ஒருவர் பெயர்கொளப் பெறாஅர்"**

என்று தொல்காப்பியம் (பொருள்) கூறுகின்றது.

**ஐந்திணைகள்**

பஞ்ச பூதங்களான நெருப்பு (Fire), நிலம் (Earth), காற்று (Air), நீர் (Water), மரம் (Wood), முதலானவைதான் இப்பிரபஞ்சங்களில் முறையாகத் தோற்றம் பெற்றிருக்கலாம் என இக்கால அறிவியலறிஞர்கள் கூறுகின்றனர். ஆனால், இக்கருத்தை 2000 ஆண்டுகளுக்கு முன்பே

> **"நிலம் தீநீர்வளி விசும்போடு ஐந்தும்**
> **கலந்த மயக்கம் உலகம் ஆகலின்" (தொல்:மரபியல்)**

என்று தொல்காப்பியர் கூறிவிட்டார். மேலும், புறநானூற்றிலும் இக்கருத்து உள்ளது.

> **"மண் திணிந்த நிலனும்**
> **நிலம் ஏந்திய விசும்பும்**
> **விசும்பு தைவரு வளியும்**

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

**வளித்தலை இய தீயும்**
**தீ முரணிய நீரும் என்றாங்கு**
**ஐம்பெரும் பூதத்து இயற்கை" (புறம்:2)**

பல கோடி வருடங்களுக்குப் பிறகு ஒருசெல் உயிரிகளின் மரபணுக்களில் மாற்றமேற்பட்டு பல செல் உயிரிகளாகத் தோற்றமடைந்து தாவரங்களும், விலங்குகளும் வளர்ச்சியடைந்தது. இதனையேத் தொல்காப்பியமும்,

**"ஒன்றறி வதுவே உற்றறி வதுவே**
**இரண்டறி வதுவே அதனொடு நாவே**
**மூன்றறி வதுவே அவற்றொடு மூக்கே**
**நான்கறி வதுவே அவற்றொடு கண்ணே**
**ஐந்தறி வதுவே அவற்றொடு செவியே**
**ஆறறி வதுவே அவற்றொடு மனனே**
**நேரிதின் உணர்ந்தோர் நெறிப்படுத்தினரே" (தொல்:மரபியல்)**

என வரையறை செய்து உயரின விஞ்ஞானத்தை விளக்குவதை நாம் அறியலாம்.

இலை தழைகளை ஆடையாக உடுத்திக்கொண்டும், பச்சைக் காய்கறிகளை உண்டும், நாடோடி வாழ்க்கையை மேற்கொண்டும், பிறகு, நெருப்பின் பயனையும், விவசாயத்தின் பயனையும் உணர்ந்த ஆதிமனிதன் குழுவினமாக ஒரிடத்தில் தங்கிக் கூட்டமாக, சமுதாயமாக சேர்ந்து வாழ ஆரம்பித்தான்.

எழுத்தறிவு தோன்றாக் காலத்தில் தனது எண்ணங்களை ஓவிய வடிவமாகப் பாறைக்குகைகளில் எழுத்தோவியமாக வெட்டி வைத்தான். குழந்தையின் பிறப்பு முதல் இறப்பு வரை வாய்மொழி இலக்கிகயத்தின் தொடக்கமான தாலாட்டு முதல் ஒப்பாரி வரை உணர்வுகளை அனைவரிடமும் பரிமாற ஆரம்பித்தான். 'எழுத்துவடிவம்' தோன்றிய பின்னரும் இயற்கை வரம்போடு வாழ ஆரம்பித்தான். அதன் விளைவாக சங்ககாலத்தில் ஐவகை நிலப்பிரிவு மக்கள் வாழ்ந்தனர் என்பதை சங்க இலக்கியமும், தொல்காப்பியமும் பகர்கின்றது.

சங்ககால மக்களின் சூழலியல் (Eco System) வாழ்வியலை அறிவதற்கு இலக்கியங்களில் பயின்று வரும் முப்பொருளும் மிக அடிப்படையான ஒன்றென்பதை

**"முதல்கரு உரிப்பொருள் என்ற மூன்றே**
**நுவலுங் காலை முறைசிறந் தனவே**
**பாடலுள் பயின்றவை நாடும் காலை" (தொல்.3)**

என்று தொல்காப்பியர் கூறுகின்றார்.

இதில் 'முறைமையிற் சிறத்த' லாவது, யாதானும் ஒரு செய்யுட்கண் முதற்பொருளும், கருப்பொருளும், உரிப்பொருளும் வரின், முதற்பொருளால் திணையாகும் என்பதூஉம், முதற்பொருள் ஒழிய ஏனைய இரண்டும் வரின், கருப்பொருளால் திணையாகும் என்பதூஉம், உரிப்பொருள் தானே வரின், அதனால் திணையாகும் என்பதூஉம் ஆம் உன இளம்பூரணர் கூறுகிறார். மேலும், ஒருபாடலில் வெவ்வேறு திணைக்குரிய முதற்பொருளும், உரிப்பொருளும் வந்தால் முதற்பொருளை வைத்துத் திணை அறியப்படுமென்றும், கருப்பொருளும், உரிப்பொருளும் வந்தால் கருப்பொருளை வைத்துத் திணை அறியப்படுமென்றும் (அகத்.24-ன் உரையில்) கூறியுள்ளார்.

**முதற்பொருள்**

நிலமும் பொழுதுமின்றி மக்களின் வாழ்க்கையே! இல்லை எனலாம் அவையே முதன்மையாகவும் உள்ளன என்பதை,

**"முதலெனப் படுவது நிலம்பொழுது இரண்டின்**
**இயல்பென மொழிப இயல்புணர்ந் தோரே" (தொல்.பொருள்.4)**

எனும் நூற்பாவால் அறியலாம்.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

**நிலம்**

ஐவகை நிலம் பற்றிய பின்வரும்

**"மாயோன் மேய காடுறை உலகமும்**
**சேயோன் மேய மைவரை உலகமும்**
**வேந்தன் மேய தீம்புனல் உலகமும்**
**வருணன்மேய பெருமணல் உலகமும்**
**முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் எனச்**
**சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே"**

எனும் (தொல்) நூற்பாவில் பாலை பற்றிய செய்தி கூறப்படவில்லை. ஆனால்,

**"நடுவண் ஐந்திணை நடுவனது ஒழிய**
**படுதிரை வையம் பாத்தியப் பண்பே"** (தொல்.2)

எனும் (தொல்) நூற்பாவில் ஐந்திணைகளில் "நடுவணது ஒழிய" எனும் குறிப்பினால் பாலை எனும் நிலம் பெறப்படுகிறது. பாலை நிலத்திற்கான விளக்கம் சிலம்பின்

**"முல்லையுங் குறிஞ்சியும் முறைமையில் திரிந்து**
**நல்லியல் பழிந்து நடுங்குதுய லுறுத்துப்**
**பாலை யென்பதோர் படிவம் கொள்ளும்" (சிலம்பு:64-66)**

எனும் வரிகளால் உணரலாம்.

**காலம்**

இலக்கியங்களில் பயின்றுவரும் காலங்கள் சிறுபொழுது, பெரும்பொழுது என இருவகையாகப் பகுக்கப்பட்டுள்ளது. அவை வைகறை, விடியல், எற்பாடு, நண்பகல், மாலை, யாமம் என சிறுபொழுது ஆறாகவும் இளவேனில், முதுவேனில், கார், கூதிர், முன்பனி, பின்பனி என பெரும்பொழுது ஆறாகவும் பகுக்கப்பட்டுள்ளது.

**கருப்பொருள்**

முதற்பொருள் வாழ்க்கைக்கு அடிப்படையாகவும், கருப்பொருள் ஆதாரமாகவும் விளங்குகிறது. இவ்வாதாரங்கள் அக்கால மக்களின் சூழலியல் (Ecology) அறிவினைப் புலப்படுத்துவனவாகவும் உள்ளன. இதனால் அவர்கள் இயற்கையோடு இயைந்த வாழ்வினை நடத்தினர் என்பதை,

**"தெய்வம் உணாவே மாமரம் புட்பறை**
**செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ**
**அவ்வகை பிறவும் கருவென மொழிப"**

எனும் (தொல்.பொருள்) நூற்பாவால் அறியலாம்.

**உரிபொருள்**

உரிப்பொருளென்பது அந்நிலத்திற்கே உரித்தானதென்று பொருள் படுகின்றது.

**"புணர்தல், பிரிதல், இருத்தல், இரங்கல்**
**ஊடல் அவற்றின் நிமித்தம் என்றிவை**
**தேருங் காலைத் திணைக்குரிப் பொருளே" (தொல். பொருள்)**

குறிஞ்சிக்குப் புணர்தலும், புணர்தல் நிமித்தமும், பாலைக்குப் பிரிதலும், பிரிதல் நிமித்தமும், முல்லைக்கு இருத்தலும், இருத்தல் நிமித்தமும், நெய்தலுக்கு இரங்கலும், இரங்கல் நிமித்தமும், மருதத்திற்கு ஊடலும், ஊடல் நிமித்தமும் என உரிப்பொருள் வரையறுக்கப்பட்டுள்ளது.

இவையனைத்தும் அந்தந்த நிலத்தில் வாழும் மக்களின் இயற்கைப் போக்கின் அடிப்படையில் அதன் உரிப்பொருட்கள் வகுக்கப்பட்டுள்ளன எனலாம்.

மலையும் மலைசார்ந்த இடங்களில் வாழும் தலைவி திணைப்புனம் காப்பதற்காகத் தன் தோழியர் கூட்டங்களுடன் சென்று அருவியில் குளித்துவிட்டு விளையாடும் வேளையில்

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

தலைவன் சந்திப்பு நிகழ்ந்து இருவரும் காதல் வயப்பட்டு நாள்தோறும் தனிமையிடத்தில் சந்திப்பர். இதனால் இருவருக்கும் புணர்தல் பாங்கு நிகழும். இதுவே இந்நிலத்தின் நிமித்தமாக குறிப்பிடப்படுகின்றது.

மணலும் மணல் சார்ந்த பாலைநிலங்களில் வளம் குன்றி, பொருளாதாரமின்றி காணப்படும் போது தலைவியைப் பிரிந்து தலைவன் வளம் தேடி, வளமான பகுதிக்குச் செல்லும் போது இருவருக்கும் பிரிதல் பாங்கு நிகழ்கிறது. இதுவே இந்நிலத்தின் நிமித்தமாகக் குறிப்பிடப்படுகின்றது.

காடும் காடு சார்ந்த முல்லை நிலத்தில் வாழும் தலைவன் ஆநிரைகளை மேய்ப்பதற்காகவோ (அல்லது) பொருள் தேடுவதற்காகவோ சென்றுவிட்டு குறிப்பிட்ட காலத்திற்குள் வீடு திரும்புவதற்குக் காலம் தாழ்த்தும் போது தலைவனின் வருகையை நினைத்துத் தலைவி புலம்புவது போலும், காத்திருப்பது போலும் பாடல் பொருண்மை அமைவதால் இதுவே இந்நிலத்தின் நிமித்தமாகக் குறிப்பிடப்படுகின்றது.

கடலும் கடல் சார்ந்த நெய்தல் நிலத்தில் வாழும் கடற்கரைத் தலைவன் தொழில் நிமித்தமாகக் கடலுக்குள் செல்கிறான். அவன் வருவதற்குத் தாமதமாகும் போது அவன் உயிரை நினைத்தும், அவனுடன் வாழ்ந்த வாழ்வினை நினைத்தும் இரங்கிப்பாடுவதாக இதன் பாடற் பொருண்மை அமைவதால் இதுவே இந்நிலத்தின் நிமித்தமாகவும் அமைந்துள்ளது.

வயலும் வயல் சார்ந்த மருதநிலத்தில் வாழும் தலைவன் அதிகாலை முதல் வெயிலில் வயல் வேலை செய்யும் போது உடல் சூடேறி அவை தனிய பரத்தையின் தொடர்பை ஏற்படுத்திக் கொள்வான். இச்செயலை அறிந்த தலைவி அவனது புறத்தொழுக்கத்தை அறிந்து அவனைப் பழித்து, ஒதுக்க முற்படுவாள். இதனால் இருவருக்கும் ஊடல் ஏற்படும். இதன் பாடல் பொருண்மையும் இவ்வாறே அமைவதால் ஊடலே இந்நிலத்தின் நிமித்தமாக அமைந்துள்ளது.

**திணைமயக்கம்**

ஒரு திணைக்குரிய முதற்பொருளும், கருப்பொருளும் பிற திணைகளோடு கலந்து வருவது திணைமயக்கம் எனப்படும். ஆனால் உரிப்பொருள் மயங்காது என்பதை,

**"உரிப்பொருள் அல்லன மயங்கவும் பெறுமே" (தொல்.பொருள்)**

மூலம் அறியலாம். முதற்பொருளின் பொழுதும்(காலமும்), கருப்பொருளும் தம்முள் மயங்கி வரும் என்பதை,

**"திணைமயக் குறுதலும் கடிநிலை இலவே**
**நிலனொருங்கு மயங்குதல் இல்லென மொழிப**
**புலன்நன் குணர்ந்த புலமை யோரே" (தொல். பொருள்)**

எனும் நூற்பா மூலம் அறியலாம்.

ஒரு குறிப்பிட்ட நிலத்திற்குரிய பூவும், பறவையினங்களும் அந்நிலத்திற்கும், காலத்திற்கும் வராமல் பிறநிலத்தில் வந்தால் அந்நிலத்திற்குரிய கருப்பொருளாகவே கருதப்பெறும் என்பதை,

**"எந்நில மருங்கின் பூவும் புள்ளும்**
**அந்நிலம் பொழுதோடு வாரா வாயினும்**
**வந்த நிலத்தின் பயத்த ஆகும்" (தொல். பொருள்)**

எனும் நூற்பா மூலம் அறியலாம்.

முதற்பொருளும், கருப்பொருளும் உரிப்பொருளும் தமது திணையோடு மரபு வழியில் வராமல், மயங்கி வரும் என்பதை நம்பியகப்பொருள்

**"முத்திறப் பொருளும் தத்தம் திணையோடு**
**மரபின் வாராது மயங்கலும் உரிய"**

என்று கூறுகின்றது.

இனி, இவ்வாய்வு கலித்தொகையில் திணைமயக்க வாழ்வியல் கூறுகளை ஆய்கின்றது.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

**கலித்தொகை**

சங்க இலக்கிய எட்டுத்தொகையில் **"கற்றறிந்தார் ஏத்தும் கலி"** எனும் புகழைக் கொண்டு விளங்கும் நூல் கலித்தொகையாகும்.

இந்நூல் கலிப்பாவினால் ஆனது. மேற்கணக்கு நூல்களில் ஆறாவது இடம் பெற்றுள்ளது. இந்நூல் நல்லாந்துவனார் பாடிய ஒரு கடவுள் வாழ்த்துப் பாடலும், சேரமான் பெருங்கடுங்கோ பாடிய பாலைக்கலியின் 35 செய்யுட்களும், கபிலர் பாடிய குறிஞ்சிக்கலியின் 29 செய்யுட்களும், மருதநில நாகனார் பாடிய மருதக்கலியின் 35 செய்யுட்களும், சோழன் நல்லுருத்திரன் பாடிய முல்லைக்கலியின் 17 செய்யுட்களும், கடவுள் வாழ்த்துச் செய்யுள் இயற்றியவரான நல்லாந்துவனார் பாடிய நெய்தற்கலியின் 33 செய்யுட்களையும் கொண்டு விளங்கும் கலித்தொகை மொத்தம் 150 பாக்களை உடையனவாகவும், அகத்திணையை இயற்கை நயங்களோடு படம்பிடித்துக் காட்டுவனவாகவும் உள்ளன.

**கலித்தொகையில் திணைமயக்கம்**

கலித்தொகையில் முதற்பொருள் மயக்கமும் கருப்பொருள் மயக்கமும் விரவிக் காணப்படுகின்றன. அவற்றைப் பற்றி இனி விரிவாகக் காணலாம்.

**கலித்தொகையில் முதற்பொருள் மயக்கம்**

நிலம் தம்முள் மயங்காமல் காலம் தம்முள் மயங்கும் எனும் விதிக்கேற்ப வேனிலும் வாடையும், கங்குலும் மயங்கி வந்துள்ளன என்பதை,

**"நோய்சேர்ந்த வைகலான் வாடைவந் தலைத்தரூஉம்:**
**யாழ்கொண்ட இமிழிசை இயன்மாலை அலைத்தரூஉம்:**
**கடிமலர் கமழ்நாற்றங் கங்குல்வந் தலைத்தரூஉம்" (பாலைக்கலி-28:13,17,21)**

எனும் வரிகள் மூலம் பாலையின் கண் முல்லையின் சிறுபொழுதான மாலைப் பொழுது மயங்கியமையை உணரலாம். இதில் வேனிற் காலத்திற்குள் வந்துவிடுவேன் என்று கூறிப் பிரிந்த தலைவன், மீண்டு வராததை நினைத்து வேனிற் காலத்தில் வாடையும், மாலைக்காலமும், இராப்பொழுதும் என்னை வருத்துகின்றது என்று வருந்திய தலைவிக்குத் தோழி அவன் வந்தவுடன் நீ மிகவும் மகிழ்வாய்! என்று கூறினாள். இதில் பாலையின் கண் முல்லையின் பொழுது தம்முள் மயங்கி வந்துள்ளன.

பாலையின் பொழுதான வேனிலின் கண் முன்பனிக் காலமும், பின்பனிக்காலமும் மயங்கி வந்துள்ளமையை,

**"புகையெனப் புதழ்சூழ்ந்து பூவங்கட் பொதிசெய்யா**
**முகைவெண்பல் நுதிபொர முற்றிய கடும்பனி" (பாலைக்கலி-30:19-20)**

எனும் வரிகள் மூலம் அறியலாம்.

கடலும் கடல் சார்ந்த நெய்தலின் கண் முல்லையின் மாலைப்பொழுது மயங்கியமையை,

**"மாலையும் அலரும் நோனா தெம்வயின்**
**நெஞ்சமும் எஞ்சுமற் றில்ல எஞ்சி**
**உள்ளா தமைந்தோ ருள்ளும்" (நெய்தற்கலி-1:22-24)**

எனும் வரிகளில் காணலாம்.

**கலித்தொகையில் கருப்பொருள் மயக்கம்**

**"எந்நில மருங்கின் பூவும் புள்ளும்" (தொல்-பொருள்)**

என்னும் விதிகளுக்கேற்ப மருதநிலத்தின் பூ பாலையின் கண் இடம் பெற்றுள்ளது என்பதை,

**"கடைஇய வாற்றிடை நீர்நீத்த வறுஞ்சுனை**
**யடையொரு வாடிய லணிமலர் தகைப்பன" (பாலைக்கலி-2:8-9)**

எனும் வரிகளில் காணலாம்.

இதில் தலைவனின் பிரிவை உணர்ந்த தோழி அவனின் பிரிவைத் தடுக்க, அவன் கடந்து செல்லும் பாலை நிலத்தின் கொடுமையே! அவனைத் தடுத்து நிறுத்தும் என்று

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

கூறவரும்போது, இனி நின்னைப் போகாமல் தடுப்பன நின் நெஞ்சை செலுத்தின வழியிடத்து உள்ள நீர் நீக்கப்பட்ட வறுவிய சுனைகளிடத்தும் இலைகளோடு கூடிய, வாடிய அழகிய(தாமரை) மலர்களேயாகும் என்று தோழி கூற முற்படுகின்றாள்.

மணலும் மணல் சார்ந்த பாலையின் கண் குறிஞ்சி நிலத்திற்குரிய கருப்பொருளான மயிலும், முருகனும் மயங்கி வந்துள்ளமையை,

**"கன்மிசை மயிலாலக் கறங்கியூர் அலர்தூற்றத்**
**தொன்னலம் நனிசாய நம்மையோ மறந்தைக்க**
**ஒன்னாதார்க் கடந்தடூஉம் உரவுநீர் மாகொன்ற**
**வென்வேலான் குன்றின் மேல்விளையாட்டும் விரும்பார்கொல்"**
**(பாலைக்கலி 26:13-16)**

இதில் இளவேனில் காலத்தில் வருவேன் என்று கூறிப் பிரிந்த தலைவன் வரவில்லை. அவனின் பிரிவை நினைத்து வருந்தும் தலைவி, என் அழகு கெட, மயிலும் மகிழ்ச்சியுடன் ஆரவாரிக்க, ஊரார் அலர் தூற்ற வெற்றி வேலையுடைய முருகன் திருப்பரங்குன்றின் மேல் பரத்தையருடன் விளையாடும் விளையாட்டை அவன் விரும்ப மாட்டானோ?... விரும்பியிருந்தால் அவன் வருவானல்லவா?... என்று பிரிவின் துயரைக் கூறுமிடத்து பாலையின் கண் குறிஞ்சியின் கருப்பொருள் மயங்கி வந்துள்ளது.

தலைவன் இருக்கும் போர்ப்பாசறைக்குப் பாணன் சென்று தலைவனிடம் தலைவியின் பிரிவு நிலையைக் கூறுவது போல் பின்வரும்

**"துயிலின்றி யாநீந்தத் தொழுவையம் புனலாடி**
**மயிலியலார் மருவுண்டு மறந்தமைகு வான்மன்னோ" (பாலைக்கலி-29:5-6)**

எனும் பாடல் வரிகளில் நீ பரத்தையருடன் கூடியிருப்பாயோ! என அவள் உன்னை நினைத்து ஏங்குகிறாள் என்று கூறப்படுகிறது. இதில் பாலை நிலத்தின் கண் மருதத்திற்குரிய பரத்தமை ஒழுக்கம் மயங்கி வந்துள்ளமையை அறியலாம்.

மலையும் மலை சார்ந்த குறிஞ்சியின் கண் மருதத்திற்குரிய தாமரைப் பூ மயங்கி வந்துள்ளமையை

**"தாமரைக் கண்ணியை தண்ணறுஞ் சாந்தினை**
**நேரிதழ்க் கோமையாள் செய்குறி நீவரின்" (குறிஞ்சிக்கலி-16:7-8)**

எனும் பாடல் வரிகள் மூலம் காணலாம்.

**முடிவுரை**

இதுவரை மேற்கண்ட பாடலகளின் வழியில் கலித்தொகையில் முதற்பொருளின் காலமும், கருப்பொருளும் மயங்கி நிற்பதை நம்மால் அறிய முடிகின்றது. மேலும், இந்தத் திணைமயக்கத்தின் மூலம் இயற்கைச் சூழலின் வாழ்வியல் மாற்றங்களைக் *கலித்தொகை* வழி அறிய முடிகின்றது.

**துணை நூல்கள்**

1. நச்சினார்க்கினியர் உரை, கலித்தொகை, கழக வெளியீடு, சென்னை, 2007.
2. இளம்பூரணார் உரை, தொல்காப்பியம், சாரதா பதிப்பகம், சென்னை, 2005.
3. பாமயன், திணையியல் கோட்பாடுகள், தடாகம் வெளியீடு, சென்னை, 2012.
4. முனைவர்.மு.வரதராசன், பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை, பாரி நிலையம், சென்னை, 2014.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

# பத்துப்பாட்டில் ஆடை கலாச்சாரம்

# Traditional Dress Code in *Pathuppattu*

**முனைவர் த.புவனேஸ்வரி,** உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை,
ஸ்ரீசங்கரா பகவதி கலை மற்றும் அறிவியல் கல்லூரி, கொம்மடிக்கோட்டை - 628653.

## Abstract

*Through this article, we can understand the traditional dress code of ancient Tamil people. Dress is basically needed for a human being. The people's dress not only show their culture but also show how they got developed gradually. Maintaining the dress and its design shows the imaginary skill of the ancient people. According to the quality and quantity of the people, the dress code gets changed. The dress resembles the wealth of their background. From its earliest stages to till now, the textiles department has undergone many changes also in the history of Tamil people.*

**Keywords:** Dress maintenance, Designing the Dress, Dress of the Artists, Basic needs.

### முன்னுரை

'ஆள் பாதி ஆடை பாதி' என்பது நம் அழகுடன் தொடர்பு கொண்ட பழமொழி. தனிமனிதனின் அழகையும் அவனது உயர்வையும் ஆடை நிர்ணயித்து விடுகின்றது. மனிதனின் இயல்பான அழகு ஒருபாதி, மற்றொன்று அவன் அணிந்திருக்கும் ஆடை அழகு ஒருபாதி. ஆடை கலாச்சாரம் மனிதனின் ஆறறிவை புலப்படுத்துவது. ஒரு நாட்டின் நாகரிக வளர்ச்சி மட்டுமின்றி மனிதனின் கற்பனைத் திறனை எடுத்து இயம்ப ஆடை கலாச்சாரம் ஆதாரமாக விளங்குகின்றது. சங்க கால மக்களிடையே நிலவிய ஆடை கலாச்சாரத்தை காணும் வகையில் இக்கட்டுரை அமைகின்றது.

### அடிப்படைத் தேவை

தனிமனிதனின் அடிப்படைத் தேவைகளுள் உணவு, உடை, உறைவிடம் மூன்றும் இன்றியமையாததாகும். அவ்வகைகளுள் ஆடை நம்முடைய தோற்றப்பொலிவு நம்மைக் குறித்த செய்திகளை மற்றவர்களுக்கு பிரதிபலிக்கும் ஒரு கருவியாக அமைகின்றது. ஆடை ஒவ்வொருவரின் பொருளாதார நிலைக்கு ஏற்றார்போல் அமைந்திருப்பதுண்டு. சில நேரங்களில் அவை விதிவிலக்காக அமைவதும் உண்டு. சங்க இலக்கியத்தில் ஆடை கலாச்சாரம் மனித சமூகத்தினரிடையே பல்வேறு மாறுபட்ட கோணத்தில் அமைந்திருக்கின்றது. ஆடை கலாச்சாரம் ஆதிகாலம் தொட்டு இன்று வரை பல்வேறு வகைமைப் பெற்றுவருகின்றது. மனிதனின் அடிப்படைத் தேவைகளுள் ஆடை இன்றியமையாதது. உடுக்கை, துணி, குப்பாயம், மெய்ப்பை, பட்டுடை, கலிங்கம், புடவை, கச்சு, தானை, படாம் என பல பெயர்கள் ஆடையைக் குறிக்க நிலவிவந்துள்ளன.

**"உடம்பை அடுத்திருப்பதால் ஆடை என்று பெயர் பெறும்"**[1] என்று மீரா. முகைதீன் ஆடைக்கு பெயர்க்காரணம் குறிப்பிடுகின்றார். **"அடை என்றால் இலை அடையைத் தைத்து உதவினர் அது ஆடையாயிற்று"**[2] என்கிறாரர். திருமதி. தியாகராசன்.

### கலைஞர்களின் ஆடை

சங்க காலத்தில் கலைக் குழுவினைச் சார்ந்தவர்கள் செல்வநிலையில் வறியவர்களாகவும், பொருளாதார நிலை குன்றியவர்களாகவும் காணப்பட்டனர். இதன்

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

பின்னணியில் இவர்களின் ஆடையும் வறுமையை வார்த்தெடுத்துள்ளது. பாணர்கள் நிலையான வாழ்க்கை இல்லாதவர்கள் நாடோடியான வாழ்க்கை வாழ்பவர்கள். இதனால் ஆடை அழுக்குப்படிந்து ஈரும், பேனும் நிறைந்து வியர்வையால் மிகவும் நனைந்து, வேறுபட்ட பல நூல்களைக் கொண்டு தைக்கப்பெற்று நைந்துப் போயிருந்தது. இந்நிலை பாணன், பொருநனின் உச்சகட்ட வறுமையை உதாரணப்படுத்தப்படுகின்றது.

பொருநர்களும், பாணர்களும் வள்ளல் பெருமக்களுடன் தொடர்புகொண்டு கொடையும் புகழும் பெற்றனர். ஆனால் கொடை பெறுவதற்கு முன்பு அவர்களுடைய தோற்றம் வறுமையினால் துன்பப்பட்டிருக்கின்றது. ஆடை, உடல் என எல்லா நிலைகளிலும் வறுமை மட்டும் வாய்க்கப் பெற்றதாக இருந்திருக்கின்றனர்.

பொருநராற்றுபடையில் பொருநர்களின் வறுமை நிலையினை விரைந்து நீக்கும் பொருட்டு நைந்து போயிருந்த ஆடையை அகற்றிப் புத்தாடையை வழங்குகிறான் மன்னன் கரிகாற் பெருவளத்தான். இதனை,

**"ஈரும் பேனும் இருந்துஇறை கூடி,**
**வேரொடு நனைந்து, வேற்று இழை நுழைந்த**
**துன்னற் சிதாஅர் துவர நீக்கி,**
**நோக்கு நுழைகல்லா நுண்மைய, பூக்கனிந்து**
**அரவுஉரி அன்ன, அறுவை நல்கி" (பொருந - 79-83)**

என்ற அடிகள் குறிப்பிடுகின்றன.

'அரவுஉரி' போன்ற ஆடை என்று ஆடை அலங்காரத்தை அறிமுகப்படுத்துகிறார் புலவர் முடத்தாமக்கண்ணியார். 'பாம்பு உரித்த சட்டை' போன்ற ஆடைகள், வேலைப்பாடு நிறைந்த ஆடைகள் என்று ஆடை அலங்காரம் பலவகைப்படுத்தப்படுகின்றன. பாம்பு உரித்த சட்டை என்று குறிப்பிடும் போது ஆடை மெல்லியதான அமைப்பைக்கொண்டு இருந்திருக்கின்றது. பூ வேலைப்பாட்டுடன் அமைந்த ஆடை, இன்றைய காலத்தில் பயன்படுத்தும் 'எம்ப்ராய்டரி' வடிவமைப்பைப் பெற்று இருந்திருக்க வாய்ப்பிருக்கின்றது.

இப்பாடலில் பெண்களுக்கு என்று தனி ஆடை அமைப்பைக் குறிப்பிடவில்லை. பொருநர்களுக்கு என்று பொதுவான ஆடை அமைப்பு கூறப்படுகின்றது. ஆடை என்பது உடலை மூடி கண்ணியமான தோற்றத்தை ஏற்படுத்த பயன்படுத்தும் ஒரு அலங்காரப் பொருளாக இருக்கின்றது.

பொருநர்கள் பல நாட்களாக வறுமையால் உடல் மெலிந்து காட்சியளிக்கின்றனர். எனவே அவர்களின் உடல் தாங்கும் அளவிற்கு அவர்களுக்கு ஏதுவாக அமையும் முறையில் ஆடை பரிசளிக்கப்பட்டு இருக்கின்றது. ஆடை வழங்குவதிலும் கரிகாற் பெருவளத்தான் உளவியல் திறனைப் பயன்படுத்தி இருக்கின்றான்.

பொருநராற்றுப்படையின் மற்றொரு பாடல் அடியில் பொருநனின் ஆடை கொட்டைப் பாசியின் வேர் போன்று அழுக்கு படிந்த, குறைந்துப்போன தையலையுடைய சிதைந்துப்போன ஆடைகளாகக் காணப்படுகின்றன. அதை மன்னன் நீக்கி ஆடையின் கரையிடத்தே கொட்டைகள் முடிக்கப்பெற்ற தூய பட்டு ஆடையைக் கொடுத்து உடுக்கச் செய்கின்றான். இதனை,

**"பாசிவேரின் மாசொடு குறைந்த**
**துன்னற் சிதாசுர் நீக்கி, தூய**
**கொட்டைக் கரைய பட்டுஉடை நல்கி" (பொருந - 153-155)**

என்கிறார் ஆசிரியர் முடத்தாமக்கண்ணியார்.

இங்கு 'கொட்டை' என்ற சொல் பஞ்சு, விதை என்ற பொருளைத் தருகின்றது. இங்கு பஞ்சு என்ற பொருளை எடுத்துக்கொண்டால் பஞ்சினால் ஆன கரைமுடிக்கப்பெற்ற புத்தாடை,

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

பட்டு ஆடை என்பது பொருளாகும். இன்று நாம் பட்டாடையில் போடக்கூடிய கரைமுடிச்சுகள் போன்று சங்க காலத்திலும் ஆடையில் கரை அலங்காரம் செய்யப்பட்டு இருந்திருக்கின்றது.

**கொடையில் முதலிடம் வகிக்கும் ஆடை**

ஒருவனுடைய வறுமை நிலையினை பிறா் அறிய வெளிப்படுத்துவது அவன் உடுத்திய கந்தல் ஆடையாகும். எனவே மன்னன் முதலில் அவா்களது அழுக்கு ஆடையை அகற்றி பாணா்களுக்கு செல்வச் சிறப்புடைய ஆடையை அணிவித்தலை தம் முதற்கடமையாகக் கொண்டிருந்திருக்கின்றான். மன்னன் பாணா்களுக்கு வழங்கக்கூடிய ஆடை மூங்கிலின் உட்பட்டையை உரித்தாற்போன்று தூய்மையான ஆடையாக இருந்திருக்கின்றது. அதனைத்தான் மன்னன் உடுக்கச் செய்துள்ளான். சிறுபாணாற்றுப்படையில் இச்செய்தியை நல்லூா் நத்தத்தனாா்,

**“…..மாசுஇல்**
**காம்பு சொலித்தன்ன அறுவை உடீ,” (சிறுபாண் - 235-236)**

என்கின்றாா்.

பாணா்கள் வள்ளல் பெருமக்களுடன் தொடா்பு கொண்டு கொடையும், புகழும் பெற்றுள்ளனா். மன்னனிடம் கொடை பெறுவதற்கு முன்பு வறுமைத் தோற்றம் கொண்டிருந்த அவா்களின் நிலை மன்னனின் அன்பான கொடைக்கு பின்னா் சற்று மாறுபாடடைகின்றது.

பாசி வேரையொத்த கந்தலாடையை அகற்றித் தன் அரசவைச் சுற்றத்தோடு பாணா்களின் சுற்றமும் வேற்றுமையின்றித் தோன்றும்படி உடலுக்கு ஏற்ற பாலாவியை ஒத்த நூலால் செய்த துகில்களை உடுக்கச் செய்கின்றான் பெரும்பாணாற்றுப்படை பாட்டுடைத் தலைவன் தொண்டைமான் இளந்திரையன் இதனை,

**“நின் அரைப்**
**பாசி அன்ன சிதா்வை நீக்கி,**
**ஆவி அன்ன அவிா்நூற் கலிங்கம்**
**இரும்போ் ஒக்கலொடு ஒருங்குஉடன் உடீ,” (பெரும் - 467-470)**

என்ற பாடல் அடிகள் உணா்த்துகின்றன.

பாலாவியை ஒத்த நூலினால் செய்யப்பெற்ற ஆடை என்றால் மிகவும் வெண்மையான, மிருதுவான நூலால் நெய்யப்பெற்ற ஆடை ஆகும். இது ஆடையின் கலை நயத்தைப் புலப்படுத்துகின்றது. மன்னன் அரசவைச் சுற்றத்தினருக்கும் பாணா் இனத்தவருக்கும் இடையே வேற்றுமை இருக்கக் கூடாது என்று எவ்வித பேதமும் இன்றி உயா்தர ஆடைகளை வழங்கி இருக்கின்றான். இதுதான் மன்னா்களின் உயா்ந்த பரம்பொருள் நிலை. கடவுளின் நிலைக்கு மன்னா்கள் உயா்த்தப்பெற்றுள்ளனா். தாயுமானவா் கூறுவது போல,

**“எல்லாரும் இன்புற்றிருக்க நினைப்பதுவே**
**அல்லாமல் வேறொன்றறியேன் பராபரமே”**[3]

என்ற அடிகள் மனிதன் உயிா்களிடத்தில் செலுத்த வேண்டிய உண்மை அன்பை எடுத்துரைக்கின்றன. அத்தகைய உண்மையான அன்புதான் சங்க கால மன்னா் மக்கள் உறவுநிலை. இத்தகைய தானதா்மமும், அன்பளிப்பும் ஆயிரம் இருந்தாலும் சமூகத்தில் பாணா்களிடையே ஏழ்மை என்னும் வறட்சி மட்டும் வற்றாத ஜுவ நதியாக இருந்து வந்திருகின்றது.

பொருநராற்றுப்படையில் பொருநனின் ஆடையில் ஈரும், பேனும் இருக்கின்றது. இதுபோன்ற உண்மையை புறநானூற்றுப் பாடலும் எடுத்து இயம்புகின்றது. பாணா்கள் இடுப்பில் அணிந்திருக்கும் ஆடை கிழிந்தும், நைந்தும், யாழில் பத்தரைத் தைத்திருப்பது போன்று தைக்கப்பெற்றும் காணப்படுகின்றது என்பதை,

**“யாழ்ப் பத்தா்ப் புறம்கடுப்ப**
**இழைவலத்த பஃறுன்னத்து**

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

**இடைப்புரைப் பற்றிப் பிணிவிடாஅ**
**ஈர்க்குழாத்தோடு இறைகூர்ந்த**
**பேஎன் பகையென"[4]**

என்ற இப்பாடலடிகள் அறிவுறுத்துகின்றன.

பாணனுடைய இடுப்பிலுள்ள கிழிந்த ஆடையை நீக்கித் தன் இடுப்பிலுள்ள புகையைப் போன்ற ஆடையை வஞ்சன் என்னும் மன்னன் வழங்குவான் என்பதை புறநானூற்றில்,

**"…….என் அரைத்**
**துரும்புபடு சிதாஅர் நீக்கித் தன்அரைப்**
**புகை விரிந்தன்ன பொங்கு துகில் உடீ,"[5]**

என்னும் அடிகள் விளம்புகின்றன.

எட்டுத்தொகையும், பத்துப்பாட்டும் கலைஞர்களுக்கு ஆடைகள் வழங்கிய செய்தியையும், அந்த ஆடைகள் எவ்வாறெல்லாம் அழகுப்படுத்தப்பட்டிருந்தன என்ற செய்தியையும் கூறுவதில் ஒத்துக் காணப்படுகின்றன.

**"உண்பது நாழி, உடுப்பவை இரண்டே"[6]**

என்ற புறநானூற்றுப் பாடலில் அரசனாக இருந்தாலும், கல்வியறிவில்லாத வேடனாக இருந்தாலும் அவர்கள் வயிற்றுக்கு கொள்ளப்படும் உணவு ஒரு காற்படி அளவேயாகும். உடுக்கும் உடை இடுப்புக்கு மேலே, கீழே என இரண்டு ஆகும். இருப்பினும் இங்கு ஆயிரம் வேறுபாடுகள் நிகழ்கின்றன. மனித வாழ்வில் இவ்விரண்டு பஞ்சமும் இயற்கையானதுதான், அதனை ஏற்றறுக்கொள்ள வேண்டும் என வாழ்வு குறித்தப் போதனையைப் புத்தருக்குச் சுஜாதை கூறியதை,

**"தாங்கொணாத் துயரம் தரணியில் உண்டென**
**ஐயனே, யானும் அறிவேன்**
**உண்ண உணவும் உடுக்கத் துணியும்**
**இல்லையாகி இறந்திடு வோரும்**
**நோயில் விழுந்து நொந்த நொந்து**
**பாயில் கிடந்து பரிதவிப் போரும்**
**….உலகில் உண்டென உண்மை மறவேன்"[7]**

என்ற கவிமணி தேசிக விநாயகம்பிள்ளையின் அடிகள் குறிப்பிடுகின்றன.

உயிரைக் காக்க உணவும், மானத்தைக் காக்க உடையும் உறைய உறைவிடமும் இன்றியமையாத ஒன்றாக இருக்கின்றது. மானம் காக்க வழங்கப்படுகின்ற ஆடை, அலங்காரம் உடையதாக இருந்தாலும் அது பாணர்களின் அத்தியாவசியப் பொருளாக கருதப்பட்டிருக்கின்றது. கலைஞர்களுக்கு பொருந்தாத விதத்தில் ஆடை அமையவில்லை. அவர்களுக்கு பிடித்தமான விதத்தில்தான் மன்னர்கள் வழங்கியிருக்கின்றனர். கலைஞர்களின் உடை ஒரு தனி அலங்கார அமைப்பு பெற்றிருப்பதை, சங்க இலக்கியம் குறிப்பிட்டு நிற்க, மற்றொரு புறம் செல்வந்தர்களின் வீட்டு ஆடை அலங்காரம் வேறு வடிவத்தைப் பெற்று நிற்கின்றது.

**ஆடை பராமரிப்பு**

மாலைப் பொழுதினில் அக்கால மகளிர் தமக்கு இனிய காதற் கணவரைக் கூடுதற் பொருட்டு அணிகலன்களை அணிந்துக்கொண்டு நறுமணம் பொருந்திய சந்தனம் ஆகியவற்றை அரைத்தனர். மெல்லிய நூலால் செய்த ஆடைகளுக்கு மணம் கமழும் அகிற்புகையை ஊட்டினர்.

**"மென் நூற் கலிங்கம் கமழ்புகை மடுப்ப" (மதுரை - 554)**

என்ற பாடல் அடியில் அமைந்துள்ள 'மென்நூற்' சிறந்த தூய்மையான பருத்தி ஆடையைக் குறிக்கின்றது.

**E-ISSN: 2581-7140**
**Vol. 2: Issue - 1, July 2019** **Available at: www.ijtlls.com**

பெண்கள் பயன்படுத்திய ஆடை மென்மையாக இருந்ததோடு மட்டுமின்றி இன்று பலரும் தங்கள் ஆடைகளுக்கும், உடலுக்கும் வாசனைத் திரவியம் பயன்படுத்துவதுபோல, முன்பே சங்க கால மகளிர் ஆடையை நறுமணம் அடையச் செய்திருக்கின்றனர். கணவனிடம் தங்கள் அழகை வெளிப்படுத்தவும், கணவனின் அன்பைப் பெறவும் பெண்கள் உடல் மற்றும் ஆடை இரண்டையும் நறுமணம் அடையச் செய்து இருக்கின்றனர். சங்க இலக்கியம் இதுபோன்ற செயல்களை சிறந்த இல்லுறை மகளிரின் இயல்பு என்று பாராட்டுகின்றது. பின்னர் தோன்றிய சிற்றிலக்கியங்கள் பெண்கள் ஆடவர்களை மயக்குபவர்கள் என்ற கோணத்தில் நூல்கள் படைத்திருத்திருக்கின்றன. இதனை,

**"செக்கச் சிவந்த கழுநீரும்**
**செகத்தில் இளைஞர் ஆருயிரும்**
**ஒக்கச் செருகும் குழல் மடவீர்**
**உம் பொற்கடாபம் திறமினோ"**[8]

என்று கலிங்கத்துப் பரணியின் பாடல் அடிகள் கூறுகின்றன. பெண்கள் தங்கள் அழகினால் ஆண்கள் உயிரைத் தன்வசப்படுத்துபவர்கள் என்ற செய்தியை உணர்த்துகின்றன.

ஆடைகளுக்கு கஞ்சியூட்டி அதனை உடுத்தும் பழக்கம் அந்நாளில் இருந்திருக்கின்றது. ஏனெனில் சங்க கால மக்கள் அணிந்திருக்கும் ஆடை அனைத்தும் பருத்தி நூலினால் நெய்து செய்யப்பெற்ற ஆடையாகும். அவை எளிதில் கசங்குதல் இயல்பு. சோறு வடித்த நீராகிய கஞ்சியில் போட்டு பின் உலர வைத்து பயன்படுத்தும் போது பருத்தி நூலால் நெய்யப்பெற்ற ஆடை பழைய கசங்கிய நிலையிலிருந்து புது நிலையை அடைகின்றது. இதனை,

**"சோறு அமைவு உற்றநீருடைக் கலிங்கம்,**
**உடை அணி பொலியக் குறைவு இன்று சுவை," (மதுரை - 721-722)**

என்ற அடிகள் கூறுகின்றன. மலைபடுகடாமில் ஆடை, நூல் நுழைந்த இடம் கூட வெளியே தெரியாமல் நுண்ணிய நூலினால் சிறந்த முறையில் நெய்யப்பட்டு இருந்திருக்கின்றன. கைதேர்ந்த நெசவாளர்கள் ஆடையை நெய்து இருக்கின்றனர். இதனை,

**"இழை மருங்கு அறியா நுழை நூற் கலிங்கம்**
**எள்அறு சிறப்பின் வெள்அரைக் கொளீ," (மலை - 561-562)**

என்ற இவ்வடிகள் சுட்டிக்காட்டுகின்றன.

துணி என்பது பஞ்சு நூல் போன்ற இயற்கைப் பொருட்களால் அல்லது நைலான் போன்ற பிற செயற்கைப் பொருட்களால் ஆன நீண்ட நூல்களைக் குறுக்கும், நெடுக்குமாக பின்னி நெய்யும் பரப்பளவு கொண்ட ஒரு பொருள் ஆகும். துணிதான் மாந்தர்கள் அணியும் ஆடையாகப் பயன்பட்டு வருகின்றது. நெசவுத் தொழில் உலகிலேயே பழமையான ஒரு தொழில் ஆகும். துணி, பொருட்களை எடுத்துச்செல்லும் பை, மூட்டை கட்டும் பொருள், விரிப்பு என பல நிலைகளில் பயன்பட்டாலும் நாம் உடுத்தும் உடையில்தான் முக்கியத்துவம் பெறுகின்றது. இதைத்தான்,

**"உடுக்கை இழந்தவன் கைபோல் ஆங்கே**
**இடுக்கண் களைவதாம் நட்பு"**[9]

என்கிறார் வள்ளுவர்.

இங்கு துணி மானம் காக்கப்பயன்படும் ஒரு பொருளாகத்தான் பார்க்கப்படுகின்றது. திருக்குற்றாலக் குறவஞ்சியில் இறைவன் பவனி வரும்போது அவனைக் கண்டு மயங்கிய வசந்தவல்லி குற்றால நாதர் மீது கொண்ட காமத்தால் ஆடை நெகிழ நிற்கின்றாள். ஆடையும் தோற்று நாணத்தால் மயங்குகின்றாள் என்பதை,

**"நடைகண்டால் அன்னம் தோற்கும்**
**நன்னகர் வசந்த வல்லி**

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

**விடை கொண்டான் எதிர்ப்போய்ச் சங்க**
**வீதியிற் சங்கம் தோற்றாள்"**[10]

என்கிறார் திரிகூடராசப்பக் கவிராயர்.

ஆடை மனிதத்துவத்தில் உணர்வுகளின் தோன்றலான மானம் என்ற ஒன்றின் பின்னணியில் வைத்துப் பார்க்கப்படுகின்றது. ஆடை அலங்காரம் அத்தகைய உணர்வு நிலைகளைத் தாண்டி கலை வடிவம் பெற்று இருக்கின்றது. பெண்கள் மார்பினை மறைத்துக்கட்ட இறுக்கமான கச்சையினை அணிந்திருக்கின்றனர். இந்தக் கச்சைக்கு 'வம்பு' என்று நெடுநல்வாடை விளக்கம் கொடுக்கின்றது. இதனை,

**".....முகிழ் முலை**
**வம்பு வசித்த யாத்த........" (நெடுநல் - 149 - 150)**

என்ற அடிகள் கூறுகின்றன. **"மேலாடை இன்றியமையாததென எண்ணாத மகளிர் புதுமையாக ஏற்றுக்கொண்டமையின் வம்பு எனவும் வழங்கப்பட்டிருக்கலாம்"**[11] என்கிறார் கு.பகவதி. செல்வந்தர் வீட்டு ஆண்களின் உடை அலங்காரம் உயர்ந்த நிலையை அடைகின்றது. மதுரைக்காஞ்சியில் மதுரை நகரில் வாழும் செல்வந்தர்களின் ஆடையில் பூத்தொழில் வேலைப்பாடு செய்யப்பட்டுள்ளது. அத்தகைய பூத்தொழிலுடைய சேலைகளைப் பொன்னால் செய்யப்பெற்ற உடைவாளோடு சேர்த்துக் கட்டி, மேலாடையை அணிந்து இடையில் கச்சும் அணிந்திருக்கின்றனர். இதனை,

**"கண் பொருபு உகூஉம் ஒண்பூங் கலிங்கம்**
**பொன் புனை வாளொடு பொலியக் கட்டி" (பொருந - 153-155)**

என்று அடிகள் கூறுகின்றன.

செல்வந்தர் வீட்டுப் பெண்களும் பூ வேலைப்பாடுகள் கொண்ட துகிலை உடுத்தியிருக்கின்றார். அரசி, அரசன் அரண்மனையில் இருக்கும்போது பூ வேலைப்பாடு கொண்ட உடையை அணிந்திருந்தாள். அரசன் போருக்குச் சென்றதால் தனிமையில் வாடும் அவள் நூலால் ஆகிய ஆடையை உடுத்தியிருக்கின்றாள். அது உடலில் மாசுபடிந்து காணப்படுகின்றது. அரசன் இல்லாத சமயத்தில் அரசியும் ஒரு ஏழ்மை நிலையைச் சார்ந்தவள்தான் என்பதற்கு சான்றுதான் அவளது நூலால் நெய்யப்பட்ட ஆடை. கஞ்சி கொண்டு தோய்க்கப்பட்ட துணி படுக்கையில் விரிக்கப்பட்டு இருக்கிறது. ஆகவே படுக்கையில் போர்வையாக பருத்தித்துணி விரிக்கப்பட்டுள்ளதை,

**"காடி கொண்ட கழுவுறு கலிங்கத்துத்**
**தோடு அமை தூமடி விரிந்த சேக்கை,**
**....பூந்துகில் மரீகிய ஏந்துகோட்டு அங்குல்**
**அம்மாசு ஊர்ந்த அவிர்நூற் கலிங்கமொடு" (நெடுநல் - 134-135, 144-145)**

என்ற அடிகள் விளக்குகின்றன.

மன்னன் இடதுபக்கமாக தோளில் மேலாடை ஒன்றைத் தொங்கவிட்டு இருப்பதை,

**"புடைவீழ் அம்துகில் இடவயின் தழீ," (நெடுநல் - 181)**

என்ற அடி கூறுகின்றது.

இன்றைய காலக்கட்டத்தில் ஆடை நாகரிகம் என்பது மாறுபட்டு வருகின்றது. ஏழைகளுக்கு பாலிஸ்டர் ஆடைகளும், பணக்காரர்களுக்கு பருத்தி ஆடைகளும் என அவதாரம் எடுத்திருக்கின்றது. சங்க இலக்கியத்தில் வறியர்கள் பருத்தி நூலினால் நெய்யப்பெற்ற ஆடை அணிந்தருந்தனர் என்ற உண்மை இன்று தலைகீழாக அமைந்துள்ளது. பருத்தி ஆடையின் விலை அதிகமாகவும். மேலை நாட்டிலிருந்து இறக்குமதியான பாலிஸ்டர் போன்ற செயற்கை நூலினால் ஆன ஆடைகள் மலிவான விலையிலும் கிடைக்கின்றன. இதனால் தற்கால சமுதாயத்தின் ஆடை கலாச்சாரம், அலங்காரம் பொருளாதார நிலைக்கு ஏற்றார் போல பிரவேசிக்கின்றது. வேளாண்மை பருத்தியின் உற்பத்தியில் நலிவடைந்துள்ளது.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

இதனால் பருத்தி நூலினால் செய்யப்பட்ட கலப்படம் இல்லாத 100 % சுத்தமான பருத்தி ஆடை அதிக விலை வைத்து விற்கப்படுகின்றது.

**ஆடை வடிவமைப்பு**

தமிழகத்தில் பழங்காலத்திலேயே நெசவு தோன்றிவிட்டதென்று ஆராய்ச்சியாளர்கள் கூறுகின்றனர். **"வயவர் யோவான் மார்சல், தம் மொகொஞ்சோதாரோவும் சிந்து நாகரிகமும் என்னும் நூலில் கி.மு.3000 ஆண்டுகட்கு முன் மேனாடுகட்கு இந்தியாவினின்றே துணி ஏற்றுமதியானதென்று கூறியிருக்கின்றார்"**[12] என்ற செய்தியை தேவநேயப் பாவாணர் தனது நூலில் குறிப்பிட்டு இருக்கின்றார்.

அக்காலத்திலிருந்து தமிழகத்தில் பருத்தி தொன்றுதொட்டு விளைந்து வருகின்றது. பண்டைக் காலத்தில் பெண்கள் மேற்கொண்ட தொழில்களுள் பெருவழக்கில் இருந்த தொழில் நூல் நூற்றதாகும்.

**"பருத்திப் பெண்டிர் பகுவ லன்ன"**[13]

என்ற புறநானூற்றுப் பாடல் அடி பருத்தி நூல் நூற்கும் பெண்களைப் 'பருத்திப் பெண்டிர்' என்று குறிப்பிடுகின்றது.

நூல் நூற்பதற்குப் பஞ்சைச் சுருளாகத் திரட்டி வைப்பதனால் நூல் நூற்றலைக் கொட்டை நூற்றல் என்று கூறுவது வழக்கு. இதனை,

**"பஞ்சிதன் செல்லாப் பனுவல் இழையாகச்**
**செஞ்சொற் புலவனே சேயிழையர் - எஞ்சாத**
**கையேவர் யாகக் கதிரே மதியாக**
**மயிலா நூன் முடியு மாறு"**[14]

என்கிறார் பவணந்தி முனிவர். ஆடை வடிவமைப்பு கற்பனைத் திறனுக்கு உட்பட்டது. அது அணிபவரின் குணாம்சங்களையும் வடிவமைப்பவரின் கலைத் திறனையும் வெளிக்கொணர்கின்றது.

**முடிவுரை**

பண்டைக்காலத்தில் உயர்குடி ஆடவர் வேட்டியும், மேலாடையும், உயர்குடிப் பெண்டிர் சேலையும், கச்சும் அணிந்திருந்தனர். தாழ்குடிப் பெண்கள் கச்சின்றி சேலை முன்றானையாலமைந்த மாராப்பும் கொண்டிருந்தனர். தாழ்ந்த குடியைச் சேர்ந்த ஆடவர் வேட்டியொடு தலை முண்டும் கட்டியிருந்தனர். ஆடை கலாச்சாரம் என்பது சங்க இலக்கிய காலத்ததை கொண்டு ஒப்பிடுகையில் தற்காலத்தில் பெரு மாற்றத்தை அடைந்திருக்கின்றது என்பதுதான் முழுமையான உண்மை. தமிழர்களின் ஆடை வடிவமைப்பு ஆடை உடுத்தும் பாங்கு நம் தேசத்தின் தரம் மற்றும் அவர்கள் வாழ்ந்த கால கட்டத்தின் கலாச்சார நிலைபோன்றவற்றை பத்துப்பாட்டு வழி அறியமுடிகின்றது.

**அடிக்குறிப்புகள்**

1. அ.மீராமுகைதீன் (க.ஆ), தமிழ் இலக்கியத்தில் ஆடை வகைகள், ப. 90.
2. திருமதி.கே.தியாகராசன் (க.ஆ), தமிழர் ஆடை, ப.100.
3. தாயுமானவர், பராபரக்கண்ணி, பா.எ - 856.
4. வ.த. இராமசுப்பிரமணியம் (உ.ஆ), புறநானூறு, திருமகள் நிலையம், சென்னை, மூன்றாம் பதிப்பு : ஆகஸ்ட் 2012, பா.எ - 136 : 1-5.
5. மேலது, பா.எ - 398:18-20.
6. மேலது, பா.எ - 189:5.
7. வ.விஜயபாஸ்கரன் (தொ.ஆ.), சக்திகளஞ்சியம், கலைஞன் பதிப்பகம், சென்னை, இரண்டாம் பதிப்பு : 2013, ப. 19.

E-ISSN: 2581-7140

Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

8. புலியூர்க்கேசிகன் (உ.ஆ), கலிங்கத்துப்பரணி, பாரி நிலையம், சென்னை, இரண்டாம் பதிப்பு : 2010 பா.எ. - 74.
9. சாமி சிதம்பரனார் (உ.ஆ), திருக்குறள், கண்ணப்பன் பதிப்பகம், சென்னை, முதல் பதிப்பு : நவம்பர் 2002, கு.எ - 788.
10. புலியூர்க்கேசிகன் (உ.ஆ), திருக்குற்றாலக் குறவஞ்சி, பாரி நிலையம், சென்னை, இரண்டாம் பதிப்பு : 2011 பா.எ - 12.
11. முனைவர்.கு.பகவதி, தமிழர் ஆடைகள், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, இரண்டாம் பதிப்பு : 2003, ப.53.
12. ஞா.தேவநேயப் பாவாணர், பண்டையத் தமிழ் நாகரிகமும் பண்பாடும், சாஸ்தா வெளியீடு, சென்னை, முதல் பதிப்பு : ஆகஸ்ட் 2012 ப.49.
13. வ.த. இராமசுப்பிரமணியம் (உ.ஆ), புறநானூறு, பா.எ - 125:1.
14. முனைவ. பெ. சுயம்பு (உ.ஆ), நன்னூல், ஆர்.ஆர். நிலையம், சென்னை, முதல் பதிப்பு : டிசம்பர் 2005, நூற்.எ – 24.

 
E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

# சங்க இலக்கியங்களில் முல்லைத்திணையின் வாழ்வியல் கட்டமைப்பு

# Livelihood Framework of Mullai People in Sangam Litearture

**ப.மணிகண்டன்,** முனைவர் பட்ட ஆய்வாளர்,
பாரதிதாசன் உயராய்வு மையம், பாரதிதாசன் பல்கலைக்கழகம், திருச்சிராப்பள்ளி - 24

## Abstract

*Sangam literature in one of the ancient Literature. We can see that Tamil People's habitual environment and its structure from the Sangam period to the present day. Based on that, this article describes the environment, livelihood and their structure of Mullai Land (Forest and Forest related areas) people from Sangam Literature. Descriptions about Mullai land by literary scholars and glossaries have also been given out for clear understanding. Accordingly, Mullai land's livelihood framework has been described in detail in this article.*

**Key words:** Sangam Literature, Mullai Land, Livelihood, Environment, Structure

**முன்னுரை**

சங்க இலக்கியங்கள் ஒவ்வொன்றும் ஏதோவொரு பிணைப்போடு இருக்கின்றன. அன்பின் ஐந்திணைகள் என்றழைக்கப்படுகின்ற குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை போன்றவைகள் மக்களின் வாழ்வியல் சூழல்களோடு இணைந்து வருகின்றன. முல்லை நிலத்தில் வாழுகின்ற மக்கள் அவர்களின் தொழில்களுக்கேற்றவாறு ஆடு மேய்த்தல், மாடு மேய்த்தல், மோர் விற்றல் போன்றவற்றை செய்தனர். அதன் காரணமாக அவர்களை ஆயர், ஆய்ச்சியர் என்று கூறும் வழக்கமிருந்தன. இவர்கள் ஏறுதழுவுதல் (ஜல்லிக்கட்டு) எனும் விளையாட்டினை விளையாண்டனர். ஏறுதழுவும் ஆண்மகனை திருமணம் செய்து கொள்வதைக் கட்டாயமாகக் கடைப்பிடித்திருந்தனர். முல்லைத்திணையில் காணப்படும் வாழ்வியல் கட்டமைப்புகளை ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**தொல்காப்பியத்தில் முல்லைத்திணை**

தொல்காப்பியர் ஐவகைத் திணைப் பற்றியும், அதன் பருவங்கள் குறித்தும், அத்திணைகளில் வருகின்ற மாந்தர்கள் பற்றியும் குறிப்பிட்டுள்ளார். அதில் முல்லைத்திணை இடம்பெறுவதை,

> **"அவற்றுள்,**
> **நடுவண் ஐந்திணை நடுவண தொழியப்**
> **படுதிரை வையம் பாத்திய பண்பே." (தொல்.பொருள்.2)**
> **"மாயோன் மேய காடுறை உலகமும்**
> **முல்லை குறிஞ்சி மருதம் நெய்தலனச்**
> **சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே" (தொல்.பொருள்.5)**
> **"காரும் மாலையும் முல்லை." (தொல்.பொருள்.6)**
> **"ஆயர் வேட்டுவர் ஆடூஉத் திணைப்பெயர்**
> **ஆவயின் வரூஉம் கிழவரும் உளரே"(தொல்.பொருள்.23)**

என்ற நூற்பாக்களில் சுட்டிக்காட்டுகிறார்.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

**சிலம்பில் முல்லைத்திணை**

முல்லையும் குறிஞ்சியும் முறையாகத் திரிந்து பாலை நிலம் தோன்றியதை,

**"முல்லையும் குறிஞ்சியும் முறைமையிற் திரிந்து
நல் இயல்பு இழந்து நடுங்குதுயர் உறுத்துப்
பாலை என்பதோர் படிவம் கொள்ளும்"**[1]

என்று இளங்கோவடிகள் குறிப்பிட்டுள்ளார்.

**முல்லைத்திணை விளக்கம்**

குறிஞ்சித்திணைக்கு அடுத்தது இருப்பது முல்லைத்திணை. **"ஊருக்குச் சுற்றுப்புறத்தே இருப்பது காடும் காடுசார்ந்த இடமும்"**[2] ஆகும். **"குறிஞ்சி முதலிய ஐந்தும், காதல் உருவாகிய அன்பின் ஐந்திணை"**[3] என்பதாகும்.

முல்லை என்பதற்கு கழகத் தமிழ் அகராதி, **"இசை, ஐந்நிலத்தொன்று, அது காடுங்காடு காடு சார்ந்த இடமும், ஒரு மரம், கற்பு, காமன் கணையில் ஒன்று, முல்லைக்கொடி, வன மல்லிகை, வெற்றி"**[4] பொருள் தருகின்றது.

**முல்லை நில மக்கள் வாழ்ந்த இடம்**

முல்லைப் பகுதி மேய்ச்சல் நிலங்களையும், கொல்லைகளையும் கொண்டிருந்ததால் அங்கு ஆடு, மாடு வளர்த்தலையும், வரகு முதலான தானியங்களை விளைவிப்பதற்கும் ஏற்றப் பகுதியாக அமைந்துள்ளன. இந்நிலத்தில் வாழுகின்ற மக்களை ஆயர், ஆய்ச்சியர், இடையர், இடைச்சியர், கோவலர், அண்டர் என்றவாறு அழைத்தனர்.

முல்லை நில மக்கள் குடிசைகளில் வாழ்ந்தார்கள். மண் சுவர் எழுப்பி, வரகுத்தாளால் கூரையை வேய்ந்திருந்தார்கள். சுவரின்மீது செம்மண் பூசியிருந்தனர். என்றவாறு இந்நிலமக்கள் வாழ்ந்திருக்கின்றனர். இதனை,

**"கருவை வேய்ந்த, கவின்குடிச் சீறூர்" (பெரும்.191)**
**"புதுக்கலத்து அன்ன செவ்வாய்ச் சிற்றில்" (அகம்.94:9)**

என்ற பாடலடிகளால் உணரலாம்.

**"குளகு அரை யாத்த குறுங்கால் குரம்பைச்
செற்றை வாயில் செறிகழிக் கதவின்
கற்றை வேய்ந்த கழித்தலைச் சாம்பின்
அதோளன் துஞ்சும் காப்பின் உதள
நெடுந் தாம்பு தொடுத்த குறுந்தறி முன்றில்" (பெரும்.148-152)**

என்ற வரிகளில், முல்லை நில மக்கள் குடியிருந்த குடிசைகள் குறுகிய கால்களைக் கொண்டிருந்தன. ஆடுகள் தின்பதற்கு ஏதுவாக தழைகளைன் கட்டியிருந்தனர். இவர்கள் மூங்கிலால் ஆன படலை கதவாக அமைத்திருந்தனர். மேலும் வரகுப் பயிர்களின் தாள்கள் மற்றும் வைக்கோல் இவைகள் சேர்த்து மூங்கில் கழிகளோடு கூரை வேய்ந்திருந்தனர். அதனுள் இடையர்களின் முதியவர் தோலினை படுக்கையாக விரித்து படுத்திருப்பார். அவரது அருகே முன்றில் பகுதியில் ஆடுகள் நீண்ட கயிற்றால் கட்டப்பட்டிருக்கும். என்பதை முல்லை நில மக்களின் வாழ்வியலைச் சுட்டுகிறது.

**கோவலர் ஒலியெழுப்புதல்**

**"மடிவாய்க் கோவலர்....." (பெரும்.166)**

என்ற வரிகளில் ஆடு மாடுகளை ஓட்டுவதற்கு கோவலர்கள் ஒலியெழுப்பதைக் (சீழ்க்கை ஒலி) கடைப்பிடித்திருந்தனர்.

**முல்லை நில ஆயர் தொழில்**

ஆயர் மகளிர் பானைக் குடங்களில் பாலை வைத்து சிறிது மோர்த் துளிகளை உறையாக விடுவார்கள். அம்மோர்த்துளிகள் பாலோடு இணைந்துக் கெட்டித் தயிராக மாறியது. கெட்டித்தயிராக மாறியதை ஆயர் மகளிர் விடியற்காலைப் பொழுதில் புலி

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

முழக்கம் செய்வது போன்று மத்தினால் கடைவார்கள். கடைந்த மோரையும், வெண்ணெயையும் பானையில் எடுத்துக்கொண்டு விற்பதற்குச் சென்றார்கள். இதனை,

**“மடப்பா லாய்மகள் வள்ளுகிர்த் தெறித்த**
**குடப்பாற் சில்லுறை போலப்” (புறம்.276:5-6)**
**“புலிக்குரல் மத்தம் ஒலிப்ப வாங்க**
**…….நாண்மோர் மாறு நன்மா மேனிச்” (பெரும்.156-160)**

என்ற பாடலடிகளால் காணலாம்.

**“ஆடு, மாடு மேய்த்தலைத் தொழிலாகக் கொண்ட இம் மக்கள் ‘ஆயர்’ எனவும், ‘இடையர்’ எனவும், ‘கோவலர்’ எனவும் படுவர்.”[5]**

**முல்லை நில மகளிர் மலர்களைச் சூடிக்கொள்ளுதல்**

**“………நம்**
**புல்லினத்து ஆயர் மகன்சூடி வந்ததோர்**
**முல்லை ஒரு காழும் கண்ணியும், மெல்லியால்!.” (கலி.115:3-5)**

என்ற பாடல்வரிகளில் தலைவி, தோழியிடம் ஆயர் குலத்தைச் சார்ந்த நம் தலைவன் சூடிவந்த மாலையினை நான் பெற்று கூந்தலில் தொடுத்துக்கொண்டேன் எனக் கூறுவதாக அமைந்துள்ளது.

**முல்லை நில மக்களின் இசைக் கருவிகள்**

**“கறவைப் புல்லினம் புறவுதொறு உகள,**
**குழல்வாய் வைத்தனர் கோவலர்…….”(அகம்.355:5-6)**

என்ற பாடல் வரிகளில் மதுரை தமிழ்க்கூத்தன் கடுவன் மள்ளனார் பால் கறக்கும் பசுக்கூட்டங்கள் தன் கன்றுகளோடு ஓடி வருவதற்காக ஆயர்களின் தலைவர் கோவலர் குழலினை வாயில் வைத்து ஊதுவதாகக் காட்டியுள்ளார்.

மேலும், காட்டில் தன்னுடைய பசுக்கள் கன்றுகளோடு தங்கியிருக்கின்ற இடையன் ஒருநாள் சில கட்டைகளை வைத்து தீயை மூட்டுகிறான். அந்தத் தீயினால் துளையிடப்பட்ட புல்லாங்குழலில் பாலைப்பண் பாடுவதை வெறுத்து, குமிழமரக் கொம்பைக் குழிபோலக் குடைந்து அதில் மரல்மர நாரினை நரம்பாகக் கட்டிய வில் போன்று வளைத்த வில்யாழில் விரல் வைத்து மீட்டிக் குறிஞ்சிப் பண் பாடுவான். இதனை,

**“கன்று அமர் நிரையொடு கானத்து அல்கி**
**அம் நுண் அவிர் புகை கமழக் கைம் முயன்று**
**ஞெலிகோல் கொண்ட பெருவிறல் ஞெகிழிச்**
**செந்தீத் தோட்ட கருந்துளைக் குழலின்**
**இன் தீம்பாலை முனையின், குமிழின்**
**புழல் கோட்டுத் தொடுத்த மரல் புரி நரம்பின்**
**வில் யாழ் இசைக்கும் விரல் ஏறி குறிஞ்சிப்” (பெரும்.176-182)**

என்ற வரிகளின் மூலம் அறியமுடிகின்றன.

**ஏறுதழுவுதல்**

சங்க காலத்தில் வீரத்தில் சிறந்த ஒருவனுக்கு தன் மகளை மணமுடித்துத் தருவது கடமையாக இருந்திருக்கின்றது. முல்லை நிலத்து ஆயர் மக்கள் தம் வளர்ப்பான ஏற்றைத் தழுவிய வீரனுக்கு மணம் முடித்துக் கொடுப்பதனை வழக்கமாகக் கொண்டிருந்தனர். இதனை,

**“எல்லா இஃதுஒன்று கூறு, குறும்பு இவர்**
**புல்லினத் தார்க்கும், குடஞ் சுட்டவர்க்கும், எம்**
**கொல்லேறு கோடல் குறை எனக் கோவினத்தார்**
**பல்வேறு பெய்தார் தொழூஉ” (கலி.107:1-4)**

E-ISSN: 2581-7140

Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

என்ற கலித்தொகை வரியில், தோழியைப் பார்த்துக் கூறுவதாக, ஏடி குறும்பிடத்தே மேய்க்கின்ற ஆட்டிடையர்க்கும், குடம்பால் கரக்கும் என்று சுட்டிக் கூறும் நற்பசுக்களை உடைய பசு இடையர்க்கும் கோவினத்தை உடைய நம் உறவினர் "எம்முடைய கொல் ஏறுகளைத் தழுவுதலே செய்யக் கடவதொரு காரியம்" என்று பல ஏறுகளைத் தொழுவத்துள் புகவிட்டனர் என்று தலைவி கூறுவதில் ஆட்டிடையர், மாட்டிடையர் என்ற இரு பிரிவினர் இருந்தனர் என்பதை காணமுடிகிறது.

**ஆயர்** (மேய்த்தல் தொழில் புரிந்தோர்)



**ஆட்டினத்து ஆயர்** (ஆடு மேய்த்தல் தொழில்) **இடையர்**

**மாட்டினத்து ஆயர்** (மாடு மேய்த்தல் தொழில்) **கோவலர்**

ஏறுகளை நேருக்கு நேர் நின்று அடக்குவதற்கு பயம் கொள்ளும் ஆயனை எந்த ஆய்ச்சியும் விரும்பமாட்டாள். மறுபிறவிலும் விரும்பமாட்டாள். ஏற்றைக் கண்டு அஞ்சுவதும் ஆய்ச்சியின் தோளை விரும்புவதும் ஆகிய இவை இரண்டும் இணைந்து நிகழ முடியாதவை இதனை,

**"கொல்லேற்றுக் கோடஞ்சு வானை மறுமையும்**
**புல்லாளே ஆய மகள்" (கலி.103:63-64)**

என்ற கலித்தொகை பாடலடிகள் கூறுகிறது.

**முடிவுரை**

- தொல்காப்பியத்தில் முல்லைத்திணை பற்றியும், முல்லை நிலக் கடவுள் - திருமால், முல்லை நில மக்கள் - ஆயர், முல்லை நில மக்களின் ஒழுக்கம் - இருத்தல் போன்றவையும் இடம்பெற்றுள்ளதை காணமுடிந்தன.
- சங்க இலக்கியத்தில் காணப்படும் முல்லைத் திணையில் தொழில்கள், பொழுதுபோக்குகள், விளையாட்டுகள் போன்றவை இருந்துள்ளதை அறியமுடிந்தன.
- முல்லைத்திணை மக்களை ஆயர், ஆய்ச்சியர் என்று அழைப்பர்.
- முல்லைத்திணை தொழில்களான மோர் விற்றல் பற்றியும், ஆடு, மாடு மேய்த்தல் பற்றியும் குறிப்பிட்டுள்ளதைக் காணமுடிந்தன.
- முல்லை நில மக்கள் 'இருத்தல்' ஒழுக்கத்தைக் கொண்டிருந்தனர். தலைவன் பொருள் தேடச் சென்றபிறகு அவனுக்காக தலைவி காத்திருத்தலை (ஆற்றியிருத்தல்) என இத்திணை வழங்குகிறது.
- சங்க இலக்கியங்களில் காணப்படும் முல்லைத்திணைப் பற்றிய வாழ்வியல் கட்டமைப்பினை கூறுவதாக இக்கட்டுரை அமைந்துள்ளது.

**சாண்றென் விளக்கம்**

1. ஞா. மாணிக்கவாசகன், சிலப்பதிகாரம் (காடுகாண் காதை) - பா.வரி:64-66
2. நா. சுப்புரெட்டியார், தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை - ப.எ.33
3. இரா. இளங்குமரனார், அறிமுக நூல் - 1 தொல்காப்பியம் - ப.எ.18
4. கழகப் புலவர் குழுவினர், கழகத் தமிழ் அகராதி - ப.எ.779
5. சு. வித்தியாநாதன், தமிழர் சால்பு – ப.எ.139

E-ISSN: 2581-7140

Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

**பார்வை நூல்கள்**

1. மாணிக்கவாகன், ஞா. *சிலப்பதிகாரம் தெளிவுரை.* உமா பதிப்பகம், சென்னை – 01.
2. சுப்புரெட்டியார். *தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை.* ந.பழனியப்பா பிரதர்ஸ், சென்னை-14.
3. வித்தியானந்தன். தமிழர் சால்பு. சு.குமரன் புத்தக நிலையம், சென்னை.
4. கழகப் புலவர் குழுவினர். *கழகத் தமிழ் அகராதி.* திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட், சென்னை – 18.
5. இளங்குமரனார், இரா. *அறிமுக நூல் - 1 தொல்காப்பியம்.* புரட்சிக்கவிஞர் மன்றம், மதுரை – 01.
6. சண்முகம் பிள்ளை, மு. *சங்கத் தமிழர் வாழ்வியல்.* உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை.
7. மாணிக்கவாகன், ஞா. *பத்துப்பாட்டு மூலமும் விளக்கமும்.* உமா பதிப்பகம், சென்னை – 01.
8. செயபால், இரா. *அகநானூறு மூலமும் உரையும் பகுதி (1, 2).* நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பி.,லிட், சென்னை.
9. தமிழமுதன். *கலித்தொகை மூலமும் உரையும்.* சாரதா பதிப்பகம், சென்னை.
10. கௌமாரீஸ்வரி. எஸ். *தொல்காப்பியம் பொருளதிகாரம் இளம்பூரணார் உரை.* சாரதா பதிப்பகம், சென்னை.

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
International Journal of Tamil Language and Literary Studies

A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019
Available at: www.ijtlls.com

# குறிஞ்சித்திணையின் தொழில்கள்

## Occupation in Kurinji Land

**முனைவர் தி.மணிமொழி,** உதவிப்பேராசிரியர்,
தமிழாய்வுத் துறை, காவேரி மகளிர் கல்லூரி, திருச்சிராப்பள்ளி.

**Abstract**

*Life appeared after the world appeared. Tamils are the most common species of origin. The Tamils lived in harmony with nature. By treating plants as their species and other life as their own. There are no works against nature which can be traced through Tamil literature. The Tamils lived their lives by naming and conforming to the natural environment, in accordance with its innate nature. The mountain of the hill is the first place in the land of the ancient people. Though many scholars have sung on the theme, Kabilar is most impressed by the land of the Kurinji Land and its bountiness. Kabilar sand on the whole land, nature of the hills, rainforests, plants, animals, etc. From the songs sung by such people, we can get news on the occupation such as pig hunting, cattle throwing, cropping, crop rotation, mountain farming, milking, climatic equipment, baiting and trading have been revealed. The purpose of this article is to examine the occupation of the Kurinji land.*

**Keywords:** Sangam Tamil People and environment, Kabilar Songs, Work in Kurinji Land

உலகம் நிலம், நீர், தீ, வளி, வான்வெளி ஆகிய ஐம்பூதங்களால் ஆனது. இயற்கை பல்வேறு வடிவங்களாய் புவியில் பரிணமித்துள்ளது. மலை, காடு, ஆறு, சமவெளி, கடல் மணல்வெளி என்றெல்லாம் பரந்து விரிந்து இப்புவிப்பரப்பு அமைந்துள்ளது. பழந்தமிழர் இயற்கையின் புரிதலோடு வாழ்வினை மேற்கொண்டனர். உலகம் தோன்றிய பிறகு உயிர்கள் தோன்றின. தோன்றிய உயிர்களின் தொன்மை இனம் தமிழ் இனம். இயற்கையோடு இயைந்த வாழ்வை மேற்கொண்டுள்ளது தமிழ் இனமாகும். தாவரங்களைத் தன்னுடைய இனமாகவும் பிற உயிர்களை தமக்கு இணையாகக் கருதி செயல்பட்டும், இயற்கைக்கு எதிராக ஒரு போதும் செயல்படாத பழந்தமிழரின் வாழ்வியலை இலக்கியத்தின் வழியாக அறியலாம். இயற்கையோடு அமைந்த நிலத்தினை அதற்குரிய இயல்புக்கு ஏற்ப பகுத்து, அந்தந்த சூழலுக்கு ஏற்ப பெயரிட்டும் தொழில்புரிந்தும் தமிழர் தம் வாழ்வினை மேற்கொண்டனர். அந்த வகையில் பழந்தமிழரின் நிலப்பகுப்பில் முதன்மையாய் அமைவது மலையும் மலை சார்ந்த குறிஞ்சியாகும். குறிஞ்சித் திணையை புலவர்கள் பலர் பாடியிருப்பினும் குறிஞ்சி நிலத்தால் மிகுதியாக ஈர்க்கப்பட்டு அதிகமாக குறிஞ்சியைப் பாடியவர் கபிலர் ஆவார். குறிஞ்சி நிலத்தின் இயற்கைகளான மலைப்பகுதிகள், மழைப்பொழிவுகள், தாவரங்கள், விலங்குகள் மக்கள் வாழ்க்கை என்று அந்நிலத்தை முழுவதுமாக பாடி திளைத்தவர் கபிலர். அத்தகைய குறிஞ்சிக்கபிலர் பாடிய பாடல்களிலிருந்து அந்நிலத்தில் மேற்கொள்ளப்படும் தொழில்களாக பன்றி வேட்டை, கவண் எறிதல், பயிர்த்தொழில், எரிஇடுதல், பயிர்ச் சுழற்சிமுறை, மலைச்சரிவில் பயிரிடுதல், தினைக்காவல், கிளிகடி கருவிகள், பரண்அமைத்தல், வாணிகம் ஆகிய தொழில்கள் அமைகின்றன. குறிஞ்சி நிலத்தின் தொழில்களை மட்டும் ஆராய்வது இங்கு நோக்கமாகும்.

### வேட்டைத் தொழில்

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

பண்டைய மனிதன் முதன்முதலாக வேட்டையாடுதல் மேற்கொண்டிருக்க வேண்டும். விலங்குகள் வளர்த்தல், பயிரிடுதல் முதலியவற்றைவிட வேட்டைத் தொழில் மிகப் பழமையானதாகும். இத்தகைய பழமையான தொழிலையும் குறிஞ்சி நிலத்தார் அறிந்திருந்தனர் என்பதை கபிலர் தம் பாடல்களில் குறிப்பிட்டுள்ளார். குறிஞ்சி நில மக்கள் வேட்டையாடுதலை பெரிதும் விரும்பினர். உணவிற்காகவும் பொழுதுபோக்கிற்காகவும் வேட்டம் புரிந்தனர். அவர்கள் மூங்கில் வளைதலையும் அது கடுவிசையுடன் மேலெழும்புதலையும் கண்டு, வில்லை வளைத்து அம்பு செலுத்தும் அறிவினை கற்றிருந்தனர். நிலத்திலிருந்தும் மழையிலிருந்தும் அம்பினை எறிந்து விலங்குகளைக் கொன்றனர். வேட்டைக்குச் செல்லும்போது வேங்கை மலர்களைச் சூடிக் கொண்டு தோளில் வில்லை மாட்டி பலாப்பழத்தில் விளைந்த தேனைப் பருகி சீழ்க்கை ஒலியோடு செல்வதை அகநானூற்றில் கபிலர் காட்சிப்படுத்தியுள்ளார்.

**"பூங்கண் வேங்கைப் பொன்னிஇணர் மிலைந்து**
**வாங்கு அமை நோன் சிலை எருத்தத்து இரீஇ**
**தீம்பழப் பலவின் சுளைவிளை தேறல்**
**வீளைஅம்பின் இளையரொடு மாந்தி**
**ஓட்டு இயல் பிழையா வயநாய் பிற்பட**
**வேட்டம் போகிய குறவன் காட்ட"** (அகம் 182)

என்ற இப்பாடலில் வேங்கை சூடியும், தோளில் வில்லை மாட்டியும், தேனைப் பருகியும் இளைஞன் ஒருவன் வேட்டை நாய்கள் பின்வரச் சென்றான். அப்போது பன்றி ஒன்று மல்லிகை புதரின் கீழே மறைந்து நின்றது. அந்தப்பன்றியை அவன் கொன்றான் என்பவற்றை நோக்கும் பொழுது வேட்டைத் தொழிலை விரும்பி செய்தனர் குறிஞ்சிநில மக்கள் என்பது புலப்படுகிறது. மேலும், பழந்தமிழர் வீரம் உடையவர்களாகவும் திகழ்ந்ததை அறியலாம்.

**பன்றி வேட்டை**

தன்னை எதிர்க்கும் விலங்குகளையும், மனிதர்களையும் திருப்பித் தாக்கி துரத்துதல், காற்றினும் கடுவி விரைதல் முதலியன பன்றிக்குரியப் பண்புகளாகும்.

**"மென்தினை மேய்ந்த தறுகட் பன்றி" (ஐங்.261)**

என்ற பாடலில் மென்மையான தினையை மேய்ந்த அஞ்சாமையுடைய பன்றி என்பதன் வழி அறியலாம். கானவர் பன்றியின் நெஞ்சினை நோக்கி குறிவைத்து அம்பினை செலுத்தி வீழ்த்துவர். குழியில் பன்றி விழவும், குறவர் அதனைக் கொல்ல முற்படுவர். பன்றியின் அஞ்சாமையையும் துணிவையும் எண்ணி வேட்டுவர் அதனைப் போற்றி வியந்த செய்தியை ஓர் அகநானூற்றுப் பாடலில் கபிலர் குறிப்பிடுகிறார்.

**"தறுகட் பன்றி நோக்கி கானவன்**
**குறுகினன் தொடுத்த கூர்வாய்ப் பகழி**
**முடைசெலல் முன்பின் தன்படை செலச் செல்லாது**
**அருவழி விலக்கும்எம் பெருவிறல் போன்மென**
**எய்யாது பெயரும் குன்ற நாடன்"** (அகம் - 248)

என்ற இப்பாடலில் ஒரு காட்டுப் பன்றி வேட்டைக்காரன் ஒருவன் வருவதைப் பார்த்து, பெண் பன்றியையும் குட்டிகளையும் தமிழ் இனத்தையும் கூட்டிக்கொண்டு அவ்விடத்தை விட்டு நீங்கியது. அடுத்து, ஒரு புதரின் தொடக்கத்தில் வேட்டைக்காரன் வருவதைப் பார்த்து நின்றது. அந்தப்பன்றியை குறி பார்த்தான் கானவன். அஞ்சாமை உடைய பன்றி அவனை எதிர்த்துப் பார்த்தது. அது போர்க்காலத்தில் உள்ள வலிமை கொண்ட தலைவனைப் போல இருக்கிறது என்று நினைத்து, அதன்மேல் அம்பு எய்யாமல் திரும்பினான் என்பதன் மூலமாக பன்றியின் துணிச்சல் வெளிப்படுகிறது.

இரவில் பன்றி தினையை கவர வருமென எண்ணி குறவர் அவற்றைப் பற்றுதற்கு குறிவைத்து காத்திருப்பர். கானவர் பன்றியின் மார்பில் அம்பினைச் செலுத்தி அதன் நெறிகெட

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

செய்யும் திறன் பெற்றிருந்தனர். பசிய தசை வெளிப்படும் அளவிற்குப் பல அம்புகளை எய்து பன்றியைக் கொன்று அதை ஒரு நற்றிணைப் பாடல் காட்டுகின்றது.

**"பிணர்ச்சுவற் பன்றி தோல் முலை பிணவொடு**
**கணைக்கால் ஏனல் கைம்மிகக் கவர்தலின்**
**கல்லதர் அரும்புழை அல்கி கானவன்**
**வில்லின் தந்த வெண்கோட்டு ஏற்றை"** (நற் - 336)

என்ற பாடலில் கானவன் பன்றியை வேட்டையாடிய விதம் பற்றி கபிலர் குறிப்பிட்டுள்ளார். ஆண் பன்றியும் பெண் பன்றியும் தினைக்கதிரை தின்னும் என்பதை அறிந்த கானவன் அரிய வழியிடம் சென்று தங்கிப் பதுங்கித் தன் வில்லினால் அம்பெய்தி ஆண் பன்றியை கொல்வான் என்பதிலிருந்து வேட்டையாடுவதில் வீரம் உடையவர்களாகவும் விருப்பமுடையவர்களாகவும் குறிஞ்சி நில மக்கள் இருந்ததை அறிய முடிகிறது.

**கவண் எறிதல்**

வில், அம்பு ஆகிய இவை தவிர பழந்தமிழனுக்கு பிற வேட்டை கருவிகளும் தேவைப்பட்டன. உணவைக் கிழித்து உண்ணுதற்குக் கற்களைப் பயன்படுத்திய மனிதன், விலங்குகளைக் கொல்வதற்கும் கற்களைப் பயன்படுத்தினான். கவண் எறிதலில் குறிஞ்சி மக்கள் திறமிக்கவர் என்பதை சங்க நூல்கள் உணர்த்துகின்றன.

பரணில் இருந்து வீசப்பட்ட கவனோசை, யானைக் கூட்டத்தை ஓடச் செய்தும், புலியினை நடுங்கச் செய்தும் இடியென மலை முழுவதும் கேட்குமாறு எதிரொலித்தது.

குறவர் தினை கவர வந்த யானையை விரட்ட எறிந்த கல், வேங்கைப் பூவினைச் சிதறச் செய்து, பலாவினை உடைத்து, அங்கிருந்த தேனிறாலைக்கிழித்து, மாவடுக்களை உழுக்கி, வாழை மடல் கிழித்து பலாவின் பழத்துள் சென்று தங்கிற்று என்று கூறுவதன் மூலம் கடுவிசையுடன் கவண் எறியும் திறத்தினைக் கபிலர் புலப்படுத்துகின்றார்.

**"கடுவிசை கவணையில் கல்கை விடுதலின்**
**இறுவரை வேங்கை ஒள்வீ சிதறி**
**ஆசினி மென் பழம் அளிந்தவை உதிரா**
**தேன் செய் இறாஅல் துளைபடப் போகி**
**நறுவடி மாவின் பைந்துணர் உழக்கி**
**குலையுடை வாழை கொழு மடல் கிழியா**
**பலவின் பழத்துள் தங்கும் மலைக்கெழு வெற்பனை"** (கலி. 5)

என்ற பாடலின் வழி பலம் தமிழனின் கவண் எறியும் ஆற்றல் எத்துணை வலிமை மிக்கதாக விளங்கிற்று என்பதை உணரலாம்.

**பயிர்த் தொழில்**

பழந்தமிழர் வேளாண்மை பற்றிய அறிவியல் அறிவை மிகுதியாகப் பெற்றிருந்தனர். இயற்கையிலேயே குறிஞ்சி நிலத்தில் பயிர் வளம் செழித்து விளங்கும். நில்லாது பொழியும் மழையாலும் பெருகும் அருவி வளத்தாலும் பயிர்வளம் பொங்குதல் இயல்பு. உழவர் உழாமலே மிகபயிர் உடையதாக திகழ்ந்தது குறிஞ்சி நிலம். தினைப் பயிரிடுதலும் நெல் விதைத்தலும் பிற வகைகளை பயிரிடுதலும் குறிஞ்சி வாழ்நரின் வேளாண்மை நெறியானதைக் கபிலர் குறிப்பிடுகிறார். முலை வளத்தை ஆங்கு சிறப்புற விளையும் பயிரினத்தால் குறிப்பிட்டனர்.

**"கறி வளர் சிலம்பின் கடவுட் பேணி"** (ஐங் - 243)

என வரும் பாடல் வரியில் மிளகுக் கொடி வளர்கின்ற செய்தியை கபிலர் குறிப்பிட்டுள்ளார்.

**"சாரற் புறத்த பெருங்குரற் சிறுதினைப்"** (ஐங் - 282)

மலைச்சாரலில் தினைகள் விளைந்து பெரியக் கதிர்களாக வளர்ந்துள்ளன என்று கூறுவதில் தினைப் பயிரிட்டதை அறிய முடிகிறது. குறிஞ்சி நிலத்தில் பலவகை உணவினை பெற்றதை இதன் வாயிலாக அறிய முடிகிறது.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

**எரியிடுமுறை**

பழந்தமிழ் மக்கள் சந்தன மரத்தை எரித்து, அதன் புகையைக் குறிஞ்சி நிலம் முழுக்க பரப்பியிருந்தனர்.

**"குன்றக் குறவன் சாந்த நறும்புகை**
**தேம் கமழ் சிலம்பின் வரையகம் கமழும்**
**கானக நாடன் வரையின்"** (ஐங் - 253)

என்ற இப்பாடலில் 'குறிஞ்சி நிலத்தில் வாழும் குறவன் சந்தன மரத்தை வெட்டிச் சுடுவதால் எழுகின்ற சந்தன மணப்புகை தேன்மணம் கமழும் பக்கமலைக்களைக் கொண்ட மழைச்சாரல் முழுவதும் பரவி மணக்கின்ற மலைநாடு' என்று கூறுவதிலிருந்து இச்செய்தியை அறியலாம்.

**பயிர்ச்சுழற்சி முறை**

தரிசாக விட வேண்டிய நிலத்தில் உணவுப் பொருள்களை மாற்றிப் பயிரிடுவதால் நிலமானது, இழந்த மண் வளத்தினை மீண்டும் பெறும். இதனால் பயிரின் வளம் செழிக்கும் என்பதை பழந்தமிழர் அறிந்திருந்தனர். திணையினை மட்டுமே விளைவிக்காமல் கதிர்களை அறுவடை செய்தபின், தாளோடு நிலத்தை சிறிது நாள் விட்டு வைத்து, அதில் அவரை அல்லது பருத்தி முதலியவற்றைப் பயிரிட்டனர்.

பயிரிடுங்கால் நாற்றுகளையோ அல்லது விதைகளையோ நெருக்கமாக அமைக்காது காற்றின் ஊடுருவல் வேண்டியும் ஒளி வேண்டியும் தள்ளி நடுவது வழக்கமாக இருந்தது.

**"சிலவித்து அகலஇட்டென பலவிளைந்து"** (நற் - 209)

என்ற தொடரால் அறியலாம். நிலத்தில் உழுது அதைவிட எரு விடுதல் சிறந்தது. பயிரிட களை எடுப்பதும் நீர்பாய்ச்சுதலைவிடக் காவல் காத்தல் நல்லது என்பதை வள்ளுவர்.

**"ஏரினும் நன்றால் எருவிடுதல் கட்டபின்**
**நீரினும் நன்றதன் காப்பு"** (குறள் - 1038)

கலப்பையின் கொழுமுகம் நிலத்தில் அழுந்துமாறு நன்கு உழுதனர். கேழல் தன் கோட்டம் ஆழமாக கீறிய மண்ணில் குறவர் உழாமலே பயிரிட்டனர்.

**"கேழல் உழுத கிளர்ந்த எருவை"** (ஐங் - 269)

இப்பாடலில் பன்றிகள் கிழங்கு தோண்டுவதற்கு முற்பட்ட நிலத்தில் உழுதது போன்ற தோற்றம் தரும் புன்செய் நிலத்தில் கோரைப் புற்கள் வளர்ந்துள்ளன.

**"கிழங்கு அகழ் கேழல் உழுத சிலம்பில்**
**தலைவிளை கானவர் கொய்தனர் பெயரும"** (ஐங் - 270)

இப்பாடலில் கிழங்குகளை அகழ்ந்தெடுக்கும் பன்றிகள் தம் கொம்பினால் உழுத புழுதியில் கானவர் விதைத்து விளைவித்த முதல் விளைச்சலைப் பறித்துக் கொணர்வர் என்று கூறுவதன் மூலம் பன்றியானது குறிஞ்சி நிலத்தவர் பயிரிடும் முறை உதவியாக இருந்தது தெரிகிறது.

**மலைச்சரிவில் பயிரிடல்**

மலைச்சரிவுகளில், இயற்கையில் அமைந்த இடங்களிலோ அல்லது வேண்டியவாறு பள்ளம், மேடு இவற்றை அடுத்தடுத்து உண்டாக்கியோ அவற்றின் படிகளில் பயிரிடுவர். மலைகண் ஒடிவரும் அருவிநீரைப் பயன்படுத்தி பயிரினை விளைவிப்பர். குறிஞ்சி நிலத்தவர் அகில், மூங்கில் முதலியவற்றை மலைச்சரிவுகளில் பயிரிட்டதைச் சங்க நூல்கள் உணர்த்துகின்றன.

நிலத்தை உழுவதற்கு எருதுக்களைப் பயன்படுத்தினர். யானைக் கொம்பு உலக்கையாகவும் பாறைக்குழி உரலாகவும் சேம்பின் இலை சுளகாகவும் பயன்பட்டன.

**"முகை வளர் சாந்து உரல் முத்தார் மருப்பின்**
**வகைசால் உலக்கை வயின்வயின் ஓச்சி"** (கலி. 4:4-5)

யானைக் கொம்பு உலக்கையாக பயன்படுத்தியமை அறியலாம்.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

**"கோடு உலக்கையாக நல் சேம்பின் இலை சுளகா**
**ஆடுகழை நெல்லை அறை உரலுள் பெய்து"** (கலி. 5:2-3)

இப்பாடலில் மூங்கில் நெல்லை பாறை உரலில் இட்டு யானையின் தந்த உலக்கையால் குற்றிச் சேம்பின் இலைகளாகிய சுளவால் பயன்படுத்தியமைக் கூறப்பட்டுள்ளது.

மழை வேண்டி இறைவனைத் தொழுதனர். நல்ல நாள் பார்த்து விதைத்தனர். முதல் விளைச்சலை இறைவனுக்கு படைத்த பின்னர் நல்ல நாளில் அதனை உண்ணத் தொடங்கினர். இதுபோன்ற சில வழக்கங்களை குறிஞ்சி மக்கள் மேற்கொண்டனர்.

**தினைக்காவல்**

குறிஞ்சி நிலத்தில் தினைப்புனம் காத்தல் என்பதை சங்க நூல்கள் பெரிதும் தெரிவிக்கின்றன. குறிஞ்சி மக்கள், கதிர்களை கிளி, யானை முதலியன கவராதவாறு ஓட்டும் பணியை மேற்கொண்டனர். தினையைக் கவர வரும் விலங்கினங்கள் யானையும் கேழலும் ஆகும். பறவைகளில் கிளிகளும் குருவி இனங்களும் மயில்களும் கூட்டம் கூட்டங்களாக படிந்து தினை உண்ணும். விலங்குகளின் மீது அம்பு எய்தியும், பறவைகளை குளிர், தட்டை, முறை முதலிய கருவிகளால் விரட்டியும் தினைக் காவல் புரிந்தனர்.

**"கணைவிடு புடையூக் கானம் கல்லென**
**மடிவிடு வீளையர் வெடிபடுத்து எதிர"** (குறி.பா.160-161)

என்ற பாடலில் அம்பு எய்தி யானையை விரட்டிய செய்தி கூறப்பட்டுள்ளது. தினை முற்றத் தொடங்கும் காலத்தில் தலைவியும் தோழியும் தினைப்புனம் சென்றதை கபிலர் தம் பாடலில் கூறியுள்ளார்.

**"நல்கோட் சிறுதினைப் படுபுள் ஓப்பி"** (குறி.பா.160-161)

என்ற பாடலில் விளைந்த தினைப் பெருங்கதிர்களை கிளிகள் உண்ண வருகின்றன. அவற்றை ஓட்டிவிட வேண்டும். அதனால் தானும் தலைவியும் தினைப்புனம் காக்க சென்றதாகத் தோழி குறிப்பிடுகிறாள்.

கிளையை ஓட்டுவதற்கு மகளிர் பாடும் பாடல் கிளிகடி பாடல் எனப்படும். ஓரிடத்தே அமர்ந்தும் எழுந்து சென்றும் கிளியே விரட்டுதல் பழக்கமாகும். இடையிடையே தெளிந்த ஓசையைப் பலகாலும் எழுப்பி காவல் புரிதலும் உண்டு.

**"புன்புல மயக்கத்து உழுத ஏனல்**
**பைம்புற சிறுகிளி கடியும் நாட"** (ஐங் - 283)

என்ற பாடலில் புன்செய் நிலத்தை கானவர் உழுது விதைத்து வளர்த்த தினைப்பயிரை தின்ன வரும் பச்சை நிற சிறிய கிளிகளை விரட்டி காவல் புரிந்த செய்தி குறிப்பிடப்பட்டுள்ளது.

**"………………..யானைக்**
**கால்வல் இயக்கம் ஒற்றி நடு நாள்**
**வரையிடைக் கழுதின் வன்கைக்கானவன்**
**கடுவிசைக் கவணின் எறிந்த சிறுகல்**
**உடுஉறு கணையின் போகி"** (அகம் - 292)

என்ற பாடலில் தினையை உண்ண வரும் யானையை அம்பு எய்தி விரட்டிய செய்தியையும் கபிலர் கூறியுள்ளார்.

**கிளிகடி கருவிகள்**

தழல், குளிர், தட்டை முதலியவை கிளிகடி கருவிகள் ஆகும். தழல் என்பது சுற்றுவதால் ஓசை உண்டாகும் கருவி. பிரம்பு அல்லது குரல் கொடியினால் இதனைப் பின்னுவர். தட்டை என்பது மூங்கிலைக் கொண்டு செய்யப்படும் கருவியாகும். தழல், தட்டை, குளிர், கவண் போன்ற கருவிகளால் முறையாகத் தட்டி ஒலியெழுப்பி கிளியை ஒட்டியதாக கபிலர் குறிஞ்சிப்பாட்டில் குறிப்பிட்டுள்ளார்.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

**"தழலும் தட்டையும் குளிரும் பிறவும்**
**கிளிகடி மரபின ஊழ்ஊழ் வாங்கி"** (குறி.பா.43-44)

என்ற பாடலின் வழி பறவைகளை விரட்டும் கருவிகள் பற்றிய செய்திகள் குறிப்பிடப்படுகின்றன. குளிர் என்பது வீணை போல் கட்டுவதாகும். இழுத்துவிடின் விண்ணென ஓசை உண்டாகும்படி மூங்கில் பட்டைகளால் செய்யப்பட்ட கருவிகள் ஆகும். இத்தகைய கருவியைக் கொண்டு தலைவி கிளியை ஓட்டினாள்.

**"படுகிளி கடியும் கொடிச்சிகைக் குளிரே**
**இசையின் இசையா இன்பா னித்தே"** (குறி.பா.28-29)

என்ற இப்பாடலில் கபிலர் குளிர் என்ற இசைக்கருவியைக் கொண்டு குறிஞ்சி நில மக்கள் கிளியை ஓட்டிய செய்தியைக் குறிப்பிட்டுள்ளார்.

**பரண் அமைத்தல்**

தினைப்புனம் காப்போர் உயரத்திலிருந்து காவல் புரிதற்கு பரண் அமைத்தனர். ஆசினிப்பலா, வேங்கை ஆகிய மரங்களின் மீது பரண் அமைப்பது வழக்கம். யானையும் புலியும் எட்ட முடியாத உயரத்தில் பரண் அமைத்த செய்தியைக் குறிஞ்சிப்பாட்டு குறிப்பிடுகின்றது.

**"புலிஅஞ்சு இதணம் ஏறிஅவண"** (குறி.பா.41)

புலி வர அஞ்சும் உயரத்தில் பரண் அமைத்து, அதன்மேல் ஏறி காவல் புரிந்ததாகக் கூறப்படுகிறது.

சந்தனக் கட்டையால் பரண் அமைத்தல், மணம், நெடுநாள் அழியாத தன்மை முதலிய தன் நிலைகளை அப்பரண் பெறுமென குறிஞ்சி மக்கள் அறிந்திருந்தனர். குளிர்காலங்களில் பரண்மீதிருந்து தீக்கொளுத்தி காவல் புரிவர். குளிர்காயும் பொருட்டு நெருப்பு மூட்டுவது வழக்கம். இச்செய்தி குறுந்தொகையில் குறிப்பிடப்படுகிறது.

**"ஏனல்அம் சிறுதினை காக்கும் காக்கும் சேணோன்**
**ஞெகிழியின் பெயர்ந்த நெடுநல் யானை**
**மீன் படு சுடர் ஒளி வெரூவும்**
**வரன்தோய் வெற்பன் மணவா ஊங்கே"** (குறுந்.357)

என்று கபிலர் குறிப்பிட்டுள்ளார். இப்பாடலில் பரண் மேல் இருக்கும் குறவன் கொளுத்திய கொள்ளிக்கட்டையைக் கண்டு அஞ்சி ஓடியும், வானத்தில் எரி நட்சத்திரம் எரிந்து விழும் என்றும் அஞ்சிய யானை வாழ்கின்ற மலை என்று கூறுவதிலிருந்து பரண்மீதிருந்து தீக்கொளுத்தி காவல் புரிந்த செய்தியை அறிய முடிகிறது.

**வாணிகம்**

பொருளில்லாதான் வாழ்க்கை பொலிவிழக்கும் என்பது பண்டைய மக்கள் உணர்ந்து வந்த உண்மையாகும். எனவே, பொருளைப் பெற்றுச் சிறக்க மக்கள் வாணிகத்தில் ஈடுபட்டனர். ஒரு நாட்டின் செல்வத்திற்கு வணிக சிறப்புமும் ஒரு காரணம் எனலாம். பண்டைய தமிழரின் வாணிக வளர்ச்சி தங்குதடையின்றி வளர்ந்தது. பிறர் பொருளை தம் பொருள் போல் கருதி போற்ற வேண்டும் என்பதும் தமிழரின் கொள்கையாகும். பட்டினப்பாலை வணிகர் இயல்பைப் பற்றி குறிப்பிடுகிறது.

**"கொள்வதூஉம் மிகை கொளாது**
**கொடுப்பதூஉம குறை கொடாது"** (பட் - 3)

எனச் சுட்டும். வாணிகத்திலும் அறம் பிறழாமல் இருந்ததால் பண்டைய தமிழரின் வாணிக வளர்ச்சி பல்கிப்பெருகியது.

மலைபடு பொருளான மிளகு, சந்தனம், தேக்கு, பொன், தந்தம், புலித்தோல் முதலிய பொருள்களும் யானை, குரங்கு முதலிய விலங்குகளும், மயிலும் பிற நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டன.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

பண்டங்களை கூவி விற்பவர் அக்காலத்தில் இருந்தனர். பையில் பண்டங்களை போட்டு விற்பது வழக்கம். நெல் முதலியவற்றை அளந்து உரையில் இடுவர். குறிஞ்சி நிலத்தில் விளைந்த அவரை, பலா முதலியன அந்நில மக்களின் வாழ்வில் இடம் பெற்ற வாணிகப் பொருளாகும்.

**"அவரை அடுந்த மந்தி பகர்வர்**
**பக்கின் தோன்றும் நாடன் வேண்டின்**
**பசுப்போல் பெண்டிரும் பெறுகுவன்**
**கொல்கேள் ஆகலின் நல்குமால் இவட்கே"** (ஐங் - 271)

அவரைக்காயை நிறையத் தின்ற மந்திகள் பண்டங்களை விலை கூறி விற்கும் வணிகரின் பைகள் போன்று தோன்றும். அத்தகைய இடத்தையுடைய மலைநாடன் என்று கூறுவதிலிருந்து பையில் பண்டங்களைப் போட்டுவிற்று வாணிபத்தை பெருக்கிய செய்தியை அறிய முடிகிறது.

உணவு சிறிதும் இல்லாத காலத்தில் யானை கோட்டினை விற்று உணவு பெற்று உண்டனர். இச்செய்தியை கபிலர் குறுந்தொகையில் குறிப்பிட்டுள்ளார்.

**"காந்தள் அம் சிலம்பில் சிறுகுடி பசித்தென**
**கடுங்கண் வேழத்துக் கோடுநொடுத்து உண்ணும்"** (குறு. 100)

இதில் ஆண் யானையின் தந்தத்தை உணவுக்காக விற்ற வாணிபச் செய்தி குறிப்பிடப்படுகிறது.

**நிறைவாக**

குறிஞ்சி நில மக்களின் வாழ்வியலில் தங்களின் இயற்கை அமைப்பிற்கேற்ப தொழில்களை அமைத்துக் கொண்டு இயற்கையோடு இயைந்த வாழ்வினை மேற்கொண்டவர்கள். குறிஞ்சி நில மக்களின் வாழ்வினையும் அங்குள்ள இயற்கையினையும் பாடி மகிழ்ந்தவர் கபிலர் ஆவார். கபிலர் பாடல்வழியாக குறிஞ்சி நில மக்கள் மேற்கொண்ட பல்வேறு தொழில்களைப் பற்றி அறியஇயலுகிறது. குறிஞ்சி நில மக்கள் வேட்டைத் தொழில் புரிந்து தங்களது உணவுத்தேவைகளை நிறைவேற்றிக் கொண்டனர். சங்கத்தமிழர் வாழ்வினை இன்பமாகவும் இயல்பாகவும் வாழ எண்ணினார். பல்வேறு தொழில்களில் தானிய உற்பத்திக்கு முக்கியத்துவம் அளித்தனர். தினைப்புனைத்தைக் காவல்காக்கும் போதும் எந்த உயிருக்கும் தீங்கிழைக்காத மக்களாக குறிஞ்சி நில மக்கள் வாழ்ந்துள்ளதை அறியமுடிகிறது. அம்மக்கள் வாழ்ந்த இயற்கை வாழ்விற்கு கேழல் முதலான விலங்குகளும் அவர்களுக்கு உதவி புரிந்தமையை அறியமுடிகிறது. வணிகத்தில் நேர்மை பின்பற்றப்பட்டது. எனவே இயற்கைத் தொலைத்து வாழ்ந்து வரும் இன்றைய உலகிற்கு குறிஞ்சி நில மக்களின் வாழ்க்கை முன்மாதிரியாகக் கொள்ளத்தக்க வாழ்க்கை முறையாகும்.

**பார்வை நூல்கள்**

1. சங்க இலக்கியம் - நியூ செஞ்சுரி புக்ஹவுஸ் (பி) லிமிடெட், சென்னை.
2. அரங்கசாமி, கா. - கபிலர், சாகித்யஅகாதமி புதுதில்லி.
3. குருநாதன், இராம. - குறிஞ்சி காட்டும் சமுதாயம்.
4. சண்முகம்பிள்ளை, மு. - சங்கத்தமிழர் வாழ்வியல்.
5. தமிழண்ணல் - குறிஞ்சிப்பாட்டு. (இலக்கியத் திறனாய்வு விளக்கம்)

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

# சங்க இலக்கியத்தில் குலக்குறி பண்பாட்டு மரபுகள்

## Insignia Cultural Traditions in the Sangam Literature

**கு.மதியரசி,** உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை,
கிருஷ்ணசாமி மகளிர் அறிவியல் கலை மற்றும் மேலாண்மையியல் கல்லூரி, கடலூர்.

**Abstract**

*It is hardly to say that worship and worship seemed to be an expression of human knowledge. It made the man unconscious of his proclamation and turned the worship of Unanswerable Sources. The Sun, the rain, the manifestation of Creativity are the female gods, rivers and protective capital. In the above case, this article has stated that the worship of the sacramental deviations from the Sangam Literature.*

**Keywords:** Insignia, Cultural Tradition, Sangam Literature

சங்க இலக்கியம் பழந்தமிழ்ச் சமூகத்தின் பண்பாட்டு மரபுகளைப் பொதிந்து வைத்திருக்கும் அரிய கருவூலமாகத் திகழ்கிறது. பழந்தமிழரின் காதலையும் வீரத்தையும் எடுத்துரைக்கும் செவ்வியல் இலக்கியங்களாக சங்க இலக்கியம் பெரிதும் பேசப்பட்டாலும், அதன் சமூகப் பண்பாட்டு அடிப்படைகள் அணுகுமுறை சார்ந்தும் தொடர்ச்சியாக ஆய்வுகள் நிகழ்ந்து வருகின்றன. அதனடிப்படையில் பார்க்கின்றபோது தனக்குள் பலப்பிரிவுகளை உள்ளடக்கிய பெரும்துறைகளாக மானிடவியல், உளவியல் பேசப்படுகின்றன. இவை இரண்டுடனும் தொடர்புடையதாக அமைவது இனக்குழு மக்களின் நம்பிக்கையாய் அமையும் குலக்குறியியல் ஆகும். அவ்வகையில் சங்க இலக்கியத்தில் குலக்குறி பண்பாட்டு மரபு என்னும் பொருளில் ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

### குலக்குறி விளக்கமும் கொள்கைகளும்

குலக்குறி என்பது **குலம் + குறி = குலக்குறி** என்று புணர்ந்து ஒரு இனத்தையோ கூட்டத்தையோ இணைத்துக் காட்டும் நிலையில் அமைந்துள்ளது. குலம் என்பது குடி, உயர்குலம், மேன்மை, இனம், கூட்டம், கோயில், மூங்கில், மலை, அழகு, தொகுதி, மனை என்றும், குறி என்பது அடையாளம், இலக்கு, பெயர், நேக்கம், ஒழுக்கம், நூல் என்றும் இவ்விரண்டும் புணர்ந்த செய்கையினால் குலக்குறியாக அமைந்துள்ளது என்பது அறிஞர் கருத்து. புராதன இனக்குழச் சமுதாயத்தில் பின்பற்றப் பட்ட பல்வேறு வகையான சடங்கியற் சார்ந்த வழக்கங்களுள் குலக்குறியும் ஒன்றாகும். இனக்குழச் சமுதாயத்தில் மனிதஇனக் குழுக்கள் ஒவ்வொன்றும் தம்மை ஏதேனும் ஒரு விலங்கு அல்லது தாவரத்துடன் தொடர்புபடுத்திக் கொண்டன. தொடர்புபடுத்திக் கொண்ட உயிரினத்தைக் தமது தொன்மவியல் மூதாதையராகக் காட்டி அதன் மீது சடங்கியற் சார்ந்த நம்பிக்கைகளும் வைத்திருந்தன. இவ்வாறு ஓர் இனக்குழு மூதாதையர் உறவு வைத்துக்கொள்ளும் உயிரினமே **'குலக்குறி'** என வரையறுக்கப்படுகின்றது. எருமை, புலி, சிங்கம், பாம்பு, கங்காரு, மீன், பல்வேறு வகையான மரங்கள், செடிகொடிகள், புறா, கோழி, மயில் முதலான பறவைகள் இனக்குழு வாழ்வில் குலக்குறியாகக் கொண்டாடப்பட்டு உள்ளன. இக்குலக்குறி அந்த இனத்தினுடைய அடையாளச் சின்னமாகவும் அமைதல் உண்டு. புதிது புதிதாக ஒவ்வொரு துறை தோன்றும்போதும் அதற்கான சில வரையறைகளை அறிஞர்கள் முன்வைக்கின்றனர். சில

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

அறிஞர்கள் இவ்வரையறைகளில் ஒத்துப்போகலாம் அல்லது வேறுபடலாம். குலக்குறி குறித்த சொல்லுக்கு விளக்கம் தரும் பக்தவச்சலபாரதி

> **"இன்று குலக்குறி என்னும் பொருளில் பேசப்படும் (Totem) என்னும் ஆங்கிலச்சொல் கிழக்கு வட அமெரிக்காவிலுள்ள அல்கான்கின் (Algonkin) பழங்குடியினர் வழங்கும் 'ஆட்டோ தீமன்' (Oto teman) என்னும் சொல்லோடு தொடர்புடையது. அவர்களின் மொழியில் இச்சொல்லுக்கு 'உடன்பிறந்தான்-உடன்பிறந்தாள் உறவு' என்று பொருள். இச்சொல்லின் வேர்ச்சொல்லான 'ஒத்தி' (Ote) என்பதற்கு இரத்த உறவுடையவாகள் என்று பொருள். வடஅமெரிக்க இந்திய பழங்குடியினர் பகுதியில் வணிகம் செய்யச் சென்ற ஆங்கிலேயர் ஒருவர் மூலம் கி.பி.1792 –ல் இச்சொல் ஆங்கிலேயர்களிடம் அறிமுகப்படுத்தப்பட்டு (totem) என திரிபுற்றது"[1]**

என்கிறார் (பக்தவச்சல பாரதி- பண்பாட்டு மானிடவியல் பக்.505-506). ஆனால் குலக்குறி குறித்து ஆ.தனஞ்செயன் கூறுகையில் 'totem' என்னும் இக்கலைச்சொல் முதன்முதலில் 1791-ல் totam எனும் வடிவில் பயன்படுத்தப்பட்டது. இதனைப் பயன்படுத்தியவர் J.லாங் என்பவர். வடஅமெரிக்காவில் சுப்பீரியர் ஏரியைச் சூழ்ந்து வாழும் செவ்விந்திய வகுப்புகளில் ஒன்று. 'ஆல்கான்கியூன்' (Algonquin) அல்லது 'ஓஜிப்வர்' (Ojibwa) எனப்படும் இவ்வினக்குழு மக்களுடைய பேசும்மொழியில் 'ஓடைம்'(Odaim) என்றால் **குலதேவதை** என்றும் 'டோடைம்' (todaim) என்றால் **என்குலதேவதை** என்றும் பொருள். இச்சொல்லிலிருந்து உருவான கலைச்சொல்லே 'Totem' என்பார்.[2] (ஆ.தனஞ்செயன்-குலக்குறியியலும் மீனவர் வழக்காறுகளும்-2)

மானிடவியல் அறிஞர் **மெக்லென்னன்** குலக்குறியியலை இயற்கைப் பொருட்களை வழிபடும் 'புனிதப்பொருள் வழிபாட்டோடு' தொடர்புபடுத்திக் காட்டுகின்றார். ருசிய மானிடவியல் அறிஞர் **மாலினோவ்ஸ்கி** குலக்குறியலை உயிரினங்களின் வளமையை மாந்திரிக ரீதியாகக் கட்டுப்படுத்தும் அவாவின் வெளிப்பாடாகக் காண்கிறார். **லேவிஸ்டிராஸ்** குலக்குறியியலை நான்கு வகையாகப் பிரிக்கின்றார்.

1. இயற்கை உயிரினங்கள் ஒரு குறிப்பிட்ட குழுவோடு அடையாளப்படுத்தப்படல்
2. இயற்கை உயிரினங்கள் ஒரு தனிநபரோடு அடையாளப்படுத்தப்படல்
3. ஒரு தனிநபர் குறிப்பிட்ட இயற்கை உயிரினத்தோடு அடையாளப்படுத்தப்படல்
4. ஒரு குறிப்பிட்ட குழு ஒரு குறிப்பிட்ட உயிரினத்தோடு அடையாளப்படுத்தப்படல்

உளவியல் அறிஞர் **பிராய்டு** கொலையுண்ட தந்தையின் பதிலியாகவே குலக்குறி தேர்வு செய்யப்படுவதாகவும் புனிதப்படுத்தப்படுவதாகவும் கூறுகின்றார். இவ்வாறு குலக்குறியியல் பற்றிப் பல்வேறு விதமான கொள்கைகள் நிலவுகின்றன.

**இனக்குழுவும் குலக்குறியியலும்**

தனிமனிதனாய் காடுமேடுகளில் அலைந்து திரிந்த ஆதிமனிதன் காலம் செல்லச் செல்ல கூட்டாகக் கூடி வாழத் தலைப்பட்டான். இக்கூட்டு வாழ்க்கையே இனக்குழு வாழ்க்கைக்கான அடித்தளத்தை அமைத்துக் கொடுத்தது. இக்குழு வாழ்க்கையினை பண்டைய இலக்கியங்களும் எடுத்தியம்புகின்றன.

இத்தகைய குழு வாழ்க்கையை மேற்கொண்டு இயற்கையுடனான நெருங்கிய தொடர்பு கொண்டு வாழ்ந்த மனிதன் அதனால் ஏற்படும் நன்மையின் பொருட்டும் மேலும் இவ்வியற்கையில் ஏற்படும் மாற்றங்களையும் சீற்றங்களையும் கண்டு அஞ்சிய மனிதன் அதனைக் கண்டு தொழ ஆரம்பித்தான். இவ்வகையாக செய்யப்பட்டு வந்த சங்கிலியல் ரீதியான சமய செய்கையில் காலம் செல்லச் செல்ல இயற்கையுடனான ஓர் உறவை ஏற்படுத்தி அவ்வியற்கையின் வழிவந்தவர்களே தாங்கள் எனும் நிலை உருவானது.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

**பண்டைய இலக்கியத்தில் காணலாகும் குலக்குறி அடையாளங்கள்**

குலக்குறியியலைப் பின்பற்றியச் சமூகத்தில் குலக்குறியாக விளங்கும் விலங்கையோ தாவரத்தையோ மக்கள் தங்களில் ஒருவராகவோ அல்லது அதனுடைய உறவினராகவோ பாவித்துக் கொள்வது வழக்கம்.

மணலில் புதைத்த புன்னைமர விதை முளைத்ததும் தேன் கலந்த இனியபாலை ஊற்றித் தோழியர் வளர்த்தப் புன்னையின் சிறப்பை,

**"விளையாடு ஆயமொடு வெண்மணல் அழுத்தி**
**மறந்தனம் துறந்த காழ் முளை அகைய**
**நெய்பெய் தீம்பால் பெய்து இனிது வளர்ப்ப**
**நும்மினுஞ் சிறந்தது நுவ்வை ஆகுமென்று**
**அன்னை கூறினள் புன்னையது நலனே"**[3]

என *நற்றிணை* பாடல் குறிப்பிடுகிறது. இப்பாடல் வாயிலாகப் புலவர் மானுடரோடு தாவர இனத்தை இணைத்துப் புதிய ஓர் உறவு முறையை ஏற்படுத்தியுள்ளார். இங்கு புன்னை மரத்திற்கு மனிதப்பண்பு ஊட்டப்படுகிறது. மனிதனும் தாவரமும் திணை வேறுபாட்டைக் கடந்து ஒன்றான ஒரு நிலையை இங்கு காண முடிகிறது. மேலும்,

**"கான மஞ்ஞைக்குக் கலிங்கம் நல்கிய**
**அருந்திறல் அணங்கின் ஆவியர் பெருமகன்**
**பெருங்கல் நாடன் பேகனும்"**[4]
**"சிறுவீ முல்லைக்குப் பெருந்தேர் நல்கிய**
**பிறங்கு வெள் ளருவி வீழும் சாரல்**
**பறம்பின் கோமான் பாரியும்"**[5]

என்ற பாடலடிகளில் மக்களுக்கும், தாவர விலங்கினங்களுக்கும் இடையே ஒருவகைப் புதிரானத் தொடர்பு நிலவுகிறது என்பதைக் காண முடிகிறது. இந்த உறவுநிலைக் குலக்குறிப் பண்பாட்டிற்குரிய இயல்பாகவே இருக்க வேண்டும் என்பதைப் புரிந்து கொள்ள முடிகிறது.

**உயிரினங்களின் பெருமை**

பரதவர்களுக்கும் சுறாமீனுக்கும் நெருங்கியத் தொடர்பு இருப்பதை சங்க இலக்கியங்கள் குறிப்பிடுகின்றது. இருபுறமும் பற்கள் உடையதும், இரம்பம் போன்ற நீண்ட முள்ளை உடையதுமான இம்மீனானது கடல்வாழ்மீன் இனங்களில் வலிமையுடையது. அதன் வலிமையை,

**" ----------- கடுஞ்சொல்**
**வாட்சுறா வழங்கும் வளைமேய் பெருந்துறை"**[6]
**"வன்கைப் பரதவர் இட்ட செங்கோல்**
**கொடுமுடி அவ்வலை பரியப் போக்கி**
**கடுமுரண் எறி சுறா வழிங்கும்"**[7]

என்னும் சங்க இலக்கியப் பாடலடிகள் புலப்படுத்துகின்றன.

**அணங்கின் ஆற்றல்**

அணங்கு என்பதற்குத் தெய்வமகள், பெண், பேய், வருத்தும் தெய்வம், மோகினி, கொல்லிப்பாவை, தெய்வத்தன்மை என்றெல்லாம் தமிழ் பொருளகராதி விளக்கம் கூறுகின்றது. சங்கப்பாடல்களில் இடம்பொறும் **'சூர்'** என்ற சொல்லுக்கு பெண் தெய்வத்தைக் குறிக்கிறது. சூர் என்னும் தெய்வம் தன் உறைவிடமாக மலையைக் கொண்டுள்ளது. கொல்லிமலை உச்சியில் சூர் என்னும் தெய்வம் விரும்பி வாழும் செய்தியை,

**" -----சூர் புகல் நனந்தலை**

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

**இருங் கொல்லி உச்சி"[8]**

என அகநானூறும், தலைவனது நாட்டைக் குறிக்கும் குறுந்தொகையில்,

**"------ வெய்துற்று நடுங்கும்**
**சூர்மலைநாடன்"[9]**

எனவும் குறிப்பிடுகின்றது.

செவ்விய வேர்களையுடைய பலாமரங்கள் நிறைந்தது கொல்லிமலை. இம்மலையில் உயர்ந்த உச்சியிலிருந்து அழகிய வெண்மை நிறமான அருவி விழும் மேற்குப்பகுதியில் கொல்லிப்பாவை என்னும் தெய்வம் நிற்கிறது. இத்தெய்வமானது காற்று வீசினாலும், மழைபெய்தாலும், இடிஇடித்தாலும், பெருநிலமே புரண்டெழுந்து நிலநடுக்கம் ஏற்பட்டாலும் தன் அழகிய உருவிலிருந்து கெடாதத் தன்மையை உடையது என்பதை,

**"கால் பொருது இழப்பினும் கதழ் உறை கடுகினும்**
**உரும் உடன்று எறியினும் ஓறு பல தோன்றினும்**
**பெருநிலம் கிளரினும் திருநல உருவின்**
**மாயா இயற்கைப்பாவை"[10]**

எனப் பரணர் குறிப்பிடுகிறார்.

சேரனுக்கு உரிமையுடைய அச்சந்தரும் கொல்லிமலையில் அரியகண்களையும் பெரிய அணிகலன்களையும் அணிந்து ஒரு தெய்வம் உள்ளது எனவும் இத்தெய்வம் கொல்லிப்பாவை என்பதும் குறுந்தொகைப் பாடல் வழி அறிய முடிகிறது

**மரத்தில் இறை**

இறை என்பது தங்குதல் எனப் பொருள்படும். **'தேன் இறை கொள்ளும்' 'வண்டிறை கொண்ட கமழ் பூம் பொய்மை'** என்றத் தொடர்கள் இறைவன் அனைத்து உட்பொருள்களிலும் தங்கி இருப்பவன் என்னும் பொருளைக் குறிக்கிறது. மனிதன் தனியாக வழிபடாமல் கூட்டு வழிபாட்டு முறையையே மேற்கொண்டான். கூட்டு வழிபாடாக இயற்கையின் ஆற்றலை வணங்கிய மக்கள் ஆற்றலை விளைவிக்கும் இடங்களில் ஒன்றாக மரங்களைக் கருதினர்.

காடுகளிலுள்ள மரங்களின் பருமன், உயரம், கிளைகளின் அசைவுகள் ஆகியவற்றிலிருந்து உண்டாகும் ஒலிகள் ஆகியவற்றை இரவில் கண்டும் கேட்டும் அஞ்சத் தொடங்கினான். மரங்கள் தங்களுக்குத் தீமை கொடுக்கக் கூடாது என அஞ்சி அம்மரங்களை வழிபடத் தொடங்கினான். மக்களது இந்த அச்சம் மரங்களை அவனுக்குத் தெய்வமாகக் காட்டின. மனித இனத்தின் முதலில் தோன்றி வழிபாடு **மரவழிபாடே** ஆகும்.

உலகில் பல்வேறு நாடுகளிலும் ஆரம்ப காலத்தில் மரங்களையே தெய்வமாகக் கருதி வழிபட்டனர். தமிழகத்திலும் அவ்வழிபாட்டைப் போற்றி வந்தமையைச் சங்க இலக்கியப் பாடல்களில் அறிய முடிகிறது. மரத்தடியில் கந்து, இலிங்கம் முதலியவற்றை வைத்து வழிபடும் வழக்கம் தோன்றியது. பிற்காலத்தில் கோவில்கள் எழுப்பிய போதும் மரங்களை நடுவில் வைத்தே கோவில் எழுப்பினர். அம்மரங்கள் பின்னாளில் **'தலவிருட்சம்'** என அழைக்கப்பட்டது.

புறநானூற்றில் பாணன் ஒருவன் பசியோடு புரவலனைக் காணச் சென்றபோது களர்நிலத்திலுள்ள கள்ளிமரத்தின் நிழலில் வீற்றிருக்கும் தெய்வத்தை தொழுதச் செய்தியைத்

**"கள்ளி நீழற் கடவுள் வாழ்த்திப்**
**பசிபடு மருங்குலை கவிபுகை தொழஅ"[11]**

என *புறநானூறு* குறிப்பிடுகின்றது.

ஆநிரை கவர்ந்து வந்த மழவர் வரும் வழியிலுள்ள தெய்வம் தங்கிய வேம்பினடியில் பசுவைக் கொன்று பலியிட்டுக் குருதித்தூவி அதன் புலாலை சமைத்துத் தின்ற உயர்ந்த இடம் உள்ளது என்பதை,

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

**"தெய்வம் சேர்ந்த பராரை வேம்பில்**
**கொழுப்பு ஆ எறிந்து குருதி தூஉய்**
**புலவுப் புழுக்கு உண்டவான்கண் அகல்உறை"[12]**

என அகநானூறு குறிப்பிடுகின்றது.

ஆரம்பகாலத்தில் மரங்களை வழிபட்ட மனிதர் பின்பு மரநிழலில் தூணை நிறுத்தி வழிபட்டான். அம்மரத்தூணானது மழையிலும் வெயிலிலும் பாதிக்கப்பட்டு அழிந்திருக்கும். பின் மரத்தூணைமாற்றி கற்றூண் நடப்பட்டிருக்கலாம். இவ்வாறு மரவழிபாடு வளர்ச்சியுற்று கடவுள் வழிபாட்டிற்கு இடமளித்தது. ஆலமரக்கடவுள் சிவவழிபாட்டிற்கும், கடம்பமரம் முருகன் வழிபாட்டிற்கும், கானமரச்செல்லி கொற்றவை வழிபாட்டிற்கும் இடந்தந்து சமய வளர்ச்சிக்குத் துணைநின்றன.

**முடிவுரை**

சங்க இலக்கியங்கள் வெளிப்படுத்தும் குலக்குறி அடையாளங்களான புன்னை, தெய்வம், மரம், உயரினம் ஆகியன மனிதப் பண்பேற்றம் செய்யப்பட்டு நெருங்கிய மனிதகுல உறவாகவும் புனிதத்தன்மை மிக்கதாகவும் காணப்படுகின்றன. இவை இயற்கைச் சூழலியத்தைப் பேணிக்காப்பதன் அவசியத்தை உலக சமூகத்திற்கு எடுத்துரைக்கின்றன. குக்குலக்குறி அடையாளங்கள் தொன்றுதொட்டு இனக்குழு சமூகத்தின் பண்பாட்டு விழுமியங்களாகவும் வாழ்வியல் நெறிமுறைகளாகவும் திகழ்ந்து வருவதை அறிய முடிகிறது. பழந்தமிழரது இயற்கை வழிப்பட்ட வாழ்க்கை முறைகளுக்கு அடிப்படையாக இவை விளங்கினாலும், ஆன்மீகம் மற்றும் அறிவியல் கோட்பாடுகள் உருவாக பிற்காலத்தில் அடித்தளமிட்டதையும் நினைவில் கொள்ள வேண்டும்.

**அடிக்குறிப்பு**

1. பண்பாட்டு மானிடவியல், பக். 505-506.
2. குலக்குறியியலும் மீனவர் வழக்காறுகளும், ப. 2.
3. நற்றி,172-1-5.
4. சிறுபாண், 85-87.
5. மேலது, 89-91.
6. அகம், 150-6-7.
7. மேலது, 303-9-11.
8. மேலது, 303-5-6.
9. குறுந், 105-4-5.
10. நற்றி, 201-8-11.
11. புறம், 260-5-6.
12. அகம், 303-4-6.

**துணைநூற்பட்டியல்**

1. பக்தவச்சலபாரதி. பண்பாட்டு மானிடவியல், அடையாளம் பதிப்பகம், திருச்சி (2011).
2. பக்தவச்சலபாரதி. பண்பாட்டு மானிடவியல், மெய்யப்பன் பதிப்பகம், சென்னை. (2003).
3. ஆ.தனஞ்செயன். குலக்குறியியலும் மீனவர் வழக்காறுகளும், நியூ செஞ்சரி புக்ஹவுஸ்(பி) லிட், சென்னை.
4. பதினெண்மேற்கணக்கு நூல்கள். நியூ செஞ்சரி புக்ஹவுஸ்(பி) லிட், சென்னை.

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019
Available at: www.ijtlls.com


# பழனி கிரந்த எண் சீதாசக்கர கல்வெட்டு ஆய்வு

## An Investigation on Palani Grantha Pillar Inscription and Sita Chakaram

**முனைவர் இரா.மனோகரன்,** உதவிப்பேராசிரியர், இந்தியப் பண்பாட்டுத்துறை,
அருள்மிகு பழனியாண்டவர் கலை மற்றும் பண்பாட்டுக் கல்லூரி, பழனி.

**Abstract**

*We know that those of Tamil origin has excelled in the arts, literature, science and the realm of excellence in astronomy and mathematics. In particular, Aryapattar, Bhaskarar and Ramanujar are among the world's top mathematicians. Some poets gave their mathematical knowledge to the world in their poetic and formulaic form. They have been debated in the courts as puzzles. Some were used in astrology. The Palani walls were inscribed with murals and inscriptions to protect the victims. The purpose of this article is to analyze and document such a grandiose Sitasakkara inscription of Palani.*

**Keywords:** Palani, Grantha Inscription, Sita Chakaram, Sculpture, Sudoku.

கலைகள், இலக்கியங்கள், விஞ்ஞானம் மற்றும் மெய்ஞானத்தில் சிறந்து விளங்கிய நம்முன்னோர் வானவியல் மற்றும் கணித துறைகளிலும் சிறந்து விளங்கினர் என்பதனை நாம் அறிவோம். குறிப்பாக, ஆரியபட்டர், பாஸ்கரா, இராமானுஜர் போன்றோர் உலக கணிதவியலாளர்களின் பட்டியலில் குறிப்பிடத்தக்கவர்களாவர். சில கவிஞர்கள் தனது கணித அறிவை தம் கவிப்புலத்தாலும், சூத்திர வடிவிலும் இவ்வுலகிற்கு அளித்தனர். அவை புதிர்களாக அரசபைகளில் விவாதிக்கப்பட்டன. சில சோதிடத்துறையில் பயன்படுத்தப்பட்டன. அப்புதிர்களைப் பாதுகாக்கும் பொருட்டு சுவடிகள், கல்வெட்டுக்கள் போன்றவற்றில் பதிவு செய்யப்பட்டன. அப்படிப்பட்ட ஒரு கிரந்த எண்ணாலான சீதாசக்கர கல்வெட்டை ஆய்வு செய்வதும், ஆவணப்படுத்துதலுமே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

### பழனி மலைக்கோயில் காலம்

குறிஞ்சி நிலக்கடவுளான முருகப்பெருமானின் ஆறுபடை வீடுகளில் ஒன்றாக ஆவினன் குடி இடம் பெற்றுள்ளதை *திருமுருகாற்றுப்படை* உறுதி செய்கிறது. பழனி மலைக்கோயிலைக் கட்டியவர் சேரமன்னன் சேரமான் பெருமாள் எனக் கூறப்படுகிறது. இச்செய்தியை பாணி பாத்திர உடையார் பரம்பரை வரலாறு “சேறன் பெருமாள் குன்று தோறாடல் எல்லாம் தெரிசனம் பண்ணிக் கொண்டு வருகுற நாளையிலே மூணாம் படைவீடாகிய திருவாவினன் குடியிலே சுப்பிரமணியக் கடவுளரை தெரிசனம் பண்ணி அவர் காரணங்களும் கண்டு சந்தோஷப்பட்டு கெர்ப்பகிரகம் அர்த்த மண்டபம் கட்டி வைத்து சுவாமிக்கு பூசை நைவேத்யம் மாலை சந்தனம் திருமஞ்சனம் நடக்கும்படி பூமிகள் விட்டு சிலா சாசனங்களும் பண்ணி வச்சுக் கொடுத்தார்.”[1] எனக்கூறுவதிலிருந்து அறியமுடிகிறது. இக்கருத்தை மலைக்கோயிலின் கற்பகிரக வடக்கு வெளிப்புறத்தில் அமைக்கப்பட்டுள்ள குதிரை மீதமர்ந்த சேரமான் பெருமானின் புடைப்புச்சிற்பம் உறுதிப்படுத்துகிறது. மேலும், “மலை ஏறும்போது எதிர் நிற்கும் முதல் சிற்றாலயம் சேர விநாயகர் கோயில் வாயிலிலுள்ள ஒரு தனிக் கற்சிலையில் சேரர்கோன் தன் குதிரை மீது செல்லும் தோற்றம் பொறிக்கப்பட்டுள்ளது. இவர் காலம் 9 ஆம் நூற்றாண்டு என ஆராய்ந்துள்ளனர்.”[2]

### கிரந்த தூண் கல்வெட்டு

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019
Available at: www.ijtlls.com

பங்குனி உத்திர திருவிழாவில் ஆறாம் நாள் விழாவான முருகன் வள்ளி தெய்வானை திருமணம் நிகழ்வு திருஆவினன்குடி கோயிலுக்கு வெளியே தென்மேற்கு பகுதியில் வடக்கு நோக்கி அமைக்கப்பட்டுள்ள ஸ்ரீ சாந்த குல சௌமிய நாராயண 24 மனை கவரய நாயக்கமார்களின் பொதுமண்டபத்தில் நடைபெறுவது வழக்கம். இம்மண்டபம் புதுப்பிக்கும் பணி தற்போது நடைபெற்றது. இக்கற்றளி மண்டபத்தின் வடமேற்கு தூணின் கீழ்ப்பகுதியில் மலைக்கோயிலில் செதுக்கப்பட்டுள்ள அதே குதிரைமீதமர்ந்த சேரமான் பெருமானின் புடைப்புச்சிற்பம் காணப்படுவதை வைத்து இம்மண்டபம் மலைக்கோயிலின் வயதை ஒத்து இருக்கலாம் எனக்கருத இடமுண்டு. அதேசமயம் இம்மண்டபத்தின் தூண்களில் காணப்படும் போதிகை வளர்ச்சி மற்றும் சிற்ப வேலைப்பாடுகளை வைத்து இம்மண்டபம் நாயக்கர் காலத்தைச் சார்ந்ததாக இருக்கலாம் எனவும் கருதலாம். இம்மண்டபத்தின் மேற்பகுதி 12 தூண்களையும், 29 அடி அகலமும் 18 அடி நீளமும் 8 அடி உயரமும் கொண்டதாகும். இம்மண்டபத்தின் சுற்றுச்சுவரின் உள், வெளி மற்றும் விதானப்பகுதிகளில் மகரமீன் புடைப்புச்சிற்பங்களாகவும் வரைகோட்டு வடிவிலும் பொறிக்கப்பட்டுள்ளன. மண்டபத்தின் நடுவில் விநாயகர் சிலையும் மேற்பகுதியில் 56 நடன மாதர்களின் சிற்பங்களும் மண்டபத்தின் வெளிப்புறத்தூணில் கஜூராகோ, சென்னிமலை மற்றும் குடுமியான் மலை போன்ற கோயில்களில் அதிகமாகக் காணப்படும் எரோடிக் எனப்படும் பாலியல் சிற்பமும் காணப்படுகின்றன. மண்டபத்தின் வெளிப்புற மேற்பகுதியில் தாராசுரத்தில் அமையப்பெற்றுள்ள யானை, காளைமாடு ஒரே தலை கொண்ட சிற்பம் பொறிக்கப்பட்டுள்ளது.

இம்மண்டபத்தின் நடுத்தூணின் மேற்குபுறத்தில் காணப்படுகின்ற ஒரு கல்வெட்டு பெரும்பாலும் கல்வெட்டுக்களிலும், செப்பேடுகளிலும் காணப்படுகின்ற கிரந்த எழுத்து முறையில் அமைக்கப்பட்டுள்ளது. இவ்வெழுத்துக்களின் காலம் 14, 15 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவையாக இருக்கலாம்.[3]



| | | |
|---|---|---|
| ௨ | ௭ | ௬ |
| ௯ | ௫ | ௧ |
| ௪ | ௩ | ௮ |

௧ = 1, ௨ = 2, ௩ = 3, ௪ = 4, ௫ = 5, ௬ = 6, ௭ = 7, ௮ = 8 ,௯ = 9,௰ = 10

இத்தூண் கல்வெட்டு மூன்றுக்கு மூன்றாக ஒன்பது கட்டங்களில்ஒன்றிலிருந்து ஒன்பது வரையிலான கிரந்த எண்களைக் கொண்டுள்ளது. ஒரு கட்டத்தில் பயன்படுத்திய எண்ணை மறுமுறை பயன்படுத்தாமல் வடிவமைக்கப்பட்டிருக்கும் இக்கட்டம் நமக்கு நடக்க வேண்டிய எதிர்கால நிகழ்வுகளையும், நம் அன்றாட பிரச்சினைகளுக்கு ஆருடம் சொல்லுவதற்கு ஞானியர்களால் ஆசீர்வதிக்கப் பட்டதாகக் கருதப்படும் 'சீதா சக்கரம்' ஆகும்.

**சீதா சக்கரம்**

சீதா சக்கரம் இராமாயண காலத்திலிருந்து நம் முன்னோர் நடக்க வேண்டிய காரியத்தை மனதில் நினைத்துக் கொண்டு, ஸ்ரீராமநாமத்தை தியானித்து குழந்தைகளை எண்ணைத் தொடச்செய்து பலனை அறிந்து கொள்வர். குழந்தை எந்த எண்ணைத் தொடுகிறதோ அதற்கான பலன்களாக, "1 - பகுதனம், 2 - பொருள் நஷ்டம், 3 - மித்ர லாபம், 4 - இருப்புக்கு நாசம், 5 - சௌக்கியம், 6 - விலங்கு (கலகம்), 7 - தங்கம் (தனம்), 8 - மரணம், 9 - காரிய சித்தி"[4] என இறைவனே தனக்கு வழிகாட்டுவதாக நம்பினர். இச்சக்கரத்தைப் போன்றே ராமர் சக்கரமும் (4X4) உண்டு. ஆனால் "அதில் 'கலகம்', 'நாசம்' போன்ற சொற்கள் நம்மை மிரட்டுவதால் காலப்போக்கில் பலரும் அதைத்

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
International Journal of Tamil Language and Literary
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019
com


தொடுவதில்லை எனக் கூறப்படுகிறது."[5] இச்சக்கரம் கணிதவியலில் பயன்படுத்தப்படும் மாயச் சதுரத்தின் **(Magic Square)** தொடக்கப் புதிராகவும் (3X3), ராமர் சக்கரம் (4X4) அதற்கடுத்த புதிராகவும் தற்பொழுதும் வழக்கத்தில் உள்ளன.

**மாய சதுரம் (Magic Square)**

முதல் மேஜிக் சதுரங்கள் சீனாவைச் சேர்ந்த ஃபூ-ஹாய் என்பவரால் கி.மு 2800 - ல் அறியப்பட்டதாக கருதப்படுகிறது. அவர் இக்கட்டங்களை 'லோ-ஷு' அல்லது 'ஆற்றின் வளைவின் சுருள்' என்று விவரித்தார். "மாயச்சதுரம் (வினோதச் சட்டகம்) என்பது ͳ$^2$ சதுர கட்டங்களில் உள்ள இயல் எண்களை நிரை, நிரல், மூலைவிட்டம் என எந்த வாரியாக கூட்டினாலும் ஒரே கூட்டுத்தொகையை தரும் ஒரு எண் அமைப்பு ஆகும்."[6] இத்தொடர் மாய எண்ணானது 15, 34, 65, 111, 175, 260,... எனத் தொடரும்.

**சுடோகு (எண் புதிர்)**

சுடோகு எனப்படும் எண் புதிர் இராமாயண காலத்தில் விளையாட்டு இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் சீனாவில் பழக்கத்தில் இருந்துள்ளது. பின்னர் அரபு நாடுகள் வழியாக ஐரோப்பா, அமெரிக்காவுக்கு பரவி பின்னர் ஜப்பானில் 1980 களில் மிக பிரபலமான சுடோகு என்ற பெயரால் வெளியுலகிற்கு தெரிய வந்தது. ஜப்பான் மொழியில் 'SU' என்றால் எண் எனவும், னுழுமுரு என்றால் தனித்து (Single) எனவும் பொருளாகும். தற்போது உலகெங்கும் மிகவும் விரும்பி விளையாடும் ஓர் எண் விளையாட்டாக உள்ளது.

சுடோகுவில் ஒவ்வொரு சிறு கட்டத்திலும் 1 முதல் 9 வரையுள்ள ஒன்பது எண்களில் ஏதாவது ஒன்று மட்டுமே இருக்க வேண்டும் (வந்த எண் மீண்டும் வரலாகாது). இந்தப் புதிர்க் கணக்கான சுடோகு விளையாட்டு தொடங்கும் முன், சில கட்டங்களில் மட்டும் ஏற்கனவே சில எண்கள் கொடுத்திருப்பார்கள். இவை கொடுக்கப்பட்ட எண்கள் எனப்படும். இவை சுருக்கமாகக் கொடை (Givens) என்றழைக்கப்படும். மீதம் உள்ள சிறு கட்டங்களில் கீழ்க்கண்ட விதிகளின் படி எண்களைப் பதிக்க வேண்டும். விதி-1: ஒன்பது சிறு கட்டங்கள் அடங்கிய ஒவ்வொரு சதுர அறையிலும் 1 முதல் 9 வரையுள்ள எல்லா எண்களும் ஒரே ஒரு முறை மட்டுமே வருமாறு அமைக்க வேண்டும். இப்படியாக இதே விதி அமையுமாறு சட்டகத்திலே உள்ள எல்லா அறைகளும் (9 அறைகள்) அமைய வேண்டும். விதி-2: சட்டகம் முழுவதிலும் ஒவ்வொரு வரிசையிலும் (கிடையிலும்) எண்கள் 1 முதல் 9 வரையில் உள்ள எண்கள் ஒருமுறை மட்டுமே வருமாறு அமைக்க வேண்டும். இதேபோல ஒவ்வொரு நெடையிலும் எண்கள் 1 முதல் 9 வரை ஒரே ஒருமுறை மட்டுமே வருமாறு அமைக்க வேண்டும். இவ்விளையாட்டு முதலில் எளிதாகத் தோன்றினாலும், சில வகையான கொடைகளுக்கு (கொடுக்கப் பட்ட எண்கள்) தீர்வு கடினமாக இருக்கும். எண்களை ஒவ்வொரு சிறு கட்டங்களிலே இடும் முன், முறைப்படி ஒரொழுக்கமாக, ஏரண (லாஜிக்) முறைப்படி எண்ண வேண்டும் அப்பொழுதுதான் இவ்விளைட்டில் வெற்றி பெற முடியும். இவ்விளையாட்டின் அமைப்பு முறையும் சீதா சக்கரம் மற்றும் ராமர் சக்கரத்தின் அமைப்பு முறையும் ஒத்து இருப்பது இங்கு கவனிக்கத்தக்கது.

**முடிவுரை**

பாண்டவர்களில் ஒருவரான சகாதேவன் தொடுகுறி சாஸ்திரத்தில் வல்லவர். இவர் இயற்றிய தொடுகுறி சாஸ்திரம் தமிழில் இருக்கிறது. இதைப்போலவே கணிதத்துறையில் பயன்படுத்தப்படும் மாயசதுரம், எண் புதிரான சுடோகு போன்றவற்றிற்கெல்லாம் முன்னோடியான சீதா சக்கரம், மற்றும் ராமர் சக்கரங்கள் வெறும் ஆருடத்திற்கு மட்டுமல்லாது தமிழர்களது

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

கணித அறிவை பறைசாற்றும் விதமாகவும் இக்கல்வெட்டு அமைந்துள்ளது. தற்பொழுது கண்டுபிடிக்கப்பட்டுள்ள கல்வெட்டுகளில் தமிழர்களது பழங்கால தேர்தல் முறையை பதிவு செய்திருக்கும் உத்திரமேரூர் கல்வெட்டு, குடுமியான் மலை இசைக்கல்வெட்டுக்கிணையாக மிக முக்கிய தமிழர்களது கணிதபுதிர் கல்வெட்டாக வரலாற்றில் இடம்பதிக்கும் மிக முக்கிய கல்வெட்டாகும்.

**அடிக்குறிப்புகள்**

1. பழனி வரலாற்று ஆவணங்கள், செ.இராசு, ப.9
2. பழனித் தல வரலாறு, ப.6
3. தமிழ் எண்ணும் எழுத்தும், மணிமாறன், ப.75
4. ஸ்ரீரங்கம் கோவில் வாக்கிய பஞ்சாங்கம், ப.34
5. https://tamilandvedas.com/tag/தொடுகுறி-சாத்திரம்
6. https://ta.wikipedia.org/wiki/மாயச்_சதுரம்

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

# மானிட மதிப்புகளின் வரலாறு தொல்காப்பியமும் அகநநானூறும்

## History of Human Values in *Tholkappiam* and *Agananooru*

**ந.மாலதி,** முனைவர் பட்ட ஆய்வார்,
பாரதிதாசன் உயராய்வு மையம், பாரதிதாசன் பல்கலைக்கழகம், திருச்சிராப்பள்ளி-24.

**Abstract**

*Tholkappiam stands as an epitome of human lifestyle, whereas values play a vital role in the life of human beings which is meant in various way such as goal, discipline and responsibility. Real life experience, minute power, intense self-consciousness, and valuable thoughts of languge are the characteristic feature that helps in recognizing the values of human being. Hence, Tholkappiam incites the feelings of human being within organism and neglects the differentiality and erokes intensive feeling of relationship between them. Consequently, in Tamil literature objectivity dominates in the society and also the aesthetic quality and the gracious mind ends in perfection, and the struggles faced by a man in helping his family and public services paves way for happiness. Therefore, the development of knowledge and culture is known tactfully and thus human values help in cooperating and uplifting sangam grammar and literature.*

**Keywords:** *Tholkappiam*, *Agananooru*, Values.

**முன்னுரை**

நமக்கு தமிழில் கிடைத்த முதல் இலக்கண நூல் தொல்காப்பியம் ஆகும். தொல்காப்பியம் பொருளதிகாரம் மனிதர்களின் வாழ்க்கை முறைகளை எடுத்துக் காட்டும் விதமாக அமைகின்றன. பண்டைத் தமிழர்களின் சிந்தனைச் சிறப்புகளை எடுத்துக் கூறும் விதமாக அமைந்துள்ளது. இலக்கணமும் இலக்கியமும் வாழ்க்கைக் கலையை வெளியிடும் களஞ்சியமாகும் வாழ்க்கையில் கடைபிடிக்க வேண்டிய உண்மைகள் ஒழுக்க நெறி முறைகளே ‘மதிப்பு (values)’ என்றும் கூறலாம். நாகரிகம் மிகுந்த எல்லாச் சமுதாயத்திற்கும் மதிப்புகள் உள்ளன. ஓவ்வொரு தனி தனி சமுதாயத்திற்கும் ஒவ்வொரு மதிப்பு உண்டு. வாழ்க்கையின் ஒவ்வொரு நிலையிலும் அவ்வவற்றிற்குரிய மதிப்புகள் இடம் பெறுகின்றன. காலம் செல்லச் செல்ல சிந்தனை வளர வளர புதிய மதிப்புகள் தோன்றினாலும் பழைய மதிப்புகள் தம் சிறப்பை இழக்காமல் தக்க வைத்துக்கொள்கின்றன என்பதை இக்கட்டுரை வெளிப்படுத்துகின்றன.

**மதிப்பு**

‘வேல்யூ’ என்னும் ஆங்கிலச் சொல்லை ‘மதிப்பு’ என்று கூறுகிறோம். இத்தகைய சொல் ‘வேலரெ’ என்னும் இலத்தீன் சொல்லின் வழியாக தோன்றியவையாகும். இச்சொல்லிற்கு ‘உறுதிபடுத்துவது அல்லது தகுதிப்படுத்துவது’ என்ற பொருளாகும். மானிட இனத்திற்கு உறுதியை அல்லது தகுதியைத் தரக்கூடியவை மதிப்புகள் எனப்படும்.

**கலைக்களஞ்சியம் தரும் பொருள்**

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

1. மதிப்பு என்னும் சொல்லிற்கு நிகராக மனப்பான்மை தேவை உணர்ச்சி மனப்போக்கு ஆர்வம் முன்னுரிமை உட்கருத்து மன அவா கவர்ச்சி போன்ற சொற்களை உள இயல் அறிஞர்கள் பயன்படுத்துகிறார்கள்.
2. கடமை உணர்ச்சி ஒழுக்க உயர்வு கலாச்சாரப் பாகுபாடு ஆய்வு முறை வாழ்க்கை முறை என்னும் சொற்கள் மதிப்பிற்கு நிகராகத் தொல் பொருள் ஆய்வாளர்கள் பயன்படுத்துகிறார்கள்.
3. அறவியல் குறிக்கோள் ஒழுக்கம் கட்டளைவிதி வேட்கை கடப்பாடு உரிமை ஒப்புதல் உறுதி என்னும் சொற்களைச் சமூக இயலாரும் அரசியல் அறிஞர்களும் பயன்படுத்துகிறார்கள்.

**அறிஞர்களின் கருத்துகள்**

1. கற்பின் பெருமையைக் கபிலர் கூறியது போல் இன்னொருவர் கூறமுடியாது. கம்பர் கூறியது போல இன்னொருவர் கூறமுடியாது. இதன் மூலம் உண்மை மட்டும் அல்லாமல் உண்மையை உணர்ந்தவரின் அனுபவங்களும் நமக்குக் கிடைக்கின்றன என அழகாக விளக்குகிறார் டாக்டர்.மு.வ அவர்கள்.
2. கவிஞனைப் ‘புலவன்’ என்று குறிப்பிடும்போது அப்பெயரில் உள்ள பொருட்செறிவை அறிய வேண்டும். நாம் வாழும் புலத்தில் (இடம்) இருக்கும் உண்மைகளைத் தம் புலத்தால்(அறிவு) அறிந்து எப்புலத்திற்கும் (இடம்) பொருந்தும் வண்ணம் புலப்படுத்த வல்லவன் ‘புலவன்’ என்னும் சொல்லின் பொருளாகும். நூல் நவில் புலவர் நுணங்கு மொழிப்புலவர் மாசில் பன்னூல் புலவர் செந்நாப் புலவர் வாய்மொழிப் புலவர் என வரும் தொடர்கள் கவிஞர்களின் பரந்துப்பட்ட நுண்ணிய அறிவைப் புலப்படுத்துகின்றன. இத்தகைய புலவர்களே இலக்கியங்களில் மதிப்பை நுட்பமான முறையில் உரைக்க வல்லவர்கள்.
3. சிறந்த தத்துவ மேதையாக இல்லாமல் எந்த மனிதனாலும் சிறந்த கவிஞனாக முடியாது - கோல்ரிட்ஜ்ஜின் கருத்தாகும்.
4. உண்மை நன்மை அழகு என்ற மூன்றையும் மானிட இனத்திற்கு உறுதியைத் தரவல்ல மதிப்புகளாகக் ‘கான்ட’ என்னும் அறிஞர் குறிப்பிடுகிறார்.
5. ஆழ்ந்த உணர்வு மிக்கவர்களாலேயே ஆழ்ந்து சிந்திக்க முடியும் என்றும் அதனால் வெளிப்படும் கருத்துகள் உலக உண்மைகளாய் அமையும் என்றும் ரிச்சர்ட்ஸ் கூறுகிறார்.
6. ஒரு மொழியின் உயர்ந்த எண்ணங்களை மதிப்புகளை அம்மொழியின் இலக்கியம் என்றென்றைக்கும் நினைவூட்டிக் கொண்டே இருக்கும் அத்தகைய எண்ணங்கள் மதிப்புகள் மொழி பெயர்க்க இயலாதன என்று டி.எஸ்.எலியட் கூறுகிறார்

**மதிப்புகள் அமையும் முறை**

விட்னே ஓட்ஸ் என்பவர் மதிப்புகள் அமையும் முறையைப் பாகுபடுத்திப் காட்டியுள்ளார்.

1. தலைசிறந்த ஒழுக்க நடவடிக்கையின் அடிப்படையில் மதிப்புகள் தோன்றுகின்றன.
2. கூர்மையான அறிவு இயற்கை வழி மதிப்புகள் பயன்படுகின்றன.
3. ஒரு பொருள் தரும் முடிவிலிருந்து மதிப்புகள் பெறப்படுகின்றன.
4. ஒரு பொருளின் சிறப்புத்தன்மை அல்லது முழுமைத்தன்மையிலிருந்து மதிப்புகள் கிடைக்கின்றன.
5. பண்பட்ட உயர்நிலையில் இன்பம் அனுபவிக்கையில் மதிப்புகள் தோன்றுகின்றன.
6. இயற்கை கடவுள் மெய்ம்மை ஆகிய கொள்கைகளின் அடிப்படையில் மதிப்புகள் உருவாகின்றன.

இவ்வாறாக பலமுறைகளில் மதிப்புகள் பகுக்கப்பட்டுள்ளன.

**தொல்காப்பியத்தில் மதிப்புகள்**

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

பறவை விலங்கு மரம் செடி கொடிகள் முதலிய உயிரினங்களில் மனித உணர்வுகளைப் புகுத்தி உயிரினங்கள் அனைத்திலும் மேன்மையைக் கண்டுள்ளனர். தொல்காப்பியர்

**"எல்லா உயிர்க்கும் இன்பம் என்பது**
**தான் அமர்ந்து வருஉம் மேவற்றாகும்." (தொ.பொ.பொருளி.219)**

என்று *தொல்காப்பியம்* கூறுவதால் இயற்கையின் படைப்புகளாகிய உயிர்களிடையே வேற்றுமைகள் காணப்படுவதில்லை என்னும் மதிப்பை நம்மால் உணரமுடிகிறது. இயற்கைக் கூறுகளுக்கும் மானிட உணர்வுகளுக்கும் உள்ள உறவு உணர்ச்சியை ஆழமாக அகமாக வெளிப்படுத்தியுள்ளார்.

**அகம்**

பழந்தமிழர் நெறிப்படுத்திய ஒழுங்கான பால் உணர்வுக் கோட்பாடே அகம் ஆகும். அகம் என்னும் மதிப்பு ஐந்திணையாகச் செம்மை அடைந்து அன்பாக வெளிப்படுகிறது. அவ்வன்பு மும்முதல் பொருளாகிய இன்பம்இ பொருள்இ அறம் என்பவற்றின் அடிப்படையில் அமைகின்றன. இதனை தொலகாப்பியம்

**"இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு**
**அன்பொடு புணர்ந்த ஐந்திணை" (தொ.பொ.களவு.89)**

அகம் - ஐந்திணை - அன்பு - இன்பம் - பொருள் - அறம் என்ற வளர்ச்சிநிலையில் உள்ளன. சமுதாய நோக்கில் அமைந்துள்ள அகவாழ்க்கை தமிழ் இலக்கியத்திலன்றிப் பிற இலக்கியங்களில் இல்லை. தூய காதல் முறையே பிற்கால இறையுணர்வுப் பாடல்களையும் ஆட்சி செய்கிறது. மதிப்பின் செல்வாக்கு இன்னும் இலக்கியத்தில் ஆட்சி செய்து வருகின்றன. அகம் என்பது காதல் வாழ்க்கை; சமுதாயத்தின் காதற்கோட்பாடு அக்கோட்பாடு ஒருவன் ஒருத்திக்கு மட்டும் வழிகாட்டுவது அன்று; ஒரு சமுதாயத்திற்கே வழிகாட்டுவதாகும். அதனால்தான் 'மக்கள் நுதலிய அகன் ஐந்திணை' என்று தொல்காப்பியர் குறிப்பிடுகிறார். மக்கள் என்னும் சொல் மானிட இனத்தைக் குறிப்பதாகும். ஒருவன் ஒருத்தியை மட்டும் குறிப்பிடுவது இல்லை. இக்கருத்தை, 'ஐந்திணையில் வரும் காதற்பான்மைகள் தனி ஒருவர் வாழ்க்கையில் அப்படியே நிகழக்கூடியவை அல்ல. சமுதாய முழுமை நோக்கில் எல்லாம் நிகழக்கூடியவையாகும். எனவே ஐந்திணைக்காதல் உள்ளது என்பது பெறப்படுவதாகும். எல்லாக் காதல் துறையும் ஒருதனியார்பால் காணப்படாவிட்டாலும் ஒவ்வொரு காதல் துறையும் ஒவ்வொருவர் பால் ஆங்காங்குக் காணப்படுதலின் ஐந்திணை முழுவதும் சமுதாய மக்களிடத்துப் பரந்து கிடக்கும் காதலாகவே கொள்ளவேண்டும்' என்று டாக்டர் வ.சுப. மாணிக்கம் அவர்கள் தெளிவுப்படுத்துகிறார்.

**அருள்**

அருளாவது தொடர்பு பற்றாது இயல்பாக எல்லா உயிர்கள் மேலும் செல்வதாகிய கருணை என்பர் பரிமேலழகர். உள்ளத்தில் ஏற்படும் மாசு அக இருளாகும். அவ்விருளால் ஏற்படும் இன்னல் பலவாகும். அக இருளால் விளையும் இன்னல்களைத் தீர்க்கும் ஒளியே அருளாகும். அருளைப் பற்றி அகநானூற்றுப் பாடல் வழி அறியும் போது அதன் சிறப்புப் புலனாகிறது.

**"இருள்படு நெஞ்சத்து இடும்பை தீர்க்கும்**
**அருள் நன்கு உடையர்" (அகம். 335.1-2)**

அருள் நிறைந்த நெஞ்சை உடையவர்கள் ஒளி நிறைந்த உலகினைக் காணமுடிகிறது. அருள் என்பது உள்ளத்தில் நிறைவை ஏற்படுத்த வல்ல உள்ளத்தின் இருளை நீக்கி ஒளியை ஏற்படுத்த வல்ல அரிய மதிப்பு என்பது அறிந்துக்கொள்ள முடிகிறது.

**அழகு**

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

'அழகு' என்னும் சொல்லுக்கு பல விளக்கங்கள் உள்ளன. 'உண்மை, குறிக்கோளின் வெளியீடு, முருகியல், வேற்றுமையில் ஓர்இயைபு, பொருள்களின் நுண்ணிய தன்மை' எனத் தத்தவ அறிஞர்கள் இச்சொல்லிற்கு விளக்கம் கொடுக்கிறார்கள்.

'அழகு நமக்குள்ளே ஒரு மாறுதலை ஏற்படுத்துகிறது. நம்மை உயர்நிலை வாழ்வுக்கு எடுத்துச் செல்கிறது. ஒவ்வொரு மனிதனும் கலையைப் படைக்கும் திறத்தைப் பெற முடியாது. ஆனால் அழகின் திறத்தை நுகர முடியும். குறைந்த திறமையைக் கொண்ட மக்கள், கலைவளம் பொருந்திய கட்டிடங்கள், சிற்பங்கள், ஓவியங்கள், ஆகியவற்றின் சூழலில் வாழ்வார்களானால் அழகுணர்ச்சியையும் திறமையையும் வளர்த்துக் கொள்வார்கள்' என்று பிளாட்டோ கூறுகிறார்கள்.

அழகு என்பது முருகு, திரு, கவின், எழில், ஏர் ஆகிய சொற்கள் பயன்படுத்துகிறார்கள். இதன் மூலம் காட்சி, செயல், பண்பு போன்றவற்றின் மூலம் அழகைக் கண்டு மகிழ்ச்சிக்கொள்கிறார்கள். இயற்கையின் அழகில் ஈடுபட்டு அதன்வழி பயனும் இன்பமும் அடைந்தார்கள். கலைப் படைப்பின் அழகில் ஆர்வம் கொண்டவர்கள் தமிழர்கள்.

**"உருகெழு சிறப்பின் முருகுமனைத் தரீஇ**
**கடம்பும் களிறும் பாடி" (அகம்.138.10-11)**

மனித உடம்பின் புற அழகைவிடப் பண்பு நலன்களின் அழகே அக அழகாக உண்மையான அழகாக போற்றப்படுகிறது. அழகைக் கடவுளாக-முருகனாக வழிபட்ட தன்மை இப்பாடல் வரியின் மூலம் புலப்படுகிறது.

**ஆண்மை**

ஆண்மை என்பது ஆளும் தன்மையை குறிப்பதாகும். ஆண்மை என்ற மதிப்பு வீரம், குறிக்கோள், உதவி, பகுத்துண்ணல், உறுதி, ஆளும்தன்மை என்னும் பல்வேறு வகையாக பொருள் அமைக்கப்பட்டுள்ளது. இதனை *அகநானூறு,*

**"சேர்ந்தோர்க்கு**
**உறும் இடத்து உவக்கும் உதவி ஆண்மை" (அகம்.231.1-2)**
**"ஆள்வினைக்கு எழுந்த அசைவுஇல் உள்ளத்து ஆண்மை" (அகம்.339.6-9)**

ஓர் ஆண் மகன் தன் நெஞ்சத்தில் கொண்ட குறிக்கோள் தான் சிறப்பு நிலைக்கு வழி நடத்தும் தன் சுற்றத்தார்க்கு தீங்கு ஏற்படும் போது அத்தீங்கினை களைவதற்கு உதவி புரிவதே ஒரு சிறந்த ஆண்மகனுக்குரிய இலக்கணமாகும். 'வினையே ஆடவர்க்கு உயிர்' என்ற கருத்துகளை *தொல்காப்பியம்* எடுத்துக் கூறுகிறது.

**இன்பம்**

மனிதன் ஐம்புலன்களால் இன்பத்தை நுகரமுடியும். மாறுதலுக்கு உட்படும் இன்பத்தைவிட நிலைபேறுடைய இன்பமே மதிப்பு ஆகும். ஐம்புலன்களால் பெறும் இன்பத்தினும் உள்ளத்தால் உணரப்படும் இன்பமே நிலையானதாகும்.

**"மெய்புகு வன்ன கைகவர் முயக்கம" (அகம்.11.10)**

ஒருவரது மெய் மற்றவரது மெய்யுட் புகுந்தாற் போன்று கைகள் விரும்புகின்ற இன்பம் அறத்தால் வரும் இன்பம் ஈத்து உவக்கும் இன்பம் போன்றவைகளே நிலையான இன்பமாகும். தன்னல மற்ற செயலால் விளையும் இன்பமே மானிட இனத்தை வழி நடத்திச் செல்லும் அழியா இன்பமாகும். அதுவே மதிப்புமிக்க இன்பமாகும்.

**ஒழுக்கம்**

வாழ்க்கை முறையின் அடிப்படை ஒழுக்கம் ஆகும். ஒவ்வொரு துறைக்கும் உரிய ஒழுங்குமுறைகள் உண்டு. அந்த ஒழுங்கு முறையை உணர்ந்து நடக்கையில் 'ஒழுக்கம' என்னும் கோட்பாடு பிறக்கிறது. ஒழுக்கத்தின் சிறப்பை கோட்பாடுகள் முழுமையாக வெளிப்படுத்துகிறது.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

'ஒழுக்கம் வாழ்க்கையைப் பின்னணியாகக் கொண்டுள்ளது. வாழ்க்கையிலிருந்து தோன்றுகிறது. அறிவும் பண்பாடும் வளர வளர ஒழுக்கம் மிகச் சிறந்த பக்குவத்தைப் பெறுகிறது. மனிதக் கோட்பாடுகளில் மனதைக் கவரும் ஒருமைப்பாடு ஒழுக்கத்தின் வழியே வெளிப்படுகின்றது. ஒழுக்கத்தில் பின்னணியும் வலிமையும் இடத்திற்கு இடம் மாறும். ஆனால் அது என்றும் குன்றுவதில்லை சிறப்பையும் இழப்பதில்லை' என்ற கருத்துக்கள் ஒழுக்க நிலை மேம்பாட்டிற்குச் சிறந்ததாகும். தொல்காப்பியர்

**"ஆங்காங் கொழுகும் ஒழுக்கமும் உண்டே**
**ஓங்கிய சிறப்பின் ஒருசிறை யான." (தொ.பொ.களவு132)**
**"மறைந்த ஒழுக்கத் தோரையும் நாளுந்**
**துறந்த ஒழுக்கங் கிழவற்கில்லை" (தொ.பொ.களவு133)**
**"பெரியோர் ஒழுக்கம் பெரிது" (தொ.பொ.கற்பு148)**
**"கற்பும் காமமும் நற்பா லொழுக்கம்" (தொ.பொ.கற்பு150)**

மனதைப் பற்றிய ஒழுக்கமே இலக்கியங்கள் காட்டும் மதிப்பு ஆகும். அகநானூற்று பாடல் வரிகள் இதனை,

**"பெண்கொள் ஒழுக்கம் கண்கொள நோக்கி" (அகம்.112.17)**
**"பெரியோர் ஒழுக்கம்" (அகம்.286.13)**

தீநெறி விலக்கி நன்நெறிச் செலுத்தும் பேரறிவுடையார்தம் ஒழுக்கம் பெண்களின் ஒழுக்கம் இதுவேயாகும்.

**கடவுள் வழிபாடு**

கடவுள் என்னும் சொல்லுக்கு யாவற்றையும் கடந்தவர் என்பது பொருளாகும். கடவுள் மனம், மொழி, மெய்களைக் கடந்து, எங்கும் நீக்கமற நிறைந்து உரு, அரு, அரு உருவாய் விளங்குபவர். கடவுள் பற்றிய சிந்தனை தமிழர்களுக்குத் அதிகமாக உள்ளது.

**"மாயோன் மேய காடுறை உலகமும்**
**சேயோன் மேய மைவரை உலகமும்**
**வேந்தன் மேய தீம்புனல் உலகமும்**
**வருணன் மேய பெருமணல் உலகமும்" (தொல்.பொ.அகத்.5)**

திருமால், முருகன், இந்திரன், வருணன், கொற்றவை போன்ற தெய்வங்கள் ஐவகை நிலங்களுக்கும் உரிய தெய்வங்களாக தொல்காப்பியம் குறிப்பிடுகிறது. வேங்கை, ஆல், பனை போன்ற முதிய மரங்களும், மலை, காடு போன்ற இயற்கைச் சூழல்களும் கடவுள் தோன்றும் இடங்களாக குறிப்பிடலாம். வீடுகளிலும் கடவுள் இருப்பதாக கருதி வழிபாடு நடத்திய செய்திகளை அகநானூறு பாடல்களின் வழி அறிய முடிகிறது.இதனை

**"இல்உறை கடவுட்கு ஆக்குதும், பலியே" (அகம்.282.18)**

தலைவியின் துயரினை நீங்குவதற்காக கடவுளை வாழ்த்துகையில் யாழில் நல்ல செவ்வழிப் பண்ணை இசைத்தல் மிகச் சிறந்த முறையாகும்.

**"செவ்வழி நல் யாழ் இசையினென் பையென**
**கடவுள் வாழ்த்தி." (அகம்.14.15-16)**

கடவுளை தெய்வம் என்ற சொல்லாலும் குறிப்பிட்டுள்ளதை அகநானூற்றுப் பாடல்களின் வழி அறியலாம்.

**"கொடுஞ் சுழிப் புகாஅர்த் தெய்வம்" (அகம்.110.4)**
**"உயர்பலி பெறூஉம் உறுகெழு தெய்வம்" (அகம்.166.7)**

**முடிவுரை**

E-ISSN: 2581-7140

Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

மனிதன் தனது வாழ்க்கையில் கடைப்பிடிக்க வேண்டிய முக்கிய அம்சங்கள் அனைத்தும் அவனை வழிநடத்தி செல்லக்கூடிய சிறந்த பாதையாகும். மானிட மதிப்புகள் ஒரு மனிதன் தன் முன்னேற்ற வளர்ச்சியை நோக்கி செல்லக்கூடிய சாராம்சங்களை எடுத்துக் கூறும் ஒரு குறிக்கோளாக அமைகின்றன. தன் வாழ்க்கையோடு ஒத்துப்போகக் கூடியதாகவும் சரியான நேர்கோட்டு வழிகளை நடத்தி செல்லக் கூடியவையாகவும் மதிப்புகள் பல இடங்களில் அமைகின்றன. மக்களுக்கு தூண்டுகோலாகவும் மேம்படுத்தக்கூடிய அமைப்பாகவும் அமைகின்றன.

**அடிக்குறிப்புகள்**

1. தொல்காப்பியம்- பொருளதிகாரம் இளம்பூரணர் உரை. திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் சென்னை-108. முதற் பதிப்பு - ஜீன் 1953.
2. அகநானூறு மூலமும் உரையும் - முனைவர் இரா.செயபால் நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் அம்பத்தூர் சென்னை-98. முதற் பதிப்பு - ஏப்ரல் 2004.
3. மானிட மதிப்புகள் - டாக்டர்.ஈ.கோ.பாஸ்கரதாஸ் - திருநெல்வேலி சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் - சென்னை-18. முதற் பதிப்பு - அக்டோபர் 1997.
4. தமிழ்க் காதல் - வ.சுப. மாணிக்கனார் - சாரதா பதிப்பகம் - ராயப்பேட்டை - சென்னை - 14. முதற் பதிப்பு – 2007.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

# தமிழ் இலக்கியங்களில் பரத்தையரின் வாழ்க்கை

# Life of Prostitutes in Tamil Literature

**ச.முஹம்மது அஸ்ரின்,**
முதுகலைத் தமிழாய்வுத் துறை, ஜமால் முகமது கல்லூரி, திருச்சி-620020.

## Abstract

*The lines from the Sangam literatures like Tholkapiyam and the Ettuththokai texts clearly describes the disputes caused by the prostitutes between Thalaivan and Thalaivi. The Pathinenkeezkkanakku texts which are appeared after Sangam literatures, forcing the entire society to avoid maintaining relationships with prostitutes and the Devotional texts insists to renunciate the life in the world to get happy life in the heaven. The article delineates the life of prostitutes as seen in Tamil literature.*

**Keywords:** Life of Prostitutes, Tamil Literature

கடவுள் படைத்த படைப்பினங்களில் சிந்திக்கவும் சிரிக்கவும் தெரிந்த மனிதப் படைப்பே சிறந்த படைப்பாகும். மனிதனை ஏனைய படைப்புகளில் இருந்து வேறுபடுத்திக் காட்டவே ஆறாம் அறிவான சிந்திக்கும் திறனை இறைவன் வழங்கினான். பரத்தமை என்னும் தொழிலை பெண்கள் மேற்கொண்டாலும் அதற்கு அவளுக்கு இணையாக படைக்கப்பட்ட ஆணே காரணமாகிறான். ஒரு ஆண் மகனின் இன்பம் வேண்டியும் வாழ்விற்கு வேண்டிய செல்வம் வேண்டியும் பரத்தமையை மேற்கொள்கிறாள். அத்தகைய பரத்தமை குறித்தும் பரத்தையரைக் குறித்தும் தொல்கப்பியம், சிலப்பதிகாரம், எட்டுத்தொகை நூல்கள், நீதி நூல்கள், திருமந்திரம் ஆகிய நூல்கள் கூறுவன ஆய்வு பொருளாகின்றன.

**பரத்தை - விளக்கம்**

சங்க காலம் முதற்கொண்டே இன்று வரை பரத்தை என்னும் தொழில் பெண்களால் மேற்கொள்ளப்பட்டு வருகிறது. பணத்தையும் பொருளையும் ஈட்டுவதையே நோக்கமாகக் கொண்ட முதிய பெண்கள் **"விலைமாதர் இல்லம்"** என்ற பெயரில் பூப்படைந்த கன்னிகளை வைத்து இத்தொழிலை நடத்திவருகின்றனர். பரத்தை என்னும் சொல் பெண்ணைக் குறித்தாலும் ஆண் மகனே காரணமாகவும் வாடிக்கையாளருமாக விளங்குகிறான். இத்தகைய செயலில் ஈடுபடும் பெண்களை **'பரத்தை'**, **'விபச்சாரி'**, **'தாசி'**, **'பொதுமகளிர்'**, **'விலைமகள்'**, **'விலைமாதர்'**, **'வேசி'**, **'விலைமாது'**, **'வரைவின் மகளிர்'**, **'கணிகையர்'**, **'கற்பற்றார்'** என பல பெயர்களைக் கொண்டு வழங்குவர்.

***தொல்காப்பியம்***

தமிழில் கிடைக்கப்பெற்ற தொன்மையான இலக்கண நூலான தொல்காப்பியத்தில் பரத்தமைக் குறித்த செய்திகள் பொருளதிகாரத்தில் இடம்பெற்றுள்ளன. தலைவியைப் பிரிந்து பரத்தயை நாடிச் சென்ற தலைவன் தலைவி பூப்படைந்த செய்தி அறிந்து பன்னிரண்டு நாட்கள் பரத்தையை பிரிந்து தலைவியுடன் கூடி நிறபான் என்ற செய்தியை தொல்காப்பிய சூத்திரம் பின்வருமாறு கூறுகிறது.

**"பூப்பின் புறப்பாடு ஈராறு நாளும்**
**நீத்தகன்று உறையார் என்மனார் புலவர்**

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

**பரத்தையிற் பிரிந்த காலை யான" (தொல்காப்பியம் 1131)**

சங்க காலத்தில் பரத்தையைக் குலத்தாலோ இனத்தாலோ வேற்றுமை காணாது அந்தணரும் அரசரும் வணிகரும் வேளாளரும் அவர்கள் வேண்டும் பொருளைக் கொடுத்து இன்பம் பெற்றனர். இச்செய்தியைத் தொல்காப்பியம் பின்வருமாறு கூறுகிறது.

**"பரத்தை வாயில் நால்வர்க்கும் உரித்தே**

**நிலத்திரி பின்றஃ. தென்மனார் புலவர்" (தொல்காப்பியம் 1167)**

இந்நூற்பாவில் 'தென்மனார் புலவர்' என்ற கூற்றின் வாயிலாக தொல்காப்பியரின் காலத்திற்கு முன்பே பரத்தை தொழில் இருந்துள்ளமையும் புலனாகிறது.

**"கற்புவழிப் பட்டவர் பரத்தை யேத்தினும்**

**உள்ளத்து ஊடல் உண்டென மொழிப" (தொல்கப்பியம் 1176)**

என்ற நூற்பா வாயிலாக கற்புடைய தலைவி தலவனின் பரத்தமையை புகழ்ந்தால், அவளது உள்ளத்தில் ஊடல் மேம்பட்டிருக்கும் என தொல்காப்பியர் கூறுகிறார்.

***சிலப்பதிகாரம்***

தமிழின் முதல் காப்பியமான சிலப்பதிகாரத்தில் கற்புக்கரசியான கண்ணகியை விட்டுப்பிரிந்து, பரத்தையான மாதவியின்பால் காமம் கொண்டு புணர்ந்து மணிமேகலைக்கு தந்தையாகி, ஊடலால் பிரிந்து, வினைப்பயனால் கொலைக்களப்பட்ட கோவலனின் துயரைக் கேட்ட மாதவி பரத்தை தொழிலை விட்டகன்று மணிமேகலையோடு பௌத்த துறவுயாகிறாள். இளங்கோவடிகள் நாவை காக்காத பரத்தையை பின்வருமாறு கூறுகிறார்.

**"குரல்வாய்ப் பாணரொடு, நகரப் பரத்தரொடு**
**திரிதரு மரபின் கோவலன் போல**
**இளிவாய் வண்டினொடு இன்இள வேனிலொடு,**

**மலய மாருதம் திரிதரு மறுகில்," (சிலப்பதிகாரம் 5 : 200-203)**

மேலும், பரத்தையரோடு கூடும் ஆண் மகனை காணும்போது இருவரும் காமனும் ரதியுமாக காட்சியளிப்பர் என்பதை,

**"வம்பப் பரத்தை வறுமொழி யாளனொடு,**
**கொங்கலர் பூம்பொழில் குறுகினர் சென்றோர்,**
**காமனும் தேவியும் போலும் ஈங்கு இவர்**

**ஆர்? எனக் கேட்டு, ஈங்கு அறிகுவம் என்றே" (சிலப்பதிகாரம் 10 : 219-222)**

போன்ற பாடல்கள் வாயிலாக பரத்தையரைக் குறித்து இளங்கோவடிகள் பாடியுள்ளார்.

***நற்றிணை***

எட்டுத்தொகை நூல்களில் முதல் நூலாக வைத்து போற்றப்படும் சிறப்பையுடைய நற்றிணையில் பரத்தைமை குறித்து பல புலவர்கள் பாடியுள்ளனர்,

தலைவியை விட்டுப் பிரிந்து பரத்தையுடன் கூடி வாழ்ந்து, மீண்டும் தலைவியை நாடி வரும் தலைவனை, தலைவி பழிப்பதாக அமைந்த பாடல்,

**"ஐய! குறுமகட் கண்டிரும்: வைகி**
**மகிழ்நன் மார்பில் துஞ்சி, அவிழ்இணர்த்**

**தேம்பாய் மராஅம் கமழும் கூந்தல்" (நற்றிணை 20 : 1-3)**

இப்பாடலில், தலைவி பரத்தையை **'குறுமகள்'** எனக் கூறுவதாக ஓரம்போகியார் பாடியுள்ளார்.

**"ஏர்தரு தெருவின் எதிர்ச்சி நோக்கின்**

**மார்புதலைக் கொண்ட மாண்இழை மகளிர்." (நற்றிணை 30 : 4-5)**

என்ற பாடலில் தலைவனுக்கு அறிவுரை கூறும் தோழி பரத்தையை **'மாண்இழை மகளிர்'** எனக் கூறுவதாக கொற்றனார் பாடியுள்ளார்.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

சினத்துடன் இருக்கும் என்னை நீங்கி பரத்தையிடம் சென்று அருள்புரிவாயாக எனத் தலைவி சினந்து கூறுவதாக ஆலங்குடி வங்கனார் பாடியுள்ள பாடல்,

**"முனிவில் பரத்தையை எந்துறந்த் தருளாய்" (நற்றிணை 230 : 1)**

மேலும், தலைவனால் தூதனுப்பப்பட்ட தோழியிடம் பரத்தையோடு இன்புற்றிருக்கும் தலைவனிடம் ஊடல் கொள்ளவில்லை எனத் தலைவி கூறுவதாக பரணர் பாடிய பாடல்,

**"தண்துறை யூரன் தண்டாப் பரத்தமை**
**புலவாய் என்றி தொழி! புலவேன்" (நற்றிணை 280 : 4-5)**

போன்ற பாடல்கள் தலைவன் பரத்தையோடு உறவிலிருந்ததாக சுட்டிக்காட்டுகின்றன.

***குறுந்தொகை***

எட்டுத்தொகை நூல்களுள் ஒன்றான குறுந்தொகையில், பரத்தையின் தோற்றத்தையும் உடல் அழகினையும் கம்போதியார் வருணித்து பாடிய பாடல்,

**"உழுந்துடைக் கழுந்திற் கரும்புடைப் பணைத்தோள்**
**நெடும்பல் கூந்தல் குறுந்தொடி மகளிர்." (குறுந்தொகை 384)**

இப்பாடலில், கரும்பைப் போன்ற தோளையும், நீண்ட நெடிய கூந்தலையும், சிறு வளையல்களையும் அணிந்த 'குறுந்தொடி மகளிர்' எனப் பரத்தையரை புலவர் பாடியுள்ளார்.

***பரிபாடல்***

'ஓங்கு பரிபாடல்' என்று புகழப்பெறும் எட்டுத்தொகை நூல்களுள் ஒன்றான பரிபாடலில் பல பாடல்களில் பரத்தையரைக் குறித்த செய்திகள் இடம்பெறுகின்றன. தன்னை விட்டு பிரிய எண்ணும் தலைவன் மேல் பரத்தையரின் நறுமணம் கமழுவதாகத் தலைவியின் கூற்றாக நல்லந்துவனார் பாடிய பாடல்,

**"இனிமன்னும் ஏதிலர் நாறுதி: ஆண்டுப்**
**பனிமலர்க் கண்ணரோ டாட நகைமலர்." (பரிபாடல் 8 : 47-48)**

இப்பாடலில், பரத்தையரை **'ஏதிலர்'** எனத் தலைவி கூறுவதாக புலவர் பாடியுள்ளார். மேலும். தனிமையில் வாடும் தலைவி தோழியிடம், "பரத்தையின் தோள் இன்பத்தைக் கண்டதால் தலைவன் என்னை துறந்துவிட்டான்." எனக் கூறுவதாக நல்வழுதியார் பாடிய பாடல்,

**"நாணாள்கொல் தோழி நயனில் பரத்தையில்**
**தோள்நலம் உண்டு துறந்தா னெனஒருத்தி." (பரிபாடல் 12 : 45-46)**

மேலும், தலைவி வருந்துவதற்கு காரணமான பரத்தையை 'அழகால் வசியப்படுத்தும் மானைப் போன்றவளே!' எனத் தோழிகள் கூறுவதாக நல்லந்துவனார் பாடிய பாடல்,

**"வச்சிய மானே! மறலினை மாற்றுமக்கு" (பரிபாடல் 20 : 84)**

ஆகிய பாடல்கள் பரத்தையைக் குறித்த செய்திகளைக் குறிப்பிடுகின்றன.

**கலித்தொகை**

'கற்றறிந்தார் ஏத்தும் கலி' என்று பண்டைய சான்றோர்களால் புகழப்பட்ட பெருமைக்குரிய கலித்தொகையில் பரத்தையை நீங்கித் தன்னிடம் வந்த தலைவனை நோக்கி தலைவி கூறியதாக அமைந்த பாடல்,

**"வேட்டோர் திறந்து விரும்பிய நின் பாகனும்**
**நீடித்தாய் என்று, கடாஅம், கடும் திண்தேர்**
**பூட்டு விடாஅ நிறுத்து." (மருதக்கலி 1 : 23-25)**

என்ற பாடலில் பரத்தையை பிரிந்தமையால் அவர்கள் வருந்துவார்கள். எனவே, அவர்களது நலத்தை காப்பாயாக என்று தலைவி தலைவனிடம் கூறுவதாக அமைந்துள்ளது. மேலும்,

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

முற்பகலில் ஒருத்திக்கும் பிற்பகலில் ஒருத்திக்கும் இன்பம் கொடுக்கக்கூடிய தலைவனை நோக்கி தலைவி சினந்து கூறுவதாக அமைந்த பாடல்,

**"முன்பகல் தலைக்கூடி, நண்பகல் அவள்நீத்துப்,**
**பின்பகல் பிறர்த்தேரும் நெஞ்சமும் ஏமுற்றாய்." (மருதக்கலி 9 : 10-11)**

பரத்தை மனை சென்று களித்து, இன்புற்று வந்த தலைவன் தன் தலைவியிடம் தான் கடவுள் தரிசனத்திற்குப் போய் வந்ததாகப் பொய் கூறித் தப்பிக்க முயல்வதாக அமைந்த பாடல்,

**"வண்டுது சாந்தம் வடுக்கொள நீவிய**
**தண்டாத் தீம்சாயல் பரத்தை, வியல் மார்ப!**
**பண்டு, இன்னை யல்லைமன், ஈங்கு எல்லி வந்தீயக்**
**கண்டது எவன்? மற்று உரை:**
**நன்றும் தடைஇய மென் தோளாய்! கேட்டீவாயாயின் -**
**உடனுறை வாழ்க்கைக்கு உதவி உறையும்**
**கடவுளர்கண் தங்கி னேன்," (மருதக்கலி 28 : 1-7)**

மற்றொரு பாடலில், பரத்தை வீட்டுக்கு சென்று வந்த தலைவன், குதிரை ஏறி வந்ததாகத் தலைவியிடம் பொய் கூறுகிறான். இதைக் கேட்ட தலைவி, உன் குதிரை யாரென்று தெரியும், அக்குதிரை மேலே ஏறித்திரிவாயாக! என தலைவனை நோக்கி சினந்து கூறுவதாக,

**"உருவழிக்கும் அக்குதிரை ஊரல்: நீ ஊரில், பரத்தை**
**பரியாக, வாதுவனாய், என்றும் மற்று அச்சார்த்**
**திரி, குதிரை ஏறிய செல்." (மருதக்கலி 31 : 37-39)**

போன்ற பாடல்கள் மருத நிலத்தில் தலைவனுக்கும் தலைவிக்கும் ஊடல் நிகழ பரத்தை காரணமாகிறாள் என்பதை தெளிவாகக் காட்டுகிறது.

***அகநானூறு***

அகப் பொருளைக் குறிக்கும் 'அகம்' என்னும் சொல்லை நூலின் பெயராகக் கொண்டுள்ள அகநானூற்றில், தலைவியைத் தனியே தவிக்க விட்டுப் பரத்தையோடு இன்பமனுபவிக்க விரும்பி ஒப்பனை செய்து கொண்டு தெருவைக் கடக்கும் தலைவனைத் தனது பாடலில் கோசிகக் கண்ணனார் என்னும் புலவர்,

**"நிரைதார் மார்பன் நெருதல் ஒருத்தியொடு**
**வதுவை அயர்தல் வேண்டிப், புதுவதின்**
**இயன்ற அணியன், இத்தெரு இறப்போன்." (அகநானூறு 66 : 7-9)**

பரத்தையின் உறவால் தலைவனோடு ஊடல் கொண்ட தலைவியிடம், உமது மகனின் எதிர்காலத்திற்காவது ஊடலை மறந்து கூடல் கொள்வாயாக! எனத் தோழி அறிவுரை கூறுவதாக ஓரம்போகியார் பாடியுள்ளார்

**"தேர்தர வந்த தெரிஇழை நெகிழ்தோள்**
**ஊர்கொள் கல்லா மகளிர் தரத்தரப்**
**பரத்தைமை தாங்கள்லோ இலனென வறிதுநீ**
**புலத்தல் ஒல்லுமோ? - மனைகெழு மடந்தை." (அகநானூறு 316 : 8-11)**

போன்ற அகப்பாட்டுகள் பரத்தைமை குறித்த செய்திகளை எடுத்தியம்புகின்றன.

***நாலடியார்***

சொல்லுக்கு உறுதியான நான்கு அடிகளைக் கொண்ட சமண முனிவர்களால் இயற்றப்பெற்ற நூலான நாலடியார், பரத்தையர்களை 'பொது மகளிர்' என்றும் 'வேசையர்' என்றும் குறிப்பிடுகிறது.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

**"விளக்கொளியும் வேசையர் நட்பும் இரண்டும்**
**துளக்கற நாடின் வேறல்ல - விளக்கொளியும்**
**நெய்யற்ற கண்ணே அறுமே அவர் அன்பும்**
**கையற்ற கண்ணே அறும்." (நாலடியார் 371)**

என்ற பாடலில் நெய் வற்றியவுடன் விளக்கு அணைவது போல, பொருள் நீங்கியவுடன் பொதுமகளிரின் நட்பும் ஒழிந்துவிடும் எனப் பாடியுள்ளனர். முன்னர் தொல்காப்பிய சூத்திரம் கூறியது போன்றே, பரத்தையர்கள் ஆண் மகனின் அழகையோ, குணத்தையோ, தகுதியையோ விரும்பாது அவர்களிடமுள்ள செல்வத்தையே விரும்புவர் என்பதை,

**"ஆணமில் நெஞ்சத்து அணிநீலக் கண்ணார்க்குக்**
**காணமில் லாதார் கடுஅனையர் - காணவே**
**செக்கூர்ந்து கொண்டாரும் செய்த பொருளுடையார்**
**அக்காரம் அன்னார் அவர்க்கு." (நாலடியார் 374)**

என்ற பாடல் செல்வமற்ற அழகுடைய ஆண்மகனை நஞ்சாகவும், செல்வமற்ற இழிந்தவனை கரும்பாகவும் சுவைப்பர் எனக் குறிப்பிடுகிறது. மற்றொரு பாடலில்,

**"ஆமாபோல் நக்கி அவர்கைப் பொருள்கொண்டு**
**சேமாபோல் குப்புறூஉம் சில்லைக்கண் அன்பினை**
**ஏமாந்து எமதென்று இருந்தார் பெறுபவே**
**தாமாம் பலரால் நகை." (நாலடியார் 377)**

என்ற பாடலில் பசுவைப் போல நக்கி செல்வத்தைக் கவர்ந்த பின் எருதைப் போல் கவிழ்ந்து படுத்துக் கொள்ளும் தாழ்ந்த குணத்தை கொண்டவர்களாக பரத்தையர்களைக் குறிப்பிடுகிறது.

**திருக்குறள்**

தெய்வப்புலவரான வள்ளுவர் தனது நூலான திருக்குறளில் பரத்தையரை குறித்த செய்திகளை 'வரைவின் மகளிர்' என்ற ஓர் அதிகாரத்தில் குறிப்பிடுகிறார். பொருள் மேல் ஆசையுடைய பொதுமகளிரின் இனிமையான சொல்லானது ஒருவனுக்குத் துன்பத்தைத் தரும் என்பதை,

**"அன்பின் விழையார் பொருள்விழையும் ஆய்தொடியார்**
**இன்சொல் இழுக்கித் தரும்." (திருக்குறள் 911)**

எனக் கூறிய வள்ளுவர், அவர்களைத் தழுவி அடையும் இன்பமானது உயிரற்ற பிணத்தை தழுவி அடையும் இன்பத்துக்கு ஒப்பானது என பின்வரும் குறளால் குறிப்பிடுகிறார்.

**"பொருட்பெண்டிர் பொய்ம்மை யக்கம் இருட்டறையில்**
**ஏதில் பிணந்தழீஇ யற்று." (திருக்குறள் 913)**

மேலும், ஒழுக்கமற்ற பொதுமகளிரின் தோள்களைப் பற்றுவது சுட்டெரிக்கும் நரக வேதனைக்கு ஒப்பானது என்ற கருத்தை தனது உத்தரவேதத்தில்,

**"வரைவிலா, மாணிழையார் மென்றோள் புரையிலாப்**
**பூரியர்கள் ஆழும் அளறு." (திருக்குறள் 919)**

சுட்டிக்காட்டுய வள்ளுவர், பொதுமகளிரின் இன்பத்தை ஒழுக்கமுடைய அறிவுடையார் விரும்பமாட்டார் (குறள். 914, 916) என்றும், பொதுமகளிர் பிசாசு போன்றவர்கள் (குறள். 918) என்றும், திருமகளால் நீக்கப்பட்டவரின் உறவு (குறள். 920) என்றும் குறிப்பிடுகிறார்.

***திருமந்திரம்***

சைவத் திருமுறைகளில் பத்தாம் திருமுறையாக விளங்கும் திருமந்திரத்தை இயற்றிய பதினெண் சித்தர்களுள் ஒருவரான திருமூலர், பரத்தையரைக் குறித்த செய்திகளைப் 'பொருட்பெண்டிர்' என்ற தலைப்பில் குறிப்பிடுகிறார்.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

**"ஆத்த மனையாள் அகத்தில் இருக்கவே**
**காத்த மனையாளைக் காமுறும் காளையர்**
**காய்ச்ச பலாவின் கனிஉண்ண மாட்டாமல்**
**ஈச்சம் பழத்துக்கு இடர்உற்ற வாரே." (திருமந்திரம் 201)**

என்ற பாடலில் வீட்டில் மனைவியிருக்க வேறொரு பெண்ணை நாடிச் செல்வது வீட்டில் பழுத்த பலாவை மறுத்து எங்கோ காய்த்த ஈச்சம் பழத்துக்கு ஆசைப்பட்டு அவதிப்படுவது போன்றதாகும் எனக் கூறுகிறார். மேலும்,

**"இயலுறும் வாழ்க்கை இளம்பிடி மாதர்**
**புயலுறும் புல்லின் புணர்ந்தவர் ஏயினும்**
**மயல்உறும் வானவர் சாரஇரும் என்பார்**
**அயல்உறப் பேசி அகன்றுஒழிந் தாரே." (திருமந்திரம் 206)**

என்ற பாடலில் பொருளையே விரும்பும் பொதுமகளிர், பொருளுடைய செல்வரை 'வானுலகத் தேவர்' என்றும் பொருளற்றவரை 'தொலைந்து போ' என்று கூறும் இயல்பையுடைவர்கள் எனக் கூறுகிறார்.

**முடிவுரை**

தொல்காப்பியமும் எட்டுத்தொகை நூல்களும் பரத்தையரின் வாழ்க்கை முறையையும், அவர்களால் தலைவனுக்கும் தலைவிக்கும் ஏற்பட்ட ஊடலையுமே கூறுகின்றன. அற நூல்களும், பக்தி நூலான திருமந்திரமும் பரத்தையரின் தொழிலை பழித்துக் கூறுகின்றன. முத்தமிழ் காப்பியமான சிலப்பதிகாரம் பரத்தை குலத்தையே ஒழித்து துறவிகளாக்கிப் பாடுகிறது. இவ்வாறு, காலத்திற்கேற்ப கருத்துகளைக் கூறிய தமிழ் இலக்கியங்கள் வாயிலாக **"ஒருவனுக்கு ஒருத்தி, ஒருத்திக்கு ஒருவன்"** என்ற முறையே போற்றுதலுக்குரியது என்பதை அறிய முடிகிறது.

**துணைநின்ற நூல்கள்**


1. *தொல்காப்பியம் தெளிவுரை*, புலியூர்க் கேசிகன், அருணா பப்ளிகேஷன்ஸ், சென்னை.
2. *சிலப்பதிகாரம் மூலமும் உரையும்*, புலியூர்க் கேசிகன், சாரதா பதிப்பகம், சென்னை.
3. *நற்றிணை மூலமும் உரையும்*, அ.ப. பாலையன், சாரதா பதிப்பகம், சென்னை.
4. *குறுந்தொகை மூலமும் உரையும்*, புலியூர்க் கேசிகன், சாரதா பதிப்பகம், சென்னை.
5. *கலித்தொகை மூலமும் உரையும்*, புலியூர்க் கேசிகன், சாரதா பதிப்பகம், சென்னை.
6. *அகநானூறு மூலமும் தெளிவுரையும்*, வ.த. இராமசுப்பிரமணியம், திருமகள் நிலையம், சென்னை.
7. *பரிபாடல் மூலமும் உரையும்*, புலியூர்க் கேசிகன், சாரதா பதிப்பகம், சென்னை.
8. *திருக்குறள் புதிய உரை*, புலியூர்க் கேசிகன், பூம்புகார் பதிப்பகம், சென்னை.
9. *நாலடியார் தெளிவுரை*, புலியூர்க் கேசிகன், சாரதா பதிப்பகம், சென்னை.
10. *திருமூல நாயனார் திருமந்திரம்*, திருநெல்வேலி சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், சென்னை.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

# சங்க இலக்கியத்தில் அன்னமும் ஆந்தையும்

## Swan and Owl in Sangam Literature

**சி. யுவராஜ்,** முனைவர் பட்ட ஆய்வாளர்
பாரதிதாசன் உயராய்வு மையம், பாரதிதாசன் பல்கலைக்கழகம், திருச்சிராப்பள்ளி - 24.

**Abstract**

*The fond (or) love towards birds and the knowledge to know about them can be seen through various poet's work and about people's livelihood in Sangam literature. The characteristic and emotional values of Swan and Owl were written. With hero and heroine's feelings, love and activities, we can study their characteristics mentioned in the poems. With the mentioned birds the poets gave a picturesque denotation of day and night period. From this article we can understand the values of every life amidst birds and their characteristic features portrayed by the poets.*

**Keywords**: Swan and Owl, Sangam literature

**முன்னுரை**

சங்க இலக்கியத்தில் இடம்பெற்ற பல்வேறு உயிரினங்களுள் பறைவைகள் பற்றிய குறிப்புகள் குறிப்பிடத்தக்கனவாகும். அவற்றால் சங்ககால மக்கள் தம் வாழ்வில் பறவைகள் சிறப்பிடம் பெற்றிருப்பது புலனாகும். சங்கமக்கள் தாம் வாழும் நிலப்பகுதிக்கேற்ப திணை வாழ்க்கை மேற்கொண்டார்கள். இவ்வாழ்க்கையில் பறவையினங்கள் முக்கிய இடம்பெறுகின்றன. சங்கப்பாடலடிகளில் இடம் பெரும் இரு பறவைகளான அன்னம் மற்றும் ஆந்தையினங்கள் பற்றிய அறிய வைக்கும் நோக்குமாகவே இக்கட்டுரை அமையப்படிருப்பதைக் காணலாம்.

**அன்னம்**

அன்னம் என்ற பறவை கார்ப்பருவத்தில் மிகுந்த மகிழ்ச்சியாக பறக்கக்கூடியது. மேகம் போன்ற வெள்ளநிறத்தில் உடையது. மணல் பரந்த நீர் நிலையிடத்தில் வரிசையாய்ப் பறக்கும் தன்மையுடைய அன்னப்பறவையை,

**"கார்பயம் பொழிந்த நீர்திகழ் காலை
நுண்அயிர் பரந்த தண்அயம் மருங்கில்
நுரைபரை அன்னத்து அன்ன விரைபரிப்
புல்உளைக் கலிமா மெல்லிதின்" (அகம்.234:1-4)**

அன்னப்பறவையை போன்று புல்லிய பிடரி மயிரை உடைய செருக்குடைய குதிரைகள் மணல்பரப்பில் செல்கிறது என்பதை பேயனார் தம் பாடலடிகளில் மூலமாகக் கூறுகிறார்.

கடற்கரை மணலில் இறகுகளைக் கோதுவதாவும் (நற்.73:6-9), மழைக்காலத்தில் மிக விரைவாக வானில் பறப்பதாகவும் (குறுந்.205:1-2) கூறப்பட்டுள்ளது.

அன்னத்தின் கால்கள் மிகக் குறுமையானவை. இதன் கால்களின் விரல்கள் இடையே மடிப்புடைய சவ்வுத்தோல் உள்ளது. இதனைத் 'துதிக்கால்' (ஐங்.106:2-3) என்று ஐங்குநூறு கூறுகின்றது.

பருவகாலங்களுக்கேற்ப அன்னப்பறவைகள் தமிழ்நாட்டிலிருந்து பிற இடங்களுக்குப் பறந்து செல்லும். அவ்வகையில் இமயமலைக்குப் பறந்து சென்றதை (புறம்.67:1-4)

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

அன்னப்பறிவையின் வயிற்றடியிலிருந்த தூவியை அதன் மென்மைக்காகப் படுக்கையணைகளில் பயன்படுத்தினர். இதனை,

**“மெல்லிதின் விரிந்த சேக்கை மேம்படத்**
**துணைபுண ரன்னத் தூநிறத் தூவி**
**யிணையணை மேம்படப் பாயணை யிட்டு** (நெடுநல்.131 – 133)
**இணைபட நிவந்த நீலமென் சேக்கையுட்**
**டுணைபுண ரன்னத்தின் றூவிமெல் லணையசைஇ” (கலித்.72:1 – 2)**

என்ற பாடலடிகள் புலப்படுத்துகின்றன. அன்னப்பறவைகள் தூய வெண்மைக்கு எடுத்துக்காட்டாக உரைக்கப்பட்டுள்ளன. இதன் தூவிகளைச் சங்க கால மக்கள் பஞ்சணைகளாகப் பயன்படுத்தியுள்ளனர்.

**அன்றில்**

அன்றில் பனைமரங்களில் வாழும் பறவையினத்தைச் சார்ந்தவை. இப்பறவையில் ஆண், பெண் இருவரும் சார்ந்தே வாழும். இப்பறவையில் ஒன்று பிரிந்தால் மற்றொன்று உயிர் வாழாது. இருவரும் ஒன்றுபட்டு வாழாத காலத்தில், அன்றில் பறவை போலப் புலம்பிக்கொண்டு துன்புற்று வாழும் வாழ்க்கையை என்னால் தாங்கிக்கொள்ளது என்பதை,

**“ஒன்றில் காலை அன்றில் போலப்**
**புலம்புகொண்டு உறையும் புன்கண் வாழ்க்கை” (நற்.124:1-2)**

என்ற தம் பாடலடிகள் வழியாக மோசி கண்ணத்தனார் புலப்படுத்துகிறார்..

கடற்கரையில் உள்ள பனைமரத்தில் அன்றில் கூடுகட்டி வாழும். தலைவன் பரத்தையுடன் இருப்பதும், தலைவியானவள் தனிமையில் தலைவனை நினைத்துக் கொண்டு உறங்காமலே வாழ்வது கடுமையானது என்பதை,

**“………………..எல்லி**
**மனைசேர் பெண்ணை மடிவாய் அன்றில்**
**துணையொன்று பிரியினுற் துஞ்சா காணென” (அகம்.50:10-12)**

என்பதை அன்றில் பறவையின் மூலமாகக் கருவூர்ப் பூதஞ்சாத்தனார் தம் பாடலடிகளில் விளக்குகிறார். தலைவன் தலைவியைப் பார்க்க இரவுக்குறி வருவதை, அன்றில் பறவை தன் துணையோடு இணைந்தே வாழும் தன்மையை,

**“செக்கர் தோன்றத் துணைபுணர் அன்றில்**
**எக்கர்ப் பெண்ணை அகமடல் சேர” (அகம்.260:6-7)**

அன்றில் பறவைப் போலவே தலைவனும் தலைவியும் இணைந்தே வாழவேண்டும் என்று மோசிக் கரையனார் தம் பாடலடிகளில் எடுத்துக்காட்டுகிறார். இப்பறவை சிறு கோல்களால் அடர்ந்த மரங்களில் எவரும் எளிதில் காணமுடியாத இலை, மட்டை முதலிய மறைவான சூழலில் கூடுகட்டி வாழும் (குறுந்:301:1-5).

தலைவி தலைவனை நினைத்துக் கொண்டே வருத்தப்படுகிறாள். தோழி, தலைவன் பகங்குறியில் தலைவியைத் தனியிடத்தில் கண்டு சொல்வதை, அன்றில் பறவை பனைமரங்கள் ஓங்கி வளர்ந்துள்ள வெண்மையான மணல் பரந்த தோட்டங்களில் தன் பேடையை அழைக்கும் இடத்தில் இளைப்பாறிச் செல்லும். கடற்கரைக் கழி ஓரங்களிலும், கடற்கரை ஊர்களிலும் மனிதர் இடையூறு செய்யாவிடில் உள்;ர் மரங்களில் கூடுகட்டி வாழும் தன்மை வாய்ந்ததை,

**“பெண்ணை ஓங்கிய வெண்மணற் படப்பை**
**அன்றில் அகவும் ஆங்கண்**
**சிறுகுரல் நெய்தலெம் பெருங்குழி நாட்டே” (அகம்.120:14-16)**

என்ற பாடலடிகளில் வழியாக நக்கீரனார் உணர்த்துகிறார்.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

தலைவன் பகுற்குறி மற்றும் இரவுக்குறி வருவதைத் தவிர்க்க வேண்டும். விரைவு விரைவில் செய்துக்கொள்ளுவதை, மரத்தின் கண்முள்ளால் கட்டப்பெற்ற கூட்டினுள் தன் சேவலுடன் புணர்ந்து மகிழப்பெறாத சிறியகரிய அன்றில் பேடையானது துன்பமுற்று வருந்துகின்றது. கடவுளுக்குரிய பனைமரத்தில் பொது மன்றத்திலிருந்த பனையிலும் இப்பறவை கூடுகட்டி வாழ்வதை,

**"கடவுள் மரத்த முள்மிடை குடம்பைச்**
**சேவலொடு புணராச் சிறுகரும் பேடை**
**இன்னாது உயங்குச் கங்குனும்"** (அகம்.270:12-14)

அகநானூற்றுப்பாடலடிகளின் மூலமாகச் சாகலாசனார் புலவர் வெளிப்படுத்துகிறார். ஊர் மன்றத்துப் பனைமரத்தில் இருந்துகொண்டு ஆணும் பெண்ணும் புணரும் அன்றில் பறவைகள் பேசிக்கொள்ளும் உயவுக்குரல் கேட்கும். அந்தக்குரல் கேட்கும் போதெல்லாம் கண்ணுறங்காமல் இருக்கும் அவள் உயரம் மேலிட்டு வருந்துவதை,

**"தொன்றுஉறை கடவுள் சேர்ந்த பாரரை**
**மன்றப் பெண்ணை வாங்குமடற் குடம்பைத்**
**துணைபுணர் அன்றில் உயவுக்குரல் கேட்டோறும்"** (நற்.303:3-5)

எனும் நற்றிணைப் பாடலடிகள் மூலமாக மதுரை ஆருலவிய நாட்டு ஆலம் பேரிசாத்தனார் கூறுவதில் அறியமுடிகிறது.

மன்னன் வருமன் மாலை வருகின்ற என்று ஊது கொம்பு போல ஓசை எழுப்பதுகின்ற வளைந்த வாயுடைய அன்றில் பறவை ஓங்கி உயர்ந்த பனைமரத்தின் உள்மடலில் இருந்தபடி தன் துணையை அழைக்கக் குரல் கொடுப்பவை,

**"ஏங்குவயி ரிசைய கொடுவா யன்றில்**
**ஓங்கிரும் பெண்ணை யகமட லகவ"** (குறிஞ்சி.219-220)

என்ற அடிகளில் அன்றிலின் வளைந்த வாய் உள்ளத்தை குறிஞ்சிப்பாட்டின் மூலமாகக் கபிலர் சுட்டப்பட்டுள்ளார்.

ஆண் அன்றில் பறவையின் தலை சிவப்பாக நெருப்பு நிறத்தில் இருக்கும் பெண் அன்றில் வாய் இறால்மீன் போல இருக்கும். அன்றில் ஆணும் பெண்ணும் தடா என்னும் மரத்தின் உயர்ந்த மரக்கிளையில் கட்டியிருக்கும் தன் கூட்டில் இருந்துகொண்டு ஓன்றோடொன்று நள்ளிலரவில் பேசிக்கொள்ளும அவை நரலும். இந்த ஒலி காதலனைப் பிரிந்திருப்போரைச் சாகடிப்பது போல் இருக்கும் இந்த நேரத்தில் அவர் வரவில்லை என்பதை, அன்றில் தலை செம்மை நிறமாகவும், செம்பூப்போலவும் இருப்பதை,

**"நெருப்ப என்ன செந்தலை யன்றில்**
**இறவி அன்ன கொடுவாய்ப் பெடை யொடு**
**தடவி னோங்சினைக் கட்சியிற் பிரிந்தோர்"** (குறுந்.160:1-3)

அன்றில் தலை செம்மை நிறமாகவும், செம்பூப்போலவும் இருப்பதை என்ற தம் குறுந்தொகைப் பாடலடிகள் மூலமாக மதுரை மருதனிள நாகனார் புலப்படுத்துகிறார்.

ஒருவரையொருவர் பிரியாதிருப்பதற்கு அன்றிலின் வாழ்க்கை சான்று காட்டப்படுகின்றது.

**ஆந்தையினங்கள்**

ஆந்தை என்ற பெயர் சங்க இலக்கியத்தில் இடம் பெறவில்லை. இப்பெயரை உரையாசிரியர்களே தம் உரைகளில் பெரிதும் பயன்படுத்துகின்றனர். எனவே, ஆந்தை என்ற பெயர் பிற்கால வழக்கு என்பது புலனாகும். இது இவ் இனப்பறவைகளுக்குப் பொதுப்பெயராகப் பயன்படுத்தப்படுகின்றது.

**கூகை**

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019
Available at: www.ijtlls.com

கூகை இடிந்த கட்டிடங்களிலும், நெற்களஞ்சியங்களிலும் காணப்படும் ஒருவகை ஆந்தையாகும். இது மஞ்சளும் வெண்மையும் கலந்த நிறத்தோடும் காணப்படும். கூகை நள்ளிரவில் தான் வேட்டையாடும், பொந்தில் வாழும் இல்லிலுள்ள எலியை இரையாகக் கொள்வதை,

**"திங்கள் கல்சேர்பு கனையிருள் மடியின்**
**இல்எலி வல்சி வல்வாய்க் கூகை**
**கழுதுவழங் குயாமத் தழிதகக் குழறும்**
**வளைக்கட் சேவல் வாளாது மடியின்" (அகம்.122:12-15)**

இவ் இரவான பகல்பொழுது போலவே இருப்பதைவும், தலைவன் தலைவியைக் காண வரும்போது மாட்டிக்கொள்வனோ எனும் பாடலடிகள் மூலமாக பரணர் உணர்த்துக்கிறார். கூகை வெள்ளை எலியையும் உணவாகக் கொள்ளும். இதனை,

**"எம்மூர் வாயில் ஒண்டுறைத் தடைஇய**
**கடவுள் முதுமரத்து உடனுறை பழகிய**
**தேயா வளைவாய்த் தெண்கண் கூருகிர்**
**வாய்ப்பாறை அசாஅம் வலிமுந்து கூகை**
**மையூன் தெரிந்த நெய்வெண் புழுக்கல்**
**எலிவான் சூட்டொடு மலியப் பேணுதும் (நற்.83:1-6)**

கூகையே நீ, அவர் என்னை நாடி நள்ளிரவில் வரும்போது உன் குரலை எழுப்பி, மற்றவர்களின் தூக்கத்தைக் கலைத்து எழுப்பாமல் இருந்தால், உனக்கு எலிக்கறியைச் சுட்டு விருந்து படைக்கிறேன் என்று தலைவியின் கூற்றில் நின்று தோழி வேண்டிக்கொள்கிறாள் என்ற தம் பாடல்களின் மூலமாகப் பெருந்தேவனார் உணர்த்துகிறார்.

**குரால்**

குரால் என்பது ஆந்தை வகையுள் ஒன்று. குரால் கூகை என்ற பெயர் இருபெயரொட்டுப் பெயராக வந்து குராலாகிய கூகை என்று பொருள்படும். இங்கு குரால் சிறப்புப் பெயராகவும் கூகை பொதுப் பெயராகவும் வருகின்றது.

தலைவன் பிரிவின் ஒன்றான பொருளீட்டச் சென்றான். அவ்வூர் வழிகளில் கொடூரமாகச் செயல்கள் நடந்தெறியும் புலால் நாற்றம் நீங்காத கையினராய்க் கழுவாத வாயை உடை வரால் உடையது பயணத்த அல்வழியானது. குரால் என்ற வகை ஆந்தையினப் பறவை சிறிய ஊரின் அருகில் மரத்தில் இருக்கும் என்றும் பெரிய அடிமரத்தையுடைய வேம்பின் கொம்பில் இருக்குமென்றும் அகன்ற நெடிய தெருவில் பயப்படும்படிக் கூகையோடு சேர்ந்து குழறும் என்பதை,

**"புலாஅற் கையர் பூசா வாயர்**
**ஒராஅ உருட்டுங் குடுமிக் குராலொடு**
**மராஅஞ் சீறூர் மருங்கில் தூங்கும் (அகம்.265:18-20)**

எனும் பாடலடிகளின் மூலமாக மாமூலனார் எடுத்துக் கூறுகிறார்.

கடலலையின் ஒலி ஓயாமல் கேட்டுக்கொண்டே இருக்கிறது. பூந்தாதுகளை அள்ளிக்கொண்டு வீசும் ஊதைக் காற்று 'தவ்' என்று என்னை முடங்க வைக்கிறது. மூதூரில் மணல் மலிந்து கிடக்கும் தெருவில் எனக்கு மரத்தில் இருக்கும் ஆண் கூகை குரல் எழுப்புவதை,

**"பாரரை வேம்பின் படுசினை இருந்த**
**குர அல் கூகையும் இதாஅ இசைக்கும்**
**ஆனாநோய் அடவருந்தி இன்னும்**
**தமியேன் கேட்குவென் கொல்லோ**
**பரியரைப் பெண்ணை அன்றில் குரலே (நற்.218:7-11)**

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

என்ற தம் பாடலடிகள் வழியாக கிடங்கில் காவிதிக் கீரங்கண்ணனார் புலப்படுத்துகிறார். கூகைக்குத் தலையில் குடுமி போன்று மன்னனுக்கு எமன் சுற்றத்தாரைத் தஞ்சம் அடைய, பெரிய மாளிகைகளிலே வெந்த கரியான குதிர்களிலே, ஆணும் பெண்ணும் குஞ்சுகளுமாகக் கோட்டான் குடியிருந்து கத்துவதை,

**"நெடுநகர் வீழ்ந்த கரிகுதிர்ப் பள்ளிக்**
**குடுமிக் கூகை குராலொடு முரல"** **(மதுரைக். 169-170)**

என்னும் குரால் செயலை தம் பாடலடிகளின் மூலமாக மாங்குடி மருதனார் புலப்படுத்துகிறார்.

**குடிஞை**

குடிஞை என்பதற்கு பேராந்தை எனப் பொருள் கூறுவர் உ.வே.சா. இது ஆந்தையினத்தில் பெரியதாக இருக்க இடமுண்டு. பொன் செய்கின்ற தட்டான் ஊதுகுழல் கொண்டு தணலை ஊதும்போது பூம்பூம் என்ற ஓசை எழுப்பது போலப் பேராந்தையின் குரலோசை இருந்ததை,

**"மரந்தரை மணந்த நனந்தலைக் கானத்து**
**அலந்தலை ஞெமையத்து இருந்த குடிஞை**
**பொன்செய் கொல்லின் இனிய தெளர்ப்ப** **(நற்.394:1-3)**

என்ற பாடலடிகள் வாயிலாக ஔவையார் விளக்கிறார்.

குடிஞையின் ஓசையொடு மிகுந்த ஒற்றுமையிருப்பதால் குடிமருள் 'கடுந்துடி இரட்டும்' (புறம்.170:6) 'உருள்துடி மகுளியின் பொருள் தெரிந்திசைக்கும்' (அகம்.19:4) என்று குறிப்பிட்டனர்.

தானியத்தை அரைக்கும் திரிகை எழுப்பும் ஓசைபோலச் சேட்புலத்து இருந்த குடிஞையின் மென்குரல் மெதுவாக வந்து ஒலிக்கும். இதனை,

**"திரிவயின் தெவிட்டுஞ் சேட்புலக் குடிஞைப்**
**பைதல் மென்குரல் ஐதுவந் திசைத்தொறும்" (அகம்.283:6-7)**

என்ற பாடலடிகள் உணர்த்தும்.

வெகுண்டு எழுகின்ற குரலினையுடைய பேராந்தைச் சேவல், புற்கள் ஒழிந்த வெடிப்பிடங்கள் தனித்திடச் சென்று மலையில் கற்கள் உருண்டு விழும் போது ஓசை போல ஒலிக்கும், குடிஞை வெகுண்டு எழுப்பும் குரலோசை மலையின் உருளும் கல் செய்யும் ஓசைபோல இருந்தலை,

**"உருத்தெழு குரல குடிஞைச் சேவல்**
**புல்சாய் விடரகம் புலம்ப வரைய**
**கல்லெறி இசையின் இரட்டும் ஆங்கண்" (அகம்.89:3-5)**

என்னும் பாடலடிகள் வழியாக மதுரைக் காஞ்சிப் புலவர் விளக்கிறார்.

குடிஞை, புலிதுஞ்சு நெடுவரையிலும் (புறம்.170:5-7), நெடுமால் வரையிலும் (அகம்.9:13), புல்சாய் விடகரகத்திலும் (அகம்.89:3), துறுகல்லடுக்கத்திலும் (ஐங்.291:1) வாழும்.

காட்டில் இருந்த குடிஞையின் குரல் உழிஞ்சில் மரக்கவட்டில் இருந்த பெட்டைப் பருந்தின் குரலோடு ஒருங்கு இசைக்கும் (புறம்.370:5) ஆகுளிப்பறையின் கண்ணில் விரலை ஊன்றித் தேய்த்துச் செய்யும் பூம்பூம் ஓசைபோலத் திருப்பித் திருப்பி ஒலிக்கும் குடிஞையை மலைபடுகடாம் குறிப்பிடுவதைக் (மலைபடு.140- 141) காணமுடிகிறது.

**முடிவுரை**

சங்க காலப் பாடல்களின் பறவைகளின் மீதான அன்பிலும் அதன் அறிவியலும் மக்களின் வாழ்வியரைக் கொண்டு புலவர்கள் தன் பாடலடிகளின் மூலமாகக் காணலாம். அன்னம் மற்றும் ஆந்தை பற்றிய வாழ்வியலையும் தன்மைகளையும் உணர்வுநிலையையும் அழகுறப் பாடியுள்ளார். தலைவன், தலைவியை வைத்தும் இவர்களின் உணர்வுகள் செயல்பாடுகள் மற்றும் அன்பின் வாழ்வியலையைக் காட்டி தம் பாடலடிகளின் மூலமாகச்

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

செம்மையுறப் பார்க்க முடிகிறது. பறவைகளின் உருவங்கள் நிறங்கள் சத்தங்கள் கொண்டு பகற்குறியா அல்லது இரவுக்குறியா என்பதை அறிந்துகொள்ளும் வகையில் சொல்லோவியமாகக் காணமுடிகிறது. சங்கப் புலவர்கள் உயிர்களின் முக்கியத்துவத்தைத் தந்து மற்றும் உயிரினம தன்மையை அறிந்துக்கொள்ளவும் இக்கட்டுரையின் வாயிலாக முயலப்பட்டுள்ளதைக் காணலாம்.

**துணைநின்ற நூல்கள்**

1. வேங்கடசாமி நாட்டார். ந.மு. & வேங்கடாசலம் பிள்ளை. ரா. *அகநானூறு.* சைவசித்தாந்த நூற்பதிப்பக்கழகம், சென்னை -18. ஆண்டு: 1944.
2. சாமிநாதையர். உ.வே. *குறிஞ்சிப்பாட்டு.* உ.வே.சாமிநாதையர் நூல்நிலையம், சென்னை-90. ஆண்டு: 1974.
3. சாமி. பி.எல். *குறுந்தொகை.* கழக வெளியீடு, சென்னை- 18. ஆண்டு: 1967.
4. துரைசாமிப்பிள்ளை. ஔவை.சு. *நற்றிணை.* கழக வெளியீடு, சென்னை - 18. ஆண்டு: 1967.
5. சாமிநாதையர். உ.வே. *மலைபடுகடாம்.* உ.வே.சாமிநாதையர் நூல்நிலையம், சென்னை-90. ஆண்டு: 1974.

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com


# சங்க இலக்கியங்களில் உளவியல் பரிமாணங்கள்

## Psychological Dimensions in Sangam Literature

**ப.ராகசுதா,** முனைவர் பட்ட ஆய்வாளர், நெறியாளர் **முனைவர் ம.செந்தில்குமார்,**
இணைப்பேராசிரியர், தமிழ்த்துறை, திருவள்ளுவர் பல்கலைக்கழகம், வேலூர் - 632115.

**Abstract**

*The Sangam literature is the periodical documentary of the mythical and cultural orthodox knowledge of the Sangam Tamil people in the internal forms of man. Tamil literature registers the inner feelings and heroic feelings of the Tamil people. The unique identity of Tamil people is Sangam Literature. These are the reasons for Tamil being a 'Semozli'. Psychology is the recent trend in the 20th and 21st centuries of the western world but to the Tamil people; it is not new, lots of evidences on the study of the psychological states of men and women are portrayed in the classical works of Tamil Literature. Hence, the object of this article is to explore the nature and psychological aspects of the leader (Thalaivan) and the psychological aspects of the beloved (Thalaivi).*

**Keywords:** Culture, Sangam Literature, Semozli, Psychology of ancient Tamil people.

**முன்னுரை**

சங்கத் தமிழர்களின் தொன்மையான பண்பட்ட மரபு சார்ந்த அறிவு முறைகளையும், மனிதனின் அகம், புறம் சார்ந்த வகைமைகளில் ஆவணப்படுத்தி வைத்திருக்கும் கலைப்பெட்டகம் சங்க இலக்கியங்கள். தமிழர்களின் அக உணர்வுகளையும் வீர உணர்வுகளையும் உள்ளடக்கி உவப்பன சங்க இலக்கியங்கள். தமிழரின் தனி அடையாளம் சங்க இலக்கியம். செம்மொழியாக தமிழ் திகழ்வதற்கு இவ்விலக்கியங்கள் தான் காரணமாக அமைகின்றன. தலைவன், தலைவி உள்ளத்து வேட்கையின் இயல்புகளையும், உளவியல் பாங்கினையும் எடுத்து ஆராய்வதே இக்கட்டுரையின் பொருண்மைகளாக அமைகிறது.

**உளவியல் நோக்கில் தமிழ் இலக்கியம்**

உளவியல் பற்றிய சிந்தனைகள் ஆரம்ப காலத்தில் தத்துவவாதிகளான சாக்ரடீஸ், அரிஸ்டாட்டில் போன்ற அறிஞர்களிடம் தோன்றியதாக வரலாறு கூறுகிறது. தத்துவ கருத்துகளுக்கு இணையான உளவியல் சிந்தனைகள் சங்கத் தமிழ் இலக்கியங்களில் பரவிக்கிடக்கின்றன. தமிழில் உளவியல் சிந்தனையை கூறியவர் திருவள்ளுவர்,

**"அடுத்ததுகாட்டும் பளிங்கு போல் நெஞ்சம்**
**கடுத்தது காட்டும் முகம்"(குறள். 706)**

குறிப்பறிதல் எனும் அதிகாரத்தில் உளவியல் கோட்பாட்டு சிந்தனைப் பற்றி திருவள்ளுவர் கூறியிருப்பது வியக்கத்தக்கது. உள்ளத்திற்கும், புலனுக்கும் உள்ள குறிப்பும் அதனால் ஏற்படுகின்ற உளவியல் சிந்தனையும் காண இயல்கிறது. உளவியல் கோட்பாட்டாளர்கள் அகத்தை சார்ந்து புறமும், புறத்தைச் சார்ந்து அகமும் செயல்படுகிறது என்று குறிப்பிடுகின்றனர். இத்தகைய ஆய்வுக்கு முன்னரே தமிழர் தாம் அனுபவித்த வாழ்வியல் நெறிகளை கொண்டு உளவியல் பகுப்பு முறையை இலக்கியத்தில் வெளிப்படுத்தியுள்ளனர். தலைவியின் களவு, கற்பு என்ற இரண்டு பாகுபாட்டு நெறிகளும் உளவியல் மற்றும் வாழ்வியல் இயல்புகளை உரைக்கின்றன.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

**களவு**

தலை மக்கள் இருவரும் பிறர் அறியா வண்ணம் கூடி காதல் இன்பத்தினை அனுபவிப்பது களவு ஒழுக்கமாகும். இக்களவு வாழ்க்கையில் தலைவி தன் உள்ளத்தின் உணர்வுகளை பரிமாறிக் கொள்கிறாள். களவு வாழ்க்கையில் தலைவி தன் உள்ளத்தின் எழுச்சியினை செய்கையின் வாயிலாக குறிப்பின் மூலம் வெளிப்படுத்துவாள் என்பதனை தொல்காப்பியர்,

**"அச்சமும் நாணும் மடனும் முந்துறத்த**
**நிச்சமும் பெண்பாற்கு உரிய என்ப" (தொல்.பொருள்.96)**
**"காமம் சொல்லா நாட்டம் இன்மையின்**
**ஏமுற இரண்டும் உள என மொழிப" (தொல்-107)**

இந்த நூற்பாக்கள் மூலமாக அச்சம், நாணம், மடன் என்ற மூன்று பண்புகளும் தலைவிக்குரியவை. இவற்றை உள்ளத்தின் வாயிலாக காதல் உணர்வை உணர்த்துவாள். இவற்றைத்தவிர மாறாக நேரடியாக உணர்த்தமாட்டாள் என்று குறிப்பிடப்பட்டுள்ளதை காணமுடிகிறது.

**தலைவியின் உள கோட்பாடு**

தலைவியின் உள்ளத்தின் இயல்புகளை சங்க இலக்கியங்கள் இவ்வாறாக விளம்புவதை காணலாம்.

**"கேழல் பேழ்வாய் ஏற்றை**
**பலா அமல் அடுக்கும் புலாறு ஈர்க்கும்**
**கழை நரல கல்பின் ஆங்கண்" (அகம். 8)**

தலைவியின் மனதில் தோன்றிய ஆளுமை பண்பை பெருங்குன்றூர் கிழார் எடுத்து காட்டுகிறார். தலைவன் களவொழுக்கம் கொண்டு பல நாள் செல்கிறான். அதனை தலைவி தலைவனுக்கு நயமாக எடுத்து உணர்த்துவதை காணலாம். தன்னுடைய தொல்குடிக்கு தலைவனின் செயல் தன்னுடைய ஆளுமை பண்பினால் வெளிப்படுத்துவதை காணலாம்.

**தலைவியின் பகுப்பாய்வுத் திறன்**

மனித இனத்தின் அடிப்படையான உணர்ச்சியாக பாலுணர்வு செயல்படுகிறது. பாலுணர்ச்சியானது தன் போக்கில் செயல்படாமல் சமுதாய கோட்பாட்டுக்கு ஏற்ப செயல்படாமல் சமுதாய கட்டாயத்தின் அடிப்படையில் சமுதாயத்தில் பண்பாடு, நாகரீகம், மரபு போன்ற பொதுமை கூறுகளை மையமாகக் கொண்டு செயல்படுகிறது. தலைவியின் உளபாங்கானது தனக்கு துன்பம் நேர்ந்த காலத்தில் உதவி செய்த தோழியை புகழ்ந்து உரைப்பதின் வாயிலாக அறிந்துக் கொள்ளலாம்.

**"நீடலர் ஆசிவருவர் வல்லென**
**கங்குல் உயவுத்துணை ஆசிய**
**துஞ்சாது உறைவி இவள்உவந்ததுவே" (அகம். 298)**

இப்பாடலில் தலைவி தலைவனுடன் கூடி இன்பமாய் இருக்கும் சமயத்தில் தோழியின் நினைவினை தலைவனிடம் கூறுகிறாள். இதனையே வள்ளுவர்,

**"காலத்தினாற் செய்த உதவி சிறிதெனினும்**
**ஞாலத்தின் மாணப் பெரிது"(திருக், 102)**

தக்க சமயத்தில் உதவி புரிந்தவர் அவர் செய்த உதவி சிறிதாக இருந்தாலும் அது உலகை விட பெரியதாக கருத வேண்டும் என்று கூறுகிறார். தலைவிக்கு தலைவன் தான் முக்கியமானவனாக இருப்பினும் அவனினும் மேலாக தோழியின் செயலை புகழ்ந்துரைப்பதின் வாயிலாக தலைவியின் உளபாங்கு புலனாகிறது.

**களவும் - கற்பும்**

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

களவுக் கூட்டத்திற்குப் பின் தலைவன் தலைவியை முறைப்படி மணந்து இல்லறம் புரியும் ஒழுக்கம் கற்பு வாழ்க்கையாகும். சொன்ன சொல் தவறாதிருத்தல், மனம் ஒரே நிலையில் நிற்றல் போன்ற நிலைகளை கற்புக்கு இலக்கணமாக கூறலாம். தமிழரின் பண்பாட்டுக் கூறாக உணர்வாக கற்பு நெறி போற்றிப் புகழப்படுகிறது. ஒரு பெண் கற்புடன் இருப்பாள் எனில் இவ்வுலகத்தையே எறிக்கும் ஆற்றல் அவளிடம் உண்டு என்பதனை தமிழ் இலக்கியங்கள் பறைசாற்றுகின்றன. பெண் கற்போடு இருப்பதை விட வேறு அப்பெண்ணுக்கு அணி செய்யும் வேறு எதுவும் இல்லை என்று வள்ளுவர் கூறுகிறார்.

**“பெண்ணின் பெருந்தக்க யாவுள கற்பெனும்**
**திண்மை உண்டாகப் பெறின் குறள்” (குறள். 54)**

என்று பெண்மையை போற்றியுள்ளார்.

**“கற்பெனப்படுவது கரணமொடு புணரக்**
**கொளற்கு மரபின் கிழவன் கிழத்தியைக்**
**கொடைக்குரி மரபினோர் கொடுப்பக் கொள்வதுவே” (தொல். 1088)**

தலைவியை மணம் செய்து கொள்ள தகுதியுடைய மரபினை உடைய தலைவன், தலைவியை கொடுப்பதற்கு உரிய மரபினை உடையோர் கொடுப்ப மணம் செய்து இல்வாழ்க்கை நடத்துவதற்கு கற்பு வாழ்வு என்று குறிப்பிடுகிறார்.

**“பொற்பெமை சிறப்பின் கற்புஎனப் படுவது**
**மகிழ்வும் ஊடலும், ஊடல் உணர்த்தலும்**
**பிரிவும் பிறவும் மருவியது ஆகும்” (அகப்பொருள்.200)**

கற்பு பொலிவினைத் தருகின்ற ஒரு பெண்ணுக்கு மேலும் அழகு சேர்க்கின்ற ஒளிர் ஆபர குணமாக சித்தரிக்கப்படுகிறது. அத்தகைய கற்பு வாழ்க்கை இருவீட்டாரின் உயர் பண்பினை எடுத்தியம்பும். உள்ள மகிழ்வு, கூடுவதற்கு இன்னும் சிறப்பு சேர்க்க ஊடல், அவ்வூடலை உணர்தல், தலைவன் பிரிவு அவற்றுடன் பொருந்தியதுதான் கற்பு. கற்பு எனப்படுவது உடலுடன் தொடர்பு உடையது அன்று மனதளவில் கட்டுப்பாட்டுடன் இருப்பது கற்பின் தன்மையாகும்.

**ஆளுமைக் கோட்பாடு**

ஆளுமை குணத்திற்கு பல்வேறு காரணம் குறிப்பிட்டு உள்ளனர். மனிதனின் ஆளுமை தன்மை எல்லையற்றது. ஒரு மனிதனின் ஆளுமை தன்மை பல்வேறு சூழ்நிலை காரணிகளால் உருவாக்கப்படுபவைகள். அவை அந்த சூழலுக்கேற்ப மாறுபாட்டினை கொண்டு அந்த மனிதனின் ஆளுமை குணத்தை வெளிப்படுத்தும் தன்மை கொண்டது. மூரே என்பவர் பிறப்பிலிருந்து இறப்பு வரை உள்ளத்தின் இயக்கங்களும் செயல்களும் தொடரியலாக நடத்தைகள் வடிவில் வெளிப்படுத்துகின்ற கட்டமைப்புதான் ஆளுமை என்கிறார். கற்பு வாழ்வில் தலைவனை புறநிலையாக கொண்டு தலைவிக்கு ஆளுமைப் பண்பு வளர்கிறது. தலைவன் பரத்தையோடு சென்று நீராட்டு அயர்ந்து மீண்டு வரும் தலைவனிடம் தலைவி ஊடல் கொண்டு தலைவன் தன்னை பொய்யாக புகழ்வதை,

**“இளமை சென்று தவத் தொல்ல.்தே**
**இனிமை எவன்செய்வது பொய்ம்மொழிமெக்கே” (அகம். 6)**

என்னும் வரிகளில் தலைவியின் ஆளுமை குணம் வெளிப்பட்டு உண்மைத் தன்மையினை தலைவி உணர்வதை காணலாம்.

**தலைவியின் அன்பு பரிமாணங்கள்**

தலைவன் தலைவியைப் பொருள்வயிற் பிரிந்தான் பிரிவினை ஆற்றாத தலைவி உடல் மெலிந்தாள். அதனை கண்ணுற்ற தோழி ஆற்றுதல் சொல்லும் போது தலைவி தலைவியை இவ்வாறாக புகழ்கிறாள்,

**“புலம்பெயர்ந்து உறைதல் செல்லாது இலங்குதலை**

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

**விருந்தின் வெங்காட்டு வருந்தி வைகும்" (அகம்.241)**

வெம்மை பொருந்திய காட்டிலேயே வருத்தமுற வைக்கும் வெப்பம் மிகுதி வெப்பத்தின் விளைவாக மழையின்றி அருவிகள் அற்று போயின. மான்களும் வெப்பக்கதிரை நீரென கருதி அருந்த ஓடும். தலைவன் அத்தகைய இடத்தைக் கடந்து சென்றுள்ளார் என்று தலைவி வருத்தம் கொள்கிறாள். தலைவன் பால் தலைவி வைத்துள்ள அன்பின் வெளிப்பாடு புலனாகிறது.

இரவுக்குறிக்கண் வரும் தலைவன் பல துன்பங்களுக்கு ஆளாகி வருத்தமுற நேரிடும் என்று அஞ்சிய தலைவி,

**"இருள் கிழிப்பது போல் மின்னி, வானம்**
**துளி தலைக்கொண்ட நளிபெயல் நடுநாள்" (அகம். 72)**

இருளை கிழிப்பது போல் மின்னி வானம் மழை பொழிந்தது. சிதைந்த புற்றின் கண் மின்மினி பூச்சிகள் கிளந்து எழும்பும் அவற்றின் வெளிச்சத்தின் விலங்குகள் வேட்டையாடும். அத்தகைய அரிய காட்டினிடத்தே தலைவன் இரவின் கண் வந்து தலைவியை காண வருதல் அச்சம் தரும் ஒன்றாகும். எனவே தலைவன் அச்சமுற நேரிடும் என்று தலைவி தோழிக்கு கூறுகிறாள். இது தலைவன்பால் உள்ள அன்பின் வெளிப்பாடு.

களவு ஒழுக்கத்தில் தலைவியை காண வரும் தலைவனின் செயல்கள் மற்றும் தலைவன் வரும் அறத்தின் தன்மையை கண்டு தலைவி வருத்தம் கொள்வாள்.

**"நெஞ்சுடம் படுதலின் ஒன்று புரிந்து அடங்கி**
**இரவின் வரு இடும்பை நீங்க" (அகம்.312)**

தலைவியின் வருத்தம் தலைவன் வரும் வழியை நினைத்து வருத்தம் கொள்கிறது. இதன் விளைவாக அதனை தலைவி தன் நினைவாக எண்ணுகிறாள்.

**முடிவுரை**

சங்க இலக்கியத்தின் பாடுபொருளின் இருகண்களாய் இருப்பது அகம், புறம் ஆகும். அகத்தில் களவு, கற்பு இரண்டு ஒழுக்கங்களை புலவர்கள் கருத்தாக்கமாகக் கொண்டு இலக்கியங்களை இயற்றியுள்ளனர். அவர்களின் கருத்தாக்கங்களில் களவு வாழ்க்கையானது கற்பு வாழ்வுக்கு வழி செய்வனவாக அமைகிறது. தமிழகப் பெண்களின் பண்பாட்டு ஒழுக்கத்தின் ஒரு கூறாக விளங்குவது கற்பு ஆகும். அக்கற்பு காலங்களில் தலைவியானவள் தலைவனின் பிரிவு ஆற்றாமையே எண்ணி வருந்துவதை காணமுடிகிறது. தலைவியின் பிரிவு ஆற்றாமைக்கு சுற்றுச் சூழலும் குறிப்பிடத்தக்க புறக்காரணியாக அமைகிறது.

தலைவியின் பிரிவு துயருக்கு மிகைக்கூருணர்ச்சி ஆளுமை குணம், பொருமுக உணர்வுகள், நனவு மனத்தின் ஆளுமை போன்றவை அடிப்படையாய் அமைந்து தலைவியை நெறிப்படுத்தும் உணர்வுகளாக திகழ்கிறது.

தலைமகள் பண்பாடு முறையில் பரத்தையை வெறுத்தாலும், உளவியல் அடிப்படையில் நோக்கும் போது பரத்தையர் வாழ்வினை தலைவி உணர்ந்து தலைவன் செல்லும் பரத்தையை தனது உடன்பிறப்பாக எண்ணி இருப்பதும், அவள் தன்னைப் போன்ற பெண்மகள் என்று தலைவி உணர்ந்து இருப்பதை அறிய முடிகிறது.

**பார்வை நூல்கள்**

1. *சங்க இலக்கியம் - குறுந்தொகை*, முனைவர் வி. நாகராசன், நீயூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை - 600098.
2. *கனவுகளின் விளக்கம்* - நாகூர் ரூமி.பூ (சிக்மண்ட் ஃபிராய்டு) பாரதி புத்தகாலயத்தின் சங்கம், சென்னை - 18.
3. *தமிழ்க்காதல்*, வ.சுப. மாணிக்கனார், சாரதா பதிப்பகம், சென்னை - 14.

E-ISSN: 2581-7140

Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

4. *திருக்குறள்*, பரிமேலழகர் உரை, பூம்புகார் பதிப்பகம், சென்னை - 108.
5. *தொல்காப்பியம், இளம்பூரணர் உரை.*
6. *அகநானூறு மூலமும் உரையும்*, உரையாசிரியர் முனைவர் இரா.செயபால் நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை – 600098.
7. *தொல்காப்பியம் காட்டும் வாழ்வியல்*, பேரா.ந.சுப்புரெட்டியார், சென்னை.
8. *இலக்கியமும் உளப்பகுப்பாய்வும்*, டாக்டர் செ. சாரதாம்பாள்.
9. *தொல்காப்பியத்தில் கூற்றுக்கோட்பாடு*, இரா.ஈஸ்வரி, காவ்யா வெளியீட்டகம், சென்னை-24.
10. *அகப்பொருள் கோட்பாடு*, சிலம்பு நா.செல்வராசு.ஈ, நீயூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை - 600098.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

# குறுந்தொகையில் அகமரபுவழிச் செய்திகள்

## Agam Tradition Tidings in Kurunthogai

**ல.கு.சு.இராஜ்குமார்** முனைவர் பட்ட ஆய்வாளர், நெறியாளர் **முனைவர் ம.செந்தில்குமார்,**
இணைப்பேராசிரியர், தமிழ்த்துறை, திருவள்ளுவர் பல்கலைக்கழகம், வேலூர் - 632115.

## Abstract

*The Sangam Tamil people lived a life of love and valor. The young man and woman are living a life of camaraderie and marrying through it and they live the life of chastity. The leader's faction and isolation made the Thalaivi the saddest. The lover boldly act to reach the head of the beloved's family. Parents arrange marriage to avoid the bad name from the society. Guardian mother of the lovers worships the deity will find shade, water and protection in the land of the desert. Ancient Tamil people have the custom of arranging marriage with whole heartedness. The tradition of combining duality in marriage and the marriage of two couples in this way ranged from the ancient Tamils to the gentleman's wife, who was devoted to a life of adultery and admiration. The purpose of this research paper is to bring together all the other features of this category to the present generation through the goal of living as the leader's favorite wife.*

**Keywords:** Sangam Tamil People, Love and Valor, Marriage, Chastity, *Kurunthogai*

சங்க காலத் தமிழர்கள் காதலுக்கும் வீரத்திற்கும் முதன்மை அளித்து வாழ்வை போற்றி வாழ்ந்தனர். பருவம் அடைந்த ஆணும் பெண்ணும் களவு வாழ்வு வாழ்ந்து அதன் வழியே திருமணம் செய்து கற்பு வாழ்வை கடைபிடிக்கும் மரபை சங்கத் தமிழர் போற்றி வளர்த்தனர். இயற்கைப்புணர்ச்சி ஒருமித்த அன்பின் வெளிப்பாடாக அமைந்தது. தலைவனின் பிரிவும் தனிமைத்துயரும் தலைவிக்கு பசலை உண்டாக்கியது. தலைவியை அடைய தலைவன் மடலேறவும் துணிவான், ஊரார் பழிக்கு அஞ்சி தலைவியின் பெற்றோர் திருமணத்திற்கு ஏற்பாடு செய்வர். களவில் உடன்போகிய காதலர்களுக்கு பாலை நிலத்தில் நிழலும் நீரும் பாதுகாப்பும் கிடைக்க வேண்டி செவிலித்தாய் தெய்வத்தை வேண்டி வழிபாடு செய்வாள். திருமணத்தில் இருமணம் மற்றும் இரு வீட்டார் இணைந்து புதுமணத் தம்பதியரை இல்வாழ்வில் இணைக்கும் மரபும் பண்டைய தமிழரிடையே இருந்தது. இல்வாழ்வில் ஈதலுக்கும், இன்பமான வாழ்விற்கும் துணை செய்யும் பொருளை தலைவன் ஈட்டுதலும் நம்முயை மரபாக இருந்தது. வருவிருந்தோம்பி மக்களைப் பெற்று இல்லறம் நடத்தும் மாண்பு மனைவிக்கு இருந்தது. இப்பிறவி மட்டுமின்றி வரும் பிறவிகள் அனைத்துக்கும் இருவரும் இணைந்து தலைவனுக்கு பிடித்த மனைவியாக வாழ வேண்டி தலைவி விரும்புவதும் தமிழருக்கே உரிய தனிச்சிறப்பான மரபு. இவை அனைத்தையும் சங்க இலக்கியத்தின் வழியே இன்றைய தலைமுறைக்கு எடுத்தியம்புவதே இவ்வாய்வுக் கட்டுரையின் நோக்கமாகும்.

அக வாழ்வில் உள்ள உணர்ச்சிக்கு கட்டுப்பட்டு ஒத்த அன்புடைய தலைவனும் தலைவியும் உடலாலும் உள்ளத்தாலும் இன்புற்று இன்னது என்று பிறருக்கு கூற முடியாததும் தாம் இருவர் மட்டும் அனுபவிக்கும் இன்பமே களவு எனப்பட்டது.

**அகம்**

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

அகம் என்ற சொல்லுக்கு உள், மனம், இருப்பிடம், உடல், உயிர், ஆழம் போன்ற பல பொருள்களைக் கூறுகிறது. கழகத் தமிழ் அகராதி. (பக்கம்.4)

ஒத்த அன்புடைய தலைவனும் தலைவியும் தாமே சந்தித்து, காதல் கொண்டு பிறர் அறியாதவாறு பழகுதலும் அதன்வழி இன்புற்றும், ஊரறியத் திருமணம் புரிந்து வாழும் வாழ்க்கை நிகழ்ச்சிகளை உள்ளடக்கியது நம் தமிழரது மரபாகும். இதனை, "ஒத்த அன்பான் ஒருவனும் ஒருத்தியும் கூடுகின்ற காலத்துப் பிறந்த பேரின்பம், அக்கூட்டத்தின் பின்னர் அவ்விருவரும் ஒருவருக்கொருவர் தத்தமக்குப் புலனாக இவ்வாறிருந்ததெனக் கூறப்படாததாய், யாண்டும் உள்ளத்துணர்வே நுகர்ந்து இன்புறுவதொரு பொருளாதலின் அதனை அகம் என்றார். அகத்தே நிகழுகின்ற இன்பத்திற்கு அகமென்றது ஓர் ஆகுபெயராம்'' என்று நச்சினார்க்கினியர் விளக்கம் தருகிறார்.

**மரபு - விளக்கம்**

மரபு என்பதை 'வழக்கு எனவும் பொருள் கொள்ளலாம். மரபு அல்லது வழக்கினை நூல்வழி வந்த வழக்கு, செவிவழி வந்த வழக்கு, தொன்மை முறை அல்லது தொன்று படுமுறை, வம்புறு மரபு' என மரபிற்கு விளக்கமளிக்கிறார். (பஞ்சமரபில் இசை மரபு – ஆசிரியர் அங்கயற்கண்ணி, பக்கம்.1). மரபு என்ற சொல்லுக்கு ஷகுணம், பழமை, முறைமை, வம்சம், இயல்பு, இலக்கணம், பெருமை, மேம்பாடு, நியாயம்' ஆகிய பொருட்களைத் தருகிறது தமிழ்ப் பேரகராதி, பக்கம்.742.

**தலைவன் தலைவி உறவு**

தலைமக்களது நட்பானது நிலத்தைவிட அகலத்தால் பெரியது, நினையப் புகுங்கால் வானத்தைவிட உயர்ச்சிளால் மிக்கது, உள்புகுந்து எல்லை காணப் புகுங்கால் கடலைவிட ஆழத்தால் அளவிடற்கு அரிது. இம்மூன்று தனித்திருந்தால் பயனில்லை சேர்ந்திருந்தால் பயன் விளையும். அதே போன்று தலைவன் தலைவியது உறவிலே பயன் உள்ளது. இதனை,

**"நிலத்தினும் பெரிதே வானினும் உயர்ந்தன்று**
**நீரினும் ஆர் அளவின்றே – சாரல்**
**கருங்காற் குறிஞ்சிப் பூக்கொண்டு**
**பெருந்தேன் இழைக்கம் நாடனொடு நட்பே" (குறுந்.3:1-4)**

என்னும் பாடலால் அறியமுடிகிறது. மேலும்,

**"கடலினும் பெரியது எமக்கு அவருடைய நட்பே" (ஐங்.184:4)**
**"காதல்தானும் கடலினும் பெரிதே" (நற்.166:10)**

தலைவனுடன் கொண்ட நட்பானது கடலைவிட பெரியது என்கிறாள் தலைவி.

**இயற்கைப்புணர்ச்சி**

இயற்கைப்புணர்ச்சியில் ஆண் பெண் இருவரும் உள்ளம் கலந்துவிடுகின்ற நிலையில் அங்கு அவர்களின் குலமரபு பற்றி தெரிந்து கொண்டு காதல் கொள்வதில்லை. உள்ளம் ஒருமித்த நிலையில் புணர்வதே மரபாகிறது.

**"யாயும் ஞாயும் யாரா கியரோ**
**எந்தையும் நுந்தையும் எம்முறைக் கேளிர்**
**யானும் நீயும் எவ்வழி அறிதும்**
**அன்புடை நெஞ்சந் தாங்கலந் தனவே" (குறுந்.40:1-5)**

செம்மண் நிலத்தில் பெய்த மழைநீர் அம்மண்ணோடு கலந்து, அதன் நிறத்தையும் சுவையையும் பெற்று தன் தன்மை மாறி ஒன்றுபடுவது போல இருவர் உள்ளங்களும் தம்முள் கலந்து ஒன்றாயின. மழை நீருக்குத் தலைவனும், மண்ணிற்கு தலைவியும் உவமையாகக் கூறப்பட்டுள்ளது.

**பசலை**

**"கன்றும் உண்ணாது கலத்தினும் படாது**

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

**நல்ஆன் திம்பால் நிலத்து உக்கா அங்கு**
**எனக்கும் ஆகாது என்னைக்கும் உதவாது**
**பசலை உணீஇயர் வேண்டும்**
**திதலை அல்குல் என் மானக் கவினே" (குறுந்.27:1-5)**

தலைவன் பிரிவினால் தலைவி அழகழிந்து பசலை பூத்தமை கூறப்பட்டது. பசுவினுடைய பால் கன்றுக்கு பயன்பட வேண்டும். எஞ்சியப் பால் களத்தில் கொண்டு மற்றவர் பயன் கொள்வர். இவ்விரண்டும் இன்றி வீனாக பாலனது கீழே சிந்துவதால் யாருக்கும் பயனில்லை. அதே போன்று தான் தலைவியின் அழகு தலைவனுக்கு பயன்பட்டு அதனால் தலைவியின் உடலும் உள்ளமும் இன்புற வேண்டும். இவ்விரு பயனுமின்றி தலைவனது பிரிவால் தலைவியின் அழகு கெட்டு பசலை படர்கிறது எனத் தலைவி வருந்துகிறாள்.

**"நன்னுதல் பசலை நீங்க அன்ன**
**நசை ஆகு பண்பின் ஒருசொல்**
**இசையாது கொல்லோ காலர் தமக்கே" (குறுந்.48:5-7)**

பிறர் எல்லார்க்கும் தலைவியன் மெலிவிற்குக் காரணம் தலைவன் பிரிவுதான் எனப் பறை சாற்றும் பசலை, அதனை உண்டாக்கிய காதலனுக்குத் தான் நீங்குவதற்கு ஒரு சொல் கூறாதோ எனக் குறிப்பிட்டத் தோழி, தலைவனை வரைந்து கொள்ளும் படி வேண்டினாள். சொல்லா மரபின் சொல்வது போலக் கூறுதல் என்ற மரபு இங்கு வெளிப்படுகிறது. பசலையை தாமாகக் கூறும் மரபு இல்லை. எனவே தோழியே தலைவனுக்கு உரைக்கிறாள்.

**உடன்போக்கு**

**"வெளிப்பட வரைதல் படாமை வரைதல் என்று**
**ஆயிரெண் டென்ப வரைதல் ஆறே" (தொல்.பொருள்.சூ.138)**

என்னும் தொல்காப்பிய நூற்பாவில் ஊரார் அனைவரும் அறிய திருமணம் நடத்தல், யாரும் அறியத படி தலைவியும் தலைவனும் உடன்போக்குச் சென்று திருமணம் செய்தல் என்ற இரு நிலைகளை குறிப்பிட்டுள்ளார். இவ்விரண்டு முறையும் தமிழரது மரபு வழியாக பின்பற்றப்படும் முறைமையாகும். இதனை,

**"வாடுபூஞ் சினையின் கிடைக்கும்**
**உயர்வரை நாடனொடு பெயருமாறே" (குறுந்.343:6-7)**

பாலைவழியே தலைவனுடன் தலைவி உடன்போக்கு மேற்கொண்டாள். மேலும்,

**"சுடர்வாய் நெடுவேற் காளையொடு**
**மடமா அரிவை போகிய சுரனே" (குறுந்.378:4-5)**

தலைவனுடன் தன் மகள் உடன்போக்கு சென்றதை அறிந்த செவிலித்தாய், அவள் நலம் வேண்டி தெய்வங்களுக்கு பாய்க்கடன் செய்யும் மரபு இங்கு அறியமுடிகிறது. பாலை நிலத்தில் நிழலும், நீரும் தந்து இக்காதலர்களின் பயணத்திற்கு துணைபுரிய வேண்டும் எனத் தெய்வங்களை வழிபட்டனர்.

**மடலேறுதல்**

களவுக்காலத்தில் யவரும் அறியாமல் புணர்ந்த நிலையில் தலைவியை அடைய எண்ணியத் தலைவன் ஊரார் அறிய தன் உருவத்தையும் தன் காதலியின் உருவத்தையும் எழுதிய ஓவியத்தைக் கையிலேந்தி, மடல்மாவின் மீது ஏறி செல்ல அதைக் கண்ட அனைவரும் இன்னாள் கணவன் இவன் என அறிவர். ஊரார்க்கு அறிவிக்க மடல் ஒன்றே சிறந்த கருவி தலைவன் மடலேறத் துணிந்தான். இதனை,

**"அமிழ்து பொதி செந்நா அஞ்ச வந்த**
**வார்ந்து இலங்கு வைஎயிற்றுச் சின்மொழி அரிவையைப்**
**பெருகதில் அம்ம இவ்வூரே மறுங்கில்**
**நல்லோள் கணவன் இவன் எனப்**

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

**பல்லோர்கூற யாஅம் நாணுகம் சிறிதே”(குறுந்.14:1-6)**

மேலும்,

**“மாஎன மடலும் ஊர்ப பூஎனக்**
**குவிமுகிழ் எருக்கங் கண்ணியும் சூடுப**
**மறுகின் ஆர்க்கவும் படுப**
**பிறிது ஆகுப-காமம் காழ்க் கொளினே” (குறுந்.17:1-4)**

காமம் மிக்க தலைவன் பனைமடலால் குதிரையை அமைத்து, அதன் மீது ஏறி, தான் விரும்பிய காதலியின் ஓவியத்தையுடைய கொடியைக் கையில் ஏந்தி ஊரார் அறிய வீதிகளில் வருதல் மடலேறுதல் எனப்படும். இக்காட்சியைக் காண்பார், இன்னானொடு இன்னாட்கு உறவுள்ளமை அறிந்து வெளிப்படையாக அல் மொழிவர். ஆக்கொடுமை கண்டு நாணும் தலைவியன் பெற்றோர், அவளை அவனுக்கே மணமுடிப்பர்.

**திருமணம்**

இல்லற வாழ்வு என்றாலே கனவு காலம் முடித்த தலைவனும், தலைவியும் கற்பு வாழ்க்கையை மேற்கொள்வது எனலாம். இத்தகைய இல்லற வாழ்வில் ஈடுபட்டோர் கடைபிடிக்கும் உயர்ந்த ஒழுக்க நெறி கற்புநெறி போன்றவையாகும். திருமணம் இல்லற வாழ்வின் தொடக்கமாகும். இவ்வாழ்வில் செம்மையான அறங்களைப் பின்பற்றி வாழ வேண்டும். இதனையே ஷஇல்லறமல்லது நல்லறமன்று’ என்ற பழமொழியின் வாயிலாக அறிகிறோம். சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ் பேரகராதியில் கல்,அறம்ஞீ இல்லறம். வாழும் இடத்தையும், போற்ற வேண்டிய அறங்களையும் இணைத்துக் கூறுவதே இல்லறமாகும் என்று குறிப்பிட்டுள்ளதை அறிய முடிகின்றது.

குறுந்தொகையில் திருமணம் சடங்கு நடைபெறும் போது பறையொலியும், சங்கொலியும் கேட்கும் என்பதை,

**“பறைபட பணிலம் ஆர்ப்ப இறை கொள்பு**
**தொல் மூதாலத்துப் பொதியில் தோன்றிய**
**நால் ஊர்க் கோள் நல்மொழி போல” (குறுந்.15:1-3)**

இப்பாடலடிகளால் அறிந்து கொள்ள முடிகிறது.

**தாலி**

“புலியைக் கொன்று அதன் பல்லை வீரத்தின் அடையாளமாக ஆண்கள் அணிவது மரபு. இப்புலிப்பல் தாலி ஆண்பிள்ளைகளே அன்றிப் பெண் பிள்ளைகளும் இளமை முதல் அணிவது மரபு”(தமிழர் திருமணத்தில் தாலி, டாக்டர். மா.இராசமாணிக்கனார். பக்கம்.22).

பருவமடைந்து களவொழுக்கத்தை மேற்கொண்டு தலைவனோடு உடன்போக்கு நிகழ்த்திய தலைவி, இப்புலிப்பல் தாலியை அணிந்திருந்ததை அவளது செவிலித்தாய் குறிப்பிடும் பாடல் அகநானூற்றில்,

**“……….பொன்னொடு**
**புலிப்பல் கோத்த புலம்புமணித் தாலி**
**…கற்கெழு சிறுகுடிக் கானவன் மகளே” (அகம்.7)**

என்னும் வரிகளால் உணரலாம்.

**“வரிவென் தாலி வலைசெத்து வெருஉம்” (ஐங்குறு.166)**

என வரும் இடத்தில் ‘தாலி’ என்பது பலகறையை (சோழிழய)க் குறிக்கின்றது. மணமகன் ஒருவன் தன் மனைவியாக ஏற்கும் ஒருத்திக்கு திருமணத்தின் போது கழுத்தில் கட்டும் அயையாளச் சின்னமாக இத்தாலி விளங்குகிறது.

**கற்பில் புணர்ச்சி மரபு**

சங்கத் தமிழர் திருமணம் முடிந்த அன்று இரவே, கணவன் மனைவிக்குரிய தாமபத்திய சடங்கு நடைப்பெற்றுள்ளது. முதலிரவில் புதுப்பெண்ணை அலங்காரம் செய்து

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

அனுப்புகிறார்'கள் நாணத்தில் வெட்கி கணவன் முன் நிற்கும் மனைவியைத் தழுவி ஆடைகளை நீக்க, உறையிலிருந்து எடுத்த வாளைப் போல அவள் வடிவு வெளிப்பட்டு விளங்கித் தோன்றியது. நாணத்தால் தலைவி வெட்கி நின்றாள். கூந்தலை போர்வையாக கொண்டு மறைத்தற்குரிய உறுப்புகளை அறைத்தால், பின் ஒன்றிணைந்தனர். இவ்வறு கற்பு வாழ்வில் தாம்பத்திய உறவு சிறந்து விளங்கியது. இதனை,

**"தமர்நமக் கீத்த தலைநாள் இரவின்**
**உவர்நீங்கு கற்பினெம் உயிருடம் படுவி**
**முருங்காக் கலிங்கம் முழுவதும் வளைஇப்**
**பெரும்புழுக் குற்றநின் பிறைநுதற் பொறிவியர்**
**உறுவளி யாற்றச் சிறுவரை திறவென**
**ஆர்வ நெஞ்சமொடு போர்வை வவ்வலின்**
**உறைகழி வாளின் உருவுபெயர்ந் திமைப்ப**
**மறைதிறன் அறியா ளாகிப் பையென**
**நாணினள் இறைஞ்சி யோளே……**
**இரும்பல் கூந்தல் இருள்மறை ஒளித்தே" (அகம்.136:18-29)**

என்னும் அகநானூற்றுப் பாடலால் அறியமுடிகிறது.

**"இம்மை மாறி மறுமை ஆயினும்**
**நீ ஆகியர் எம் கணவனை**
**யான் ஆகியர் நின் நெஞ்சு நேர்பவளே" (குறுந்.49:3-6)**

தலைவன் தலைவியின் அன்பு பிறவி தோறுமம் தொடர வேண்டும் என்று தலைவி கூறுகிறாள். மனைவி என்ற தகுதியோடு, கணவனின் நெஞ்சு நேர்பவள் என்ற தகுதியும் வாய்க்கப்பெற்று வாழவேண்டும் என்ற கற்புடைய மகளிரின் மரபு இங்கு வெளிப்படுகிறது.

**இல்லறத்தின் சிறப்பு**

இல்வாழ்க்கையை அன்போடு முறைப்படி நட்த்தி வருவதே சிறப்பாகும். அதனினும் இனிய வாழ்வு வேறு உண்டோ என்று தலைவி வினவுகின்றாள்.

**"மனைஉறை வாழ்க்கை வல்லியாங்கு**
**மருவின் இனியவும் உளவோ?" (குறுந்.322:5-6)**

இல்வாழ்க்கையில் ஈடுபடுவதின் சிறப்பை தலைவனின் வீட்டில் விருந்துண்டு, உறவினர்களை பாதுகாத்து வாழும் இல்லறத்தின் வாழ்வை விட இனிமையானது வேறு ஏதாவது உண்டா? எனும் கருத்து குறிப்பிடத்தக்கதாகும்.

அன்பால் இணைந்த இரு நெஞ்சங்கள் இன்பத்துடன் நிறைவுடனும் நடத்தும் இல்லற வாழ்வின் இனிமையை எடுத்துக் காட்டும் பாடல் இலக்கிய உள்ளம் படைத்த எவராலும் எளிதில் மறக்க இயலாது எனலாம்.

**"முளிதயிர் மிசைந்த காந்தள் மெல்லிரல்**
**கழுவுறு கலிங்கம் கழாஅது உரீஇ**
**குவளை உண்கண் குய்ப்புகை கழுமத்**
**தான் துழந்து அட்ட தீம்புளிப் பாகர்**
**'இனிது' எனக் கணவன் உண்டலின்**
**நுண்ணிதின் மகிழ்ந்தன்று ஒண்ணுதல் முகனே" (குறுந்.167:1-6)**

கெட்டியான தயிரைத் தன் காந்தள் போன்ற மென்மையான விரல்களால் குவளை மலரை போன்ற கண்களில் தாளிப்பினது புகை வர, இனிய புளிப்பு சுவையுடைய குழம்பை தலைவி தானே துழாவி சமைத்தாள். புகைபடிந்த அழுக்குற்ற அவ்விரல்களைத் தான் அணிந்திருந்த தூய ஆடையில் துடைத்துக் கொண்டதால் அழுக்குறியது அவ்வாடை ஆனால், தான் சமைத்த உணவினைக் கணவன் உண்டவுடன் 'இனிது' என்று மகிழ்ந்து கூறியளவிலே

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

ஒளிபொருந்திய நெற்றியையுடைய அவள் முகம் பிறர் அறியாத வண்ணம் நூண்ணியதாக மகிழ்ந்தது என்பதை மேற்கண்ட பாடலின் மூலம் அறிய முடிகின்றது. தான் அணிந்த ஆடை அழுகடைந்தாலும் பரிமாறும் நிலையை மிக அழகாகச் சுட்டிக் காட்டியுள்ளார் கூடலூர் கிழார். மேலும் நற்றிணையில்,

**"சிறுதாழ் செறித்த மெல்விரல் சேப்ப**
**வாளை ஈர்ந் தடி வல்லிதின் வகைஇ**
**புகைஉ ண்டு அமர்ந்த கண்ணள் …."** (நற்.120:4-6)

பரத்தையிடமிருந்து பிரிந்து வந்த தலைவனுக்கு, தன் விடலை மறைத்து அன்போடு தானே மீனை பக்குவப்படுத்தி சமைத்து விருந்து படைத்தாள் என்பதை இப்பாடலடிகளால் அறிய முடிகின்றது. திருக்குறளும், இல்லறத்தின் பண்பாக அன்பையும், பயனாக அறத்தையும் விளக்கி சிறப்பித்துள்ளது.

**"அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை**
**பண்பும் பயனும் அது"** (குறள்.45)

இல்லறம் நல்லறமாய் அமைய வேண்டுமெனில் கணவன் மனைவி இருவரும் ஒருவரையொருவர் புறந்து கொண்டும், விட்டுக் கொடுத்தும், எந்தவொரு நிபந்தனையும் இல்லாமலும் வாழ்ந்தால் இல்லறம் சிறப்புற்று மேன்மை பெறும்.

**மக்கட்பேறு**

இல்லறத்தின் மூலம் சிறப்பு, அன்பு, புரிதல்கள், செல்வம், புகழ் அனைத்தையும் பெற்றாலும் மக்கட் செல்வம் இல்லாத இல்வாழ்வு சிறப்புடையது. வள்ளுவர் பெருமகனாரும் மக்கட் பேற்றினை மிக அழகாகச் சுட்டிக் காட்டியுள்ளார்.

**"மங்கலம் என்ப மனைமாட்சி மற்றுஅதன்**
**நன்கலம் நன்மக்கட் பேறு"** (குறள்.60)

இல்வாழ்க்கைக்கு மனைவியின் நல்ல பண்பே மங்கலம் என்றும், நல்ல மக்களைப் பெறுதலே அதற்கு நல்ல அணிகலம் என்றும் அறிகிறோம். எத்தகைய செல்வம் பெற்றிருந்தாலும் மக்கட்பேறு இல்லாத வாழ்நாட்கள் அனைத்தும் பயனற்ற வாழ்நாட்களே ஆகுமென்று புறநானூற்றுப் பாடல்வழி காணலாம்.

**"படைப்புப் பலபடைத்துப் பலரோ டுண்ணும்**
**உடைப்பெருஞ் செல்வ ராயினு மிடைப்படக்**
**குறுகுறு நடந்து சிறுகை நீட்டி**
**இட்டுந் தொட்டுந் கவ்வியும் துழந்தும்**
**மயக்குறு மக்களை யில்லையார்க்குப்**
**பயக்குறை யில்லைத் தாம் வாழு நாளே"** (புறம்.188:1-6)

நான்மணிக்கடிகையும் 'மடவாள் மடவாள் தனக்கு விளக்கம் தகைசால் புதல்வர்' என்ற வரிகளில் மக்கட்பேற்றின் சிறப்பை உணர்த்தியுள்ளது.

**தலைமக்களின் கடமை உணர்வு**

இலக்கியங்களில் அகம் என்றாலே உள்ளம் சார்ந்த செய்திகளைக் குறிப்பது எனலாம். தலைவன் தலவி அன்பு, ஊடல், பிரிவு, ஊடல் தவிர்த்தல், களவு, கற்பு, இல்லறம் போன்ற பலவற்றை குறிப்பிடலாம். களவிற்கு பின் ஏற்படும் கற்பு வாழ்விற்கு பொருள் அவசியமாகையால் தலைவனுடைய கடமையுணர்வை பற்றி பாலை பாடிய பெருங்கடுங்கோ பாடியுள்ளதை ஈண்டி காணலாம்.

**"வினையே ஆடவர்க்கு உயிரே வாள் நுதல்**
**மனை உறை மகளிர்க்கு ஆடவர் உயிர் என**
**நமக்கு உரைத்தோடும் தாமே**
**அழாஅல் - தோழி! - அழுங்குவர் செலவே"** (குறுந்.135:1-4)

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

ஆடவர்களுக்கு வினை செய்தல் உயிர் போன்றது. மகளிர்க்கு அவர்தம் கணவர் உயிர் போன்றவர். அதனால் தலைவன் உன்னைப் பிரிந்து செல்லமாட்டார் என்று தோழி தலைவிக்குச் சொல்லும் திறம் வியத்தற்குரியதாகும்.

**விருந்தோம்பல்**

விருந்தோம்பல் என்பது தமிழர்களுக்கே உரிய தனிப்பெரும் மாண்புடையதாகும். விருந்தினரை முகம் கோணாமல் உபசரிக்க வேண்டுமென்பதை,

**"மோப்பக் குழையும் அனிச்சம் முகம்திரிந்து**
**நோக்கக் குழையும் விருந்து" (குறள். 90)**

பொய்யாமொழி புலவரின் வாக்கால் அறிய முடிகின்றது. விருந்தினர் ஊண் உணவை வெறுத்தால், உடனே பால் கலந்து செய்ததையும், வெல்லப்பாகு கொண்டு செய்ததையும் பண்டங்களாகப் புரவலர்கள் விருந்தினர்களுக்கு தந்து உபசரித்து இன்புறுவர். இரவில் வாயிற்கததவை அடைக்கும் முன், உண்ணும் விருந்தினர் யாராவது விடுகிறார்களா? எனப் பார்த்துக் கதவடைத்தல் பண்டையத் தமிழர்களின் வழக்கமாயிருந்தது என்பதை,

**"பலர்புகு வாயில் அடைப்பக் கடவுநர்**
**வருவீர் உளீரோ எனவும்**
**வாரலர் தோழி நம் காதலரே" (குறுந்.118:3-5)**

விருந்தோம்பலின் உயர்வையும் வழக்காற்றையும் இப்பாடலடிகளின் மூலம் அறியலாம்.மேலும், நற்றிணையில்,

**"அல்லில் ஆயினும் விருந்து வரின் உவக்கும்**
**முல்லை சான்ற கற்பின்**
**மெல்லியல் குறுமகள் உறைவின் ஊரே" (நற்.142:8-10)**

இரவு நேரமானாலும் கூட விருந்தினர் வந்துவிட்டாள் முகமலர்ந்து உபசரித்து மகிழ்பவள் என் தலைவா என்று தலைவன் கூறுவதிலிருந்து விருந்தோம்பலின் பண்பை அறிகிறோம். இதே போன்று பொருநராற்றுப்படையில் விருந்தோம்பல் பண்பினை வேறு விதமாகக் குறிப்பிட்டுள்ளார் முடத்தாமக் கண்ணியார் எதிர் சென்று அழைத்து வந்து வேண்டிய உணவினை அளித்து ஆடை அணிகலன்களை அணிய செய்து அவர்களை திரும்ப அனுப்ப மனமில்லாமல் வருந்தி பின், அவர்களுக்கு வேண்டிய பரிசில்களை கொடுத்து வழியனுப்பினாள் கரிகால் வளவன் என்று உணர்த்துகிறது பொருநராற்றுப்படை.

**"செல்வ சேறும் எம் தொல்திப் வல்லே**
**அகறிரோ எம் ஆயம் விட்டெனச்**
**சிரறிய வன்போல் செயிர்த்த நோக்மொடு" (பொருநர்.121:24)**

இன்றளவும் விருந்தோம்பல் பண்பு போற்றப்பட்டு வருகிறது. விருந்தினரை விழி அனுப்பும்போது ஏதாவது பொருட்களை கொடுத்து வழி அனுப்புவது சுவையான விருந்து படைத்து மகிழ்வது போன்றவற்றை கடைப்பிடித்து வருவது வரவேற்கத் தக்கவையாகும்,

**பொருளீட்டும் மரபு**

**"ஈதலும் துய்த்தலும் இல்லோர்க்கு இல்எனச்**
**செய்வினை கைம்மிக எண்ணுதி அவ்வினைக்கு**
**அம்மா அரிவையும் வருமோ**
**எம்மை உய்த்தியோ உரைத்திசின் நெஞ்சே"(குறுந்.63:1-4)**

இல்லறத்தார் அறம் பெற ஈய்தலம், இன்பம் பெறத் துய்த்தலும் ஆகிய செயல்களுக்காக பொருள் ஈட்டத் தலைவன் தலைவியைப் பிரிந்து செல்வான் உடன் தலைவியை அழைத்துச் செல்லும் மரபு இல்லை.

**முடிவுரை**

சங்க இலக்கியம் என்று போற்றப்படும் மேற்கணக்கு நூல்களில் ஒன்றான

E-ISSN: 2581-7140

Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

குறுந்தொகையில் இடம்பெற்றுள்ள சில அகவாழ்வியல் மரபுவழிச் செய்திகளை இக்கட்டுரை விளக்கியுள்ளது. இவ்வகச் செய்திகளின் பண்பை பின்பற்றி நாம் மேலும், தமிழரின் மரபையும், பண்பாட்டையும் வளர்ப்போம்!

**பார்வை நூல்கள்**

1. *கழகத்தமிழ் அகராதி*, கழகப்புலவர் குழுவினர் - தொகுத்தது. திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த *நூற்பதிப்புக் கழகம், லிமிடெட், சென்னை - 18.*
2. *தொல்*காப்பியம் பொருளதிகாரம், நச்சினார்க்கினியர் உரை. அண்ணமலைப் பல்கலைக்கழகம் - 1986.
3. *திருக்குறள்*, பரிமேலழகர் உரை, பூம்புகார் பதிப்பகம்.
4. *தமிழர் திருமணத்தில் தாலி*, டாக்டர் மா.இராசமாணிக்கனார், செல்வி பதிப்பகம், காரைக்குடி.
5. *நற்றிணை (மூலமும் உரையும்)*, உரையாசிரியர் முனைவர் கு.வெ.பாலசுப்பிரமணியன் நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை - 600098.
6. *அகநானூறு (மூலமும் உரையும்)*, உரையாசிரியர் முனைவர் இரா.செயபால், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை - 600098.
7. *குறுந்தொகை (மூலமும் உரையும்*), உரையாசிரியர் முனைவர் வி.நாகராசன், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை - 600098.
8. *கலித்தொகை (மூலமும் உரையும்*), உரையாசிரியர் முனைவர் அ.விசுவநாதன், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை - 600098.
9. *ஐங்குறுநூறு (மூலமும் உரையும்*), உரையாசிரியர் முனைவர் அ.தட்சணாமூர்த்தி, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை - 600098.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

# தா.ஏ.ஞா. என்றொரு பேராசான்

## Dr. T.E.G. – A Great Scholar

**முனைவர் வே.விக்னேசு,** உதவிப்பேராசிரியர்,
தமிழ்த்துறை, பூ.சா.கோ. கலை அறிவியல் கல்லூரி, கோயம்புத்தூர் - 14.

**Abstract**

*Dr.T.E.Gnamoorthy studied Tamil himself under the guidance of P.V.Manikanayagar. he received doctorate under the guideship of Gurudevar T.P.M. He was appreciated and praised by his contemporaries. He did his service in Kalaikadir Magazine. He dedicated for the improvement of the art of drama and literary development. He spreaded the fame Civagacintamani. He was the beacon of his students and a scholar of high qualities and discipline. This essay explains his holy life, simplicity and his service for Tamil.*

**Keywords:** Dr. T.E.G. , A Great Tamil Scholar

**"மன்னா உலகத்து மன்னுதல் குறித்தோர்**
**தம்புகழ் நிறஇத் தாமாய்ந்தனரே"**

எனும் சங்கச் சான்றோர் வாக்கிற்கிணங்க தண்ணார் தமிழ் வளர்த்த சான்றோராய், நிலையில்லா இந்நிலவுலகில் தம்புகழ் உருவினை நிலை பெறச்செய்து மறைந்தவர் தமிழ்ப்பேராசிரியர் டாக்டர் தா.ஏ.ஞானமூர்த்தி அவர்களாவர். புகழுடைய வாழ்வினராக; எடுத்துக்காட்டான வாழ்வினராக விழுமிய வாழ்வு வாழ்ந்தவர் அவர். அன்பு அருளாய்க் கனிந்த அவரின் வாழ்வு இளைஞர்கள் போற்றிப் பின்பற்றத்தக்க உயரிய வாழ்வு. இத்தகு சிறப்புக்குரிய டாக்டர் தா.ஏ.ஞானமூர்த்தி அவர்களின் சீரிய வாழ்வியலையும் குன்றாச் சிறப்புக்களையும் விளக்கும் பொருட்டு எழுந்ததே இக்கட்டுரை என்க.

### பெருமைப் பண்புடையோர்

'உலகம் என்பது உயர்ந்தோர் மாட்டே' என்பதை அடியெற்றி உயர்ந்தோராக வாழ்ந்தவரின் வாழ்வே வாழ்க்கைக் கலையாகவும் வாழ்வாங்கு வாழும் வாழ்க்கையாகவும் போற்றப்பெறும். இவ்வுலகிற் பலர் எவ்விதப் புகழுமின்றி ஒவ்வொரு கணமும் மறைகின்றனர். அவர்கள் அனைவரும் பெரியோரால் போற்றப்படுவதில்லை. ஆயின், 'புகழுடன் மறைவோரே பிறந்தவராவர்' எனும் பேருண்மையை உணர்ந்து தம் வாழ்வைப் புகழுடைய வாழ்வாகவும் பெருமைப் பண்புடையதாகவும் மாற்றுவோரே பெரியவராலும் உலகத்தோராலும் போற்றப்படுவர். இவர்தம் வாழ்வே இவ்வுலகம் உள்ள அளவும் போற்றியொழுகும் தன்மையுடையதாக விளங்குகிறது. இங்ஙனம் பெருமைப் பண்புடனும் பெரியோர் புகழும் படியாகவும் வாழ்வாங்கு வாழ்ந்தவரே டாக்டர் தா.ஏ.ஞானமூர்த்தி ஆவர்.

### தா.ஏ.ஞா அல்லது தாயே ஆனவர்

'வினையே ஆடவர்க்கு உயிரே' என்னும் சான்றோர் வாக்கிற்கு இலக்கணமாய்த்தம் வாழ்நாளெல்லாம் ஒல்லும்வகையான் தமிழ்ப்பணியாற்றித் தமிழால் தானும் தன்னால் தமிழும் வளம் பெறுமாறுச் செய்தவர் டாக்டர் தா.ஏ.ஞானமூர்த்தி ஆவர். மாணாக்கர்களின் நலனுக்காகத் தம்மை அர்ப்பணித்துக் கொண்ட அச்சான்றோர், மாணவர் பருவத்தில் கல்லூரிக்கோ, பல்கலைக்கழகத்திற்கோ சென்று பயிலாதவர். தாமே அரிதின் முயன்று தமிழ்

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

பயின்று, மாணாக்கர் பலர் தம்கீழ் ஆய்வு செய்து பட்டம் பெறுதற்கு மட்டுமின்றி வாழ்வியல் வழிகாட்டியாகவும் அமைந்தவர்.

'கண்ணுதற் பெருங்கடவுளும் கழகமோடமர்ந்து பண்ணுறத் தெரிந்தாய்ந்த பசுந்தமிழ்' என்பதற்கேற்ப பூ.சா.கோ கலைக் கல்லூரியில் அமர்ந்து தமிழாய்ந்த தலைமகனார்; சான்றோர் போற்றும் புகழ்பூத்த வாழ்வு வாழ்ந்த பெற்றியர்; வாழ்வாங்கு வாழ்ந்து இறவாப் புகழுடம்பு பெற்றவர்; தம் வாழ்வைப் பிறர் கண்டு கற்றுப் பயன் பெறும்படி எடுத்துகாட்டான வாழ்வு வாழ்ந்த பெருமைந்தகையர்.

**"எளிமைக்கும் அன்பிற்கும் இடைவிடா உழைப்பிற்கும் இருப்பிடமாய் விளங்கிய எங்கள் பேராசிரியர் டாக்டர் தா.ஏ.ஞானமூர்த்தி அவர்களைத் 'தாயே' என உள்ளம் உருக அழைத்து மகிழ்வோம்"** என்று அன்னாரின் அன்பு மாணாக்கர்கள் உளம் நெகிழ்ந்து கூறுவர், அன்பும் பண்பும் எளிமையும் ஒன்றிணைந்து விளங்கும் தாய் நிகர்த்த தயையுடைய டாக்டர் தா.ஏ.ஞானமூர்த்தி அவர்களைத் 'தாயே' என அழைத்து மகிழ்ந்தமைச் சாலவும் பொருத்தமுடையதன்றோ!

வாழ்வாங்கு வாழ்ந்த தா.ஏ.ஞா. அவர்களின் வாழ்வை அறிந்து அவர் வாழ்ந்து காட்டிய நெறியில் வாழ்தல் நம் கடமையாகும். ஆகலின், தமிழ்ப்பேராசிரியராய்; மாணாக்கருக்கு வாழ்வியல் வழிகாட்டியாய்; அன்புத்தந்தையாய்; தமிழ் நாடக்கலைப் படைப்பாளியாய்; சிந்தாமணிச் செம்மலாய்த் தொண்டாற்றிய புலவர் டாக்டர் தா.ஏ.ஞானமூர்த்தியவர்களின் வரலாற்றையும் சிறப்பையும் இனிக் காண்போம்.

**ஊரும் பேரும்**

தொண்டை நாட்டுத் திருத்தலங்களுள் இருபத்தி நான்காவது திருத்தலம் மயிலாப்பூர். திருஞானசம்பந்த சுவாமிகளால் பாடல் பெற்றதலம். அம்பிகை மயில் வடிவில் சிவபெருமானைப் பூசித்த தலம். வாயிலார் நாயனார் திருவவதாரஞ் செய்த பதியுமாம். அத்தகு புகழ்பெற்ற மயிலாப்பூர் சென்னை மாநகரின் நடு நாயகமாக அமைந்துள்ளது. இராயப்பேட்டை, தேனாம்பேட்டை, ஆழ்வார்ப்பேட்டை முதலிய ஊர்களைக் கொண்ட ஒரு இடமாகத் திகழ்வது மயிலாப்பூர். இம்மயிலைக் கோட்டத்தின் ஒரு பகுதியாக விளங்கும் ஆழ்வார்ப்பேட்டையே அன்பிற்கும் பண்பிற்கும் உறைவிடமாக விளங்கிய நம் பேராசிரியர் டாக்டர் தா.ஏ.ஞா-வின் முன்னோர் வாழ்ந்த ஊராம்.

**இருமுதுகுரவர்**

சென்னை மாநகரை இடமாகக் கொண்டு சீருஞ்சிறப்பும் பெற்ற பலகுடும்பங்கள் ஆங்கு வாழ்ந்து வந்தன. அவற்றுள், அன்பும் பண்பும் ஆன்ற பெருமையுங் கொண்ட திருவாளர் 'தாயுமானவர்' அவர்களின் குடும்பமும் ஒன்றாம். இவரே தா.ஏ.ஞா. வின் பாட்டனாராவர். தம் பெற்றோர் இட்டழைத்த பெயருக்கேற்றார்போல் தாயுமாகிய அன்புள்ளங்கொண்ட தாயுமானவருக்குப் பிறந்தவரே திருவாளர் 'தா.ஏகாம்பரம்' அவர்களாவர். இவர்தாம் நம் பேராசிரியரின் அருமைத் தந்தையார். இவர்கள் அன்புள்ளமும் எளிமையை அறமாகப் போற்றும் மாண்புங் கொண்டவர். உண்மையையும் நேர்மையையும் தம் இரு கண்களாகப் போற்றியவர். காந்தியண்ணலின் மீது மாறாத பற்றும் நம்பிக்கையுங் கொண்ட காந்தியப் பற்றாளர். இந்திய விடுதலைப் போராட்டக் காலத்தில் பல்வேறு போராட்டங்களில் பங்கு கொண்டு நாட்டிற்கு உழைத்தவர். இத்தகு உயர்நெறியினராகிய ஏகாம்பரம் அவர்கள் 'இராசம்மாள்' என்னும் அம்மையாரைத் திருமணஞ் செய்து கொண்டார். அவ்வம்மையார் அன்புள்ளங் கொண்டவர்; மென்மையானவர்; அதிர்ந்துங் கூடப் பேசாதவர்.

அன்பும் பண்பும் நிறைந்த ஏகாம்பரம் - இராசம்மாள் இணையர் தம்இல்லறக் கடன்களை இனிதே ஆற்றி வந்தனர். இவ்வில்லற வாழ்வின் பயனாய்த் தோன்றிய

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

தலைமகவே நம் பேராசிரியராவர். டாக்டர். தா.ஏ.ஞா. அவர்கள் இவ்வுலகில் தோன்றுவதற்குப் பெருமை பெற்ற நாள் 1911-ஆம் ஆண்டு ஆகஸ்டு திங்கள் 13-ஆம் நாளாம்.

**கல்வி**

டாக்டர். தா.ஏ.ஞா. அவர்கள் மயிலைப் பெனாத்தூர் சுப்பிரமணியம் உயர்நிலைப் பள்ளியில் பயின்று 1930-ஆம் ஆண்டு பள்ளி இறுதி வகுப்பில் சிறப்புறத் தேர்ந்தார்கள். இவர்கள், பேரறிஞர் பா.வே. மாணிக்க நாயக்கர் அவர்களிடமும் குருதேவர் தெ.பொ.மீ. அவர்களிடமும் முறையே தமிழ்பயின்று 1942-ஆம் ஆண்டு வித்துவான் தேர்வில் சிறப்புறத் தேர்ச்சி பெற்றார்கள். 1946-ஆம் ஆண்டு பி.ஓ.எல். பட்டமும் 1950-இல் தமிழ் எம்.ஏ. பட்டமும் பெற்றார்கள். 1955-ஆம் ஆண்டில் குருதேவர் தெ.பொ.மீ. அவர்களின் மேற்பார்வையில் டாக்டர் பட்டத்திற்காக அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் பதிவு செய்து கொண்ட தா.ஏ.ஞா. அவர்கள், சீவகசிந்தாமணியைப் புதியக் காப்பியக்கொள்கைகளுடன் ஒப்பிட்டாய்ந்து, 1962-ஆம் ஆண்டு "A Critical Study of Civakacintamani" என்னும் ஆய்விற்காகப் பி.எச்.டி. பட்டம் பெற்றார்கள்.

தமிழாய்வில் 'டாக்டர்' பட்டம் பெற்ற முதல் தலைமுறையைச் சார்ந்த முதல் பத்துப் பேராசிரியர்களுள் ஒருவர் தா.ஏ.ஞா. அன்றியும், கோயம்புத்தூரில் தமிழாய்வில் முதன்முதலாக 'டாக்டர்' பட்டம் பெற்றவரும் இவரேயாவர்.

**இல்வாழ்க்கை**

சென்னையிலுள்ள சிந்தாதிரிப்பேட்டையில் இலட்சுமணசாமி என்போர் பெருஞ்செல்வந்தராக வாழ்ந்து வந்தார். இவருக்குப் பிள்ளைகள் ஐவர். அவ் ஐவருள் இறுதியிற் பிறந்த செல்வ மகளே 'மரகதம்' அம்மையாராவார். இவ்வம்மையார் அறிவுந்திருவும் அழகும் ஆழ்ந்த பக்தியும் ஒருங்கே வாய்க்கப் பெற்றவர். இவர்களே நம் பேராசிரியரவர்களின் வாழ்க்கைத் துணைநலமாக அமைந்தவர்.

தா.ஏ.ஞானமூர்த்தியார் - மரகதம் அம்மையார் திருமணம் சென்னையில், 1937-ஆம் ஆண்டு செப்டம்பர் திங்கள் 9-ஆம் நாள் மத்தளங்கொட்ட் வரிசங்கம் நின்றூத் ஊரார் போற்றும் வகையில் உயரிய முறையில் குன்றாச்சிறப்புடன் நிகழ்ந்தது.

'சிறப்பிற்குன்றா செய்கையோடு பொருந்திய பிறப்பிற்குன்றா பெருந்தோள் மடந்தையான மரகதம் அம்மையார் தம் கணவர் உளமறிந்து செயல்படுந்தன்மையர்' கணவர் குறிப்பறிந்து அன்போடு பழகுந்தன்மையர்' அவரின் இயல்பிற்கேற்பத் தம்மை மாற்றிக் கொண்ட பெண்ணின் நல்லாள்.

அன்புகெழுமிய இக்காதலரின் இனிய வாழ்க்கையின் பயனாய் ஆண்மக்கள் அறுவர் தோன்றினர். அவர்கள் முறையே கிருபாகரன், உமாமகேசுவரன், சோமசுந்தரம், முருகன், அசோகன், குகன் ஆகியோராவர். அருமை மக்கள் அறுவரும் மருத்துவராகவும் பொறியாளராகவுந் திகழ்கின்றனர்.

**தமிழ்ப்பணிகள்**

'கல்வித் தொண்டே கடவுட் தொண்டு' எனும் ஆன்றோர் வாக்கினை மனங்கொண்டு தோற்றுவிக்கப்பட்ட பூ.சா.கோ. கலைக் கல்லூரியின் முதல் தமிழ்த் துறைத்தலைவர் பணியை, 1948-ஆம் ஆண்டு சனவரித்திங்கள் 17-ஆம் நாள் நம் பேராசிரியர் தா.ஏ.ஞானமூர்த்தி அவர்கள் ஏற்றார்கள். தா.ஏ.ஞா. தாம் பதவியேற்ற 1948-ஆம் ஆண்டு முதலே கல்லூரியை 'அறிவு அன்பு பணி' என்னும் முக்குறிக்கோளுடையதாக மாற்றி கல்லூரியின் வளர்ச்சிக்காக அரும்பாடு படலானார். அறிவுலகின் திறவுகோலான கல்லூரி வளர்ச்சியுற்றதெனில் மாணாக்கரும் அறிவுபெற்று உயருவதென்பது இயல்பன்றோ?

டாக்டர் தா.ஏ.ஞா. அவர்கட்கு பூ.சா.கோ. கல்லூரித் தமிழ்த்துறையைப் பல்கலைக் கழகத்தையொத்த தமிழாய்வுத் துறையாக மாற்ற வேண்டுமென்ற பேரவா இருந்துவந்தது. அதற்காக ஒல்லும் வகையெல்லாம் முயன்று வந்தார். அம்முயற்சியின் விளைவாய் 1967-ஆம்

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

ஆண்டு பூ.சா.கோ. கல்லூரியில் தமிழ் இளங்கலை மற்றும் முதுகலை வகுப்பைத் தோற்றுவித்தார். அன்றுதொட்டு தா.ஏ.ஞா. அவர்கள் தமிழ் முதுகலைப் பேராசிரியராகவும் ஆராய்ச்சிப் பேராசிரியராகவும் பணியேற்றார்.

பல்கலைக் கழகங்களில் மட்டுமே தமிழ் எம்.ஏ. வகுப்புகள் நடத்தப்பெற்று வந்த காலத்தில் 1967-இல் பூ.சா.கோ. கல்லூரியில் தமிழ் எம்.ஏ. வகுப்பைத் தோற்றுவித்துத், தமிழாய்விற்கு வழிவகை செய்து வெற்றி கண்டபோது தா.ஏ.ஞா.வின் நெஞ்சம் எத்துணைப் பூரிப்படைந்திருக்கும் என்று இயம்பவும் வேண்டுமோ!

**தமிழாய்வுத் துறை**

பூ.சா.கோ. கல்லூரியில் பெருமைமிகு தமிழ் முதுகலை வகுப்பைத் தொடங்கிய தா.ஏ.ஞா. அவ்வளவுடன் அமைந்தாரல்லர். எம்.ஏ. வகுப்பு கொண்ட தமிழ்த்துறையைத் தமிழாராய்ச்சித் துறையாக மாற்றுவதற்காக அக்கல்லூரியில் தமிழில் பி.எச்.டி., எம்.லிட்., பட்டப் படிப்புகளும் தோற்றுவிக்கப்பட வேண்டுமென எண்ணி, சென்னைப் பல்கலைக்கழகத்தில் ஆவணஞ் செய்து வெற்றியுங் கண்டார். மாணவரின் உயர்கல்வியும் ஆராய்ச்சியும் வளரவும் தமிழாராய்ச்சித் துறையாகக் கல்லூரி மேன்மையடையவும் பூ.சா.கோ. கலை அறிவியற் கல்லூரியில் பி.எச்.டி., எம்.லிட்., பட்டங்களும் தா.ஏ.ஞா அவர்களால் தோற்றுவிக்கப்படலாயிற்று. பூ.சா.கோ. கல்லூரியின் தமிழ்த்துறை தமிழ் உயராய்வு மையமாயிற்று. பூ.சா.கோ. கல்லூரியின் தமிழ்த்துறை பல்கலைக்கழகத்தை நிகர்த்ததாகத் தமிழாய்வுத் துறையாயிற்றெனில், அதற்கு மூலகாரணம் தாம் பணியேற்ற கல்லூரியைப் பொலிவுறச் செய்து, மாணவர்களை வளம்பெறச் செய்வதில் தா.ஏ.ஞா. கொண்ட தணியா வேட்கையே என்பது வெள்ளிடைமலையாம்.

**தா.ஏ.ஞா.வின் பேராசிரியத்திறம்**

பேராசிரியர் தா.ஏ.ஞா. அவர்கள், எளிய உடைகளையே விரும்பியணிவார். குறிப்பாக தூய் எளிய வெள்ளை நிற மேற்சட்டையை விரும்பி உடுத்தி மகிழ்வார். அவர் கருநிறமேனியினராயினும் முகத்தில் எப்போதும் அஞ்சன ஞாயிறு எனத்தகும் பொலிவு விளங்கும். தூக்கிவாரிய தலைமுடி, அழகிய மூக்குக் கண்ணாடி என அன்பே உருவாய் விளங்குவார். இவரின் பேராசிரியத் திறனை மாணவர்கள் மதித்துப் போற்றினர். பேராசிரியர்கள் ஏற்றுப் பின்பற்றி ஒழுகினர். பேராசிரியர் தா.ஏ.ஞா. அவர்கள் எந்த ஒன்றையும் உரிய வேளையில் செய்து முடிக்க வேண்டும் என்ற குறிக்கோளுடையவர். தான் கொண்ட குறிக்கோளுக்கேற்ப எதையும் குறித்த நேரத்தில் முறையாகச் செய்து முடிக்கும் தன்மையர்.

**வகுப்பு நடத்தும் திறம்**

இத்தகு அருங்குணங்களுடைய தா.ஏ.ஞா. மாணவர்கள் மனங்கொள்ளுமாறு பாடம் நடத்தும் சிறப்புப் பெற்றவர். மாணவர்களின் ஐயங்களைப் போக்குவதிலும், மாணவர்களின் தனித்திறன்களைக் கண்டறிந்து ஊக்குவதிலும் தனிக்கவனம் செலுத்தியவர். இலக்கியத் திறனாய்வியலையும், கலிங்கத்துப்பரணியையும், காப்பியங்களையும், இலக்கணங்களையும் மிகச் சிறப்போடு நடத்தும் திறம் பெற்றவர்.

இலக்கியத்திறனாய்வியலை நடத்தும்போது, மேனாட்டுத் திறனாய்வாளரான ஹட்சன், ஐ.ஏ.ரிச்சட்ஸ், வின்செஸ்டர் போன்றோரின் திறனாய்வு நூல்களைக் கற்று வந்து, மாணவர்க்கு விளங்கும் வகையில் எளிய தமிழில் திறனாய்வுக் கோட்பாடுகளை எடுத்துரைப்பார். மேனாட்டுத் திறனாய்வு ஆங்கில நூல்களை வாசித்துக்காட்டி மாணவர் உள்ளத்தில் பதியவைப்பார். தா.ஏ.ஞா. அவர்கள் அருந்தமிழுடன் ஆங்கிலப்புலமையும் பெற்றவராதலின் மேனாட்டுத் திறனாய்வு நூல் நயங்களை எல்லாம் மாணாக்கர் எளிதில் அறிந்து கொள்ள இயன்றது.

இலக்கண வகுப்புக்களைப் பொறுத்தமட்டில் இலக்கணங்களை இலக்கியங்களாகச் சுவைபட நடத்துவார். கலிங்கத்துப்பரணியைக் கற்பிக்கும்போது பாடல்களை அதற்குரிய ஓசை நயத்தோடும் செயல்திறனோடும் உணர்வு பொங்க நடத்துவாராம். தா.ஏ.ஞா. அவர்கள் பெரிதும் மதித்துப் போற்றிய சீவகசிந்தாமணிக் காப்பியத்தைக் கற்பிக்கும்போது காப்பியத் தலைவன்

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

சீவகனை அக்காலத் தமிழறிஞர்கள் பார்த்த பார்வையிலிருந்து முற்றிலும் வேறுபட்டு, 'சீவகன் காமுகன் அல்லன், கலைஞன்' என உறுதியாகக் கூறி மாணவர்களின் மனத்தில் பதிய வைப்பாராம். ஒவ்வொரு வகுப்பிலும் சிந்தாமணி நயங்களைத் தெளிவாகவும் நுட்பமாகவும் உரைப்பார். இதர பாடங்களைவிடக் காப்பியங்களைக் கற்பிக்கும்போது அன்னாரின் முகம் மலர்ச்சியோடு விளங்குமாம், தா.ஏ.ஞா. விற்கு மிகவும் விருப்பமான குறள்,

**"கருமணியிற் பாவாய்நீ போதாயாம் வீழும்**
**திருநுதற் கில்லை யிடம்" - (குறள் 1123)** என்பதாம்.

**ஆராய்ச்சிப் பேரறிஞர்**

1948-ஆம் ஆண்டு சனவரித் திங்கள் பூ.சா.கோ. கல்லூரித் தமிழ்த்துறைத் தலைவராகச் சேர்ந்த தா.ஏ.ஞா. 24 ஆண்டுகாலம் தமிழ்ப்பணியாற்றிய பின் 1972-ஆம் ஆண்டு மேத் திங்கள் ஓய்வு பெற்றார். அவ்வாண்டே சூன் திங்களில் பல்கலைக்கழக மானியக் குழு தா.ஏ.ஞா. விற்கு 'ஆராய்ச்சிப் பேராசிரியர்' (Emeritus Professor) என்னும் பதவியளித்து பூ.சா.கோ. கல்லூரியில் மீண்டும் பணியேற்கச் செய்தது.

தா.ஏ.ஞா. தமிழாராய்ச்சிப் பேராசிரியராகப் பணியேற்ற காலத்தில், பல மாணவர்களும், ஆசிரியர்களும் இவரின் மேற்பார்வையில் வழிகாட்டுதலில் எம்.லிட்., பி.எச்.டி. ஆராய்ச்சிப்பட்டம் பெற்றனர். குறிப்பாக, சென்னைப் பல்கலைக்கழகத்தின் தமிழ்ப்பேராசிரியராக இருந்த டாக்டர் மு.வரதராசனார் அவர்கள் மதுரைப் பல்கலைக்கழகத்தின் துணைவேந்தராகப் பதவியேற்ற பிறகு, சென்னைப் பல்கலைக்கழகத்தின் சார்பில் எம்.லிட்., பி.எச்.டி. ஆராய்ச்சிக்கு டாக்டர் தா.ஏ.ஞா. ஒருவரே வழிகாட்டியாக இருக்க நேர்ந்தது என்பது இவரின் தனிப்பெருஞ் சிறப்பாம். இவ்வாறாக, ஆராய்ச்சிப் பேராசிரியராயிருந்து தமிழ்த்தொண்டாற்றி, 1982-ஆம் ஆண்டு மேத் திங்கள் டாக்டர் தா.ஏ.ஞா. அவர்கள் ஓய்வு பெற்றார். இவர் நெறியாண்மையில் ஆய்வு செய்து மூவர் எம்.லிட். பட்டமும் 29 பேர் பி.எச்.டி. பட்டமும் பெற்றுள்ளனர்.

**தமிழாராய்ச்சிக்கான பணிகள்**

ஆராய்ச்சிப் பேராசிரியராகத் தமிழ்ப்பணியாற்றிய தா.ஏ.ஞா. பல்வேறு பல்கலைக் கழகங்களிலும், கல்லூரிகளிலும் தமிழாய்வுத்துறையைத் தொடங்க அரும்பாடுபட்டார். அவ்வகையில், அக்காலத்தில் தொடங்கப்பட்ட பாரதியார் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையைத் தொடங்குவதற்கு உரிய வழி வகை செய்து வெற்றியும் கண்டார். இங்ஙனமே கோழிக்கோடு பல்கலைக்கழகத்திலும் தமிழாய்வுத் துறையைச் சேர்ந்த ஆசிரியர்களும், மாணவர்களும் தகுதியான நெறியாளர் இல்லாமையால் எம்.லிட்., பி.எச்.டி. ஆய்வு செய்து பட்டம்பெற இயலாமல் தவித்தனர். இந்நிலையைக் கண்ணுற்ற தா.ஏ.ஞா. 1972-ஆம் ஆண்டு பூ.சா.கோ. கல்லூரியை அப்பல்கலைக்கழகத்தின் ஆய்விருக்கையாக மாற்றி, அப்பல்கலைக்கழகத்தைச் சார்ந்த மாணவர்களும், ஆசிரியர்களும் எம்.லிட்., பி.எச்.டி. பட்டங்கள் பெறுவதற்கு வழிவகை செய்து, தமிழாராய்ச்சிக்குத் தக்க தொண்டாற்றினார். இங்ஙனமே, அகில இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றத்தைத் தொடங்கியவர்களுள் தா.ஏ.ஞா. அவர்களும் ஒருவர். இம்மன்றம் தொடங்கப்படுவதில் இவரின் பங்கு மிகவும் குறிப்பிடத்தக்கதாம்.

**பங்கேற்ற துறைகள்**

தா.ஏ.ஞா. அவர்கள் தொடர்ந்து ஒன்பதாண்டுகள் சென்னைப் பல்கலைக்கழகத்தின் பேரவை (செனட்) அங்கத்தினராக இருந்தார். மேலும் சென்னைப் பல்கலைக்கழகம், மதுரைப் பல்கலைக்கழகம், தமிழ்ப் பல்கலைக்கழகம், பாரதியார் பல்கலைக்கழகம் ஆகியவற்றின் தமிழ்ப்பாடத் திட்டக்குழுவில் இருந்து பணியாற்றியிருக்கிறார் என்பதும் நினைவு கூரத்தக்கதாம்.

**கலைக்கதிர் இதழ்ப்பணி**

தா.ஏ.ஞா. தமிழ்த்துறைத்தலைவர் பணியேற்ற சில ஆண்டளவிலேயே பூ.சா.கோ. கலைக்கல்லூரி, பூளைமேட்டிலிருந்து மக்கள் வானூர்தி நிலையம் (இன்று பன்னாட்டு விமான

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

நிலையம்) அருகில் புதிதாக எழுப்பப்பட்ட கட்டடத்திற்கு இடம் மாற்றப் பெற்றது. இயற்கை எழில் கொஞ்சும் சோலைகளின் நடுவே அமைக்கப்பட்ட கல்லூரியின் சூழல் தா.ஏ.ஞா. விற்கு மிகவும் பிடித்தமாக இருந்தது. அம்மகிழ்வோடே தா.ஏ.ஞா. கல்வித் தொண்டாற்றலானார்.

கல்லூரி ஆணையாளர் திரு.ஜி.ஆர். தாமோதரன் அவர்கள் பலபோழ்து தா.ஏ.ஞா. விடம் கலந்தாலோசனை செய்தும் கருத்துக்களைக் கேட்டும் பல செயல்களைச் செய்து வரலானார். அவ்வகையில் தா.ஏ.ஞா. திரு.ஜி.ஆர் தாமோதரன் அவர்களைத் 'திங்களிதழ்' ஒன்றினைத் தொடங்கிப் பத்திரிகைத் தொண்டாற்றும்படிப் பணித்தார். 'காரிருள் அகத்தில் நல்ல கதிரொளி' பத்திரிகையன்றோ!.

தா.ஏ.ஞா.வின் பரிந்துரையை ஏற்ற திரு.ஜி.ஆர்.தாமோதரன் அவர்கள் திங்களிதழ் ஒன்றைத் தொடங்க முன்வந்தார். அவ்விதழுக்கு என்ன பெயர் சூட்டுவது? தா.ஏ.ஞா. விடம் வினவினார். தா.ஏ.ஞா. நன்கு யோசித்து, 'கலைக்கதிர்' எனப் பெயர் சூட்டும்படி நவின்றார். 'கலைக்கதிர்' என்பதன் பொருள் விளங்காத திரு.ஜி.ஆர்.தாமோதரன் அவர்கள், இப்பெயரின் பொருள்தாம் யாதோ? என வினவ, தங்களின் மூத்தமகன் பெயராகிய 'வித்தியபிரகா்'' என்பதன் தமிழாக்கமே 'கலைக்கதிர்' என்பதாம்! என்றார். திரு.ஜி.ஆர். தாமோதரன் அவர்களின் உள்ளம் பூரித்தது. பெயர் சூட்டுதலில் தா.ஏ.ஞா.வின் பெற்றிமையைத்தாம் என்னென்பது!

இங்ஙனம் 'கலைக்கதிர் திங்களிதழ்' 1949-ஆம் ஆண்டு தன் கதிரொளியைப் பரப்பத் தொடங்கியது! இவ்விதழின் உதவியாசிரியராகத் தா.ஏ.ஞா. பொறுப்பேற்றார். அறிவியல் தமிழை வளர்த்தலும், தமிழாராய்ச்சியை வளர்த்தலுமே இவ்விதழின் உயரிய நோக்கங்களாம்.

இவ்விதழில் பூ.சா.கோ. கல்லூரியின் இயற்பியல் துறைப்பேராசிரியர்களும், தாவரவியல், விலங்கியல், புள்ளியல், வேதியியல் துறைப் பேராசிரியர்களும் சென்னைப் பல்கலைக்கழக உளவியல் துறைப்பேராசிரியரான டாக்டர் தா.ஏ.சண்முகம் அவர்களும் குருதேவர் தெ.பொ.மீ. அவர்களும் டாக்டர் மு.வ. அவர்களும் டாக்டர் சை.வே. சிட்டிபாபு அவர்களும் பல்வேறு ஆராய்ச்சிக் கட்டுரைகளை எழுதி வந்தனர். தா.ஏ.ஞா.வும் அறிவியல் தமிழாராய்ச்சிக் கட்டுரைகளை எழுதி, அறிவியல் தமிழ் வளர்ச்சிக்குத் தொண்டாற்றி வரலானார். அதோடு கலைச்சொல்லாகப் பணியும் கலைக்கதிர் வாயிலாக மேற்கொள்ளப்பட்டது. கலைச்சொல்லாக்கத்திற்கான இலக்கணங்களும் வெளியிடப்பட்டன. இதழில் வெளிவந்த கலைச்சொற்களைத் தொகுத்து நூலாகவும் வெளியிட்டனர். இவ்வகையில் கலைச்சொல்லாக்கப் பணியில் கலைக்கதிர் இதழ் மிகப்பெரிய புரட்சி செய்தது. பூ.சா.கோ. கல்லூரியின் தமிழ்மன்ற விழாவிற்குச் சிறப்பு விருந்தினராக வருகை தந்த டாக்டர் மு.வரதராசனார் அவர்கள் கலைக்கதிர் இதழ்ப் பணியைப் பாராட்டும் முகத்தான். **"தற்காலத்தில் வெளிவரும் பல பத்திரிக்கைகள் நூல் நிலையங்களுக்கு ஏற்றனவாக இல்லை. அறிவு வளர்ச்சிக்கும் ஏற்றனவாக இல்லை. ஆனால் 'கலைக்கதிர்' அக்குறையை நிறைவு செய்கின்றது என்று கூறலாம். அதைப் படிப்பவர்கள் அறிவுபெற வாய்ப்பு உண்டு. 'கலைக்கதிர்' அதற்கு வழிகாட்டியாக அமைந்துள்ள நிலையில் அதன் சிறப்பை மறக்க முடியாது. 'கலைக்கதிரில்' காணும் செய்திகள் வாழ்க்கைக்கு மிக உதவியாகவும் வழிகாட்டியாகவும் உள்ளன என்பது மறுக்க முடியாததாகும். தொண்டு செய்யவும் வழிகாட்டுகின்றது. 'கலைக்கதிர்' உண்மையில் கலையின் கதிராய்த் திகழ்கின்றது"** என்று புகழாரம் சூட்டினார். இவ்வகையில், தமிழில் அறிவியல் வளர வேண்டும் என்பதற்காக முதன் முதலாய்த் தொடங்கப்பட்ட இவ்விதழின் அறிவியல் தமிழ்ப்பணி மிகப்பெரிது.

**நாடகக்கலைப் படைப்பாளர்**

**இளம் பருவத்துணிவு**

டாக்டர் தா.ஏ.ஞா.விற்கு இளமைப்பருவ முதலே நாடகத்தின் மீது மிகுந்த ஈடுபாடு

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

இருந்து வந்துள்ளது. நாடகத்தின் மீது தனக்கிருந்த விருப்பம் பற்றி, **“நாடகத்தைப் பற்றி யான் நினைக்கும்போது என் பள்ளிப் பருவகாலம் நினைவுக்கு வருகிறது. அப்பருவத்தில் நாடகங்கள் பார்ப்பதில் எனக்கு அளவிறந்த விருப்பம் இருந்தது. நாடகங்கள் பார்ப்பது தீய பழக்கம் எனக் கருதப்பெற்ற காலம் அது. என் பெற்றோர்களை ஏமாற்றி யான் அக்காலத்தில் நாடகங்கள் பார்த்ததுண்டு”** (தெய்வஒளி – முன்னுரை தா.ஏ.ஞா.) என்று அவரே விதந்து கூறுவார். இவ்வாறு, நாடகத்தின் மேல் தான் கொண்டிருந்த வேட்கையின் காரணமாக, தாமே நாடகம் நிகழத்தவும், எழுதவும் வேண்டுமென எண்ணி, சில நாடகங்களை நிகழ்த்தியும், அக்காலத்திலேயே தம் நண்பர்களுக்கு நாடகப் பயிற்சியும் கொடுத்தமை பற்றி, அவரே உவகையுடன் கூறுகின்றனர். அவர் கூறுவதைக் கேண்மின்:-

**“என் உயர்நிலைப் பள்ளிப்படிப்பு முடிவுற்றதும் யானே நாடகங்கள் நிகழ்த்த வேண்டும் என்ற எண்ணம் ஏற்பட்டது. அதற்காக என் நெருங்கிய நண்பர்கள் சிலரை ஒன்று சேர்த்தேன். அக்காலத்தில் ‘வள்ளிதிருமணம்’, ‘கோவலன்’, ‘லலிதாங்கி’, ‘சாரங்கதரா’, ‘குலேபகாவலி’, ‘ஞானசவுந்தரி’, ‘நந்தனார்’ இன்னோரன்ன நாடகங்களே பெரும்பாலும் நடிக்கப்பெற்றன. எனவே, அக்காலத்திற்கேற்ப ‘வள்ளிதிருமணம்’ என்ற நாடகத்தை நடிக்க யான் முடிவு செய்தேன். யானே நாடக நெறியாளனாக (Director) இருந்து, என் நண்பர்களுக்கு நாடகப் பயிற்சி அளித்தேன். நடிப்பு முறைகளைப் பற்றி அப்போது எனக்கு ஒன்றுமே தெரியாது. பல நாடகங்களைப் பார்த்திருந்தால், அவற்றினின்றும் யான் அறிந்த சில நடிப்பு முறைகளையொட்டி என் நண்பர்களுக்குப் பயிற்சி தந்தேன். நாடகத்திற்கு ஆர்மோனியம் இசைத்துப் பின்பாட்டும் பாடினேன். அவ்விளம்பருவத் துணிவை இப்போது நினைந்து வியக்கின்றேன். அக்காலத்தில் மேடையில் நடிகர் பாடும் பாட்டுக்களுக்குப் பின்பாட்டுப் பாடும் வழக்கம் இருந்தது.**

**இவ்வழக்கம் தற்போது மறைந்து விட்டது. எம் வள்ளிதிருமணம் ஓரளவு வெற்றி எய்தியது எனலாம். இந்நாடகம் 1930-ஆம் ஆண்டில் நடைபெற்றது”.** (தெய்வ ஒளி – முன்னுரை) என்று தம் இளம் பருவத்துணிவையும் நாடகக் கலையின் மீது தான் கொண்டிருந்த தணியா வேட்கையையும் தா.ஏ.ஞா. அவர்கள் புலப்படுத்தி மகிழ்கிறார்.

இவ்வாறே, தான் நிறுவிய ‘கலைபணி பயிற்சிக் கழகத்து 1941-ஆம் ஆண்டின் ஆண்டுவிழாவை முன்னிட்டு நாடகம் ஒன்று நடத்த முடிவு செய்து, ‘சிலப்பதிகாரம் மதுரைக் காண்டத்தை’ இவர் நாடகமாக எழுதினார். அந்நாடகம் தமிழ்முனிவர் திரு.வி.க. அவர்களின் தலைமையில் நடிக்கப்பெற்றதாம்.

**கோவை நாடகக் கலைக் கழகம்**

நாடகக்கலையின் அருமை பெருமைகளை உணர்ந்து மாணவர்கள் அந்நாடகக்கலையின் பயிற்சி பெற வேண்டுமென்ற நோக்கத்தோடு பூ.சா.கோ. கல்லூரியில் தொடங்கப்பட்டது. ‘நாடகக்கலை மன்றம்’ ஆகும். அங்ஙனமே, மக்களிடம் நாடகக் கலையைக் கொண்டு சேர்த்து, வளர்த்தெடுக்க வேண்டுமென்ற பெருநோக்கத்தோடு, தா.ஏ.ஞா. அவர்கள் கோவை மாநகரில் ‘கோவை நாடகக்கலைக் கழகம்’ என்னும் நாடகக் கழகத்தைத் தோற்றுவித்தார்கள். “அருங்கலை உயர்பண்பு பெருவாழ்வு” என்பது இக்கழகத்தின் குறிக்கோளாம். இக்கலைக் கழகம் வாயிலாக, மாணவர் பலருக்கு நாடகக்கலையைப் பயிற்றுவித்து நாடகங்களை நடிக்கவும் செய்துள்ளார்.

நாடகப் படைப்பாளரான தா.ஏ.ஞா. அவர்கள் பல நாடகங்கள் எழுதியுள்ளார். அவற்றுள் ஐந்து நாடகங்கள் மட்டுமே நூலாக வெளியிடப்பெற்றுள்ளன. இவரால் எழுதப்பெற்ற நாடகங்கள் பலவும் எவ்வித மாற்றமும் செய்யாமல் மேடையில் நடித்ததற்குத் தகந்தமுறையில் எழுதப்பெற்றவை என்பது தனிப்பெருஞ்சிறப்பாம். இவரின் நாடகங்கள் பலவும் ‘கோவை நாடகக் கலைக்கழகத்திலும்’ கல்லூரி ‘நாடக மன்றத்திலும்’ பன்முறை

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

நடிக்கப்பெற்ற சிறப்பினையுடையவை. குறிப்பாக ‘படித்தவன், அமராபரணம், தெளிந்த நீரோடை, சுடரும் பொன், பொன்மலர், உயிரோவியம்’ எனும் நாடகங்கள் நாடகக் கலைக்கழகத்தால் அரங்கேற்றப்பட்டுப் பலராலும் பாராட்டப் பெற்றவை என்பதும் சுட்டத்தக்கதாம். இவருடன் பணியாற்றிய தமிழ்த்துறைப் பேராசிரியர்கள் திரு.ம.ரா.போ குருசாமியவர்கள், திரு.ஈகோ.பாஸ்கரதாஸ் அவர்கள் போன்றோரும் இயற்பியல் பேராசிரியர் திரு. கருப்பண்ணன் அவர்கள், வணிகவியல் பேராசிரியர் திரு. சுந்தர்ராஜ் அவர்கள் என்றின்னோரன்ன பேராசிரியர்கள் இவரின் நாடகங்களில் பல்வேறு வேடமேற்று நடித்துள்ளனர். அவ்வளவு ஏன் பூ.சா.கோ. கல்லூரி முதல்வர் திரு.போ.ரா.கிருட்டினமூர்த்தி அவர்களே ஒருசில பாத்திரங்களின் வேடமேற்று நடித்துள்ளார் எனில் இவர்களனைவரும் தா.ஏ.ஞா. அவர்களின் நாடகங்களில் காட்டிய ஈடுபாட்டை என்னென்பது.

**நடிகர் நாகேஷ்**

இவரின் நாடகக் கலைக்கழகத்தில் பயிற்சி பெற்று நாடகத்திறனை வளர்த்துக் கொண்டு உயர்நிலையடைந்தோர் பலர், அவருள் சிறப்பாகக் குறிக்கத்தக்கவர் ‘நடிகர் நாகேஷ் அவர்களாவர். நடிகர் நாகேஷ் அவர்கள் தா.ஏ.ஞா.வின் மாணவர். இவரின் நாடகப் பயிற்சிப் பட்டறையில் சிறப்பாகப் பயிற்சி பெற்றவர். அன்னாரிடம் நாடகப் பயிற்சி பெற்றுப் பல்வேறு நாடகங்களில் நடித்தவர். நாகேஷ் அவர்களிடம் உள்ளிட்ட விளக்காக இருந்த நடிப்புத்திறனை வெளிக்கொணர்ந்து வெள்ளிடைமலையாக உலகறியச் செய்தவர் டாக்டர்.தா.ஏ.ஞா. அவர்களே என்பது நீள நினையத்தகும் சிறப்பியல்பாம்!.

**நாடகத்தில் தணியாவேட்கை**

அகத்தா கிறிஸ்டி (Agatha Christie) அவர்களால் எழுதப்பெற்று 1952-ஆம் ஆண்டு அக்டோபர் திங்கள் 6-ஆம் நாள் முதல் இலண்டன் மாநகரில் 62 ஆண்டுகளாகத் தொடர்ந்து மேடையாக்கம் செய்யப்பெற்று வரும் உலகப் புகழ்பெற்ற “The Mousetrap” நாடகத்தைக் காணவேண்டும் என்ற பேரார்வங்கொண்ட தா.ஏ.ஞா. அவர்கள் இலண்டன் மாநகரம் சென்று ஆர்வத்தோடு அந்நாடகத்தைக் கண்டு மகிழ்ந்தார்கள் என்பதும் அன்னாரின் நாடக ஆர்வத்திற்கு தக்க சான்றாம்.

நாடகக்கலையில் பேரார்வங்கொண்ட தா.ஏ.ஞா இளைஞர்களுக்கு நடிப்புக் கலையில் அறிவியல் முறையோடு பயிற்சி தரும்பொருட்டு ‘நாடகக்கலைக் கல்லூரி’ ஒன்றனை நிறுவ அரிய முயற்சிகள் செய்து வந்தார் என்பதும் பேராற்றல் படைத்த நாடகக்கலை வாயிலாகத் தமிழையும் தமிழ்ப் பண்பாட்டையும் விரைந்து வளர்க்க முடியும் என்று தா.ஏ.ஞா. அவர்கள் உறுதியாக இருந்து வெற்றியுங்கண்டார் என்பதும் எண்ணி மகிழத்தக்கதாம்.

இவ்வாறு தா.ஏ.ஞா. அவர்கள் நாடகக்கலையில் கொண்டிருந்த தணியா வேட்கையையும், உலகம் போற்றும் விதமாக நந்தமிழ் நாடகக் கலை வளர்ச்சியுற வேண்டும் எனப்பேரவா கொண்டு, நாடகக்கலை மேன்மையுற அவர் ஆற்றிய பணிகள் எல்லாவற்றையும் எத்துணை விரித்துச் சொல்லினும் குறைவுடையதாகவே அமையும்.

**திரைக்கலை வித்தகர்**

நாடகக்கலை வித்தகராக விளங்கிய தா.ஏ.ஞா. அவர்கள் திரைக்கலை வித்தகராகவுந்த திகழ்ந்துள்ளார். தமிழ்ப்பேராசிரியராக, நாடகக்கலைப் படைப்பாளியாக, இலக்கிய ஆராய்ச்சியாளராக, கல்வியாளராகப் புகழ்பெற்ற தா.ஏ.ஞா. அவர்களைத் திரைக்கலை வித்தகராக மிளிரச் செய்தது அவர் கதையும் வசனமும் எழுதிய ‘கலையரசி’ திரைப்படமேயாம்.

தா.ஏ.ஞா. அவர்கள் அரிதின் முயன்று கதையும் வசனமும் எழுதிய கலையரசி என்னும் திரைப்படம் 19.04.1963 - ஆம் நாள் வெளிவந்தது. இத்திரைப்படம் சரோடி பிரதர்ஸ் அவர்களின் வெளியீடாக, ஏ.காசிலிங்கம் இயக்க கே.வி. மகாதேவன் இசையமைப்பில், பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம், கண்ணதாசன், ஆலங்குடி சோமு, முத்துக்கூத்தன் என்போர் பாடல்களைப் பாடியுள்ளனர். இத்திரைப்படத்தில் எம்.ஜி.ஆர். மற்றும் பானுமதி இருவரும்

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

இரட்டை வேடத்தில் நடித்துள்ளனர். பி.எஸ்.வீரப்பா, எம்.என்.நம்பியார் போன்றோரும் இப்படத்தில் நடித்துள்ளனர்.

'கலையரசி' திரைப்படத்தின் கதை மிகவும் திட்டமிட்டு அமைக்கப்பட்ட நுட்பமான கதையும் அறிவியல் நாவல் போன்றதுமாம். அக்காலத்திலேயே பறக்கும் தட்டுகள். வேற்றுகிரக வாசிகள், விண்வெளி, விண்கலம் இன்னோரன்னவற்றைத் தாம் கதையும் வசனமும் எழுதிய இத்திரைப்படத்தில் பயன்படுத்தி புதுமையைப் புலப்படத்தியுள்ளார் தா.ஏ.ஞா. அன்னார் அறிவியல் துறையில் கொண்ட பேரார்வத்திற்கும் புதுமைப்படைக்கும் கலையுள்ளத்திற்கும் இத்திரைப்படம் தக்க சான்று பகர்வதாக விளங்குகிறது.

**எழுத்துப்பணி**

அன்பிற்கும், பண்பிற்கும் உறைவிடமான டாக்டர் தா.ஏ.ஞா. அவர்கள் தமிழாய்வில் தனியிடம் பதித்தவர் படைப்பாற்றல் மிக்க தமிழறிஞர், சிந்தனைத்திறம் மிக்கவர். தம் சிந்தனைக்கு எழுத்துருவம் தந்த இலக்கிய ஆராய்ச்சி நூல்கள், நாடகங்கள், புதினங்கள், சிறுகதைகள் எனப் பல்துறை நூல்களையும். கலைக்கதிர் போன்ற திங்களேடுகளிலும், மலர்களிலும் நூற்றுக்கும் மேற்பட்ட கட்டுரைகளையும் எழுதியவர். இங்ஙனம் பல்வேறு நூல்களை வெளியிட்டுள்ள டாக்டர் தா.ஏ.ஞா. அவர்கள், மூன்று புதினங்களும் சிறுகதைகளும் பல நாடகங்களும் கலைக்கதிர் திங்களேடு வாயிலாக வெளியிட்டுள்ளார். இவையாவும் தா.ஏ.ஞா. அவர்களின் தமிழாய்விற்கும் அவரின் நாடகக்கலை ஈடுபாட்டிற்கும் தக்க சான்று பகர்வனவாம்.

**நூல்கள்**

1) 'கம்பன் புளுகும் வால்மீகி வாய்மையும்' பா.வே. மாணிக்க நாயக்கர் எழுதியது (முன்னுரையுடன் பதிப்பு) (1954) 2) பாவையின் உயிர்ப்பு (1957) 3) தெய்வஒளி (1958) 4) சிந்தாமணிச் செல்வம் (1960) 5) சக்கரங்கள் சுழல்வதேன் (1964) 6) அடிசிற்கினியாள் (1965) 7) A Critical Study of 'Civahacintamani' (சிந்தாமணி ஆராய்ச்சி) (1966) 8) நின்ற சொல்லர் (1970) 9) தமிழ்க் காப்பியங்களில் அவல வீரர்கள் (1973) 10) பொன்மலர் (1974) 11) சமணம் (1976) 12) இலக்கியத் திறனாய்வியல் (1980) 13) இலக்கியப் படைப்பியல் (1982) 14) யார்மகளோ! (1986) 15) நாடகத்திறன் (1987) 16) நடிப்புக்கலை.

**நாடகங்கள்**

1) கடற்கரை (1949) 2) பெண்ணின் கண்ணீர் (1950) 3) வாழ்க்கைச்சுடர் (1951) 4) வைரமாலை (1953) 5) புதுவாழ்வு (1954) 6) சிவகாமி (1954) 7) தெய்வஒளி (1955) 8) பொன்மலர் (1955) 9) தெளிந்த நீரோடை (1955) 10) தெள்ளமுது (1956) 11) காமக்கண்ணி (1963) 12) அமராபரணம் (1964) 13) இராசேந்திரன் (1965) 14) படித்தவன் (1966) 15) செல்வமகன் (1969) 16) சுடரும் பொன் (1969) 17) உயிரோவியம் (1979) 18) கண்திறந்தது (1989).

**புதினங்கள்**

1) சுழற்காற்று (1949) 2) காதல் படும்பாடு (1954) 3) முதிரமலைச்செல்வி (1961)

**சிறுகதைகள்**

1) டாக்டரின் மனைவி (1963) 2) செல்வமகன் (1963) 3) கண்டிப்பு (1963) 4) நடிகை (1964) 5) அவர் வாழவேண்டும் (1964) 6) சூடாமலர் (1965) 7) நினைவுப்பரிசு (1970) 8) என் கண்கள் திறந்தன (1971) 9) நினைப்பதெல்லாம் நடந்துவிட்டால் (1971)

இவையேயன்றி நூற்றுக்கும் மேற்பட்ட ஆராய்ச்சிக் கட்டுரைகளையும் நம் பேராசிரியரவர்கள் எழுதி வெளியிட்டுள்ளார்கள். அவை ஒரு பெருநூலாகத் தொகுத்தளிக்கும் பான்மையவாம். அன்றியும், இப்படைப்புகள் யாவும் நம் பேராசிரியரவர்களின் இறவாப் புகழுடைய எழுத்தோவியங்களாக; அவரின் பல்துறைப் புலமைக்குத் தக்க சான்றுகளாக; இம்மன்பதை எஞ்ஞான்றும் பயன்கொள்ளத்தக்கதாக; அவர் சால்பின் நிறைவுச் சான்றாக இவ்வையகத்தில் மிளிர்வனவாம்.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

**பட்டங்கள்**

தா.ஏ.ஞா.வின் தமிழ்ப்பணியைப் பாராட்டி 1972-ஆம் ஆண்டு மேத்திங்கள் 24-ஆம் நாள் பறம்பு மலையில் நடைபெற்ற வள்ளல் பாரி விழாவில் 'குன்றக்குடி அடிகளார்' இவருக்கு 'நூலறிபுலவர்' என்ற பட்டத்தை வழங்கிச் சிறப்பித்தார். "புலமைமிக்கவரைப் புலமைதெரிதல் புலமிக்கவர்க்கே புலனாம்" என்பது குன்றக்குடி அடிகளார் வழங்கிய பட்டத்தான் மெய்ம்மை ஆயிற்றன்றோ!

இவ்வாறே நாடகச்செம்மல், சிந்தாமணிச் செம்மல் என்னும் பட்டங்களும் தா.ஏ.ஞா.வைத் தேடி வந்தன. இங்ஙனம், பட்டங்கள் பெற்றத் தா.ஏ.ஞா. வை அவர்தம் மாணவர்கள் வணங்கி வாழ்த்தயபோது, **"என்னை நீங்கள் பேராசிரியர் என்று மட்டும் அழைப்பதையே நான் பெருமிதமாக எண்ணுகிறேன். எல்லோருமே என்னை அப்படியே அழையுங்கள்"** என்று தா.ஏ.ஞா. அவர்கள் மொழிந்தார், அவரின் கற்றறிந்தடங்கிய அடக்க உணர்வை அன்னாரின் மாணாக்கர் நெகிழ்ந்து போற்றுகின்றனர், சான்றோரின் இயல்பன்றோ இது!

**பேச்சுத்திறம்**

தா.ஏ.ஞா. அவர்கள் தமிழிலும் ஆங்கிலத்திலும் கொச்சையற்ற மொழியில் உரையாடுவார். ஆங்கிலத்தில் சரளமாக உரையாடுவார். ஆற்றொழுக்காகப் பேசுந்திறங்கொண்டவர். இவரின் சொற்பொழிவுகள் 'கேட்டார் பிணிக்கும் தகை அவாய்க் கேளாரும் வேட்ப மொழிவதாம் சொல்' என்னுந் தகைமையதாய் விளங்கும். நீள நெடிய வாக்கியங்களைப் பயன்படுத்தாது வெல்லுஞ்சொல் இன்மை அறிந்து, சுருங்கச் சொல்லி விளங்க வைப்பார். ஒத்த சொல்லும் மிக்க சொல்லும் உளவாகாமல் சொல்லும் திறம் படைத்தவர்.

சொற்களின் வலிமையை அறிந்து உரையாடும் தா.ஏ.ஞா. பிறர்மனம் நோகாமல் பேசுவார். வெளிப்படையாகவும் ஒளிவுமறைவின்றியும் பேசுவார். தம் உணர்ச்சிகளை எளிதில் வெளிப்படுத்தாத தா.ஏ.ஞா. மாற்றுக் கருத்துடையோரிடமும் இனிதுற பழகுவார். பிறர் கூறும் கருத்துக்களில் தமக்கு உடன்பாடில்லை எனின் மறுத்துப் பேசாமல் வாளா இருந்துவிடுவார். புறங்கூறலை அறவே வெறுத்து ஒதுக்குவார். பகையறியாப் பண்புள்ளங் கொண்டவராதலின் பகையை வளர்த்துக் கொள்ளார். பகைமை பாராட்டுவோரிடமும் அன்பை வளர்க்க முனைவார். இங்ஙனமாகப் பேரருள் பேருள்ளங் கொண்ட பண்பினராய் 'பணியுமாம் என்றும் பெருமை' என்ற இலக்கணத்திற்கு இலக்கியமாகத் திகழ்ந்தார்.

**பெரும்பிரிவு**

'என் கடன் பணி செய்து கிடப்பதே' என்ற வாக்கிற்கிணங்க நள்ளிரவு வரை எழுதுவதும், ஓயாமல் உழைப்பதும் என இருந்த தா.ஏ.ஞா. அவர்கள். 1993-ஆம் ஆண்டு பிப்ரவரித் திங்கள் 12-ஆம் நாள் முதலே, நெஞ்சு வலியால் மிகவும் சோர்வோடு காணப்பெற்றார். தாம் உற்ற துன்பத்தை துணைவியாரிடமுங் கூடத் தெரிவிக்காமல் மறைத்துக் காத்து வந்தார். பிப்ரவரி 14-ஆம் நாள் தா.ஏ.ஞா.வின் உடல் நிலை மிகவும் சீர்கேடடைந்தது. மரகதம் அம்மையாரும், மருமகளார் திருமதி. சுனந்தினி அவர்களும் உடனடியாக தா.ஏ.ஞாவை மருத்துவமனையில் சேர்ப்பித்தனர். மருத்துவமனையில் தா.ஏ.ஞா-விற்கு உரிய மருத்துவம் பார்க்கப்பட்டது.

பிப்ரவரி 21-ஆம் நாள் தா.ஏ.ஞா வின் உடல் நிலை மிகவம் சீர்கேடடைந்தது. உடனடியாக தீவிர சிகிச்சைப் பிரிவில் அனுமதிக்கப்பட்டு, மருத்துவர்கள் பலவகையாலும் ஆய்ந்து தக்க மருத்துவம் மேற்கொண்டனர். 22-ஆம் நாள் தா.ஏ.ஞா.வின் உடல்நிலை சீரானது. அனைவரும் மகிழ்ந்தனர். உறவினர்களும், புதல்வர்களும் இல்லத்திற்கு திரும்பினர். ஆனால், அன்றிரவு தா.ஏ.ஞா.வின் உடல்நிலை மிகவும் மோசமானது. தா.ஏ.ஞா.வை யாரும் பார்க்க அனுமதிக்கப்படவில்லை. 23-ஆம் நாளன்று தா.ஏ.ஞா.வின் உடல்நிலை சரிப்படுத்த

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

இயலாத அளவிற்குப் போய்விட்டது. பேச்சொடுங்கினார் அதிகாலை 3.00 மணிக்குத் (23.02.1993) தொல்லை ஏதுமின்றி மூக்சொடுங்கினார்! அன்னாரின் நல்லுயிர் அமைதியுற்றது!

ஆரவாரமிகுந்த சென்னை மாநகரில் **'தெய்வஒளியாய்'-ப்'** பிறந்து தெவிட்டாதத் **'தெள்ளமுதாய்த்'** தமிழறிவித்து, மாணவர் பலரின் வாழ்க்கையில் **'வாழ்க்கைச்சுடராய்'** ஒளிவிளக்கேற்றி, **'நின்றசொல்லராய்'** அனைவர் மனத்திலும் நிறைந்து **'பொன்மலராய்'** அன்பாகிய நறுமணத்தை எங்கும் வீசி, ஆரவாரம், ஆடம்பரம் எதுவும் தம்மை அணுகவிடாத **'தெளிந்த நீரோடையாய்'** வாழ்ந்த தா.ஏ.ஞா. அவர்களின் வாழ்வு **'புதுவாழ்வு'.** இனி அந்த வாழ்வினை அன்னாரின் பற்பல நூல்களும் பரப்பிவரும் என்பது திண்ணம்.

> **" நீ ஒரு பொன்மலர் அன்பாகிய நறுமணத்தை**
> **எங்கும் வீசுகின்ற அழகான பொன்மலர்!" (பொன்மலர்)**
> **"நீங்கள் தெளிந்த நீரோடை! எப்படிக் காற்று, புயல் இவைகளுக்கெல்லாம் கலங்கிடாமல் -ஆரவாரமில்லாமல் - அமைதியாக அது போகிறதோ அதுபோல அமைதியாகச் சிறந்த பண்போடு நடந்து கொள்கிறீர்கள்" (தெளிந்த நீரோடை)**

**முதன்மைச்சான்று மூலம்**

1. விக்னேசு.வே. 'டாக்டர் தா.ஏ.ஞானமூர்த்தி அல்லது வாழ்வியல் வழிகாட்டி' மணிவாசகர் பதிப்பகம், பாரிமுனை, சென்னை - 8. முதற்பதிப்பு - பிப்ரவரி - 2016

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
International Journal of Tamil Language and Literary Studies 
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

# சமுதாய பார்வையில் பாவேந்தரின் கொள்கைகள்

## Sociological Perspective of Pavendar's Principles

**மா.விஜயலெட்சுமி,** முனைவர் பட்ட ஆய்வாளர்
பாரதிதாசன் உயராய்வு மையம், பாரதிதாசன் பல்கலைக்கழகம், திருச்சிராப்பள்ளி - 24.

## Abstract

*Paventhar Bharathidasan is a Tamil literary luminary who has handled prose, poetry and drama effectively. He developed his works based on 'Aimperum Iyakkangal'. New Spirit and enthusiasm is seen although in his works with the effect of Periyar's Self Respect Movement. He emphasized on reforming old society into the world of equal rights. He pointed out world vision and enjoying beauty through his works. This article studies Pavendar's principles in a sociological perspective.*

**Keywords:** Aimperum Iyakkangal, periyar's, society.

**முன்னுரை**

தமிழகத்தில் புரட்சி காலம் என்பது எல்லா காலங்களிலும் இருந்து இருக்கின்றன. பாவேந்தரின் சமூகத்தொண்டு மிகுந்து காணப்படுகிறது. சமூக இயக்கங்களின் முயற்சியோடு இவர் ஆற்றிய பணி பொது மக்களிடையே மிகுந்த வரவேண்பை பெற்றன. மக்கள் கவிஞன் மட்டுமல்ல இவர் சமத்துவ கவிஞனும் ஆவார். தனித்தமிழ் இயக்கத்திற்கு அடித்தளமாக விளங்கியவர் என்பதை இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**முத்தமிழ்க்கவிஞர்**

இயல், இசை, நாடகம் என்ற முத்தமிழையும் முறையாகப் படித்தவர் பாவேந்தர். எதிப்பாராத முத்தம், பாண்டியன் பரிசு, தமிழச்சியின் கத்தி, குடும்பவிளக்கு முதலியன இயல் தமிழிலக்கியங்களைப் படைத்தார். இசையமுது பல தொகுதிகளாகப் பாடி இசைத்தமிழினை வளர்த்தார். பிசிராந்தையார், வீரத்தாய், அமைதி முதலியன படைப்புகளினால் நாடகத்தமிழினைப் பேணிக் காத்தார். திரைப்படங்கள் பலவற்றிற்குப் பாடல்கள், உரையாடல்கள் எழுதியுள்ளார். எனவே, பாவேந்தரை முத்தமிழ்க் கவிஞர் என்று போற்றுதல் உண்மைக்குப் பொருந்திய பாராட்டாகும். பண்டைய நாளில் தமிழ்க் கவிஞர்கள் இயல், இசை, நாடகம் ஆகிய மூன்று துறைகளிலும் முற்றிய புலமை பெற்றவர் என்பதை,

**"முத்தமிழ்த் துறையின் முறை போகிய**
**உத்தமக் கவிஞர்" (கம்பராமாயணம்.பால.8)**

எனவரும் கம்பரின் பாடலினால் அறிய முடிகிறது.

**ஜம்பெரும் இயக்கங்களின் தாக்கம்**

பாரதிதாசன் முறையாகத் தமிழ் கற்றவர். தொல்காப்பியம், சங்க இலக்கியம், காப்பியம், பக்தி இலக்கியம், பிரபந்தம் உள்ளிட்ட பல்வகைப்பனுவல்களையும் நுணுக்கமாகப் பயின்றவர். புதுவை மாநிலத்தில் புலவர் தேர்வில் முதல் நிலையில் தேர்ச்சி பெற்றவர் பயின்றவர். ஆசிரியப் பணியை அறப்பணியாகக் கொண்டவர். இளமையில் பாப்புனையும் வித்தையில் சிறந்து விளங்கினார். தொடக்கத்தில் அக்கால மரபுப்படி இறைவனைப்பாடும் வித்தையில் சிறந்து விளங்கினார். தொடக்கத்தில் அக்கால மரபுப்படி இறைவனைப் பாடும் பாவலராக இலக்கிய வாழ்வினைத் தொடங்கினார். மயிலம் முருகன் பேரில் கீர்த்தனைகள்

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

பாடினார். இவர்கள் அளுமையின் உருவாக்கத்திலும் பரிணாம வளர்ச்சியிலும் ஐந்து பெரும் இயக்கங்களின் தாக்கம் காணப்படுகின்றது.

இவர் தேசிய இயக்கத்தில் ஈடுபாடு கொண்டிருந்த பொழுது கதர் இராட்டினப்பாட்டுக்கள், விடுதலை குறித்த கவிதைகள் பல பாடினார். இயக்கத்திற்கும் இலக்கியத்தோற்றத்திற்கும் நெருங்கிய தொடர்பு உண்டு என்பதை நினைத்துப் பார்த்தல் வேண்டும்.

தந்தை பெரியாரின் சுயமரியாதை இயக்கத்தின் தாக்கத்தால் இவர் கவிதைகளில் புதுவேகமும் புத்துணர்ச்சியும் தோன்றின எனலாம். தமிழின உணர்வு, மொழி உணர்வு, மூடப்பழக்கங்களைச் சாடுதல், பொருளற்ற சடங்குகளையும் சம்பிரதாயங்களையும் அடியோடு அகற்ற முற்படும் முற்போக்க எண்ணம், பெண்ணினத்திற்குச் சம உரிமை, ஆணாதிக்கச் சமுதாயத்தின் கொடுமைகளிலிருந்து பெண்ணினத்தை விடுவித்து, உரிய உயரிய இடத்தினை வழங்குதல், அனைவர்க்கும் கல்வி முதலிய பொருண்மைகளில் பாவேந்தரின் பாடல்கள் அமைதற்குச் சுயமரியாதை இயக்கத்தின் தாக்கமே காரணம் எனலாம்.

சிந்தனைச்சிற்பி சிங்காரவேலரின் பொதுவுடைமை இயக்கச் சிந்தனைகள் பாரதிதாசன் ஆளுமையில் பெரிதும் தாக்கத்தைச் செய்தன. குடியரசு இதழில் சிங்கார வேலர் எழுதிய கார்ல் மார்க்சு, எங்கெல்சு, லெனின் முதலியோரின் பொதுவுடைமைச் சீர்திருத்தக் கருத்துகள் பாரதிதாசனின் மனதில் பதிந்தன. புரட்சிக்கவி, வீரத்தாய் முதலிய படைப்புகளில் பொதுவுடைமைத் தத்துவத்தின் பதிவினைப் பார்க்கலாம். புழைய சமுதாய அமைப்பின் மாற்றிச் சமதருமம் உலகினைப் படைத்தற்குப் பாரதிதாசன் விழைந்துள்ளார்.
எனவே தான்,

**“புதியதோர் உலகம் செய்வோம் கெட்ட**
**போரிடும் உலகத்தை வேரொடு சாய்ப்போம்**
**பொதுவுடைமைக் கொள்கை திசைஎட்டும் சேர்ப்போம்”**
**(பாரதிதாசன் கவிதைகள். புதிய உலகு செய்வோம்.58)**

கி.பி 18 ஆம் நூற்றாண்டில் ஐரோப்பிய இலக்கிய வரலாற்றில் பெரும்பாதிப்பினையும் புதுமையினையும் உண்டாக்கியது புனைவியல் இயக்கம் இவ்வியக்கத்தின் தந்தை என்று போற்றப் பெறும் சிந்தனையாளர் ரூசோ என்னும் பிரெஞ்சுப் புரட்சியாளர் ஆவர். லூயி மன்னனின் கொடுங்கோன்மையினை எதிர்த்து மக்கள் புரட்சி செய்வதற்கு இவர்கள் எழுத்துக்கள் தூண்டுகோலாக அமைந்தன. வால்டேர் என்ற சிந்தனையாளரும் புரட்சிக்கு வித்திட்டவர்இ விக்டர் யூகோ எழுதிய நூல்களையும் பாரதிதாசன் படித்தவராதல் வேண்டும். பிரெஞ்சுச் சமுதாயம் ஏன்? ஐரோப்பிய முழுவதுமே மக்கள் பிரிவினால் நலிவுற்றிருந்தது. இத்தகைய பிரிவிற்கு என்று பெயரிட்டனர். திருச்சபை என்பது மேல்வருணத்தின் பீடமாக விளங்கியது. நாட்டின் நலத்திற்காக இறைவனிடம் பிராத்தனை புரிவதையே தங்கள் முதன்மைக் கடமையாகப் பி'ப்புக்கள் பாதிரியார்கள் எண்ணினர். இவர்கள் தாம் முதல் வகுப்பினராகத் திகழ்ந்தனர். அரசனுக்குப் போர்ப்பணிகளை மேற்கொள்ளும் பிரபுக்களும் பெருநிலக்கிழாரும் இரண்டாம் நிலையில் எண்ணப் பெற்றனர் நாட்டின் பொருளாதாரத்தினைத் தீர்மானிக்கும் வாணிகப் பெருமக்கள் மூன்றாம் தரத்தினராக விளங்கினர் உடல் உழைப்பினை வழங்கும் தொழிலாளிகளும் உழவர்களும் நான்காம் வகுப்பாக நடத்தப்பெற்றனர்.

ஒரு வகையில் இப்பாகுபாடு இந்திய நாட்டில் மனுவினால் அறிமுகப்படுத்தப் பெற்ற நால்வருணப்பாகுபாட்டினைப் பெரிதும் ஒத்திருந்தது. இந்த அமைப்பினை அடியோடு மாற்றிச் சாதி வர்க்கம் என்ற பேதமற்ற சமுதாயத்தினை நிறுவும் பொருட்டு ரூசோ என்ற தாரக மந்திரத்தினை மக்களுக்குப் போதித்தார். முடிவில் லூயி மன்னனின் ஆட்சி நீங்கி மக்களின் ஆட்சி மலர்ந்தது. ரூசோவின் சிந்தனைகள் பாரதிதாசனைப் பெரிதும் கவர்ந்தன. எனவே தான் அவர்கள் கருத்துத்தை தமிழ்மக்களுக்கு அறிமுகம் செய்யும் நோக்கில் உரைநடையிலும் கவிதையிலும் எழுதி வெளியிட்டார். 23.05.1945இல் பேரறிஞர் அண்ணா பாரதிதாசனின்

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

கட்டுரையினைத் திராவிட நாடு இதழில் வெளியிட்டார். இக்கட்டுரையின் சில பகுதிகளைக் காண்போம்.

**"சமத்துவம், சகோதரத்துவம், சுதந்திரம் ததும்பும்**
**உள்ளம் வேண்டும். அதன் பிறகு வெற்றி, அதன் பிறகு**
**இப்பவாழ்வு, சமத்துவ, சகோதரத்துவ, சுதந்திர வாழ்க**
**ஓப்பு, உடன்பிறப்பு, விடுதலை நினைத்துப் பாருங்கள்**
**இந்நிலை அடைந்த மக்கள் இன்ப வாழ்க்கையின்**
**எல்லை கண்டவர்கள்"**

பிரஞ்சு நாடு நண்பு முறையில் தன்னை அண்டிய ஏனைய சமூகத்துக்கும் சொல்லுகிறது: இந்த மூன்றையும் உங்கள் நெஞ்சில் ஏற்றுங்கள் அனைவரும் சமம் அனைவரும் சகோதரர், நீங்கள் உரிமை உடையவர்கள் வாழ்ந்து போங்கள்

தமிழகத்தில் தாரகமந்திரச் சொற்களின் வரிசையில் பாரதிதாசன் ஒரு மாற்றம் செய்துள்ளார். மூல எழுத்தில் சுதந்திரம் முதலில் நின்றது. ஏனின், பாரதிதாசன் சமத்துவமும் சகோதரத்துவமும் வந்தபிறகு தான் சுதந்திரம் வருதல் வேண்டும் என்று எண்ணியுள்ளதால் இப்படி வரிசை மாற்றம் செய்துள்ளார் எனத் தோன்றுகின்றது.

சுமத்துவப்பாட்டு என்று பாடியுள்ளார். சகோதரத்தும் பற்றி கவிதைகளையும் புனைந்துள்ளார். "தேசத்தினர்கள் ஓர் தாய் தந்திடு செய்கள்" என்று உரக்கப்பாடினார். விடுதலை பற்றிய பாடல்கள் யாவும் மக்களுக்கு நாட்டுணர்வினை ஊட்டவல்லன. சமுதாயக் கட்டுகளினின்றும் அடிமைத்தனத்தினின்றும் பாதிப்புற்றார் விடுவிக்கப்படுதல் வேண்டும் என்பது அவர்தம் வேணவா.

பாவேந்தரின் ஆளுமையில் கூடுதலான தாக்கத்தைச் செய்தது தனித்தமிழியக்கம் எனலாம். பரிதிமாற்கலைஞரால் தோற்றுவிக்கப் பெற்றுத் தமிழ்க்கடல் மறைமலை அடிகளாரால் வளர்க்கப்பெற்றது தனித்தமிழியக்கம். மொழிஞாயிறு தேவநேயப் பாவணர் இவ்வியக்கத்தின் செவிலியாகப் போற்றத்தக்கவர். செவ்வியாகப் போற்றத்தக்கவர். செவ்வியல் மொழியாகிய செந்தமிழ் நடைமுறை வாழ்வியலும், அரசியல், வணிகவியல், கோயில், பொதுப்பணி, இதழ் உள்ளிட்ட ஊடகங்கள் யாவற்றிலும் ஆட்சி செய்தல் வேண்டும் என்பதுவே இவ்வியக்கத்தின் உயிர்க் கொள்கையாகும். பாவேந்தர் இவ்வியக்கத்தின் தாக்கமும் ஊக்கமும் ஒருங்கே பெற்றவர். குடும்ப விளக்கின் ஒரு பகுதியையும் தமிழியக்கம் நூலினையும் தமிழ்க்கடல் மறைமலை அடிகளார்க்குக் காணிக்கையாக்கியதன் வழி தம் சார்பினைப் புலப்படுத்தினார். தமிழியக்கத்தின் செயற்பாடுகள் யாவும் அன்னைத் தமிழினை அரியாசனத்தில் அமர்த்தவல்லன. இந்நூலில்,

**"ஓண்டமிழ்த்தாய் சிலம்படியின்**
**முன்னேற்றம் ஒவ்வொன்றும்**
**உன்முன் னேற்றம்!**
**கண்டறிவாய் எழுந்திருநீ**
**இளந்தமிழா! கண்விழிப்பாய்!**
**இறந்தொ ழிந்த**
**பண்டைநலம் புதுப்புலமை**
**பழம்பெருமை அனைத்தையும் நீ**
**படைப்பாய்! இந்நாள்**
**தொண்டு செய்வாய்! தமிழுக்குத்**
**துறைதோறும் துறைதோறும்**
**துடித்தெ முந்தே! (தமிழியக்கம்.வரிப்புலியே தமிழ்காக்க எழுந்திரு – 11)**

எனவரும் உணர்ச்சிப்பாடல் தமிழியக்கம் கொள்கை முழக்கமாக ஒலித்தல் எண்ணி இன்புறத் தக்கது.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

**பாரதிதாசன் மன்பதைக் கவிஞர்**

பாவேந்தரை மன்பதைக் கவிஞர் என்று போற்றுதற்குப் பல்வேறு காரணங்களை ஆராய்ச்சி அறிஞர்கள் கூறியுள்ளனர். எனினும் என் கருத்தில் தோன்றும் ஒரு காரணத்தினை மட்டும் இங்குச் சுருக்கமாகச் சுட்டுவதற்கு விரும்புகின்றேன்.

தமிழக மக்களின் விழிப்புணர்வு, முன்னேற்றம், வளர்ச்சி என்ற வகையில் பாடியிருப்பதால் பாரதிதாசனை மாநிலக்கவிஞர் என்ற அளவில் சிலர் எண்ணலாம். எனின், பாரதிதாசனுக்கு நாட்டுணர்ச்சி மிக்கிருந்தது. அவ்வப்பொழுது அதனைத் திறம்படப் புலப்படுத்திப் பாடியுள்ளார். இரண்டொரு சான்றுகளைக் காண்போம்.

நல்ல குடும்பம் பல்கலைக்கழகம் எனப் பாடிய பாரதிதாசன், நம் நாட்டினையும் ஒரு பல்கலைக்கழகம் எனப் போற்றியத்தில்,

**"பலஇனம் பலமொழி பற்று ஒருசில…**
**பழம்பெரு நிலத்தில் பலமொழி பலஇனம்**
**இருப்பதால் இ.ஃ.தொரு பல்கலைக்கழகம்**

**(பாரதிதாசன் கவிதைகள். தொகுதி 4.ப – 129)**

என்று பாடியிருத்தல் பார்க்கத்தக்கது. புல இனமக்களையும் பேசும் பல்வேறு மொழிகளையும் கொண்ட பாரத நாட்டினை ஒரு பல்கலைக்கழகமாகக் கவிவேந்தர் மொழிகளையும் கொண்ட பாரத நாட்டினை ஒரு பல்கலைக் கழகமாகக் கவிவேந்தர் கண்டார். 1962இல் சீனம் நம் நாட்டின் வட எல்லையில் படை எடுத்த பொழுது தேசிய ஒருமைப்பாட்டுணர்வினை அழகுறப் புலப்படுத்தும் பாங்கில், "நாட்டியல் நாட்டுவோம்" என்ற கவிதையினைப் பாடியுள்ளார். பாரதிதாசன் கவிதைகளில் 4 தொகுதியில் 126 - 131 இப்பாடலின் சாரணத்தினை நோக்குவோம்.

**உலகுநோக்கு**

உலகுநோக்கு எனினும் பாரதிதாசனின் படைப்புகளில் தொடக்கம் முதலே விரிந்த விசாலமான நோக்கு இழையோடியிருத்தலைக் காணமுடிகிறது. உலக ஒற்றுமை என்ற பொருண்மையில்,

**"தூய உள்ளம் அன்புள்ளம் பெரிய உள்ளம்**
**தொல்லுக மக்களெலாம் ஒன்றே என்றும்**
**தாயுள்ளம் தனியன்றோ இன்பம் ஆங்கே**
**சண்டையில்லை தன்னலம்தான் தீர்ந்த தாலே"**

எனப்பாடியிருத்தல் நோக்கத்தக்கது. முதல் கவிதை தொகுதியில் இடம் பெறும் இப்பாடல் பகுதியினால், பாரதிதாசனுக்கு இயல்பாகவே, தொடக்கம் முதலாகவே உலகினை ஒரு வீடாகவும் உலக மக்களை ஒரு குடும்பமாகவும் நோக்கும் தாயுள்ளம் தழைத்திருந்த உண்மை புலனாகும். இத்தகைய அன்புள்ளம் எங்கும் பரவி எல்லோரையும் அரவணைக்கும் பொழுது தன்னலத்திற்கும் அதனால் விளையும் சண்டை சச்சரவுகளுக்கும் சிறிதும் இடமில்லை என்பது அவர் கண்ட கனவு இக்கனவு சங்கப்புலவர் கணியன் பூங்குன்றனார், "யாதும் ஊரே யாவரும் கேளிர்" (புறம்:192-1) என்றும் திருமூலர் "ஒன்றே குலம் ஒருவனே தேவன்" (திருமந்திரம் - 2104) என்றும் பாடியவற்றின் விரிவாகவே உள்ளது. சங்க இலக்கியத்தில் ஒன்றாகிய மலைபடுகடாம் என்ற நெடுமபாட்டில்,

**"பரந்திடம் கொடுக்கும் விசும்புதோய் உள்ளம்"**

என வரும் பகுதி இங்கு எண்ணிப்பார்க்கத்தக்கது. "உலகம் உன்னுடையது" என்ற கவிதையில் பாரதிதாசனின் பிரபஞ்சப் பார்வை விரிந்து எல்லாப் பொருள்களையும் தழுவிக் கொள்ளும் பெருங்காட்சியைக் கண்டு வியக்காமலிருத்தல் இயலாது.

**"அறிவை விரிவு செய்ய அகண்ட மாக்கு!**
**விசாலப் பார்வையால் விழுங்கு மக்களை!**

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

*அணைத்து கொள்! உன்னைச் சங்கமம் ஆக்கு!*
*மானிட சமுத்திரம் நான் என்று கூவு!*
*பிரிவிலை எங்கும் பேதம் இல்லை*
*உலகம் உண்ண உண் உடுத்த உடுப்பாய்*
*புகல்வேன்Ë உடைமை உண்!*
*வானைப் போல மக்களைத் தாவும்*
*வெள்ளை அன்பால் இதனைக்*
*குள்ள மனிதர்க்கும் கூறடா தோழனே!"*

எனவே இத்தகைய விசாக உள்ளம் கொண்ட கவிஞரை மாநிலக்கவிஞர், தேசியக் கவிஞர் என்ற அளவில் மட்டுமே எண்ணிவிடாமல் மன்பதைக் கவிஞர் என்று மதித்துப் போற்றுதல் சாலப்பொருந்தும். கவிஞரின் விசால நோக்கிற்குக் காரணமாகிய மனித நேயம் புனைவியல் பண்புகளில் ஒன்றாகக் கருதப்பெறுவது. எனவே, மன்பதைக் கவிஞராகத் திகழும் பாவேந்தரை உலகக்கவிஞர் வரிசையில் வைத்து எண்ணுதல் எனைத்தானும் ஏற்புடையதே என்பது தெளிவு. இங்ஙனம் எண்ணுதலுக்கு மற்றொரு காரணத்தையும் இங்குச் சுருக்கமாகக் கூறுதல் பொருத்தமாக இருக்கும் என்று கருதுகிறேன். இவர் தம் அழகியல் அனுபவத்தை அடிப்படையாகக் கொண்டு இவர்தம் பிரபஞ்சப் பார்வையினைப் புரிந்து கொள்ளுதல் இயலும்.

**அழகியல் அனுபவம்**

நாம் காணக்கூடிய பொருள்கள் யாவும் பௌதிக உண்மை வாய்ந்தவை. மேய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய ஐம்பொறிகளினாலும் அறியப்படும் பொருள்கள் யாவும் ஒரு குறிப்பிட்ட காலம் வரை இருந்து மறையக்கூடிய இயல்பு கொண்டவை என்பது அனுபவத்தால் அறியக் கூடிய உண்மையாகும். எனினும் பெருங்கவிஞர்கள் என்றும் எங்கும் நிலைபெற்றிருக்கும் ஓர் உயரிய, மேம்பட்ட உண்மையினைத் தரிசித்தவர்கள். இந்த உண்மையினை தத்துவ ஞானிகள் "ருளைநசளைவல சுநயடவைல" என்றும் "வுசயளௌஉநனெநவெயட சுநயடவைல" என்றும் விளக்கிக்கூறினார். முகாகவி பாரதி இந்த உண்மையினை வேதாந்த விழுப்பொருளாகக் கண்டு கவிப்பாடினார். குயில்பாட்டு என்னும் அமரக்கவிதையில்,

**"ஒன்றே அதுவாய் உலகமெலாம் தோற்றமுற"**

என்று பாடிப் பரவசப்பட்டார். பாரதிதாசன் வேதாந்த விசயத்தில் தலையை நுழைத்துக்கொள்ளாதவர். அவருக்கு அதே உண்மை உலகமெங்கும் பரவிக் கிடக்கும் "அழகு" என்ற சத்தியமாக, அழியாத உண்மையாக, இன்ப அனுபவமாக அகப்பட்டது. "அழகின் சிரிப்பு" என்ற ஒப்பற்ற கவிதை இலக்கியம் தமிழ் இலக்கிய வரலாற்றில் புதுவரவு மட்டுமன்று, புதிய அனுபவங்களில் பிழிவாகவும் திகழ்ந்தது. இதன் தொடக்கப் பாடலைப் பார்ப்போம்,

**"காலையிளம் பரிதியிலே அவளைக் கண்டேன்!**
**கடற்பரப்பில் ஒளிப்புனலில் கண்டேன்! அந்தச்**
**சோலையிலே மலர்களிலே தளிர்கள் தம்மில்**
**தொட்ட இடம் எலாம்கண்ணில் தட்டுப் பட்டாள்**
**மாலையிலே மேல்திசையில் இலகுகின்ற**
**மாணிக்கச் சுடரி லவள் இருந்தாள்! ஆலஞ்**
**சாலையிலே கிளை தோறும் கிளிக்கூட்டம்**
**தனிலந்த கிளை 'அழகு' என்பாள் கவிதை தந்தாள்!**

**(அழகின் சிரிப்பு:அழகு.ப – 1)**

இப்பாடலில் "தொட்ட இடம் எலாம் கண்ணில் தட்டுப் பட்டாள்" என்பது விவரிக்க முடியாத அனுபவத்தைக் கவிஞர் விளக்க முற்பட்டதைப் புலப்படுத்தும். மேலும் பாடுகிறார்.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

***"…………………….யாண்டும்,***
***அசைவனவும் நின்றனவும் கண்டேன்! மற்றும்***
***அழகுதனைக் கண்டேன் நல் இன்பம் கண்டேன்***
***நசையோடு நோக்கடா எங்கும் உள்ளள்!***
***நல்லழகு வசப்பட்டால் துன்பம் இல்லை" (அழகின் சிரிப்பு:அழகு.ப – 3)***

இப்பாடலில் அழகு என்ற பரமசத்தியம் முற்ற முடிந்த உண்மை. பார்க்கும் இடம் எங்கும் நீக்கமற நிறைந்திருக்கும் பேரு அனுபவத்தில் கண்டு அதில் ஈடுபடுகின்றார். அந்த உண்ணையினை அழகினை அனுபவத்தில் கண்டவர்களுக்குத் துன்பத்திலிருந்து விடுதலை (மோட்சம் என்ற சொல்லிற்கு இதுதான் பொருள்) கிடைக்கும் என்று உணர்த்துகிறார்.

**முடிவுரை**

பாரதிதாசனின் பொதுவுடைமைச் சிந்தனைகளை பிரதிபலிப்பதாக இருக்கின்றன. எல்லோரும் சமம் என்ற கோட்பாட்டினை சங்கச் சான்றோர்கள் எடுத்து இயம்புனார். அவர்களை போன்று பாவேந்தரும் தமது கவிதைகளில் புரட்சி செய்து எல்லோரும் சமம் என்ற உறுதிப்பாட்டினை நிலை நாட்டி உள்ளார். பாவேந்தர் இடம் பெற்ற இயக்கங்களின் வழியாகவும் சமுதாயத்திற்கு நல்லதொரு கருத்துக்களை வழங்கியுள்ளார். அழகியல் பார்வையாகவும் உலகு நோக்கு கொண்டுதாகவும் பாவேந்தரின் பாடல்கள் அமைந்துள்ளதை இக்கட்டுரையின் வழியாக காண முடிந்தன.

**அடிக்குறிப்புகள்**

1. ஆறிவொளி.அ.பாரதிதாசன். *புதிய பார்வை*, சோழன் பதிப்பகம், முத்துப்பேட்டை, 1975.
2. இராமநாதன், ந. *கவிஞரும் காதலும்*, மகாலிங்கம் பதிப்பகம், தஞ்சாவூர், 1960.
3. இராமர் இளங்கோ, ச.சு. *பாரதிதாசன் படைப்புக்கலை*, அசுரம் வெளியீடு, சிவகங்கை, 1989.
4. இளவரசு, இரா. *இந்திய விடுதலை இயக்கத்தில் பாரதிதாசன்*, மருதம் வெளியீடு, திருச்சிராப்பள்ளி, 1990.
5. சக்குபாய் இரா. *பாரதிதாசன் பாடல்களில் மனிதநேயம்*, திருச்சி, 1991.
6. செல்வராகவன் மா, *பாரதிதாசன் ஒரு புரட்சிக்கவி*, பாரி நிலையம், சென்னை, 1979.
7. ஆ, திருவாசகம், சுரதா கல்லாடன் (தொகுப்பாளர்கள). *பாரதிதாசன் கவிதைகள் முழுத்தொகுதி*,, அருள் சுடர்ப் பதிப்பகம், 7.
8. மன்னர் மன்னன். க. *கருப்புக்குயிலின் நெருப்புக்குரல்*. முத்துப் பதிப்பகம், விழுப்புரம், 1985.
9. முருகு சுந்தரம் தி. *அரும்புகள், மொட்டுகள், மலர்கள்.* அகரம் வெளியீடு சிவகங்கை. 1980.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

# இலக்கியத்தில் கலைச்சொற்கள் - நெல், கரும்பு

## Glossary in Literature - Paddy, Sugarcane

**சி.விஜயன்,** முனைவர் பட்ட ஆய்வாளர், நெறியாளர் **முனைவர் ம.செந்தில்குமார்,**
இணைப்பேராசிரியர், தமிழ்த்துறை, திருவள்ளுவர் பல்கலைக்கழகம், வேலூர் - 632115.

**Abstract**

*In ancient times, agriculture was the main occupation of the people. Tillage and tillage industries determine the livelihood of the people. In the old age, all industries were concentrated in tillage. The peasants lived in a society of value. There is no food for the people if there are no plowmen. Food is important to all people in the world. The study shows that sugarcane is the primary food in the farmer's diet, and the word sugarcane is used to as a metaphor to describe good news in Tamil culture.*

**Keywords:** Agriculture, Occupation, Food, Metaphor, Paddy, Sugarcane

**முன்னுரை**

பழந்தமிழகத்தில் மக்களின் தலையாயத் தொழிலாக உழவுத்தெழில் விளங்கியது. உழவும் உழவு சார்ந்த தொழில்களும் மக்களின் வாழ்க்கை நிலையை நிர்ணயித்தன. பழந்தமிழகத்தில் அனைத்து தொழில்களும் உழவை மையமாகக் கொண்டு அமைந்திருக்கின்றன. உழவர்கள் சமுதாயத்தில் மதிப்புக்குறியவர்களாக வாழ்ந்தனர். உழவர்கள் இல்லையேல் உணவில்லை. உலகில் உள்ள அனைத்து மக்களுக்கும் உணவு முக்கியமானதாக விளங்குகிறது. உழவர்கள் உற்பத்தி செய்யும் உணவுகளில் முதன்மையான உணவான நெல்லைப் பற்றியும் இனிமையான செய்திகளுக்கு கரும்பினை உவமையாக குறிப்பிடுவதால் கரும்பினைப் பற்றியும் அன்றும் இன்றுமான கலைச்சொற்களை விளக்குவதாக இந்த ஆய்வு அமைகிறது.

**கலைச்சொற்கள்**

கலைச்சொற்க்களை க்ரியா தமிழ் அகராதி ஒரு துறையில் உள்ள கருத்துக்களை அல்லது கருத்துத் தொகுப்புக்களைக் குறிக்கப் பயன்படுத்தும் (பொதுப் பொருளில் வழங்காத) அந்த துறைக்கே உரிய சொல் என்று வரையறுக்கப்படுகிறது. மேலும் கலைச்சொல் என்பது சொற்சிக்கனத்தோடு பொருளின் ஆழத்தையும், துள்ளியத்தன்மையும் பெறுவதற்கான ஒரு வழிமுறையும் ஆகும். இதனால், ஒருதுறைச் சார்ந்த வல்லுனர்கள் தங்களிடையே அத்துறைகள் விடயங்களைச் சுருக்கமாகவும் துள்ளியமாகவும் பரிமாறிக் கொள்வதற்குக் கலைச்சொற்கள் பயனள்ளவையாக அமைகின்றன.

**நெல்லின் கலைசொற்கள்**

நெல் அன்றாட வாழ்க்கையின் மனிதற்களுக்கு முக்கியமானதாக காணப்படுகிறது. அந்த நெல்லிற்கு அன்றும் அன்றும் மக்கள் பல கலைச்சொற்களாக கையாண்டுள்ளனர். பழந்தமிழர்களும் இலக்கியங்களிலும் நெல்லிற்கான சொற்களை குறிப்பிட்ட சொற்களை மட்டுமே பயன்படுத்தியுள்ளனர். அதையே மேன்மேலும் அதிகம் உற்பத்தி செய்துள்ளனர். அந்தந்த நிலத்திற்கு ஏற்பவும், இடத்திற்கேற்பவும் பழந்தமிழர்கள் நெற்களை பயிரிட்டுள்ளனர். மேலும் இலக்கியத்திலும் இலக்கணத்திலும் ஒரே மாதிரியான சொற்களை மட்டுமே

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

பழந்தமிழர்கள் பயன்படுத்தியுள்ளனர் என்று இலக்கியமும் இலக்கணமும் சான்றுடன் விளக்குகின்றன.

நெல்லிற்கு இன்றைய காலத்தில் பல கலைச்சொற்களை கையாண்டுள்ளனர். இன்றைய காலத்தில் விஞ்ஞானமும் செயற்கையும் வளர வளர மரபனுமுறையில் சோதனைகள் செய்யப்பட்டு பல புதிய நெல் ரகங்களை கண்டறிந்துள்ளனர் விஞ்ஞானிகள். கண்டறிந்த நொற்களுக்கு பல செற்களாக (பெயர்களாக) குறிப்பிட்டுள்ளனர். பழந்தழிழகத்தில் நெல்லிற்கு மிக சுவையுள்ள சொற்களைக் குறிப்பிட்டு பயன்படுத்தியுள்ளனர். ஆனால் இன்றைய காலத்தில் எண் அடிப்படையில் சொற்களைக் குறிப்பிட்டுள்ளனர். இதனால் சொற்கள் அமையும் முறையும் சுவையும் பெரிதும் மாற்றம் அடைந்துள்ளன.

**இலக்கியமும் தற்காலமும் குறிப்பிடும் நெல்**

இலக்கியம் நிலத்திற்கும் நிலத்தின் ஏற்ற இடத்திற்கும் செற்களை குறிப்பிட்டு கூறியுள்ளது. குறிஞ்சி நிலப்பகுதியில் ஐவனநெல்லையும், மூங்கில்நெல்லையும் (மலைநெல்) பயிரிட்டு வாழ்ந்து வருகின்றனர் இந்நில மக்கள். முல்லை நிலப்பகுதியில் பெரும்பாலும் தானியப் பயிர்களையே பயிரிட்டுள்ளனர். நெல்லைப் பற்றிய செய்தி இருப்பதாக அறியப்படவில்லை. மருத நிலப்பகுதியில் செந்நெல்லும், வெண்நெல்லும் பயிரிட்டு வாழ்ந்து வந்துள்ளனர் பழந்தமிழ் மக்கள். இங்கு குறிப்பிட்டுள்ள ஐவன நெல், மூங்கில் நெல், செந்நெல், வெண்நெல் ஆகிய சொற்கள் குறிப்பிடும் நெற்களை நிலங்களில் பயன்படுத்தியுள்ளனர். மேலும் நிலங்களில் பல இடங்களில் சொல் (நெல்), இயவை (மலைநெல் வகை, மூங்கிலரிசி), புழுங்கலரிசி (புழுங்கிய நெல்லின் அரிசி), வரி செஞ்சாலி (நெற்பயிரின் பொது பெயர்), சாலி (உயர்தர நெல்) போன்ற நெல் செற்களையும், வகைகளை பயன்படுத்தியுள்ளனர்.

சஙக இலக்கியங்களில் நெல்லை பற்றி செய்தி 102 இடங்களில் கையாப்பட்டுள்ளதை அறியமுடிகிறது. மேலும் மூங்கில் நெல்லைப் பற்றி 6 இடங்களிலும், செந்நெல்லைப் பற்றி 21 இடங்களிலும், ஐவன வெண்நெல்லைப் பற்றி 4 இடங்களிலும், வெண்நெல் 24 இடங்களிலும் மொத்தம் 145 இடங்களிலும் நெல் ஆட்சிப் பெற்றுள்ளது. அதில் சில பாடல் வரியைக் காண்போம்.

**"சீர்சான்ற உயர் நெல்லி**
**னூர் கொண்ட வுயர் கொற்றவ" - மதுரைக்காஞ்சி 87,88**
**"நெல்லின் ஓதை அரிநர் கம்பலை" - மதுரைக்காஞ்சி 110**
**"களிறு மாய்க்கும் கதிர்க்கழனி" - மதுரைக்காஞ்சி 247**
**"ஐவனவெண்நெல்லொடு அரில்கொள் நீடி" - மதுரைக்காஞ்சி 288**
**"விளைவுஅறா வியன்கழனி" - பட்டினப்பாலை 8**
**"நெல்லொடு வந்த வள்வாய்ப்ப.்.றி" - பட்டினப்பாலை 30**
**"நெற்கொள் நெடுவெதிர்க்கு அணந்த யானை" - குறிஞ்சிப்பாட்டு 35**
**"நெல்லும் மலரும் தூஉய்ச் கைதொழுது" - நெடுநல்வாடை 43**
**"யாழ் இசை இன வண்டு ஆர்ப்ப, நெல்லொடு**
**நாழி கொண்ட நறு வீ முல்லை" - முல்லைப்பாட்டு 8,9**
**".....நெல் அரிந்து**
**சூடுகோ டாகப் பிறக்கி நாடெறுங்" - பொருநராற்றுப்படை 242, 243**
**"சாலி நெல்லின் சிறைகொள் வேலி" - பொருநராற்றுப்படை 246**
**".....தித்தன்**
**பிண்ட நெல்லின் உறந்தை" - அகநானூறு 6:4,5**
**"வெண்ணெல் அரிநர் பின்றைத் ததும்பும்" - அகநானூறு 40**

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

**"வெண்ணெல் வைப்பின் பருவூர்ப் பறந்தலை" - அகநானூறு 96**
**"அரிந்துகால் குவித்த செந்நெல்" - அகநானூறு 116**
**"பழஞ்செந்நெல்லின் முகவைக் கொள்ளாள்" - அகநானூறு 126**
**"பழம்பல் நெல்லின் ஊணூர்" - அகநானூறு 220:3**
**"பிணிகதிர் நெல்லின் செம்மல் மூதூர்" - புறநானூறு 97:18**
**"நெல்மல் பரவி னிலங்கை கிழவோன்" - புறநானூறு 379:6**
**"பிண்ட நெல்லின் தாய் மனை ஒழிய" - நற்றினை 26:4**

எனும் பாடல் வரிகளின் மூலம் நெல் இடம் பெற்றிருப்பதை காண முடிகிறது. இவைகள் மட்டுமில்லாமல இன்னும் சங்க இலக்கியங்களில் பல இடங்களில் நெல்லை பற்றி குறிப்பிடப்பட்டுள்ளன. நெல்லைப் பற்றி இன்று குறியீட்டு எண்கள் அடிப்படையில் சொற்கள் பயன்படுத்தி வருகின்றனர். அவைகளில் குறிப்பிடப்படும் சொற்களாவன,

**ஒடிடீ36, ஐஆர்50, ஐஆர்64, ஐஆர்36, எம்டியு3, கோ47, எஎஸ்டி16, எஎஸ்டி17, எடிடீ37, டிபிஎஸ்2, எபிஎஸ்2, எடிடீ39, எஎஸ்டி18, எம்டியு4, பிஎம்கே2, எடிடீ42, எம்டீயு5, எஎஸ்டி20, எடிடீ43, டிகேஎம்11, எடிடீ(ஆர்அச்)1, எடிடீ(ஆர்)45, டிகேஎம்(ஆர்)12, டிஆர்ஓய் (ஆர்)2, பிஎம்கே (ஆர்)3, எடிடீஆர்47, எடிடீஆர்48.**

இந்த நெல் ரகங்கள் யாவும் நவரை, சொர்ணவாரி, கார், குறுவை, பின்தாளடி ஆகிய பருவங்களில் பயிரிடப்படுகின்றன. இங்கு குறிப்பிடும் சொற்களின் தன்மையே ஒரே எண்களின் அடிப்படையில் சுவையில்லாமல் காணப்படுகின்றன. மேலும் முன் சம்பா, சம்பா, பின் சம்பா, தாளடி (பிசானம்), பின் பிசானம் பருவங்களில் பயிரிடப்படும் நெல் பயிற்களாக,

**ஐஆர்20, பவானி, ஐஆர்50, கோ43, வெள்ளைப் பொன்னி, எடிடீ38, டிபிஎஸ்2, டிகேஎம்10, டிபிஎஸ்3, எஎஸ்டி(ஆர்)46, பொன்மனி, பிஓய்4ஜவகர், எடிடீ(ஆர்)44.**

போன்ற நெற்களைக் குறிப்பிடுகின்றனர்.

**அரிசி, சோற்றைக் குறிப்பிடும் இலக்கிய செற்கள்**

மக்கள் அன்றாடும் உண்ணும் உணவாக அரிசி, சோறு விளங்குகிறது. இதை இலக்கியங்களில் அதற்று அடிசில், அமலை, அமிழ்து, அயினி, அவி, உணா, உண், தோரி பருக்கை, பிசி, மிசை, வல்சி என்ற சொற்களை கையாளப்பட்டுள்ளது. ஆனால் இதற்கான பொருளாக சோற்றுத் திரளை, அமிர்தம், உணவு(நீராகரம்), உணவு, சோறு என்று குறிப்பிடப்படுகின்றன. இதை ஒரு சொல்லுக்கு பல பொருள் என்றும் கூறலாம்.

**இலக்கியமும் தற்காலமும் குறிப்பிடும் கரும்பு**

இலக்கியத்தில் கரும்பு பற்றிய பதிவுகள் நிறையவே காணப்படுகின்றன. ஆனால் கரும்பை பற்றிய சொற்களாக கருப்பின், கரும்பு என்று குறிப்பிடப்படுகின்றன. கரும்பு ஒரு பணப்பயிர் என்று அன்றும் இன்றும் கூறும் செய்திகளில் ஒன்று ஆகும். இலக்கியத்தில் கரும்பைப் பற்றி குறிப்பிடும் இடங்களாக சில பாடல் வரிகளைக் காண்போம்.

**"கருப்பின் பாத்திப் பூத்த நெய்தல் - பதிற்றுப்பத்து 13:3**
**"விரிபூங் கருப்பின் கழனி புல்லெனத்" - பதிற்றுப்பத்து 13:13**
**"காலமன்றியும் கரும்பறுத்து ஒழியாது" - பதிற்றுப்பத்து 30:14**
**"கரும்பமல் கழனிய நாடுவளம் பொழிய" - பதிற்றுப்பத்து 50:3**
**"கரும்பு அல்லது காடு அறியாப்" - புறநானூறு 16:15**
**"ஆடு கண் கரும்பின் வெண் பூநுடங்கு" - புறநானூறு 99:2**
**"கரும்பின் எந்திரம், கட்பின் ஓதை" - பட்டினப்பாலை 258**

எனும் பாடல் வரியின் மூலம் கருப்பின், கரும்பு சொற்கள் இடம் பெற்றுள்ளதை நாம் காண முடிகிறது. இருந்தாலும் தற்காலத்தில் கரும்பிற்கு பல சொற்களாக காணப்படுகின்றன.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

தற்காலத்தில் நடைமுறையில் நெற்களை போன்றே கரும்பிற்கும் குறியீட்டு எண் அடிப்படையில் கூறுகின்றனர். தற்காலத்தில் குறிப்பிடும் கரும்பின் சொற்கள் ஆவன,

**கோ க671, கோ க771ரு772, கோ419, கோ6304, கோ85061, கோ க86062, கோ சி86071, கோ சி90063, கோ8021, போ க91061, கோ க92061, கோ8362, கோ கு93076, கோ8208, கோ கு94077, கோ கு95076, கோ85019, கோ சி95071, கோ சி96071, கோ86010, கோ க98061, கோ சி98071, கோ86249, கோ க99061, கோ86032, கோ க22, கோ சி6, கோ கு5, கோ க23, கோ க 24.**

ஆகியவை கரும்பின் சொற்கள் ஆகும்.

**முடிவுரை**

இலக்கியத்தில் கலைச்சொற்கள் எனும் இவ்வாய்வில் நெல்லிற்கும், கரும்பிற்கும் உள்ள கலைச்சொற்கள் அன்றைய நிலையிலும், இன்றைய நிலையிலும் எவ்வாறு மாற்றம் அடைந்திருக்கின்றன என்பதை இங்கு காணமுடிகிறது. மேலும் சொற்களின் மாற்றத்தினால் தமிழில் உள்ள அதிகமான நல்ல சொற்களை நாம் இழந்து வருகிறோம் என்பதை தெளிவாக இவ்வாய்வினால் அறியபடுகிறது.

**பார்வை நூல்கள்**

1. *பத்துப்பாட்டு (மூலமும் உரையும்),* உரையாசிரியர் முனைவர் வி.நாகராசன், நீயூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை – 600098.
2. *புறநானூறு (மூலமும் உரையும்),* உரையாசிரியர் முனைவர் கு.வெ.பாலசுப்பிரமணியன், நீயூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை – 600098.
3. *அகநானூறு (மூலமும் உரையும்),* உரையாசிரியர் முனைவர் இரா.செயபால், நீயூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை – 600098.
4. *பதிற்றுப்பத்து (மூலமும் உரையும்),* உரையாசிரியர் முனைவர் அ.ஆலிஸ், நீயூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை – 600098.
5. *நற்றிணை (மூலமும் உரையும்),* உரையாசிரியர் முனைவர் கு.வெ.பாலசுப்பிரமணியன், நீயூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை – 600098.
6. *சங்க இலக்கியத்தில் வேளாண் சமுதாயம்,* பெ.மாதையன், நீயூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை – 600098.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

# பாரதிதாசன் நோக்கில் கற்பனை

# Imagination in Bharathidasan's Perspective

**இரா. வைதேகி,** முனைவர் பட்ட ஆய்வாளர்,
பாரதிதாசன் உயராய்வு மையம், பாரதிதாசன் பல்கலைக்கழகம், திருச்சிராப்பள்ளி-24.

## Abstract

*Bharathidasan was the one who introduced the simple and new forms of poem into the literary world. He wrote his poems about nature's beauty and platonic love in a breezy way. With almost imagination, he presented a picture of a new world through his imagination. The soul of this article in to view the idea of imagination through his perspective.*

**Keywords:** Bharathidasan, Soul, Imagination.

### முன்னுரை

வாழ்வில் இன்பம் தரக்கூடியது கலை. வாழவேண்டும் என்ற ஒரு பிடிப்பதைத் தரக்கூடியதும் கலை. அந்தக் கலை ஓவியம், இசை, சிற்பம், நடனம், கவிதை எனப் பல வகைகளாய் உள்ளது. கலைகளில் சிறந்தது கவிதைக்கலை. ஏனெனில் சோகத்தால் தாக்கப்பட்டவனும், வாழ்வில் அலுத்துப் போனவனும் தஞ்சம் புகுவது கவிதையில் தான். அங்கேதான் நிரந்தரமான சுகமும் நிம்மதியும் கிடைக்கப்பெறுகிறது என்பதை இக்கட்டுரை வாயிலாகக் காணலாம்.

### கவிதையின் மூச்சு

பொதுவாகக் கவிதை என்றதும் கற்பனையே, பலருக்கும் நினைவு வருகிறது. கவிதையின் பலபண்புகளிலும் கற்பனையே பிரசித்தமாகயுள்ளது என்பதனையே இந்நிலைமை தெளிவுறுத்துகிறது. அதாவது கற்பனையே கவிதையின் மூச்சாகக் கருதப்படுகிறது.[1] வாழ்வில் கற்பனையில்லாத மனிதன் உலகில் இல்லை. சின்னவயதிலிருந்து சாகும்வரை கற்பனையில் தான் வாழ்கிறோம். கல்வி பற்றிய கற்பனை, பணிபற்றிய கற்பனை,மணம் பற்றிய கற்பனை என்று வாழ்வில் கற்பனை பின்னிக் கிடக்கின்றது. கற்பனை செய்வதில் மனம் சுகம் பெற்று நல்ல கற்பனையில் மனம் நயமுள்ள கவிதையைப் படிக்கின்ற போது மனம் நல்ல கற்பனையென்று மகிழ்ச்சியடைகின்றது. கற்பனையின் முக்கியத்தை தம் பாடல்வரிகளின் மூலமாகக் காட்டுவதை,

**"கற்பனையும் வர்ணனையும்
காட்டிக் கதைவளர்க்கும்,
விற்பனர்தஞ் செய்கை
விதமுந் தெரிகிலன்யான்
மேலைக் கதையுரைக்க
வெள்கிக் குலையுமனம்
காலைக் கதிரழகின்
கற்பனைகள் பாடுகிறேன்." (பாரதி. கவி. ப. 292)**

என்று கூறிவிட்டு, மேலும்,

**"தங்கமுருக்கித்
தழல் குறைத்துத் தேனாக்கி**

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

**எங்கும் பரப்பியதோ**
**ரிங்கிதமோ? வான்வெளிமைச்**
**சோதிகவர்ந்து**
**சுடர்மயமாம் விந்தையினை**
**ஓதிப் புகழ்வார்**
**உவமையொன்றுகாண்பாரோ?" (பாரதி. கவி. ப. 292)**

என்று சூரியோதயத்தைப் பாரதி பாடுகின்றார்.

**கற்பனை**

இலக்கியம், சிறப்பிற்கும் வளர்ச்சிக்கும் தூண்டுதலாகப் பல உத்தி முறைகளைப் புலவர்கள் கையாளுகின்றனர். அதில் கற்பனை மிக முக்கியமான ஒன்றாகும். கவிதை அல்லது பாடல் ஆகிய எதுவாயினும் இலக்கியம் என்ற பெயரில் அமையுமானால் அது கற்பனையைப் புறந்துள்ள முடியாது. கற்பனையற்ற இலக்கியம் சத்தற்ற உணவு போல. இது படைபாளனும் படிப்பாளனுக்கும் பொது இருவருக்கும் கற்பனைமனம் இருக்கவேண்டும் என்பது முக்கியமானதாகும்.

"நிகழ்ச்சிகளின் தன்மை மேலும் மேலும் விரித்துக் கொண்டே செல்வது கற்பனை எனலாம். கற்பனையின் தன்மை ஏறு வரிசையில் அமைந்ததாகும். மேலும் மேலும் அது உயர்ந்துகொண்டே செல்லவேண்டும். நிலையில் தாழ்ந்துவிடக் கூடாது. எனினும் நடந்த நிகழ்ச்சிகளை நேரில் கண்டெழுதும் செய்தியாளரைப் போல அல்லாமல் ஒருவன் அந்நிகழ்ச்சிகளை நேரில் பார்த்தால் என்ன உணர்வு கொள்வானோ அதை வார்த்தைகளின் மூலம் வெளிக் கொணர்வது கற்பனை ஆகும். கற்பனையை தாய், மனம் என்று சொல்வது குறிப்பிடத்தக்கது.

இதனை ஆங்கிலத்தில் 'Imagination' என்ற சொல்லில் குறிப்பிடுகின்றனர். கற்பனை வெளிப்படும்போது பிறர் மகிழவேண்டும். அவர்தம் மனம் கிளர்ச்சி அடையவேண்டும். அதில்தான் கற்பனையின் உயிர்மூச்சு உள்ளதாக அரங்கசுப்பையா குறிப்பிடுகிறார்.

"கற்பனையின் தாய் பாசத்தைக் காட்டுவது போல மொழி என்னும் கருவியால் வெளிப்படும் மனஓட்டத்தின் படிப்படியான வளர்ச்சி நிலையே கற்பனையாகும். தமிழ் இலக்கியத்தில் இலக்கியக் கூறுகளை 1950களில் எழுத வந்த மு.வ. இது குறித்து விளக்கமாக எழுதியுள்ளார். மனத்தின் விரைந்த செயற்பாடு கற்பனை என்கிறார் மு.வ."[2]

"அடிசன்" "ரஸ்கின்" போன்ற மேலைத் தேய இலக்கியக் கர்த்தாக்கள் சிறிது தயங்கிய நிலையில்தான் விளக்கம் கூறுகின்றனர். மேற்குறித்த அறிவாளர்கள் கற்பனையைத் துல்லியமாகக் கூறஇயலாது"[3] அ.ச.ஞா.கூறுகிறார்.

**கற்பனை பற்றிய சில அறிஞர்களின் கருத்து**

"கற்பனை என்பது பார்த்த ஒரு பொருளின் தன்மையை நினைவுக்குக் கொண்டுவருதல் ஆகும். எனவே நினைவும் கற்பனையும் ஒன்றெனக் கருதக்கூடும். நினைவுக்கும், கற்பனைக்கும் வேறுபாடுண்டு. முன்னர் கண்ட ஒரு பொருளை மீண்டும் மனத்தில் கொண்டுவரும் நிலை நினைவுக்கும் உண்டு, கற்பனைக்கும் உள். மனத்தில் கொணரும் அப்பொருளிடத்து மறுபடியும் அனுபவத்தை ஏற்றும் தன்மை நினைவிற்கு இல்லை. அதைச் செய்யவல்லது கற்பனை ஒன்றே என்கிறார்."[4] அ.ச.ஞா.

"புலன்களின் செயற்பாட்டின் ஒருங்கிணைநத் நிலையில் கற்பனைத் தோன்றுகிறது என்கிறார் தொ.பொ.மீ."[5]

"கம்பருக்குக் கவிபாடும் திறம் இருந்ததைக் கதைசொல்லும் பாங்கு மற்றும் சொல்லாட்சிகள் விளக்கவில்லை. அவற்றைக் கற்பனையோடு அவர் கலந்தகொடுத்ததுதான் சிறப்பாகும். கற்பவர் உள்ளத்தில் நிகழ்ச்சி உண்மையானது என்னும் அளவிற்கு

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

மெய்ப்பாடுகள் வழி வெளிக் கொணர்வதுதான் கற்பனை என்று பேராசிரியர் எஸ் வையாபுரிப்பிள்ளை குறிப்பிடுகின்றார்."[6]

"கற்பனையை இரண்டு நிலைகளாகக் குறிப்பிடுகின்றனர். கண்ணால் காணும் நிகழ்ச்சியினால் பெறப்படும் இன்பம் முதனிலைக் கற்பனை (Primary Imagination) என்றும் பெறப்பட்ட நிகழ்ச்சியை மனக்கண் முன் நிறுத்திச் சுவை பார்ப்பது இரண்டாம் நிலை (Secondary Imagination) என்றும் அறிஞர்கள் குறிப்பிடுகின்றனர்."[7]

தமிழ் மரபில் சங்ககாலப் பாடல்களில் இதற்கு முழுமையான இடம் இருக்கின்றது. தற்கால இலக்கியங்கள் கற்பனையை ஓர் இலக்கியக் கூறாக மட்டும் பயன்படுத்திக் கொண்டுள்ளதைக் காணமுடிகிறது.

"கனவுகாணுதல் (Dreaming) ஒரு வகைக் கற்பனை ஆகும். 'கற்பனை என்பது கவிஞன் தான் கண்ட காட்சிகளைத் தன் விருப்பத்திற்கு ஏற்ப உருமாற்றிப் படைக்கும் செயல்திறன்' என்பர்."[8]ந.பிச்சமுத்து.

"புலன் உணர்ந்ததை மனக்கண்ணில் காணும் திறனே கற்பனை, என்று வில்லியம் டெய்லர் (William Tailor) கூறுகின்றார்."[9] காட்சியைத் திருப்பித் திருப்பி அசையோடும் பயிற்சியினால் இது உண்டாகிறது.

**கற்பனையின் சிறப்பு**

கற்பனை மனிதவாழ்வுக்கு இன்றியமையாதது. புரிந்து கொள்ளமுடியாத பொருள்களைப் புரிந்துகொள்ளவும், உணர்ந்து கொள்ள முடியாதவற்றை உணர்ந்துகொள்ளவும் கற்பனை ஓரளவு துணைசெய்கின்றது. நம்பிக்கையை வளர்த்துக் கொண்டு, வாழ்க்கையில் முன்னேறக் கற்பனை சிறந்த படியாகிறது என்று முருகேசன் குறிப்பிடுகிறார்.

கற்பனையின் சிறப்பை, 'கற்பனை மனத்தின் வளர்ச்சிக்கு உறுதுணையாவது என்பது உளதூலார் கருத்து. அதனாலேயே, சிறுவருக்குக் கதைகள் பலசொல்லுதல் நல்லது என வலியுறுத்துகின்றனர்'"[10] என்று மு.வ. கூறுகின்றார்.

வின்செஸ்டர் என்ற திறனாய்வாளரும் ஜப்பான் நாட்டில் நில எநடுக்கத்தால் ஐயாயிரம் மக்கள் இறந்தனர் எனும் செய்தியை நாளிதழில் படிக்கின்ற போது நம் உள்ளத்தில் எழுகின்ற இரக்கவுணர்வுகளைக் காட்டிலும் புதினமொன்றின் கற்பனை மாந்தரின் தன்பம் நம் உள்ளத்தில் மிகுந்த இரக்கஉணர்வினைத் தூண்டுகின்றது. அதற்குக் காரணம் கற்பனை மாந்தரைப் படைத்து நம் மனக் கண்முன் நிறுத்துகின்ற படைப்பாளியின் கற்பனைத்திறனே எனக் கூறுவதும் கற்பனையின் சிறப்பைப் புலப்படுத்தாகக் கூறுகிறார்.

**கற்பனையின் வகைகள்**

பதினெட்டாம் நூற்றாண்டின் இறுதியிலும் பத்தொன்பதாம் நூற்றாண்டின் தொடக்கத்திலும், மேனாட்டு இலக்கிய அறிஞர்களும் மெய்யுணர்வு அறிஞர்களும், கவிதை இலக்கியத்திற்குரிய கற்பனை பற்றிய ஆய்வில் தீவிரமாக ஈடுபட்டனர். அவர்களுக்குள் கருத்து முரண்பாடு இருப்பினும், கற்பனையைப் பற்றி நன்கு உணர்ந்து கொள்ள அவர்களின் ஆய்வுகள் பயன்படுகிறதாக ந.முருகேசன் குறிப்பிடுகிறார். கற்பனையைப் பலவித அடிப்படைக் கண்ணோட்த்தில் அணுகுவதால் கற்பனையில் பலவகைகள் அமைகின்றன" என்று சுப்ரமணியன் கம்பன் கற்பனை எனும் நூலில் சுட்டிக்காட்டியுள்ளார்.

பொதுவாக, கற்பனையை உண்மைக் கற்பனை யென்றும் வெறுங் கற்பனையென்றும் இருவகையாகப் பகுத்துக் காட்டியுள்ளனர். இவ்வகைகளை "உள்ளதையே சிறப்பித்து உயர் வநவிற்சியும் அளவாகக் கூட்டிக் கூறுவது உண்மைக் கற்பனை. இல்லதைப் புனைந்து உயர்வு நவிற்சி வரம்பு நடந்து சேர்த்துக் கூறுவது வெறுங் கற்பனை" என்று மு.வ.விளக்குகின்றார். ச.வே. சுப்ரமணியன் 'ஆங்கிலத்தில் இமாஜினேன் (Imagination) எனக்

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

கூறுவதை உண்மைக் கற்பனை எனவும் ∴பான்சி (Fancy) என்பதனை வெறுங்கற்பனைஎனவும் குறிப்பிட்டுள்ளார்கள். முன்னதன் இயல்புத் தன்மையால் அதனை இயல்புக் கற்பனை எனவும், மின்னதன் செய்கைத் தன்மையாலும் மிகைப் பண்பாலும் அதனை மிகைக் கற்பனைஎனவும் கொள்ளலாம்"[27] என்று தெளிவுறுத்துகின்றார்.

**உண்மைக் கற்பனை**

காதலியின் அருமையையும் அவளைப் புணர்ந்து பெரும் இன்பத்தின் பெருமையையும் சங்ககாலத்துக் காதலன் ஒருவன் கற்பனைச் செய்கின்றான். என் நெஞ்சத்தைப் பிணித்துக் கொண்ட அழகிய கூந்தலையுடைய காதலியின், மென்மைவாய்ந்த மேனியை முழுவதும் பொருந்தும் வண்ணம் தழுவ வேண்டும்! அவ்வாறு தழுவி ஒரு நாள் வாழ்ந்தால் அதன் பின்னர் அரைநாள் வாழ்க்கையும் எனக்கு வேண்டாம்! என்று கற்பனை செய்து பாங்கனிடம் பேசுகின்றான் இப்படி அனுபவித்தால் அப்படிஆயினும் கவலையில்லை, மகிழ்ச்சியே என்று செய்யும் கற்பனை இதுவாகும்.

**"ஆரத் தழுவிஅடுத்தவினாடிக்குள் உயிர்**
**தீரவருமெனினும் தேன்போல் வரவேற்பேன்" (பாரதிதாசன் கவி.தொகுதி-1.ப-25)**

காற்றும் இடையே புகாத வண்ணம் இறுகத்தழுவிச் சுகம் காணும் பேறுகிடைத்தால் - கிடைத்தன் காரணமாய் அடுத்தவினாடியேஉயிர் போய்விடும் என்றாலும் தேன் போல் வரவேற்பேன் என்று பேசும் அமுதவல்லியின் கற்பனை நற்தொகைக் கற்பனையின் பதிவுகளால் தோன்றியது. இந்தச்சுகம் கிடைத்தால் அந்தக்கனம் உலகிற்குச் செல்லும் மரணத்தையும் தேன் போலவே வரவேற்பேன் என்றுசெய்யும் கற்பனையாகும்.

**நினைவுக் கற்பனை**

"நினைவுக் கற்பனை என்பது கவிஞனுடைய நினைவாற்றலைத் தூண்டிப் பழைய அனுபவத்திற்குப் புதியவடிவம் கொடுக்குமாறு செய்வது.

"பாரதிதாசன் தலைவனைப் பிரிந்ததலைவியின் துயரை நினைவுக் கற்பனையாக இருவரும் இன்புற்று மகிழ்ந்து இருந்த காதலை நினைவுக் கொள்வதாக அமைத்துள்ளார்.

**"புன்னையில் அவளுடம்பு**
**பதைந்தது! நினைவுசென்று**
**கன்னலின் சாறுபோலக்**
**கலந்ததுசெம்மலோடு" (எதிர் முத்தம் - பாட.48).**

தன் காதலன் பொன்முடி வடநாடு போன பின்னர் பிரியுத்துயரில் பூங்கோதை வாடுகின்றாள். தன் காதலனைப் புன்னைமரத்தில் கட்டிவைத்து, தன் தகப்பன் தந்தை அடித்தது மனதில் மறையாமல் கலங்கவைத்து கொண்டிருந்தது.

கற்பனையாற்றல் மிக்க கவிஞரால் பாடப்பட்டது இப்பாடல்."தன்னுடையட்டறிவில் கண்ட பெண்புகளைக் கவிஞன் ஒருவன் எத்தகைய கட்டுப்பாடும் இல்லாமல் தானே தேர்ந்தெடுத்து அவற்றை ஒன்றாக இணைத்துப் பதியதொரு முழு நிறைவான வடிவத்தைப் படைத்துக் காட்டும் திறனேபடைப்புக் கற்பனை ஆகும்." இக்கற்பனைத் திறனைச் சங்க இலக்கிய ஆசிரியர் மூலம் சுவைத்த பாரதிதாசன், அச் செய்திகளை அறிவிப்பாளராக நின்று, தற்காலத் தமிழ் உள்ளங்களுக்குக் கற்பிக்கின்றார்.

**"மலர்தோறும் மது உண்ணும்**
**மணிஒளித் தேன் வண்டே**
**நலந்தருமொழிஒன்று**
**செப்பிடவேண்டும் - நீ**
**நடுநிலைதவறாமல் ஒப்பிடவேண்டும்**
**பயில்தோறும் பயில் தோறும்**

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

**காதன்மைபாங்குயா்ந்த**
**மயிலியல் சாயலினாள்**
**முல்லைநகையாள் - முத்தை**
**மாணிக்கத்தில் வைத்துயிரைக்**
**கொல்லும் நகையாள்!**
**அலையலையாய் நெளிந்து**
**கார்முகிலைஅடிமைகொண்டு**
**மலைப்பூட்டும் மயக்கூட்டும்**
**கூந்தல் மனம் போல் - வேறு**
**மலர்களில் கண்டதுண்டோ?**
**கூந்தல் மணமோ?**
**மேனூற்றுமலர்களில்**
**திகட்டாமல் உண்டிரும் நீ**
**வானூற்றாய் மணக்கின்ற கூந்தல் துறப்பாய் - அட**
**வற்றாதெனக் கின்பம் தரும் கூந்தல் மறப்பாய்"! (தேன்– பா.62).**

இக்காலச் சமுதாயம் கடைப்பிடிக்கும் காதல் பற்றியக் கொள்கையைக் நற்தொகை இலக்கியத் தாக்கத்தால் மாற்றியமைத்து, புதிய மனப் பான்மையை ஏற்படுத்தித் தமிழ்ச் சமுதாயத்திற்கு அமைதி உண்டாக்கினார். பாரதிதாசன் காதலின் சிறப்பையும், உயர்வையும் அதுதரும் இன்பத்தையும் புரியும் வண்ணம் புதியவகையில் உணர்த்தத் தொடங்கினார். சமுதாயத்தில் இருக்கும் ஏற்றத் தாழ்வுகளையும், வேண்டாத கட்டுப்பாடுகளையும் காதல் போக்கிவிடும் என்று நம்பினார். காதல் மனிதஉள்ளத்தைத் தூய்மைப்படுத்தி உலகத்தை அமைதியில் ஆழ்த்தும் என்றும் கருதினார். எனும் இவ்வுண்மைக் கேற்ப காதல் பற்றிய கருத்துக்களைப் பாடுகிறார்.

**முருகியல் கற்பனை**

முருகியல் கற்பனை உணர்ச்சியுடன் கலந்திருக்கின்றது. உணர்ச்சி அதன் செயல் திறத்தைத் தூண்டி விடுகின்றது. அதுவும் ஓர் ஆக்கக் கற்பனையே இக்கற்பனை "புலனுணர்ச்சி உலகத்தோடு தொடர்புடையதன்று. புரிந்து கொள்வதற்குரிய விதிமுறைகளுக்குக் கட்டுப்படாமல் தன்னுரிமையோடு செயற்படுவது, புரிந்துகொள்ளும் மனத்திறனுக்குப் பணிபுரியாது. பகுத்தறவுத் திறனைச் சார்ந்து இயங்குகிறது என்றும் தெளிவுறுத்துப்படுகிறது.

**"கடல்நீரும் நீலவானும்**
**கைகோர்க்கும்! அதற்கிதற்கும்**
**இடையிலேகிடக்கும் வெள்ளம்**
**எழில்வீணேஅவ்வீணைமேல்**
**அடிக்கின்றகாற்றேவீணை**
**நரம்பினைஅசைத்தின் பத்தை**
**வடிக்கின்றபுலவன்! தம்பி**
**வண்கடல் பண்பாடல்கேள்!" (பா.கவி– அ.வி. கடல் பக்.2-5).**

வெள்ளத்தினை வீணையாகவும், காற்றினைப் புலவனாகவும் அலை ஓசையைப் பண்ணாகவும் காணும் கவிஞரின் தனது அழகுணர்ச்சியை பாடலின் மூலம் அழகாக வெளிப்படுத்தியுள்ளார். நிலவொளியாகிய மாற்றுச் சோலையும் காட்டி ஒளிக்கின்றாள் கடற்பெண்ணானாள் என்று பெண்ணாகவும் கடலைக் காணுகின்றார் பாரதிதாசன். மேலும் நிலப்பரப்பினைப் பெண்ணாகவும், அலை நீரினை ஆடையாகவும், பாடல்களில் படைத்துள்ளார் கவிஞர்.

**உள்நோக்கு கற்பனை**

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019
Available at: www.ijtlls.com

"எல்லாவற்றையும் நுட்பமாக ஆராய்ந்து பார்த்து வேறு எந்த ஆற்றலாலும் கண்டறிய முடியாத உண்மையை உணர்ந்து வெளிப்படுத்துவது உள்நோக்கு கற்பனையாகும்".[32] "முடிவான உண்மையை உள்ளுணர்வால் கண்டறிய மேற்கொள்ளும் முயற்சியே இந்தக் கற்பனையின் செயற்பாடாகும்". உண்மையைக் கண்டறிவதிலேயே இந்தக் கற்பனையின் வாழ்வு அமைந்திருக்கிறது. தானேஎதையும் அறியும் நோக்கில் இக்கற்பனை செயற்படுகிறது என்றும் இக்கற்பனை விளக்கப்படுகிறது. பனையின் சிறப்பைத் தாசன் பாடும்போது, மனிதர்க்குரிய நட்பக் கொள்கையைக் குறிப்பில் தருவது உள்நோக்குக் கற்பனையாகும்.

**"ஊர்ஏரிக் கரைதனிலே**
**என்னிளமைப் பருவத்தில்**
**இட்டகொட்டை**
**நீரேதும் காப்பேதும்**
**கேளாமல் நீண்டுயர்ந்து**
**பல்லாண்டின் பின்**
**வாராய்என் றெனைஓலை**
**வீசிறியினால் வரவேற்று**
**நுங்கும் சாறும்**
**சீராகத் தந்ததெனில்**
**பனைபோலும் நட்புமுறை**
**தெரிந்தாருண்டோ?"**

இக்கற்பனை உள்ளொன்று வைத்து வெளிப்படையாக வேறு கருத்தை வெளிப்படுத்தி நிற்கின்றது. பனைமரத்தினால் மனிதர்களுக்கு கிடைக்கும் பயன்கள் போலும் மனிதர்கள் மற்றவர்களுக்கு பயனாக இருக்க வேண்டும் என்ற உயரிய கருத்தை முட்கருத்தாக பாரதிதாசன் இப்பாடலைப் படைத்துள்ளார்.

**சிந்தனைத் திறன்மிகு கற்பனை**

புறஉலகில் காண்பனவற்றினோடு கவிஞன் தன்னை இணைத்துக் கொள்ளவேண்டும். தன் இதயத்தை அவற்றோடு இரண்டற இணைத்தல் வேண்டும். இதுவே சிந்தனைத் திறன்மிகு கற்பனைஎன்று இரஸ்கின் கூறியுள்ளார்.

**"இருந்தோர் கருத்திரைக்குள்**
**இட்டபொற் குவியல் போலே**
**கருந்தமிழ்ச் சொல்லுக்குள்ளே**
**கருத்துக்கள் இருத்தல் போலே**
**இருள்மூடிற் றுக்குன்றத்தை" (பா.அ.சி.ப.12)**
**"மூடுவாய் இருளேஅன்பின்**
**முழக்கமேஉனக்குநன்றி" (மேலது ப-33)**

என்ற வரிகளின் மூலம் இருளானது குன்றத்தை மூடுவதாகவும், இருள் ஆடி, ஓடி வேலை செய்து களைப்பால் வாடியிருக்கும் இவ்வையக மக்களை அனைத்துக் கொண்டு நித்திரையில் ஆழ்த்திக் களைப்பை போக்குவதற்கு நன்றி கூறுவதாக இப்பாடலைகவிஞர் படைத்துள்ளார்.

**காட்சிக் கற்பனை**

புறஉலகக் காட்சிகளை, ஆழ்ந்து ஈடுபாட்டுடன் கண்டு புலனறிவு நிலைக்கு முதன்மையளித்துப் படைக்கப்படுவது காட்சிக் கற்பனை என்பர் படிம அமைப்பில் அமையும் இக் கற்பனையில் குறிப்புப் பொருள் நுட்பமாய் அமையும். பாண்டியன் பரிசில் அன்னம் இறந்துவிட்டதாய் எண்ணி வேலன் புலம்புகின்றான். புலம்பும் போது அவள் அழகை வியந்து பாராட்டுகின்றான். அப்பாராட்டுரையில் இக்கற்பனை அமைந்துள்ளது.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

**"கடைவிழியில் நிலவுசெய்யும் உனதுசாயல்
களிமயிலும் காட்டாதே! ஒசிந்தமென்மை
இடையழகுமின்னலிடை இல்லையேசெவ்
விதழ்கண்டார் மலரிதழும் காண்பாருண்டோ.
உடையெல்லாம் நீலமணி! கடலோநானும்!
ஒளிமுகத்தைக் கண்டிட்டால் பரிதிநானும்!
மடிந்தாயோதிருவிளக்கே இந்தவையம்
மடியவில்லைஎனில் எனக்கிங் கென்னவேலை?" (பா. பரிசு. ப. 163).**

என்ற பாடல் வரிகளின் மூலம் சாயலழகு, இதழழகு. உடையழகு, முகத்தின் ஒளி எல்லாம் மயிலை ,மலரை ,நீலக்கடலை, பரிதியை வெல்லுவதாய்ப் பாடும்போது புலனுணர்வுக்கு முதன்மையளிக்கப் படுகிறதை நம்மால் அறிய முடிகிறது. தலைவியின் அழகை மனக்கண் உணர்கிறது. செவ்விதழ் கண்டோர் மலரிதழ் காண்பாருண்டா என்று கேட்டும்போது மலரின் அழகைமட்டுமல்ல மலரின் நிறத்தயும் அவள் இதழ் வென்றதை உணரலாம். அவள் இதழ் சிவப்புக்கு எம்மலரின் சிவப்பும் ஈடில்லை என்று பாண்டியன் பரிசில் உதாரணன் வர்ணிப்பதாக இப்பாடல் அமைந்துள்ளது.

**முடிவுரை**

கற்பனை விளக்கம், கற்பனை இலக்கணம், அதன் வகைகள், அறிஞர்களின் கருத்துகள் போன்றவை விளக்கபட்டுள்ளன. பாவேந்தர் பாரதிதாசன் கற்பனைகளை ஆய்ந்த போது அவர்தம் பாடல்களில் வெறுங்கற்பனையாகிய இல்லாது புனைதலைக்காண முழயவில்லை. இயற்கைப் பொருள்களே கவிஞரின் கற்பனைக்கு உறுதுணையாய் அமைகின்றன. கற்பனை மூலம் கவிஞர் தம் கருத்தை வலியுறுத்திக் கற்போருக்கு உண்மை உணர்த்துகிறார். எனவே கற்பனைப் பாரதிதாசனைப் பொறுத்தவரை ஒருஉதியாகப் பயன்படுகிறது. கற்பனைகளே அவருடைய பாடல்களில் மிகுதியாக அமைந்துள்ளன. மரபாகப் பண்டு தொட்டு இருந்துவரும் உவமைகள், உருவகங்கள் முதலியன பாரதிதாசன் பாடல்களில் பயின்று வந்துள்ளன என்றாலும், பல புதிய சிறந்த உவமைகளைக் கவிஞர் தம் பாடல்களில் பயன்படுத்திக் கற்போர் மனத்தைக் கொள்ளைக் கொள்ளுகிறார். பாவேந்தர் பாரதிதாசன் படைத்திருக்கின்ற கற்பனைகள் வாழ்க்கையுடன் தொடர்பு உள்ளவைகளாகவே அமைகின்றன. கற்பனைகள் மூலம் கவிதைக்கு ஆழகூட்டி, இன்பம் தந்து மகிழ்ச்சி வெள்ளித்தில் ஆழ்த்தகிறார். பாவேந்தர், சமுதாயக் கருத்துக்களையும் கற்பனையினூடே கூறிச் சிந்திக்கத் தூண்டுகிறார்.

**அடிக்குறிப்புகள்**

1. கைலாசபதி.க,முருகையன். இ, கவிதை நயம் - ப. 34.
2. வரதராசனார்.மு, இலக்கியத்திறன் - ப. 72.
3. அ.ச.ஞானசம்பந்தர், இலக்கியக்கலை - ப. 158-159.
4. மேலது - ப. 160.
5. தெ.பொ. மீனாட்சி சுந்தரம்பிள்ளை, தமிழ்க்களஞ்சியம் - ப. 216.
6. எஸ்.வையாபுரிப்பிள்ளை, காவிய காலம் - ப. 178.
7. Coleridge, S.C.Agarwal, Principles and History of Literary Criticism - ப. 321.
8. பிச்சமுத்து.ந,திறனாய்வும் இலக்கியக் கொள்கைகளும் - ப. 27.
9. Coleridge - ப. 322.
10. வரதராசன்.மு, இலக்கியத்திறன் - ப. 186.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

# உயிரினத்தோற்றமும் மானிடவியலும்

## Origin of Species and Anthropology

**ந.வெண்ணிலா,** உதவிப்பேராசிரியர்,
தமிழ்த்துறை, கிருஷ்ணசாமிமகளிர் அறிவியல் கலை மற்றும் மேலாண்மையியல் கல்லூரி, கடலூர்.

## Abstract

*The paper unfolds the origfn of the species and the human development from the Tamil perspective. It is an intellectual pleasure to know about the origins of the living species. Tamil people are the one who had a long history and has keen understanding in the development of the origin of the species. In the case of anthropology, many of the artefacts prove Tamil people are the oldest people fron very developed civilization. Hence, this article focusses on the chosen theme to unfurl the facts related to it.*

**Keywords:** Origin of Species, Anthropology

உலகின் நீண்ட காலம் நிலைத்து வாழும் இனங்களில் மூத்தவற்றுள் முக்கியமான ஒன்று தமிழ் இனமாகும். அதன் நீண்டகால வரலாறு புதிய ஆய்வுகளுக்குக் களமாக அமைக்கின்றன. பண்டைக்கால சாதனைகள் வியப்புக்குரியன. இன்று உலக அளவில் அறிவியல் ஆய்வுகளுக்குக் கருவூலமாக அமைவன பண்டைய இலக்கியங்கள். இவ்விலக்கியங்கள் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்டதாகும். அவை அண்மைக் காலத்திய பண்பாட்டு வாழ்வியலை அறியவுதவும் முக்கிய கருவூலமாக அமைந்துள்ளது. உலகின் முன்னோடிகளான தமிழர்களின் தோற்ற வரலாற்றையும், வாழ்வியல், நில அமைப்பு முறைகளையும் அறிவதற்கு ஆதாரமாக அமைந்துள்ளன. வரையறுக்கப்படாத அமைப்பாகவும், நடோடிகளாகவும், நாகரீக படிமலர்ச்சி அற்றவர்களாவும் வாழ்ந்த மக்களினம், எவ்வாறு வாழ்வியலைக் கட்டமைத்தனர், திணை அடிப்படையில் உயர்ந்த நாகரிகத்தை உருவாக்கினர், இயற்கைச் சூழல்களை தமக்குச் சாதகமாக்கி, நிலையான உயர்ந்த நாகரீக படிநிலையைக்கிட்டினர் என்பனவற்றை அறிவதற்கு பண்டைய இலக்கியங்கள் வரலாற்றுச் சான்றாதாரமாக அமைகின்றன.

*ஐந்திணை* வழி வாழ்வியல் அமைப்பினை கட்டமைப்பதற்கு முன் மனித இனம் வாழ்ந்த வாழ்வியல் முறைமைகள் கள ஆய்வு முறையில் ஆராய்ந்து, நாகரிக படிமலர்ச்சியை எய்த வாழ்வியல் நிலையை ஆராயும் அறிவியல் ஆய்வாக அமைவது மானிடவியலாகும்.

**மானிடவியல்**

மனித இனத்தைப் பற்றி ஆராயும் அறிவியல் களமாக மானிடவியல் அமைகிறது. மானிடவியல் அறிஞர்கள், ஹோமா, சேபியன்களின் உயிரியல் மற்றும் பரிணாம வளர்ச்சி முதல், பிற விலங்கினத்தில் இருந்து மனிதர்களைத் தெளிவாக வேறுபடுத்துகிற சமுதாயப் பண்பாட்டு தனிச்சிறப்புகள் வரை மனிதர்கள் தொடர்புடைய பல்வேறு வகையான செய்திகளைத் தன்னகத்தே கொண்டுள்ளமையால், மானிடவியல் 20ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதியிலிருந்து மிகவும் தனித்தன்மை வாய்ந்ததுறைகளின் தொகுப்பாக மாறிவிட்டது. உயிரியல், பரிணாம வளர்ச்சி ஆகியவற்றில் அல்லது மனித இனவேறுபாட்டை உணர்த்துவது மானிடவியலாகும்.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

> **"சமூக மானிடவியல், மொழிசார்ந்த மானிடவியல், ஓர் இனத்தைப் பற்றி ஆராயும் மானிடவியல்பேரறிஞன், அவர்களது பழக்க வழக்கங்கள், பண்பாடு, நாகரிகம் முதலியவற்றைக் காட்டும் வாழ்வியலை, வாழ்வியல் முறையை (ethnological) தெளிவாகவும் விரிவாகவும் வரையறுத்துக் கூறுவதாகும். குடிகள் நாகரீக வளர்ச்சிப் பெற்று, நாடோடி வாழ்க்கையினின்றும் விலகி, நிலையான வாழ்க்கையை அமைத்துக்கொள்வதற்கு முன்பு வரை, பண்டைச் சமூகம் மேற்கொண்டு வாழ்ந்த வாழ்க்கை முறைகளையும், மனித இன உருவாக்க வரலாற்றையும், சமூகக்குழு வாழ்க்கையை அமைத்துக் கொண்ட படிமலர்ச்சிகளை மானிடவியல் தெளிவுப்படுத்துகிறது." (பக்தவத்சல பாரதி, 2005:24)**

**மானிடவியல் ஆராய்ச்சி**

தொடக்க காலத்திலிருந்து இன்று வரை மனிதனைப் பற்றிய உருவத்தோற்றம், பண்பாட்டு வளர்ச்சியை ஆராய்வது மானிடவியலாகும். தொல்பொருள் மனிதனைப்பற்றி ஆராயும் மானிடப் பரிணாமம் (Human Evolution). இனக்குழுக்களின் உருவத்தோற்றத்தை ஆராயும் உருவத்தோற்ற மானிடவியல் (Physical Anthropology). வரலாற்றுக் காலத்திற்கு முற்பட்ட மனிதனின் சமூக வாழ்க்கையை ஆராய்கிற தொல்பொருளியல், மனிதப்பண்பாடு அதன் மூலக்கூறுகள், அமைப்பு மாற்றங்கள் போன்றவற்றை ஆராயும் பண்பாட்டு மானிடவியல் அல்லது சமூக மானிடவியல் (Cultural or Social Anthropology) போன்றவை அதன் பிரிவுகளாக அமைகிறது. பொதுவாக மானிடவியல் எழுத்தறிவிற்கு முற்பட்ட மக்களுடைய பண்பாட்டினை ஆராய்வதாக அமைகிறது.

**மனிதனின் இருவகை பாரம்பரியம்**

மனிதனின் வாழ்வியல் பாரம்பரியம் இரண்டுவகையாக அமைகிறது.

1. **உயிரியற் பாரம்பரியம் (Biological Inheritance)**
2. **சமூக பாரம்பரியம் (Social Inheritance)**

சமூக பண்பாட்டு மானிடவியலில் மனிதனின் வாழிடம், கால்வழி, தொழில், சமூக அமைப்பு,இரத்த உறவுமுறை, தனிமனித வாழ்வின் படிகளான பிறப்பு, பூப்பு, திருமணம், இறப்பு,என்பனவாகும். சமூக வாழ்வில் பெரும்பங்கு குடும்பம், சொத்துரிமை, சமயம், சடங்குகள், நம்பிக்கைகள் என்பனவற்றை மானிடவியல் ஆராய்கின்றது.

**மானிடவியல் கூறும் உயிரினத் தோற்றம்**

மானிடக் குலத்தோர் படிமலர்ச்சியின் இறுதியில் தோன்றியவர்கள். முதல் உயிரினம் தோன்றியதிலிருந்து எவ்வாறு படி மலர்ச்சி அடைந்துள்ளனர் என்பதை மானிடவியலின் தேடுதலாக அமைகிறது. உயிரினங்களின் தோற்றம் பற்றிய புரிந்துணர்வே மானிடவியலில் முக்கியத்துவம் பெறுகிறது.

> **"இப்பிரபஞ்சமானது 10 மில்லியன் ஆண்டுகள் வாக்கில் தோன்றி பூமி உருவானது. பூமியின் முதல் உயிரினமானது, 3 மில்லியன் ஆண்டுகளுக்கு முன் தோன்றியதாக அறிஞர்கள் கருதுகின்றனர். 225 மில்லியன் ஆண்டுகளுக்கு முன்னர் பாலூட்டிகளும் (mammals), 90 மில்லியன் ஆண்டுகளுக்கு முன் உயர் பாலூட்டிகளும் (primates - மனிதகுலத்தின் பிரிவு) 40,000 ஆண்டுகளுக்கு முன்னர் இக்கால மனிதனை ஒத்தவனும் (modern man) தோன்றினர். (பக்தவத்சல பாரதி . 2005:26)**

**படிமலர்ச்சி நிலையும், தொழில் நுட்ப நிலையும்**

மார்கன் படிமலர்ச்சி நிலையைக் கீழ்நிலை (lower), நடுநிலை (middle),

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

மேல்நிலை (upper) என மூன்றாகப் பிரித்துக் கூறுகின்றார். இந்த ஒவ்வொரு நிலையிலும் மனித சமுதாயம் புதிதாகக் கண்டறிந்த தொழில்திறனை மார்கன் படிமலர்ச்சி நிலைகளாக விளக்குகிறார்.

| **படிமலர்ச்சி நிலை** | **தொழில்நுட்ப நிலை** |
|---|---|
| **விலங்காண்டி நிலை** | |
| அ. கீழ்விலங்காண்டி நிலை (lower savagery) -- | பழங்களும் கொட்டைகளும் பிழைப்பாதாரமாக இருந்தன. |
| ஆ. நடுவிலங்காண்டி நிலை (middle savagery) -- | மீன், நெருப்பு ஆகியன பிழைப்பாதாரமாக இருந்தன. |
| இ. உயர் விலங்காண்டி நிலை (upper savagery) - | அம்பு, வில்லும் வாழ்க்கைத் தொழிலில் ஈடுபடுத்தப்பட்டன. |

**காட்டாண்டி நிலை**

அ. கீழ் காட்டாண்டி நிலை--கலை, மட்பாண்டங்கள் செய்யும் (lower barbarism) முறை ஏற்பட்ட காலம்.

ஆ. நடு காட்டாண்டி நிலை-பழைய உலகத்தில் (old world) (middle barbarism) விலங்குகள் வளர்த்தலும், புத்துலகத்தில் (new world) மக்காச்சோளம் விதைத்தலும், நீர்ப்பாசனமுறையைக் கொண்டு கட்டடங்கள் கட்டுதலும் மேற்கொள்ளப்பட்டன.

இ. **உயர் காட்டாண்டி நிலை** -- (Upper Barbarism) இரும்புக் கருவிகள் செய்யப்பட்டன.

**நாகரிகம்** (Civilization) -- ஒலிசார் நெடுங்கணக்கு (Phonetic Alphabet) எழுத்து முறையும் தோன்றின.

**பண்டைத் தமிழர் வளர்ச்சிப் படிநிலை**

பண்டைத்தமிழ்ச் சமுதாயம் வேறுபாடு அற்ற சமுதாயமாக அமைகிறது. பண்டைத்தமிழ்ச் சமுதாயத்தில் சாதி, சமயம், சமூக அணுவியக்கம் தொடங்கி நவீனப் பன்னாட்டுப் புலம் பெயர்வு நிலை வரை மானிடவியல் ஆய்வுக்களங்களாக அமைகிறது.

சங்க இலக்கியங்கள் தமிழர் சமுதாயத்தின் பல்வேறு படிநிலைகளை விவரிக்கின்றன.

> **“தழையாடையைப் பரிசளிக்கும் ஆதி கூறு தொடங்கிச் சீறூர் மன்னன்→முதுகுடி மன்னர் →குறுநிலமன்னர்→ வேந்தர் ஊடாக அரசுருவாக்கம் நிகழ்ந்தது வரை பார்க்கும் போது அக்காலத்தியச் சமூக-பண்பாடு அசைவியக்கம் பழங்குடி முறை தொடங்கி வேளாண் நாகரிகம் வரை படிநிலைகளில் வளர்ச்சி பெற்று வந்துள்ளது”.**
>
> **(பக்தவத்சல பாரதி, 2005-xiii-xiv)**

தமிழ்ப் பண்பாட்டு வளர்ச்சியானது படிப்படியாக வளர்ந்து, ஒரு நிலையான அமைப்பினைப் பெற்றிருக்கிறது. தமிழர் பண்பாட்டின் அமைப்பானது இரண்டு நிலைகளைக் கொண்டது. அதனளவில் சார்புடையது. (Culture Depedent). உலகளாவிய அமைப்பியல்புகளோடு பொருந்தக் கூடியது. (Culture Indepedent)

> **“அதாவது, தமிழ்ப் பண்பாட்டின் உருவத்தைத் தரக்கூடிய புறக்கூறுகள் பண்பாடு சார்ந்து, அவற்றின் ‘அகக்கூறுகள்’ உலகளாவிய அமைப்புகளோடு ஒத்திசைவு பெறுவதும் இதன் உட்பொருளாகும். உலகளாவிய அகவடிவத்திலிருந்து தனக்கான அணுவியக்கம் தமிழர் மானிடவியல் கோட்பாட்டாக்கத்தின் முதன்மைக்களமாகும்.” ( பக்தவத்சல பாரதி. 2005-12-13)**

 
E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

**மானிடவியல் உயிரியல் பிறப்புக் கொள்கை**

சார்லஸ் தார்வின் கி.பி.1859 இல் சிறப்பினங்களின் தோற்றம் என்னும் நூல் வெளிவருவதற்கு 2500 ஆண்டுகளுக்கு முன்பே படிமளர்ச்சி குறித்த சிந்தனை தோன்றியது எனலாம். கிரேக்கத்தத்துவவியல் அறிஞர்கள் படிமலர்ச்சிக் கருத்துகளுக்கு வித்திட்டவர்கள் ஆவர். கிரேக்கத் தத்துவவியல் அறிஞர்கள் தாலஸ், அனெக்சிமான்டர். குறிப்பிடத்தக்கவர்கள்.

> **"தண்ணீரில் தான் அனைத்து உயிரினங்களும் தோன்றின என தாலஸ் கூறினார். வெப்ப ஆற்றல் மூலமே முதல் உயிர் தோன்றியது என்றார் அனெக்சி மாண்டர். இந்த உயிரற்ற பொருள்களிலிருந்தே முதல் உயிர் தோன்றியது என்ற இவர்களின் கருத்தை செனோபேன்ஸ்-கி.மு.570- 475 போன்றோர் வேறு பலரும் சிந்தித்து விரிவுபடுத்தினர்." (பக்தவத்சல பாரதி, 2005-14-15)**

**அரிஸ்டாட்டிலின் கருத்து**

அரிஸ்டாட்டிலின் கருத்துப்படி பழைய உயிரினங்களிடமிருந்து புதிய உயிரினங்கள் தோன்றுகின்றன. அவை அனைத்தும் அறிவு வளர்ச்சியில் ஏதோ ஒரு வகையான மாற்றத்தைப் பெற்று உகந்த நிலையை(Ideal)அடையும் இலக்கில் ஈடுபடுகின்றன. அந்த உகந்த நிலையை அடையும் பொருட்டு உயிரினங்கள் அடைந்துள்ள மாறுபாட்டைக் கொண்டு அனைத்தையும் வரிசைப்படுத்தும் போது, உகந்த நிலைக்கு மிகக் கீழ்நிலையில் உள்ளவை கனிமப்பொருட்கள், அப்பொருட்களில் இருந்து தான் முதல் உயிர் தோன்றியது என்கிறார்.

**அண்டப்பிறப்புக் கோட்பாடு**

இவ்வுலகம் முழுமையாகத் திகழக்கூடிய அண்டமானது எவ்வாறு தோற்றம் பெற்றது என்பதை விளக்கும் கோட்பாடே 'அண்டப் பிறப்புக்கோட்பாடு' (cosmogony) ஆகும். உலகம் தழுவி வழங்கக்கூடிய தொன்மங்களில் அண்டம் தோற்றம் பற்றி விளக்கும் தொன்மங்கள் அதிக அளவில் காணப்படுகிறது. எல்லாப் பண்பாட்டு முறைமைகளும் அண்டம் பிறந்த நிலையை விளக்குவதற்குத் தனிப்பட்ட தொன்மங்களைக் கொண்டு அமைகின்றன. இவ்வுலகத்தைத் தோற்றுவித்தவர் கடவுளே என்னும் கோட்பாடு உலகம் முழுவதும் காணப்படுகிறது. கடவுள் இவ்வுலகைத் தோற்றுவித்தார் எனில், எம்முறையில் தோற்றுவித்தார் என்பதைப் பற்றி கூறும் கருத்தியல் மாறுபடுகிறது. கடவுள் உலகைப் படைத்தார் என்பதைப் பற்றிய சில கோட்பாட்டுத் தொன்மங்கள் கூறப்படுகின்றன.

> **"ஒரு கட்டத்தில் பெருங்குழப்பமும் ஒழுங்கின்மையும் நிலவிய சூழலில் ஒழுங்கு (order) ஏற்படுத்தப்பட்டது (கிரேக்கம்). மந்திரச்சொல்பயன்படுத்தினார் (பாபிலோனியா). வினோதமான முறையைப் பயன்படுத்தினார் (எகிப்து) என்ற தொன்மங்களும் உள்ளன. மண்ணுலகும் விண்ணுலகும் (heaven) தொடர்பு கொண்டதால் ஏற்பட்டது என்ற தொன்மமும் உண்டு. அண்டக்கருவிலிருந்து (cosmic egg) தோன்றியது என்ற(பாலீனீசிய) தொன்மம் உண்டு. பெரும்பாலான பண்டைய அண்டப் பிறப்புத் தொன்மங்கள் பெரும் இருள் சூழ்ந்த, நீர் சூழ்ந்த ஒரு நிலையிலிருந்து அண்டம் தோன்றியதாக விளக்குகின்றன. இதன் பின்னரே உயிரினங்கள் தோற்றம் ஏற்பட்டது என்கின்றன இத்தொன்மங்கள்."**
> **(பக்தவத்சல பாரதி.2005-15)**

**அண்டமுட்டைக் கோட்பாடு**

இந்த பூமியில் உயிரினங்கள் எப்படி தோன்றின என்பதைக் கூறுவது அண்டமுட்டைக் கோட்பாடு (cosmozoc theory) ஆகும். இன்று பூமியிலுள்ள உயிரினங்கள் அனைத்தும் பிற கோள்களில் முளைக்கக் காத்திருக்கும் விதைகளாகப் (resistant spores) பரவியிருந்தன. இவற்றை அண்டமுட்டைகள் பூமிக்கு வந்து தகுந்த சூழ்நிலைகள் ஏற்பட்ட போது உயிரினங்களாகப் பரிணமித்தன என்கிறார் ரிக்டர். (மானிடவியல் கோட்பாடு. 2005-ப:15)

**திடீர் நிகழ்வுக் கோட்பாடு**

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

18, 19, ஆம் நூற்றாண்டுகளின் தொடக்கத்தில் மண்ணியல் ஆராய்ச்சியாளர்கள் புதைவடிவங்களைத் தோண்டி எடுத்தனர். தோண்டி எடுக்கப்பட்ட புதை வடிவங்களைக் கொண்டு உயிரினங்கள் எவ்வாறு வளர்ச்சியுற்றன என்பதை அறிய முடியுமென ஆராய்ச்சி முறை உயிரினங்கள் வளர்ச்சிப் பற்றி தெளிவுகிடைக்குமென நம்பினர்.

> **"அவர்களுள் ஜார்ஜ் கூவியர் (geoge curier: கி.பி.1769-1832) குறிப்பிடத்தக்கவர். அவர் உயிரினங்களின் படிமலர்ச்சியை விளக்குவதற்காக 'திடீர் நிகழ்வுக் கோட்பாட்டை' (cabaxrophism or cataclysm) வகுத்துள்ளார். அவரின் கொள்கைப்படி வெவ்வேறு காலக்கட்டத்தில் பூமியின் மேற்பரப்பானது பெருவெள்ளங்களாலும் நில அதிர்வுகளாலும் அடித்துச் செல்லப்பட்டது அல்லது மாற்றம் பெற்றது. அந்தத் திடீர் நிகழ்வுகள் அந்தக் காலக்கட்டத்தில் பூமியின் மேற்பரப்பில் வாழ்ந்த உயிரினங்களை அழித்து விட்டன. அவையே இன்று புதைப் படிவங்களாகக் கிடைக்கின்றன என்கிறார்." (பக்தவத்சல பாரதி.2005-15-16)**

இவ்வகையால் மனித இனத்தின் உருவாக்க வரலாற்றையும், தோற்ற வரலாற்றையும் கண்டறிய முடிகிறது. இப்புதைப் பொருட்களே உயிரினங்களின் வளர்ச்சிநிலை பற்றிய சான்றுகளாகவும் அமைகிறது.

பூமியில் இயல்பு நிலை திடீர் என மாறாமல் மெதுவாகவே இருந்துள்ளது. மண்ணியலின் விசைகள் இன்றும் தொடர்ந்து நடைபெற்றுக்கொண்டுள்ளன.

**ஒருவழித்தோற்றக்கொள்கை**

ஒருவழித் தோற்றக் கொள்கையினரின் கூற்றுப்படி,

> **"மனிதர்கள் அனைவரும் ஒரு தாய், ஒரு தந்தையிடமிருந்து தோன்றியவர்கள். அனைவரும், கருணையின் இடத்திலிருந்து வந்தவர்கள். சமகாலத்தில் மக்களிடம் உள்ள வேறுபாடுகளுக்கு அவரவர் சுற்றுப்புறச் சூழ்நிலை இயல்புகள் ஒரு காரணம். மூதாதையர்களிடமிருந்து பெற்ற மரபும் பண்புகளை சந்ததியினருக்குக் கொடுக்கும் தன்மை இரண்டாவது காரணம் என ஒருவழித்தோற்றக் கொள்கையினர் சுட்டிக்காட்டினர்."**
>
> **(பக்தவத்சல பாரதி.2005-17)**

**பலவழித்தோற்றக் கொள்கை**

மனித குலமானது ஒரு மூலத்திலிருந்து தான் தோன்றியது அல்ல, தனித்தனியாக பல மூலங்களில் இருந்து தோன்றின. ஒவ்வொரு மூலத்திற்கென்று தனித்த பெருமானம் உண்டு. காலம், இடம், சூழ்நிலைகளை ஒட்டியே ஒவ்வொரு மூலமும் அதன் சிறப்பினத்தை உருவாக்கியுள்ளது என்பதால் பல மூலங்களால் ஏற்பட்ட வேறுபாடுகளைப் பொதுமைப் படுத்தி ஒப்பிடுதல் இயலாத ஒன்றாகும்.

**உயிரினங்களின் படிமலர்ச்சி**

உயிரினங்களின் படிமலர்ச்சியானது எளிமை வடிவத்திலிருந்து கூட்டு வடிவம் நோக்கி வளர்ந்து வந்துள்ளது. உயிரினப்படிமலர்ச்சியக் கோட்பாடானது வைதிக சமயத்தின் புராணங்களில் அவதாரம் பற்றிய தொன்மங்களில் பெரிதும் காணப்படுவதாக உள்ளது.

திருமாலின் பத்து அவதாரங்களை நோக்கும் போது முதல் அவதாரம் மச்ச அவதாரமாகிய மீன் உருவம். இரண்டாவது கூர்ம அவதாரமாகிய ஆமை அவதாரம். மூன்றாவது பன்றி வடிவமாகிய, வராக அவதாரம், நான்காவது அவதாரம் நரசிம்ம அவதாரம் எனப்படும் மனிதனும் சிங்கமும் இணைந்தது, ஐந்தாவது பரசுராம், பின் கிருட்ணர் அவதாரம், ராமர், கல்கி அவதாரங்களாகும். பத்தாம் அவதாரம் எடுக்கவில்லை. திருமாலின் முதல் அவதாரமாகிய மீன் உருவம் உலக உயிர்த் தோற்ற வரலாற்றில் முதல் இனம் நீரில் தோன்றியது என்பதற்குச் சான்றாக அமைந்துள்ளது.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

> **“ஊழிக்காலத்தில் மண்ணுலகமும் விண்ணுலகமும் பாழ்பட்டன. பழைய இயல்புடைய சந்திரனும், சூரியனும் கெட்டன. பல ஊழிகளில் ஆகாயம் அழகிழந்தது. தன் பண்பாகிய ஒலியுடனே வடிவம் காணப்படாத பூதங்களின் பரமாணுக்கள் வளர்கின்ற வானமாகிய முதல் பூதத்தினது ஊழி தோன்றியது. அதற்குப் பின்பு பொருள்களை அசைக்கும் காற்று தோன்றியது. அடுத்துக் காற்றிலிருந்து தீ ஊழியும் தீயிலிருந்து பனியும் மழையும் பெய்த ஊழிகளும் தோன்றின. இறுதியில் நீரில் நான்கு பூதங்களும் இணைந்து நிலத்தின் ஊழி தோன்றியது. நெய்தல், குவளை, ஆம்பல், சங்கம், கமலம், வெள்ளம் எனக் கூறப்பெறுகின்ற நெடுங்காலங்கள் கழிந்த பின்பு உயிர்கள் தோன்றுவதற்காக நிலத்தினை வெள்ளத்திலிருந்து எடுத்துக் காக்கத் திருமால் வராக அவதாரம் எடுத்தார் என்று பரிபாடல் ஆதாரமாக அமைந்துள்ளது.” (பரி.2)**

இந்த அடிப்படையினை நோக்கும் பொழுது, இவையாவும் உயிரினங்களின் படிமலர்ச்சிப் போக்கை விளக்கும் வகையில் அமைகிறது. இவ்வுலகில் முதல் உயிரினங்கள் நீரில் மட்டுமே வாழத்தலைப்பட்டன. இதன் பிரதிபலிப்பே திருமாலின் மச்ச அவதாரம், மீன் நீரில் மட்டுமே வாழும் உயிராகும். அடுத்து நீரிலும் நிலத்திலும் உயிரினங்கள் வாழுத்தலைப்பட்டன. இதன் வடிவமே கூர்மம் என்றழைக்கப்படும் ஆமை வடிவமாகும். நிலத்தில் மட்டுமே வாழும் நிலை ஏற்பட்டது. இதன் வடிவம் வராகம் என்றழைக்கப்படும் பன்றி அவதாரம். மனித நிலை அமைவதற்கு முந்தைய படிமலர்ச்சி நிலையில் மனிதன் விலங்காகவும் இல்லை; முழு மனித உருவத்தையும் அடையவில்லை; இரண்டும் கலந்த மனிதக்குரங்கு நிலை ஏற்பட்டது. இது டார்வின் கொள்கையை மையப்படுத்துகிறது. மனித இனம் குரங்கினத்தின் பரிணாமம் என்பது குறிப்பிடத்தக்கதாக அமைகிறது.

இத்தகு நிலையின் பிரதிபலிப்பாகவே விலங்கு வடிவிலும் மனித வடிவிலும் தோன்றிய நரசிம்ம அவதாரமாகும். அடுத்து வாமன பரசுராம் அவதாரங்களாகும்; இவை முறையே குட்டை, முரட்டு மனிதர்களின் படிமலர்ச்சியைப் பிரதிபலிக்கும் கட்டங்களாகும். கிருட்ண அவதாரத்தில் நல்லவனுக்கு நல்லவன், கெட்டவனுக்குக் கெட்டவனாக இருக்கிறார். ராம அவதாரம் ஒவ்வொருவரும் எப்படி நடக்க வேண்டும் என்ற வாழ்வு நெறியைக் காட்டும் அவதாரமாகும். கல்கி அவதாரத்தில் குதிரையுடன் போர் வீரனாக மாறி உலகத்தீமைகளை அழிக்க இருக்கும் அவதாரமாகும். இவ்வாறு திருமாலின் அவதாரங்களை உயிரியல் பிரதிபலிப்பாகக் கருதப்படுகிறது. மனிதனின் அறிவு வளர்ச்சி இறையியல் → நிலை தத்துவ நிலை → அறிவியல் நிலை என்னும் முறையில் வளர்ச்சி பெற்று வந்துள்ளது.

இதன் மூலம் பண்பாட்டுப் படிமலர்ச்சியும் வெளிப்படுவதாக உள்ளது. ராமன் பரசுராமனைத் தோற்கடித்த அவதாரத்தில் பரசுராமன் கொண்டிருந்த எளிய கற்கருவி ஆயுதத்தை விட மேம்பட்ட ஆயுதமாக விளங்கும் வில்லையும் அம்புகளையும் கொண்டிருந்தான். வில், அம்புக்காலம் மனித குலத்தாரின்உணவு தேடுங்காலக் கட்டத்தைக் குறிப்பதாகும். பலராமன் கலப்பையைத் தோளில் சுமக்கும் காட்சியே பெரும்பாலும் காணப்படுகிறது. இவர் வேளாண் சமுதாயத்தைச் சார்ந்தவர் என்பதைக்காட்டுகின்றது. மனித குலத்தாரின் வேட்டுவ வாழ்க்கை→ ஆயர் வாழ்க்கை → வேளாண் வாழ்க்கை ஆகிய முப்பெரும் பண்பாட்டுப் படிமலர்ச்சியைப் புராண நிகழ்வுகளில் இருந்து புரிந்துணர முடிகிறது.

**தொல்காப்பியரின் உயிர் வகைப்பாடு**

தொல்காப்பியரின் உயிர்களை வகைப்பிரித்து பாகுபடுத்தி கூறியுள்ள நிலையானது உயிரினப் படிமலர்ச்சியின் கருத்தை வெளிப்படுத்துவதாகவே உள்ளது.

> **“ஒன்று அறிவதுவே உற்று அறிவதுவே**
> **இரண்டு அறிவதுவே அதனொடு நாவே**
> **மூன்று அறிவதுவே அவற்றொடு மூக்கே**
> **நான்கு அறிவதுவே அவற்றொடு கண்ணே**

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

**ஐந்து அறிவதுவே அவற்றொடு செவியே**
**ஆறு அறிவதுவே அவற்றொடு மனனே**
**நேரிதின் உணர்ந்தோர் நெறிப்படுத்தினரே" (தொல்.பொரு:1526)**

இதன் படிமலர்ச்சியின் வளர்ச்சியினை நோக்கும் பொழுது தமிழ்ச்சிந்தனை மரபானது மிகவும் பழமை வாய்ந்த மரபு என்பது தெளிவுபடுகிறது.

ஐம்பெரும் பூதங்களான நிலமும், நெருப்பும், நீரும், காற்றும், விண்ணும் கலந்ததொரு மயக்கமான நிலையில் இந்த உலகம் உண்டாயிற்று. இவைகள் யாவும் ஓர் எல்லைக்குள் அமைந்து இயங்கிக் கொண்டிருந்த நிலையில் உயிர்கள் தோன்றின என்பதை தொல்காப்பியம்,

**"நிலம் தீ நீர்வளி விசும்போ டைந்தும்**
**கலந்த மயக்கம் உலகம் ஆதலின்**
**இருதிணை யைம்பால் இயனெறி வழாமைத்**
**திரிவில் சொல்லொடு தழாஅல் வேண்டும்." (தொல்.பொரு.635)**

என்னும் சூத்திரம் மூலம் விளக்குகின்றது.

உலகத் தோற்றம் பற்றிய ஆய்வானது அறிவியல் சார்ந்த உண்மை நிகழ்வுகளாக விளங்குகிறது. உலகில் தோன்றிய முதல் உயிரினம் நீரில் தான் தோன்றியது என்பதை மானிடவியல் வழி அறியப்படுகிறது. இம்முதல் உயிரினம் குமரிக்கண்டமாகிய லெமூரியா கண்டத்தில் தான் தோன்றியது என்பதை லெமூரியாக் கொள்கை உறுதி செய்கிறது.

உலகில் தோன்றிய முதல் இனம் தமிழினம் என்பதனை ஐந்திணை அமைப்பும், அவற்றை கட்டமைத்த மக்களின் வாழ்வியல் முறையால் உறுதி செய்யப்படுகிறது. இவ்வினமே நாடோடிகளாக இனக்குழுச் சமூகமாகத் திரிந்து, பின் நாகரீக நிலையினை அடைந்தனர். இனக்குழுக்கள் நிலங்களைத் தகவமைத்துக் கொண்டு நிலத்தின் இயல்பறிந்து வாழ்க்கை முறையினை அமைத்துக் கொண்டனர்.

**துணைநூற்கள்**

1. இளம்பூரனர்.(உ.ஆ).1974 **தொல்காப்பியம். பொருளதிகாரம்**. சென்னை: கழக வெளியீடு.
2. கோசம்பி.டி.டி. (மூ.ஆ). 1989. எஸ். ஆர். என்.சத்யா (மொ.ஆ), **பண்டைய இந்தியா அதன் பண்பாடும் நாகரிகமும் பற்றிய வரலாறு,** சென்னை: உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்.
3. ......... (1997). **சங்கத் தமிழர் வாழ்வியல்**, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம். சென்னை
4. சுப்பிரமணியன்.பெ., பாலசுப்பிரமணியன்.கு.வெ. தட்சணாமூர்த்தி.அ. (உரை).2004.
5. **பரிபாடல்.** சென்னை: நியூ செஞ்சுரி பதிப்பகம்.
6. நச்சினார்க்கினியர்.(உ, ஆ) 1983. **தொல்காப்பியம். பொருளதிகாரம்**. சென்னை:
7. திருநெல்வேலி, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்.
8. பக்தவச்லபாரதி. (2002). **தமிழர் மானிடவியல்.** திருச்சி. அடையாளம் பதிப்பகம்.
9. ........... (2005). **மானிடவியல் கோட்பாடு**. சிதம்பரம்: மெய்யப்பண் ஆய்வகம்.
10. செல்லம்.தி.2005. **தமிழக வரலாறும் பண்பாடும்**. சென்னை மணிவாசகம் பதிப்பகம்.
11. தட்சணாமூர்த்தி.அ.2014. **தமிழர் நாகரிகமும் பண்பாடும்**. சென்னை:யாழ் வெளியீடு.
12. தேவநேயப்பாவாணர்.1956. **தமிழர் திருமணம்**. சென்னை: தமிழ்மண் பதிப்பகம்.
13. .......... (1991). **தமிழர் வரலாறு**. சென்னை: திருநெல்வேலி, தென்னிந்த சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்.
14. பரமசிவன்.தொ. 2010. **அறியபடாத தமிழகம்**. சென்னை: காலச்சுவடு பதிப்பகம்.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019
Available at: www.ijtlls.com

# இழப்பும் நாடு அழிதலும் (புறநானூறு)

## Loss and the Detoriation of Country (*Purananooru*)

**முனைவர் இரா.ஜீவாராணி,** உதவிப்பேராசிரியர்,
தமிழ்த்துறை, அய்யநாடார் ஜானகி அம்மாள் கல்லூரி, சிவகாசி.

**Abstract**

*In Sangam period, it is woman who are mostly affected by war and its consequences. Due to war, women had lost their families, relations and everything. But in Sangam literature, women were highlighted only by means of the sufferings of widowhood, but there are no solutions to the problems. The article explores such evidences from the classic tamil work 'Purananooru'*

**Keywords:** Loss, Detoriation of Country, *Purananooru*

**முன்னுரை**

சங்க காலம் போர்ச் சமுதாயமாக இருந்தது. போரினால் மக்களுடைய புறவாழ்வில் மட்டும் அல்லாமல் இல்லற வாழ்விலும் சிக்கல்கள் நேர்ந்துள்ளன.போருக்கு முன் நடக்கும் நிகழ்வுகளான ஆநிரை கவர்தல், ஆநிரை மீட்டல், போரை ஊக்குவித்தல், வஞ்சினம் கூறல், மகட்கொடை மறுத்தல், போர் முன்னேற்பாடுகள், போரைத் தவிர்த்தல் இவ்வகைப் பாடல்கள் மொத்தம் 104. இவற்றைப் பாடிய புலவர்கள் 58 பேர்.

போருக்குப் பின் நடக்கும் நிகழ்வுகள் குறித்த பாடல்கள் மொத்தம் 137. இதனைப் பாடிய புலவர்கள் 68 பேர். போருக்கு முன் பாடிய பாடல்களைவிட, போருக்குப்பின் பாடிய பாடல்களும், புலவர்களுமே அதிகமாக உள்ளனர். அதிலும், வெற்றிச் செய்திகள் பதிவு செய்யப்பட்டு இருந்தாலும் போரினால் ஏற்படும் சிக்கல்களும் பதிவு செய்யப்பட்டுள்ளன. போரினால் ஏற்படும் சிக்கல்களினை,

1. இழப்பு
2. நாடு அழிதல்

என்ற இரண்டு பகுப்புகளின் வழி அறிந்து கொள்ள முடிகிறது.

**இழப்பு**

இழப்பு என்பது தனக்குச் சொந்தமான உறவுகள் அல்லது தன்னுடைய உரிமைகள் உடைமைகள் என்று இழப்பதனைக் குறிப்பிடுகின்றது. இழப்பு என்பதனை,

1. தன் அடையாள இழப்பு
2. உறவு இழப்பு

என்ற இரு வகைப் பாகுபாட்டின் வழி பகுத்து ஆராயலாம்.

**தன் அடையாள இழப்பு**

தன் அடையாள இழப்பு என்பது போரின் காரணமாகத் தன் கணவன் இறந்து விட்டாலோ, அல்லது போரில் தோல்வி அடைந்தாலோ ஒரு பெண் தன் அடையாளத்தை இழந்து நிற்கின்றாள். அதாவது, வெற்றி பெற்ற மன்னன் தோற்ற மன்னனின் மனைவியைக் கவர்ந்து சென்று விடுகிறான். தோற்ற மன்னனின் மனைவியருடைய கூந்தலைக் கொய்து வெற்றி பெற்ற மன்னன் கயிறு திரித்து யானைகளைப் பூட்டியதை,

**"பல் இருங் கூந்தல் முரற்சியால்**

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

**குஞ்சர ஒழுகை பூட்டி" (பதிற்.ஐந்தாம்பத்து.பதிகம்:16-17)**

என்ற அடிகளின் வாயிலாக அறிந்து கொள்ள முடிகிறது. இவ்வாறு ஒரு பெண் அடையாளம் இழந்த தன்மை, தன் கணவன் இறந்த பின்பு நிகழ்ந்துள்ளது. இதற்குப் புறநானூற்றில் இடம்பெறுகின்ற கூந்தல் மழித்த செய்தியினை ஒப்பிட்டுக் கூறலாம். இதனை,

**"கூந்தல் கொய்து குறுந்தொடி நீக்கி" (புறம்.250 : 4)**

**"கொய்ம்மழித்தலையொடு கைம்மையுறக் கலங்கிய" (புறம்.261 : 17)**

என்ற பாடல் அடிகளின் வாயிலாக அறிந்து கொள்ள முடிகிறது.

இவ்வாறு போரின் காரணமாகத் தன் கணவனை இழந்து நிற்கும் வேளையில் தன் அடையாளத்தையும் சேர்த்து இழந்து நிற்க வேண்டிய அவல நிலைக்குத் தள்ளப்படுகின்றாள். அதாவது கைம்மைக் கோலம் பூண்டு திகழ்கின்றாள்.

**உறவு இழப்பு**

போரில் மக்கள் தம் தந்தை, கணவன், மகன் என்று அனைவரையும் இழக்க நேரிடுகிறது. இதனால், மிகவும் பாதிப்பிற்குள்ளாவது பெண்ணே எனலாம். ஏனெனில் அவளது வாழ்வு ஆணை மையமிட்டே அமைகிறது. இருப்பினும், போர்க்களத்தில் தன் மகன் வீர மரணம் அடைந்தான் என்பதனைக் கேட்டதும் தாய் மிகுந்த மகிழ்ச்சி கொள்வதாகவே பாடல்கள் அமைந்துள்ளன.

**"களிறு எறிந்து பட்டனன் என்னும் உவகை**
**ஈன்ற ஞான்றினும் பெரிதே கண்ணீர்........" (புறம். 277 : 4 - 5)**

**"செங்களம் துழவுவேளர் சிதைந்து வேறாகிய**
**படுமகன் கிடக்கை காணுஉ**
**ஈன்ற ஞான்றினும் பெரிது உவந்தனளே" (புறம். 278 : 7 - 9)**

என்ற பாடல் அடிகள் மகனின் வீரம் கண்டு பெருமிதம் கொள்ளும் தாயினையே படம் பிடித்துக் காட்டுகின்றன. மேலும்,

**"வருபடை போழ்ந்து வாய்ப்பட விலங்கி**
**இடைப்படை அழுவத்துச் சிதைத்து வேறாகிய**
**சிறப்புடை யாளன் மாண்பு கண்டருளி**
**வாடுமுலை ஊறிச் சுரந்தன" (புறம். 295 : 4 - 7)**

என்று மகனின் வீர மரணம் கண்டு மகிழ்ச்சியில் வற்றிய முலைப் பால் சுரந்ததாகவும் படைத்துக் காட்டப்பட்டுள்ளது.

மேலும், ஒரு பெண் முதல் நாள் நடந்த போரில், தன் தந்தை யானை மேல் வேல் வீசிக் கொன்று தானும் வீழ்ந்தான். நேற்று நடந்த போரில் இவள் கணவன், பகைவர் கவர்ந்த பசுக் கூட்டங்களை மீட்டு, அவர்கள் மீண்டும் அவற்றைக் கவர வராமல் காத்துத் தடையாக நின்று போரிட்ட போது மடிந்து விட்டான். இன்று நடக்கும் போருக்குத் தனது ஒரே மகனையும் அனுப்பி வைக்கிறாள். இதனை,

**" மேல்நாள் உற்ற செருவிற்கு இவள் கொழுநன்**
**பெருநரை விலங்கி ஆண்டுப் பட்டனனே**
**இன்றும் செருப்பறை கேட்டு விருப்புற்று மயங்கி**
**வேல்கைக் கொடுத்து வெளிது விரித் துஉடீஇப்**
**.........ஒரு மகன் அல்லது இல்லோள்**
**செரு முகம் நோக்கிச் செல்க என விடுமே" (புறம்.279 :3-12)**

என்ற அடிகளின் வாயிலாக அறிந்து கொள்ள முடிகிறது. இவ்வாறு கணவன், தந்தை என்று அனைத்து உறவுகளையும் ஒரு பெண் இழந்து நிற்கின்றாள். சங்க காலம் போர்க்காலச் சூழலினை மையமாகக் கொண்டு இயங்குவதால், போரினால் உறவுகளை இழந்தும், கைம்மை

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019
Available at: www.ijtlls.com

பூண்டு வாழும் பெண்களின் துயர நிலையினைக் கோடிட்டுத்தான் காட்டுகின்றனரே தவிர முதன்மைப்படுத்திக் காட்டவில்லை.

**நாடு அழிதல்**

போர் காரணமாக நாடும் அழியும் நிலையினைக் காணமுடிகிறது. ஏனெனில் போருக்கான முதற்காரணம் மண்ணாசையேயாகும். தொல்காப்பியர்,

**"எஞ்சா மண் நசை வேந்தனை வேந்தன்**
**அஞ்சுதகத் தலைச் சென்று அடல் குறித்தன்றே" (தொல்.பொருள்.புறத்.நூ.7)**

என்று குறிப்பிடுவார். புறநானூற்றிலும்,

**"இன்னாவாகப் பிறன் மண் கொண்டு" (புறம். 12:4)**
**"பிறர் மண் உண்ணும் செம்மல்" (புறம்.20:13)**
**"வட புல மன்னர் வாட வடல் குறித்து" (புறம்.52:5)**

என்ற அடிகள் மண்ணாசையின் காரணமாக மன்னர்கள் மாற்றான் நாட்டின் மீது படையெடுத்துச் சென்றதனை விளக்குகின்றன. மேலும், படையெடுத்துச் சென்றதன் காரணமாக எதிரி நாடு பாழ்படும் தன்மையினைப் பல பாடல்கள் புலப்படுத்துகின்றன. இதனை,

**"தாயின் தூவாக் குழவி போல**
**ஓவாது கூவுநின் உடற்றியோர் நாடு" (புறம்.4:18)**

என்ற அடிகள் வழி அறிய முடிகின்றது. மன்னர்கள் பகை நாட்டினைத் தீக்கிரையாக்கி உள்ளனர். இதனைத் தொல்காப்பியர்,

**"இயங்குபடை அரவம் எரிபரந்து எடுத்தல்" (தொல்.பொருள்.புறத்.நூ.8)**

என்று குறிப்பிடுகிறார்.

**"..........பகைவர்**
**ஊர்சுடு விளக்கத்து அழுவிளிக் கம்பலைக்**
**கொள்ளை மேவலை, ஆகலின் நல்ல**
**இல்ல ஆகுபவால் இயல் தேர் வளவ" (புறம். 7 : 7 - 10)**

என்று கருங்குழலாதனார், சோழன் கரிகால் பெருவளத்தானைப் பற்றிப் பாடுகின்றார். இப்பாடல் அடிகளின் மூலம், இரவு, பகல் என்று எண்ணாமல் பகைவரது ஊரைச் சுடுகின்ற தீயினது ஒளியிலே தம் சுற்றத்தை அழைத்துக் கதறுகின்ற மக்களிடையே பகை நாட்டினர் ஆரவாரத்தோடு கொள்ளையடிப்பதனையும் அங்கே எந்த நல்ல பொருளும் கிடைக்காத நிலை உண்டாகி விடுவதனையும் அறிந்து கொள்ள முடிகிறது.

மேலும் பகை நாட்டினை எரிப்பதால், அதிலிருந்து வரும் புகையினால் உன்னுடைய மாலை வாடுக என்று கல்லாடனார் குறிப்பிடுகின்றார். இதனை,

**"களிறு படிந்து உண்டெனக் கலங்கிய துறையும்**
**கார் நறுங் கடம்பின் பரிசிலைத் தெரியல்**
**சூர் நவை முருகன் சுற்றத்து அன்னநின்**
**கூர்நல் அம்பின் கொடுவில் கூளியர்" (புறம். 23 : 2 - 5)**

என்ற அடிகள் உணர்த்துகின்றன.

இவ்வாறு பகை நாட்டை நெருப்பு மூட்டி அழித்துக் கொள்ளை அடிப்பது மட்டுமின்றி நெல் விளை வயல்களையும் அழித்து விடுகின்றனர் என்பதனை,

**"விளைவயல் கவர்பு ஊட்டி**
**மனைமரம் விறகு ஆகக்**
**கடிதுறை நீர்க் களிறுபடீஇ" (புறம். 16:4-6)**

என்ற அடிகளின் வாயிலாக அறிந்து கொள்ள முடிகின்றது.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

மேலும், பகைவர்களின் முடியணிந்த தலையை அடுப்பாக்கி, குருதியை உலையாக்கி, தசையையும், மூளையையும் அதில் போட்டு பகைவனது தோளாகிய துடுப்பினால் துழாவி விடப்பட்ட உணவால் களவேள்வி செய்தனர் என்பதனை,

**" முடித்தலை அடுப்பாகப்**
**புனற்குருதியுலைக் கொளீஇத்**
**தொடித் தோட்டு டுப்பிற்றுபுந்த வல்சியின்**
**அடுகளம் வேட்ட வடு போர்ச் செழிய"** (புறம். 26:8-11)

என்ற அடிகளும்,

**" பொருந்தாத் தெவ்வரருந்தலை யடுப்பித**
**கூவிள விறகினாக்கு வரிதுடங்க**
**ஆனா மண்டை வன்னியத் துடுப்பின்**
**ஈனா வேண் மானிடந்து தந்து தட்ட**
**மாமறி பிண்டம்"** (புறம். 372:5-9)

என்ற அடிகளும் விளக்கி நிற்கின்றன.

**தொகுப்புரை**

- போரின் காரணமாகத் தன் கணவன் இறந்து விட்டாலோ, அல்லது போரில் தோல்வி அடைந்தாலோ ஒரு பெண் தன் அடையாளத்தை இழந்து நிற்கின்றாள்.
- போரில் மக்கள் தம் தந்தை, கணவன், மகன் என்று அனைவரையும் இழக்க நேரிடுகிறது. இதனால், மிகவும் பாதிப்பிற்குள்ளாவது பெண்ணே எனலாம்.
- சங்க காலம் போர்க்காலச் சூழலினை மையமாகக் கொண்டு இயங்குவதால், போரினால் உறவுகளை இழந்தும், கைம்மை பூண்டு வாழும் பெண்களின் துயர நிலையினைக் கோடிட்டுத்தான் காட்டுகின்றனரே தவிர முதன்மைப்படுத்திக் காட்டவில்லை.
- மண்ணாசையின் காரணமாக மன்னர்கள் மாற்றான் நாட்டின் மீது படையெடுத்துச் சென்றதனை விளக்குகின்றன. மேலும், படையெடுத்துச் சென்றதன் காரணமாக எதிரி நாடு பாழ்படும் தன்மையினைப் பல பாடல்கள் புலப்படுத்துகின்றன.
- பகை நாட்டை நெருப்பு மூட்டி அழித்துக் கொள்ளை அடிப்பது மட்டுமின்றி நெல் விளை வயல்களையும் அழித்து விடுகின்றனர்.

**துணைநூல்பட்டியல்**

1. புறநானூறு. ஔவை சு.துரைச்சாமிப்பிள்ளை (உ.ஆ.), திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், இரண்டாம் பதிப்பு, சென்னை, 1962.
2. இளம்பூரணர், (உ.ஆ.). தொல்காப்பியம் பொருளதிகாரம், திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகம் லிமிடெட், இரண்டாம் பதிப்பு, சென்னை, 1982.
3. ஆலிஸ்,அ., (உ.ஆ.). பதிற்றுப்பத்து, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட், முதற்பதிப்பு, சென்னை, 2004.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

# கம்பரின் ஏரெழுபதில் உழவு

## Ploughing in Kambar's 'Aereazhubathu'

**முனைவர் இரா.நி.ஸ்ரீகலா,** உதவிப்பேராசிரியர்,
தமிழ்த்துறை, தெ.தி.இந்துக் கல்லூரி, நாகர்கோவில்.

**Abstract**

*Besides **Ramayan,** the great Tamil Epic Poet Kambar wrote in immortal verses like **Aereazhubathu, Silaieazhubathu, Thirukaivazhakkam, Saraswathy Anthathy** and Sadagopar Anthanthy. The article **Ploughing in Kambar's Aereazhubathu** critically analyses the text and graphically pictures the socio-cultural life of the farmers (Velars) who lived in the 12th century Chola land of Tamilnadu. The selfless service of the farmers is recognized by every section of the society. They feed not only the king and his soldiers, but the entire citizens of the society. The kings undertake continuous fight with their enemies. But the farmers aim in life is to make everyone happy. So they are superior to the kings. It was the king who depended on the farmers in the past. Today, the farmers are dependent on the rulers. It also throws light on the process of paddy cultivation of the period and lists the implements used by the farmers and the technical words related to the act of farming.*

**Keywords:** Ploughing, Kambar's 'Aereazhubathu'

**முன்னுரை**

சோழர் காலத்தில் வாழ்ந்த கம்பர் எழுதிய *இராமகாதை* எனும் *இராமாயணம்* அவரது படைப்புகளுள் முதன்மையானதாகக் கருதப்படுகிறது. கம்பர் இராமாயணத்தைத் தவிர *ஏர் எழுபது, சிலை எழுபது, திருக்கை வழக்கம், சரசுவதி அந்தாதி, சடகோபர் அந்தாதி* போன்ற இலக்கியங்களையும் படைத்துள்ளார். பன்னிரெண்டாம் நூற்றாண்டில் எழுந்த ஏரெழுபது என்னும் இந்நூல் உழவர்களின் சிறப்புகளையும் உழவின் மேன்மையையும் விரித்துரைக்கும் நூலாகும். உழவுக்குத் தேவையானது நீர் ஆதாரம். அதைத் தருகின்ற வளமிக்க ஆறாக காவிரி அமைந்துள்ளதை நூல்வழி அறிய முடிகிறது. உழவின் சிறப்புகளை ஏரெழுபது வழி விளக்குவதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**உழவின் சிறப்பு**

உழவின் சிறப்பினைச் சங்க இலக்கியம் முதற்கொண்டு தமிழிலக்கியங்கள் பல பேசியிருந்தாலும் கம்பரின் ஏரெழுபது நூல் உழவின் மேன்மையை நுணுக்கமாகவே கூறுகிறது.

**"சுழன்றும் ஏர் பின்னது உலகம் அதனால்**
**உழுந்தும் உழவே தலை" (குறள் - 1031).**

என்ற வரிக்கேற்ப உழவர்கள் ஏரைக் கொண்டு நிலத்தை உழாவிட்டால் அரசர்கள் போர்த் தொழிலை மேற்கொள்ள மாட்டார்கள். நால்வகைப் படைகளை அவன் நிறைவாகப் பெற்றிருந்தாலும் வேளாளர்களின் கலப்பையின் உறுப்பாகிய நீண்ட வாள் கட்டையை உதவியாகக் கொண்டு தான் அரசனின் வெற்றியே இருக்கும். உழவு செய்யும் வேளாளர்களின் செயலால் உலகத்தில் அளவில்லாத வேதங்கள் சிறப்புற்று விளங்கும். அந்தணர்களின் வேள்விகள் உயர்வாக நடைபெறும். பலவகை கலைகள் சிறப்புற்று விளங்கும். புலவர்களின்

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

செய்யுட்கள் சிறப்புற்று விளங்கும். வான்மழை தவறாமல் பெய்யும். நாடாள்பவர்களின் நீதி நடுவுநிலையோடு விளங்கும். உலகம் செழிப்பாகத் திகழும். ஆக உழவன் ஒருவனின் செயல்பாட்டை நம்பியே உலகமே இயங்குகிறது என்ற கருத்தை ஏரெழுபது காட்டுகிறது. இக்கருத்தையே அறப்பளீசுர சதகமும் வெளிப்படுத்துகிறது.

**"யசனாதி கருமமும் தப்பாமல் வேதியர்**
**இயற்றிநல் லோர் பெறுவதும்**
**இராசயபா ரஞ்செய்து முடிமன்னர் வெற்றிகொண்டு**
**என்றும்நல் லோர் பெறுவதும்**
**...........சீர் கொண்ட பைங்குவளை மாலைபுனை வேளாளர்**
**செய்யும்மே ழிப்பெருமை காண்" (பாடல் 84)**

**உழவரின் சிறப்பைக் கூறும் உன்னதமான பாடல்**

**"ஏராலே சேறாக்கி யெருவாலே கருவாக்கி**
**நீராலே பைங்கூழை நிலைப்பிப்பார் தமையன்றிக்**
**காராலே காவேரி நதியாலே காசினியில்**
**ஆராலே பசிதீர்வார் அகலிடத்திற் பிறந்தோரே" (பா – 36)**

இம்மண்ணுலகில் உள்ளவர்கள் பசியைத் தீர்த்துக் கொள்வது நீர்சுமந்த கார் மேகத்தாலோ காவிரி நதியாலோ அல்ல உழவனின் உழவுத் தொழிலால் தான் என்று உழவின் மேன்மையை விவரிக்கின்றது.

**வேளாளரின் சிறப்பு**

வேளாளர் வேளாண் தொழில் செய்வதால் வேளாளர் எனப்பட்டனர். வேளாளரை "காராளர்" "பெருங்காராளர்" என்ற சொல்லால் ஏரெழுபது குறிப்பிடுகிறது. உலகத்து உயிர்களுக்கெல்லாம் உணவு அளித்து காப்பவன் வேளாளன், அந்தணன், அரசன், வணிகன் போன்றோர் தங்கள் தங்கள் சாதியில் உயர்வு பெற்று விளங்க உலகத்து உயிர்களுக்கெல்லாம் பசியைப் போக்கும் உணவுப் பொருளை உற்பத்திச் செய்யும் வேளாளர் குலத்திற்கு ஒப்புமையாக எவரையும் கூறமுடியாது என்கிறார் கம்பர். உழவனின் பணி அவ்வளவு உயர்வானது.

மனித குலத்தார் வேளாளர்களைச் சார்ந்தே இருக்க வேண்டியவர்கள் ஆவர். மன்னனின் ஆட்சிச் சிறப்புக்கூட கலப்பையின் நுனி செய்யும் உழவின் சிறப்பாய் வருவதாகும். மேலும் அரசனின் செங்கோலை விட சிறப்பு வாய்ந்தது வேளாளர்கள் உழவின் போது மாடுகளை அடித்து ஓட்டுகின்ற சிறிய கோலாகும். உலகத்தவர் செழிப்பாக வாழ்வதும் அந்தணர்களின் வேள்விகள் சிறப்பு பெறுவதும், அரசனின் போர்த் தொழில் வெற்றி பெறுவதும் உழவைச் சார்ந்தே உள்ளது. உழவு இன்றேல் உலகத்து உயிர்கள் இல்லை.

**"உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்மற் றெல்லாருந்**
**தொழுதுண்டு பின்செல்வா ரென்றேயித் தொல்லுலகில்**
**எழுதுண்ட மறையன்றோ இவருடனே இயலுமிது**
**பழுதுண்டோ கடல்சூழ்ந்த பாரிடத்திற் பிறந்தோர்க்கே" (பாடல் - 19).**
**"உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார் மற்றெல்லாருந்**
**தொழுதுண்டு பின்செல் பவர்" - குறள்**

உழவுத் தொழிலை மேற்கொண்டு அத்தொழிலால் பெற்ற உணவினை உண்டு உலகில் வாழ்பவர்களே வாழ்பவர்கள் என்று கருதப்படுவர். மற்ற அனைவரும் உழவுத் தொழில் புரியும் வேளாளர்களை வணங்கி அவர்களிடம் பொருள் பெற்று உண்டு அவர்களையே பற்றுக்கோடாக கொண்டிருப்பார் என்ற வள்ளுவர் கருத்தையே கம்பரும் குறிப்பிடுகிறார்.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

வேளாளர்கள் வறியவர்களுக்கு உதவும் மனப்பான்மை கொண்டவர்களாக விளங்கினர். அறுவடை செய்த நெற்கதிர்களை வறியவர்களுக்கு வழங்கிய உழவர்களின் ஈகை குணம் போற்றுதலுக்குரியது. அறுவடை செய்த நெல்லை அரசர், அந்தணர், புலவர்கள், எளிய உயிர்கள் என அனைவருக்கும் நெல்லை அளந்து கொடுத்த பின்னர் நெற்போர் வைத்த களத்தில் நெற்கதிர்களில் எஞ்சிய கல்போன்ற நெல்மணிகளை காளைகளை பிணையலிட்டு உதிர்த்து அதை உண்டனர் என்ற செய்தியால் வேளாளர்கள் நேர்மை, உதவும் தன்மை, சொன்ன சொல் தவறாமை போன்ற உயர்ந்த பண்புகளை அக்காலத்தில் கொண்டிருந்தனர் என்பதை அறிய முடிகிறது.

**உழவின் படிநிலைகள்**

உழவன் நிலத்தில் இறங்கி நிலத்தைப் பண்படுத்துவது தொடங்கி அடுத்த பருவத்திற்குத் தேவையான விதை நெல்லைப் பாதுகாத்து வைத்தல் வரையிலுமான உழவனின் உழைப்பை ஒவ்வொரு படிநிலைகளாக கம்பர் காட்டியிருப்பது வேறெந்த இலக்கியத்திற்கும் இல்லாத தனிச்சிறப்பாகும்.

**நல்ல நாள் பார்த்தல்**

விவசாயத் தொழில்புரியும் வேளாளர்கள் ஏர் பிடித்து உழவுத் தொழிலை மேற்கொள்ளும் செயல் நன்றாக விளங்க நல்லநாள் பார்த்து தொடங்கினர். அவ்வாறு செய்தால் பூமித்தாய் நல்ல விளைச்சலைத் தருவாள் என்று நம்பிக்கைக் கொண்டிருந்தனர்.

**நிலத்தைப் பண்படுத்தல்**

விவசாயம் செய்யும் தன்மையற்ற மேடுகளாக இருக்கின்ற நிலத்தைச் சமப்படுத்தி புதர்களை நீக்கி வடிவமுடன் பரப்பினை அமைத்து அதனை பண்படுத்தி விளைச்சலுக்குரிய நிலமாக மாற்றும் சிறப்பு படைத்தவர்கள் வேளாளர்கள் என்பதை

**"மேடுவெட்டி வளப்படுத்தி மிகவரம்பு நிலைநிறுத்திக்**
**காடுவெட்டி யுலகநெறிக் காராளர் காலத்திலரேல்**
**மேடுவெட்டிக் குறும்பறுக்கும் வேல்வேந்த ரெற்றாலும்**
**காடுவெட்டி யுழுதுவருங் கலிகளைய மாட்டாரே" (பா – 41).**

உழவு செய்து வறுமையை ஒழிக்கும் திறம் பெற்றவர்கள் உழவர்களே. போரில் வெற்றி பெறும் அரசனாலும் இச்செயல் ஆகாதது என்று குறிப்பிடுகிறார் கம்பர்.

**ஏர் பூட்டுதல்**

இதனை பகடு பூட்டுதல் என்றும் வழங்குவர். உழவன் உழவு மாடுகளை ஏரில் பூட்டி இணைத்துக்கட்டி வயலில் இறங்கினால் மட்டுமே உலகத்தோர் உணவு உண்ண முடியும். உழவுத் தொழிலைத் தொடங்கும் விவசாயி முதலில் ஏர்பூட்டி அதற்கு தயாராவான். உழவுத் தொழில் சிறப்புற்றால் நாட்டில் பசி இருக்காது. பசியில்லாத காரணத்தால் வறுமை அகலும். மக்கள் அவரவர் கடமைகளைச் சிறப்பாக செய்வர். நாட்டை ஆளும் அரசனாக இருந்தாலும் பசி எடுத்தால் உண்ண உணவு வேண்டும். அதற்கு உழவன் ஏர்பூட்ட வேண்டும். ஆகவே அரசனை விட உழவன் உயர்வாக கருதப்படுகிறான்.

**புழுதிச் சிறப்பு**

'அகல உழுவதிலும் ஆழ உழுதல் சிறப்பு' என்ற அனுபவ மொழியை ஒட்டி ஒரு பலம் புழுதி கால்பலம் ஆகிற வரைக்கும் நிலத்தை நன்கு உழுது பின்பு காயவிட வேண்டும். அவ்வாறு காயவிட்டால் ஒரு பிடி எருவும் இல்லாமலே பயிர்கள் செழித்து வளரும்.

**"தொடிப்புழுதி கஃசா உணக்கின் பிடித்தெருவும்**
**வேண்டாது சாலப் படும்." (குறள் : 1037)**

என்ற குறள் கருத்திற்கேற்ப நிலத்தில் ஈரத்தைப் போகச் செய்து உழவுத் தொழில் புரியும் வேளாளர்கள் ஆழ உழுவர். இதனால் அந்நிலத்தில் விளைச்சல் அதிகமாக இருக்கும் என்பதை இலக்கியம் சுட்டுகிறது.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

வயலின் நான்கு பக்கங்களிலும் வரப்பமைத்து, மாட்டுச்சாணம், குப்பையோடு மக்கிய எருவை வயலில் போட்டு வளமாக்கி நாற்றுநட வயலைச் சேறாக்கி பின்னர் சிறந்த விதைகளை விதைத்து அவற்றை முளைக்கச் செய்வர். இதனை நாற்று என்பர். இந்நாற்றினை நாற்றங்காலில் இருந்து வேறு இடங்களில் நடுவதற்காக பறிப்பர். நாற்றினை வயலில் நட வயலிலுள்ள சேற்றில் சேர்த்து வைத்திருப்பர். பின்னர் முடிகளாக இருந்த நாற்றுக்களைக் கையில் பிரித்து எடுத்து சேற்றில் பதித்து நடுவர். இதனைக் கூறும்போது இறைவனின் மந்திரங்களை வேதநூல்களை கற்பதாலும் பிற நூல்களை கற்பதாலும் ஒரு பயனும் இல்லை. நிலத்தினை வகைப்படுத்தி அதனை எருவிட்டு வளப்படுத்தி அவ்வுரத்தினால் வளமாக விளைந்த நெல்லின் நாற்றை கையின் திறத்தினால் பிரித்து நடவு செய்ய அறிந்திருப்பவர்களே கற்றறிந்தவர்கள் ஆவார்கள்.

**“மெய்ப்பாங்கு படக்கிடந்த வேதநூல் கற்றாலென்**
**பொய்ப்பாங்கு படப் பிறரைப் புகழுநூல் கற்றாலென்**
**செய்ப்பாங்கு படக்கிடந்த செழுஞ்சாலி நன்னாற்றைக்**
**கைப்பாங்கு பகுந்துநடக் கற்றாரே கற்றாரே” (பா.34)**

இவ்வாறு நடவு செய்த நாற்றைப் பாதுகாத்து வளர்த்து தேவையான அளவு நீர்ப்பாய்ச்சி களையெடுத்து, நெல் கருக் கொண்டு, அது நெல்லாக வடிவம் பெற்று, பின்னர் நெற்கதிர்களாக தோற்றமளிக்கும். இந்நெல் கதிர்கள் முற்றிய பிறகு கதிர்களைக் கவர்ந்துச் செல்ல பறவைகள் வரும். அதனை விரட்ட பணியாளர்கள் காவல் காப்பர். இதற்கு சேவல் காத்தல் என்று பெயர். இவ்வாறு பாதுகாத்து வளர்ந்த நெல்லை அறுவடை செய்து களத்தில் கொண்டுபோய் காளைகளைக் கொண்டு பிணைய அடித்து நெல்லாக பிரித்தெடுப்பர்.
இத்தகைய நெல்லின் சிறப்பை

**“விற்பொலிவும் பெருங்கீர்த்தி வேளாளர் விளை வயலில்**
**நெற்பொலியுண் டாமாகில் நிலமகளும் பொலிவுண்டாம்” (பா.61)**

என்ற வரிகள் விளக்குகின்றன.

இவ்வாறு குவித்து வைத்த நெல்லை எல்லோருக்கும் வழங்கி வறியோர்க்கும் வழங்கிய பின்னர் அடுத்த பருவத்தில் பயிரிடுவதற்காக விதை நெல்லைப் பொதிகளாக கட்டி வைப்பர். இது உழவர்களின் தொழில் முறை யுக்தியை காட்டுகிறது.

வயலில் வரப்பு அமைத்தல், எருவிட்டு வளமாக்கல், சேறு இடல், நாற்று நடல், நாற்றாங்காலில் நாற்றைப் பறித்து வயல்களில் நடுதல், நீர்ப்பாய்ச்சுதல், களையெடுத்தல், நெற்கதிர்களின் முற்றிய நிலை, காவல் காத்தல், அறுவடை செய்தல், கதிர் அடித்தல், அதற்கான களம் அமைத்தல், நெல்மணிகளைக் களத்தில் குவித்து வைத்தல், பிணையில் அடித்தபின் உள்ள வைக்கோல்போர், நெல்லை அள்ளித் தூற்றும் கூடை, பொலிகோல் இவை போன்றச் செய்திகளை ஒன்றன் பின் ஒன்றாக பாடல்களாக கம்பர் தந்திருப்பது நம்மை வயல்வெளிக்கே அழைத்துச் சென்ற உணர்வை ஏற்படுத்துகிறது. இன்றைய இளம் தலைமுறையினருக்கு உழவின் மேன்மையையும் தேவையையும் உணர்த்தக் கூடியதாக ஏரெழுபது உள்ளது.

சிலப்பதிகார நாடுகாண் காதையில் நாட்டின் வளத்தைக் குறிப்பிடும் போது உழவர்களின் உழவுத் தொழிலும் காட்சிப்படுத்தப்பட்டுள்ளது.

பலரும் நடந்து நடந்து சென்றதால் அந்நிலம் உழாமலே சேறுபடிந்து காணப்பட்டது என்றும் நாற்றுநடும் கழனியில் களைப்பறித்துவிட்டு முடி நாற்றை நடும் காட்சியும் நெற்கதிரோடு அறுகம்புல்லையும் குவளை மலரையும் விரலித்தொடுத்த மாலையை மேழியிலே சூட்டி ஏரினை பூட்டி நிற்போர் நிலையும் நெல்லை அரிந்து பிரித்து ஓரிடத்தில் குவித்தோர் தாள்போரைப் பிணைபூட்டி மிதித்த பின்னர் அந்நெல்லை முகந்து முறத்தால் தூற்றும் காட்சிகளையும் சிலம்பில் இளங்கோ காட்சிப்படுத்துகிறார்.

**“கழாஅமயிர் யாக்கைச் செங்கட்காரான்**

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com


**சொரிபுறம் உரிஞ்சப் புரிஞெகிழ் புற்ற**
**……கவரிச் செந்நெல் காய்த்தலைச் சொரியக்**
**…….அரிந்துகால் குவித்தோர் அரிகடா உறுத்த**
**பெருஞ்செய்ந் நெல்லின் முகவைப் பாட்டும்” நாடுகாண்காதை (121-137)**

**உழவுத் தொழிலுக்கான கருவிகள்**

உழவுத் தொழிலுக்கான இன்றியமையாத கருவிகள் பற்றி ஏரெழுபது இலக்கியம் கூறுகின்றது. உழவனுக்கு உறுதுணையாக உள்ள கருவிகள் இவை

| | | | |
|---|---|---|---|
| 1. | கலப்பை | - | இதனை அலப்படை என்கிறது ஏரெழுபது. கலப்பையின் உறுப்பாகிய நீண்ட வாள் கட்டை |
| 2. | மேழி | - | உழுப்பயன்படும் கருவி |
| 3. | ஊற்றாணி | - | கலப்பையினையும் ஏர்க்காலையும் இணைக்கும் உறுப்பு |
| 4. | நுகத்தடி | - | கலப்பையை இழுத்துச் செல்வதற்காக மாட்டின் கழுத்தில் இணைக்கப்படும் மரம். |
| 5. | நுகத்தொளை | - | நுகத்தடியில் காளைகளை இணைக்க இடப்பட்ட துளை. |
| 6. | நுகத்தாணி | - | நுகத்தடியை ஏர்க்காலோடு இணைக்கும் ஆணி. |
| 7. | பூட்டாங்கயிறு | - | நுகத்தடியைக் கழுத்தில் தாங்கிக் கொண்டு உழவினைச் செய்ய உதவுகின்ற காளைகளை ஏரோடு இணைக்கின்ற இரண்டு கயிறுகள் பூட்டாங்கயிறு ஆகும். |
| 8. | தொடை | - | கலப்பையினையும் ஏர்க்காலையும் இணைக்கும் உழவுக்கயிறு. |
| 9. | கொழு | - | கலப்பையின் நுனிப்பகுதி |
| 10. | கொழு ஆணி | - | கலப்பையின் நுனியில் கொழுவை இணைத்திருக்கும் ஆணி. |
| 11. | தாற்றுக் கோல் | - | உழவின் போது மாடுகளைத் துரிதப் படுத்தப் பயன்படுத்தும் சிறிய கோல் |
| 12. | மண்வெட்டி | - | நிலத்தைச் சீர்த்திருத்த பயன்படும் கருவி. |
| 13. | அரிவாள் | - | அறுவடை செய்ய பயன்படும் பிறை வடிவிலான கருவி |
| 14. | அரிமிதி கோல் | - | கட்டாக இருந்த கதிர்களைப் பிரித்துக் கதிர்களை அடித்த பின்பு கதிர்களில் எஞ்சியிருக்கும் நெல்மணிகளை அடித்து உதிர்க்க பயன்படும் கோல். |
| 15. | பொலிகோல் | - | நெற்குவியல் பொதிகளுக்கு முத்திரை இடும் கோல். |

**முடிவுரை**

அன்று அரசன் உழவனை எதிர்பார்த்திருந்தான். இன்று உழவன் அரசை எதிர்பார்த்திருக்கின்றச் சூழலே காணப்படுகிறது. மேலும் அன்றைய கால விவசாயிகள் (வேளாளர்கள்) செல்வ வளம் உடையவர்களாக விளங்கினர். தற்போது விவசாயிகளின் நிலைமை வேதனைக்குரியதாகவே உள்ளது. “உழவன் நிலத்தில் கால் வைத்தால் தான் நாம் உணவில் கை வைக்க முடியும்” என்பதை ஒவ்வொருவரும் உணர வேண்டும். அதற்கு நல்லதொரு சான்றாதாரமாக ஏரெழுபது நூல் உள்ளது.

**துணைநின்ற நூல்கள்**

1. *ஏரெழுபது.* முனைவர் கதிர் முருகு, சீதை பதிப்பகம், 6/16, தோப்பு வேங்கடாசலம் தெரு, திருவல்லிக்கேணி, சென்னை - 600 005.

E-ISSN: 2581-7140

Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

2. *திருக்குறள் திறவுகோல்*, பேராசிரியர் ப.முருகன், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட், 41-B, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட், அம்பத்தூர், சென்னை - 600 098.
3. *அறப்பளீசுர சதகம்*, டாக்டர் கதிர் முருகு, சாரதா பதிப்பகம், சென்னை - 600 014.
4. சிலப்பதிகாரம், பேராசிரியர் ஜெ.ஸ்ரீசந்திரன், தழிழ் நிலையம், தியாகராய நகர், சென்னை - 600 017.

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com


# அப்துல் ரகுமான் கவிதைகளில் இலக்கிய மரபுகள்

## Literary Elements in the Poetry of Abdul Rahman

**மு.ஸ்ரீதேவி,** முனைவர் பட்ட ஆய்வாளர், நெறியாளர் **முனைவர் சி.செல்வகுமார்,**
உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை, சென்னை மாநிலக் கல்லூரி, சென்னை.

**Abstract**

*The paper evinces on the literary elements employed in the poetic collection of Addul Rahman, one of the great poets of Tamil literature. He has employed perfect leterary devices and approaches in his poetry. His ideas are noted for its radical approach and the use of the norms enunciated by "Tholkappiam" and Sangam Literature. The way he use metaphor is of fine merit to expose a literary image becomes noteworthy of its impact on the reader. Hence, the article decodes such devices in his poetry.*

**Keywords:** Literary Elements, Poetry of Abdul Rahman

**முன்னுரை**

இலக்கியங்களுக்கெல்லாம் இளையது புதுக்கவிதை இலக்கியம். சமூகப் பின்னடைவுகள், பெண்களின் அவலநிலை, அரசியல் சூழல்கள் ஆகியன சார்ந்த கூறுகளைப் பாடுபொருளாகக் கொண்டு அமைந்துள்ளன. இக்கவிதை இலக்கியங்களைப் படைத்தளித்த கவிஞர்கள், தாங்கள் உணர்த்த வரும் பாடுபொருளை வாசகர்கள் புரிந்து கொள்வதற்காக முன்னைய இலக்கியங்களின் கூறுகளை எடுத்தாளுகின்றனர்.

முற்கால இலக்கியங்களின் அடிக்கருத்து, கதைமாந்தர்களின் பண்பு, கூற்றுமுறைகள், நிகழ்வுகள், நட்பு, பிரிவு ஆகிய கூறுகளைப் புதுக்கவிதையில் புலப்பாட்டு உத்தியாகப் பயன்படுத்தியுள்ளனர். இவ்வாறு பழைய இலக்கியங்களின் மரபுக் கூறுகள் அப்துல் ரகுமான் புதுக்கவிதைகளில் எடுத்தாளப்பட்டுள்ளன. இவ்வகையில் தொல்காப்பியம், சங்க இலக்கியம், காப்பிய இலக்கியம், பக்தி இலக்கியம், புராண இலக்கியம் ஆகியவற்றின் கூறுகள் அப்துல் ரகுமான் கவிதைகளில் இடம் பெற்றிருக்கின்ற பாங்கு இக்கட்டுரையில் ஆராயப்படுகின்றது.

**தொல்காப்பிய மரபு**

அகத்திணை இலக்கணக் கூறுகள், கவிஞர்தம் கவிதைகளில் அமைந்திருக்கும் முறை எடுத்துரைக்கப்படுகின்றது. அகத்திணை பற்றித் தொல்காப்பியர்,

**"கைக்கிளை முதலாப் பெருந்திணை இறுவாய்
முற்படக் கிளந்த எழுதிணை என்ப" (தொல். அகத். 947)**

என ஏழு திணையாகப் பகுத்துள்ளார். இவற்றில் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலைத் திணைகளில் முப்பொருளும் அமைந்துள்ளன. கைக்கிளை, பெருந்திணை ஆகிய திணைகளின் ஒழுக்கங்களான, ஒருதலைக் காதல், பொருந்தாக் காமம் ஆகிய பண்புகளைத் தன் புதுக்கவிதைகளில் காதல் வெளிபாட்டை உணர்த்தும் மரபில் அமைத்துள்ளார். தலைவியின் நினைவு தலைவனை உறங்கவிடாமல் தடுக்கிறது. தலைவியின் அன்பில் தன் உள்ளத்தைப் பறிகொடுத்த தலைவனுக்கு அவளுடைய நினைவுகள் மனிதனின் இரத்தத்தை உறிஞ்சும் கொசுக்களைப் போல வாட்டுகின்றன என்கிறான். இதனை,

**"இரவெல்லாம்
உன் நினைவுகள்**

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

**கொசுக்கள்" (பால்வீதி ப. 27)**

என்ற கவிதையின் மூலம் உணர்த்துகிறார். தலைவன், தலைவியின் மீது காதல் கொள்கிறான். அவனின் காதல் வயப்பட்ட மனமானது துன்பத்தைத் தொடர்ந்து தருகிறது. இதனால் வேதனை அடைகிறான். 'கொசு'வானது மனிதனின் இரத்தத்தை உறிஞ்சி, தொடர்ந்து துன்புறுத்துவது போல, தலைவியின் நினைவு தலைவனுக்குத் துன்பம் தருகின்றது என்ற உணர்வைக் கவிஞர் உணர்த்துகிறார். இக்கவிதையில் தலைவனின் உணர்வானது தொல்காப்பியப் பெருந்திணையோடு பொருத்தமுற அமைகிறது. அதாவது,"மடலேறுகின்ற நிலையும், இருவருக்கும் இளமை தீர்ந்த நிலையும், மிக்க காமத்தால் வலிமையுடன் சேர விரும்பும் நிலையும்" என்ற நான்கும் பெருந்திணைக் குறிப்புகள் என்று தொல்காப்பியர் விளக்கம் தருகிறார். இதனை,

**"ஏறிய மடல்திறம் இளமை தீர்திறம்**
**தேறுதல் ஒழிந்த காமத்து மிகுதிறம்**
**மிக்க காமத்து மிடலொடு தொகைஇச்**
**செப்பிய நான்கும் பெருந்திணைக் குறிப்பே" (தொல். அகத். 997)**

என்ற நூற்பாவால் அறிய முடிகிறது. இவற்றில் "தேறுதல் ஒழிந்த காமத்து மிகுதிறம்" என்பது, தலைவி மீது மிகுதியான காதல் கொண்ட தலைவனுக்கு அவளின் நினைவுகள் வந்து துன்புறுத்தக்கூடிய ஆற்றாமையை உணர்த்துகிறது. இவ்வாறு தலைவியின் மீது அதீத அன்பு கொண்ட தலைவனுக்கு அவளின் நினைவு வந்து வந்து துன்புறுத்துவதால் அக்காதல் உணர்விலிருந்து மீளமுடியாது துன்புறுகிறான் என்ற உணர்வானது, தொல்காப்பியர் உணர்த்தும் பெருந்திணைப் பண்பான,"தேறுதல் ஒழிந்த காமத்து மிகுதிறம்" என்ற உணர்வோடு பொருத்தமுற அமைகிறது. இவ்வாறு கவிஞர் தம் கவிதையில் தொல்காப்பிய மரபைப் பின்பற்றியிருப்பது புலப்படுகிறது.

**சங்க இலக்கிய மரபு**

சங்க இலக்கியங்களின் கூறுகளான கருத்தமைவு, உவமையைக் கையாளுதல், கூற்று மரபு, பெயர்சுட்டா மரபு, காதல்பிரிவு, காதல் மேன்மை ஆகியன கவிஞர் தம் கவிதைகளில் அமைந்துள்ளார்.

**உவமையைக் கையாளுதல்**

காதல் திருமணங்களால் தான் சாதி அமைப்பு காணாமல் போகும். இருப்பினும் இன்றைய நிலையில் சாதி என்பது பிரித்துப் பார்க்க முடியாத ஒன்றாகச் சமூகத்தில் நிலவி வருகின்றது என்ற கருத்தை உணர்த்துகிறார் கவிஞர்.

**"செம்புலப் பெயல் நீர்போல**
**எல்லாம் கலந்து விட்ட**
**இந்தக் காலத்திலுமா**
**சாதியையும்**
**வருணத்தையும்**
**என் விலாசம் என்கிறாய்" (சுட்டுவிரல் ப. 25)**

என்ற இக்கவிதையில், செம்மண்ணில் கலந்த நீர்போல, காதலர்கள் மனதால் ஒன்றுபட்டுக் காணப்படும் இக்காலத்திலும் காதல் மணம் புரிவதற்குத் தடையாக இருப்பது சாதி என்பதை உணர்த்துகிறார். இக்கருத்தை விளக்கச் சங்கப் பாடலில் அமைந்துள்ள உவமையைக் கையாண்டிருப்பதை அறியலாம். இதனை,

**"யாயும் ஞாயும் யாராகி யரோ**
**எந்தையும் நுந்தையும் எம்முறைக் கேளிர்**
**யானும் நீயும் எவ்வழியறிதும்**
**செம்புலப் பெயல் நீர்போல**

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

**அன்புடை நெஞ்சம் தாம் கலந்தனவே" (குறுந்தொகை 397)**

என்று குறுந்தொகைப் பாடலில், "தலைவியிடம், தலைவன் கூறும் போது நானும் நீயும் வேறு ஊரைச் சேர்ந்தவர்கள். நம்முடைய பெற்றோர்களை இருவரும் அறிந்திலோம். அதனால் நாம் இருவரும் செம்மண்ணில் பெய்த மழைநீர், மண்ணோடு சேர்ந்து செம்மை நிறமாக மாறுவதைப் போல இணைந்துள்ளோம்" என்றான். இப்பாடலில் தலைவன், தலைவி இருவரின் இணைந்த அன்பிற்கு,"செம்புலப்பெயல் நீரை" உவமை செய்துள்ளார் சங்கப்புலவர். கவிஞரும் தம் கவிதைகளில், தற்காலத்தில் சாதிய முறையால் காதல் மணம் தவிர்க்கப்படுகிறது என்ற சமூகச் சூழலை எடுத்துரைக்கும் போது சங்கப்பாடல் உவமையைக் கையாள்கிறார். இதிலிருந்து மேற்கண்ட கவிதை சங்க அகப்பாடல் மரபைப் பெற்றுள்ளது என்பதை உணர முடிகிறது.

**கூற்றுமரபு**

சங்கப்பாடல்களில் கதைமாந்தர் கூற்று முறையானது சிறப்பான ஒன்று. தலைவன், தலைவி, தோழி, செவிலி, நற்றாய் ஆகியோர்கள் கூறுவதாக அகப்பாடல்கள் அமைவதைப் போல கவிஞரின் கவிதைகளும் அமைகின்றன.

**"ஊருக்காகத்தானே மழைவான் வந்தது
உலவும் வண்டு பருகத்தானே தேன் வந்தது
யாருக்காக இப்பொழுது நான் வந்தது
அவரில்லாமல் இந்த நேரம் ஏன் வந்தது?
மாலை வந்தது, தோழி! மாலை வந்தது" (நேயர் விருப்பம் ப. 75)**

இக்கவிதையில், காதலைப் பாடும் போதெல்லாம் காதல் பற்றிய தவிப்புகள் இடம் பெறுகின்றன. பிரிந்து இருக்கும் காதலர்களுக்குத் தென்றலும், மாலைப்பொழுதும் துன்பம் தருகின்றன என்பதை உணர்த்துகிறார் கவிஞர். மழை நீர் ஊருக்குப் பயன்பட பூமிக்கு வருகிறது. வண்டு பருகத்தான் தேன் வந்தது. மாலைப் பொழுதானது யாருக்குப் பயன்படப்போகிறது? என்று தலைவி, தோழியிடம் கேட்கிறாள். காதலைப் பிரிந்த தற்காலத் தலைவி கேட்பதாகப் புதிய முறையில் கவிஞர் பாடியிருக்கிறார். இது சங்க அகப்பாடல் கூற்று சார்ந்தே அமைகிறது. மாலை வந்தது. தோழி! என்பது புதுமையானது. "ஒவ்வொரு புதுமுயற்சியும் 'மரபின் புதுவிளக்கம்' என்பார் டி.எஸ்.எலியட். புதுமை ஒவ்வொன்றும் புதுமை அன்று. அதனுள் ஏதோ ஒருவகையில் பழைமையின் தாக்கம் அடித்தளமாக இருக்கிறது. இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்க் கவிதையின் புதிய பரிணாமம் தான் புதுக்கவிதை" (க. இராமச்சந்திரன், ஆய்வுக்கோவை, தொகுதி, ப.215) என்ற கருத்து கவிஞரின் கருத்திற்கு வளம் சேர்க்கிறது. சங்க அகப்பாடலில் தலைவியின் வருத்தம் தீர, தோழி, காலத்தை (பருவம்) உணர்த்தித் தேற்றுவாள். மேற்கண்ட புதுக்கவிதையில் கவிஞர், காதல் கொண்ட தலைவி தன் தோழியிடம் வினவுவதாக அமைத்திருக்கிறார். மாலை வந்தது தோழி! என்று தலைவி தோழியை வினவக்கூடிய சங்க இலக்கிய அகமாந்தர்களின் கூற்று மரபு இப்புதுக் கவிதையிலும் வந்துள்ளது. கவிஞரின் கவிதை அமைப்பானது தற்காலச் சூழலுக்கு ஏற்ப இருக்கின்ற போதும் கூற்று முறையானது முன்னைய சங்க அகமரபினைப் பின்பற்றி இருக்கின்றது என்பது புலப்படுகிறது.

**முடிவுரை**

தற்கால சமூக உணர்வுகளை மதித்தும், சாடியும் கவிதை படைத்துள்ள அப்துல்ரகுமான் முன்னைய இலக்கியக் கூறுகளைப் பதிவு செய்துள்ளார். சமூகத்தின் அவல நிலையைப் பாடுபொருளாக உணர்த்தும் கவிதைகளில், காப்பிய மாந்தர்களின் உயரிய பண்புகளையும், காப்பிய நிகழ்வுகளையும் எடுத்தாண்டுள்ளார். இவர் தம் கவிதையில், காதல் செய்த இருவரில் ஒருவர் மட்டும் பிரிந்து சென்று மணம் செய்வதும், இதனால் பிரிவு தாங்காத ஒருவர் அவரை நினைத்து வருந்தியும் பாடுவதாக அமைந்திருப்பது புதிய போக்காக, மரபு

E-ISSN: 2581-7140

Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

மீறலாக அமைக்கிறது. மரபிலக்கியங்கள் தங்கள் இருப்பினை இவரது கவிதைகளின் மூலம் காட்டி நிற்கின்றன.

**அடிக்குறிப்புகள்**

1. தொல்காப்பியர், தொல்காப்பியம் அகத்திணையியல் நூற்பா எண் 947.
2. அப்துல்ரகுமான் கவிதை, பால்வீதி பக்க எண் 27.
3. தொல்காப்பியர், தொல்காப்பியம் அகத்திணையியல் நூற்பா எண் 997.
4. அப்துல்ரகுமான் கவிதை, சுட்டுவிரல் பக்க எண் 25.
5. கு. வெ. பாலசுப்பிரமணியன், குறுந்தொகை பாடல் எண் 397.
6. அப்துல்ரகுமான் கவிதை, நேயர் விருப்பம் பக்க எண் 75.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

# குறுந்தொகையில் கடையெழுவள்ளல்கள்

## The Last Seven Patrons in *Kuruntogai*

**அ.ஹாஜிரா பேகம்,** உதவிப்பேராசிரியர்,
தமிழ்த்துறை, இஸ்லாமியா மகளிர் கலை மற்றும் அறிவியல் கல்லூரி, வாணியம்பாடி . 635752.

## Abstract

*The article focuses on the last seven patrons as portrayed in 'Kuruntogai'. 'Kuruntogai' is a classical Tamil poetic work in the second book of the 'Ettuthogai'(Eight Anthologies). It is content matters were poem contains love and separation. Content matters were written by numerous authors. 'Kuruntogai' was complied by Pooriko that praises the Seven least patrons of the Tamil Society. Hence, this paper tries to bring out the last seven patrons' governance, valiance, donation, bountiness etcetera with ample notes featured in the 'Kuruntogai'.*

**Keywords:** Last, Seven Patrons, *Kuruntogai*

### முன்னுரை

சங்க இலக்கியமான *குறுந்தொகை எட்டுத்தொகை* நூல்களுள் ஒன்றாகும். எட்டுத்தொகையில் அகநூல்கள் வரிசையில் *குறுந்தொகை* இடம்பெற்றிருந்தாலும் புறவாழ்வுச் செய்திகளையும் சிறப்பாக எடுத்துரைக்கிறது. மனித வாழ்வின் சமுதாய நிகழ்வுகளைப் புறம் என்று வரையறைச் செய்த தமிழ் மரபின்படி, சமுதாயத்திற்கு நிலைக்களன்களாக விளங்கும் இனக்குழுத் தலைவர்கள், குறுநில மன்னர்கள், வள்ளல்கள், படைத்தளபதிகள் போன்றோர் பற்றிய செய்திகளும் குறுந்தொளையில் இடம்பெற்றுள்ளன. இங்கு குறுந்தொகைப் பாடல்களில் இடம்பெற்றுள்ள கடையெழு வள்ளல்கள் பற்றிய செய்திகளை ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

### கடையெழு வள்ளல்கள்

தமிழ்நாட்டில் பல்வேறு குறுநிலமன்னர்கள் ஆட்சி செய்தனர். அவர்கள் தமது வீரத்தாலும் கொடைப் பண்பாலும் சிறப்பாகப் போற்றப்பட்டனர். இவர்கள் ஒரே காலத்தில் அல்லாமல் பல்வேறு காலங்களில் வாழ்ந்தனர். சங்க காலத்தில் வாழ்ந்த குறுநில மன்னர்களில் ஏழுபேர் மட்டும் வீரத்தை விட தமது கொடைச் சிறப்பால் சிறப்பாகப் போற்றப்பட்டதால் வள்ளல்கள் என அழைக்கப்பட்டனர். "அதியமான், ஆய், ஓரி, காரி, பாரி, பேகன், நள்ளி ஆகியோர் சங்க இலக்கியங்களில் வள்ளல்கள் எழுவர் என்று குறிக்கப்பட்டனர்" (தமிழகத்தில் அரசுகளின் தோற்றம் ப:77). நினைத்த நேரத்தில் நினைத்த பொருளை சற்றும் யோசிக்காமல் கேட்பவர்களுக்குக் கொடையாக வழங்கிய செயலால் சான்றோர்கள் இவர்களை வள்ளல்கள் என வரையறுத்துக் கூறினர். "யாவருமே வள்ளல்களானாலும் அவர்களுக்குள் ஏழுபேரை மிகச் சிறந்த வள்ளல்கள் என்று பாராட்டியிருக்கிறார்கள்" (எழு பெரு வள்ளல்கள் ப.5). கடையெழு வள்ளல்களில் பாரி, ஓரி, காரி, நள்ளி, எழினி, ஆய், ஆகிய ஆறு வள்ளல்கள் பற்றிய குறிப்புகள் குறுந்தொகையில் இடம்பெற்றுள்ளன.

### பாரி

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

பறம்பு மலையையும் அதைச் சூழ்ந்து இருந்த முந்நூறு ஊர்களையும் ஆட்சி செய்த குறுநில மன்னன் பாரி ஆவார். வேளிர் குலத்தைச் சார்ந்தவன் என்பதால் பரிவேள் என்றழைக்கப்பட்டார். பாரிவேள் வீரத்திலே சிறந்தவர் என்றாலும், கொடையிலே இணையற்றவன். புலவர்களுக்கு உணவு, உடை, பொருள், ஓர் ஊர் முழுவதையும் கொடையாக அளித்து அதில் வருகின்ற வருவாயை நுகரும்படி செய்தவன். ஆறறிவு உயிரினங்கள் மட்டுமல்லாமல் ஓரறிவுள்ள முல்லைக் கொடிக்கு தன் தேரை பற்றுக்கோடாக கொடுத்து 'முல்லைக்குத் தேர் கொடுத்த வள்ளல்' என்று வழங்கப்பட்டான். அவன் ஆட்சி செய்த பறம்பு மலை தற்போது பிரான்மலை என்று அழைக்கப்படுகிறது. ஆந்தக் காலத்தில் மரங்கள் அடர்ந்திருந்து வளமுடையதாக இருந்தது. மலைப்பாறைகளில் தேனிருல்கள், வண்ணவண்ண மலர்கள், சுனைகள் இருந்தன. அந்த மலையில் இருந்த சுனைநீர் மிகுந்த இனிமையும் குளிர்சிசியும் உடையது என்பதை,

**"பாரி பறம்பில் பனிச்சனைத் தெண்ணீர்" (குறுந்:196)**

என்ற பாடலடியில் அறியலாம்.

**ஓரி**

கடையெழு வள்ளல்களில் 'ஓரி' ஒருவன். அவனது வள்ளல் தன்மையும் வீரத்தையும் பாராட்டி 'ஆதன் ஓரி' என்றும் 'வல்வில் ஓரி' என்றும் சொல்வார்கள். இவன் மழை போல யாவர்க்கும் எப்பொருளையும் வரையாது வழங்கும் வள்ளல் தன்மை கொண்டவன் என்பதை,

**"ஓர் விசும்பில் கருவி வானம் போல" (புறம்:204:124)**

ஏன்று புறநானூறு குறிப்பிடுகிறது. துமிழ்நாட்டின் நாமக்கல் மாவட்டத்திலுள்ள கொல்லிமலைக்கு உரிமையானவன் ஓரி. அம்மலையின் மேற்புறம் அழகிய கொல்லிப் பாவை இருந்தது என்பதை,

**"வல்வில் ஓரி கொல்லிக் குடவரைப்**
**பாவை ....... ......." (குறுந்:100)**

என்னும் அடிகளாலும், வலிய தேரையுடைய ஓரியின் மலைப்பகுதியிலுள்ள பூக்களை அளைந்துவரும் காற்று நறுமணம் மிக்கது என்பதை,

**.... .... திண்தேர்க்**
**கைவள் ஓரி கானம் தீண்டி**
**ஏறிவள் கமழும் ...... (குறுந்:199)**

ஏன்னும் அடிகளாலும் அறிய முடிகிறது. இத்தகைய அழகுமிகுந்த கொல்லிக்கூற்றின் மேல் ஆசை வைத்தான் சேரமான். இதை அறிந்து சேரமானுக்கு உதவுவதற்காக, படையெடுத்து வந்த காரியின் வாளுக்கு ஓரி இறையானான். "கொல்லி மலை ஓரியை, மலையமான் திருமுடிக்காரி கொன்றுவிட்டதைக் கபிலர் வருத்தத்தோடு தெரிவிக்கிறார்" (தமிழ்நாட்டு வரலாற்றுக் குழு ப.494)

**காரி**

சங்க கால வள்ளல்களுள் ஒருவரான காரியின் முழுப்பெயர் மலையமான் திருமுடிக்காரி ஆகும். மலாடு என்னும் மலையமான் நாடு அவனது நாடு என்றும் கோவல் என்னம் திருக்கோவிலூர் அவனது ஊர் என்றும் புலவர்கள் பாடியுள்ளனர். மலையமான்கள் என்னும் வீரக்குடியில் பிறந்தவர் என்பதாலும், மலைகள் அதிகம் கொண்டது என்பதாலும் மலையமாநாடு என்று வழங்கப்பட்டது. அந்த மலைகளுள் மிகர்பெரியது முள்ளுர் மலைக் காணத்தில் விளையும் சந்தனம் மனத்திலே சிறந்தது என்பதை,

**"...எ.்.கு விளங்கு தடக்கை மலையன் கானத்து**
**ஆரம்நாறு ...... (குறு:198)**
**ஏன்று குறுந்தொகையில் அறியலாம். இதனையே,**

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

**முரண்கொள் துப்பின் செவ்வேள் மலையன்" (குறுந்:312)**

எனும் பாடலடிகளில் அறியலாம். .புலவர்களிடம் பேரன்பு கொண்ட திருமுடிக்காரி வருவோர்க்கெல்லாம் தரம் அறியாது வழங்கினான். வுரிசையறிந்து வழங்குதலை வலியுறுத்த விரும்பிய கபிலர், "கொடுப்பதற்குப் பொருள் இருந்தால் போதும். வரிசையறிவதற்கோ தனித்திறமை வேண்டும். இதை நன்றாக நீ தெரிந்து கொள்ள வேண்டும். இனி புலவர்களையெல்லாம் ஒரே நிறையாகப் பார்ப்பதை விட்டுவிடு என்று அறிவுறுத்தினார்." (எழு பெரு வள்ளல்கள் ப.45). மூநேந்தர்கள் வழங்கிய பொருள்களையெல்லாம் காரி தனக்கென எதையும் வைத்துக் கொள்ளவில்லை. துன்னுடைய மனைவி தவிர மற்ற அனைத்தும் பிறருடையது என்ற எண்ணத்தைக் கொண்டிருந்தான் திருமுடிக்காரி.

**நள்ளி**

நள்ளி என்னும் வள்ளலின் முழுப்பெயர் கோப்பெரு நள்ளி. இவரை நளிமலை நாடன் என்றும் கண்டிரக் கோப்பெரு நள்ளி என்றும் வழங்கினர். இவன் நெடுங்கோடு மலை முகடு என்கிற மலைப்பகுதிக்கு தலைவராக இருந்தார்.இெந்த மலைப்பகுதி தற்போது உதகை என்று அழைக்கப்படுகிறது.

**"திண்தேர் நள்ளி கானத்து அண்டர்**
**புல்ஆ பயந்த நெய்யில் தொண்டி**
**முழுதுடன் விளைந்த வெண்ணெல் வெண்சோறு" (குறுந்:210)**

ஏன்ற பாடல் வரி, நள்ளியின் காட்டிலே நெல் விளைச்சல் மிகுதியாகவும், சுவை வாய்ந்தவை என்பதும் தெரிவிக்கிறது..

**ஏழினி**

தகடூரை ஆண்ட குறுநில மன்னன் அதியமான் அஞ்சி .நெடுமான் அஞ்சி என்பது அதியமானின் முழுப்பெயராகும். 'எழினி' என அழைக்கப்பட்டான். ஏழு வள்ளல்களுள் ஒருவன். மழையைப் போன்று கைம்மாறு கருதாது வழங்கும் வள்ளல் தன்மையுடையவன். "சங்க காலம் முதல் கி.பி.13-ம் நூற்றாண்டு வரையில் தகடூர் நாட்டை அதியமான் மரபினர் ஆண்டுவந்தனர். இவ்வதியமான் மரபினர் வீரமும் புகழும் ஒருங்கே வாய்க்கப்பெற்ற கொங்கு வேளிர் குடியினராவர்" (தமிழ்நாட்டு வரலாற்றுக் குழு ப.400). அதியமானின் மகன் பொருட்டெழின் என்றும் தொண்டைமான், மலையமான் முதலிய குறுநில மன்னர்களுடன் அதியமான் நிகழ்த்திய போர் குறித்தும், அதியனிள் முன்னோர் கரும்பைத் தமிழகத்திற்கு கொண்டு வந்தமைப் பற்றியும், தனக்கு ஈந்த நெல்லிக்கனி குறித்தும் ஔவையார் தமது பாடல்களில் பெருமையாகப் பாடியுள்ளார். அதியமான் வள்ளலாக இருந்ததோடு மிகுந்த போர் வலிமைப் பெற்ற சிறந்த அரசனாக இருந்தான் என்பதை,

**"ஓவாது ஈயும் மாரி வண்கைக்**
**கடும்பகட்டு யானை நெந்தேர் அஞ்சி**
**கொன்முனை இரவூர் போல**
**சிலஆ குகநீ துஞ்சும் நாளே!" (குறுந்:91)**

என்ற பாடல்வரிகளிலும்,, தன்நாட்டு ஆநிரைகளை எதிரிகள் கவர்ந்த போது அவர்களை எதிர்த்து வென்று ஆநிரைகளை மீட்ட செய்தியை,

**"….. ….. வெம்போர்**
**நுகம்படக் கடக்கும் பல்வேல் எழின்**
**முனை ஆன் பெருநிரை போலக்**
**கிளையொடும் காக்க ……" (குறுந்:80)**

என்ற பாடல்வரிகளும் விவரிக்கின்றன.

**ஆய்**

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

ஆய்' என்ற வள்ளல் பொதியில் மலையில் ஆட்சி புரிந்தான். ஆதனைச் சார்ந்து திருக்குற்றாலம், பாவநசம் என்னும் இடங்கள் இருக்கின்றன. 'ஆய்' வள்ளலின் ஆட்சிக்குட்பட்ட பொதிய மலையில் சந்தனம் விளைந்து தமிழ்நாட்டுக்குச் சிறப்பைச் சேர்த்தது. அம்மலையில் வேங்கையும் காந்தளும் மலர்ந்து மணம் வீசும் என்பதை,

**"குழல்தொடி ஆய் மழைதவழ் பொதியில்**
**வேங்யையும் காந்தளும் நாறி....''(குறுந்:84)**

ஏன்ற பாடலில் அறியலாம். பொதிய மலையில் யானைகள் மிகுதியாக இருந்தன. ஆய் ஆண்டிரன் தன்னிடம் வரும் பாணர்கள் மற்றும் புலவர்களுக்கு பொன் மணிகள் இவற்றோடு யானையும் பரிசிலாக வழங்குபவான். இதனால் 'யானைப்பரிசில் தருபவன்' என்று மக்களால் அழைக்கப்பட்டான். தவம் செய்து கிடைப்பதாகிய நீல ஆடையை இறைவனுக்கு வழங்கி இறைவனையும் தன்னிடம் கொடைபெற்றவனாக ஆக்கிவிட்டான் ஆய் ஆண்டிரன்.

**முடிவுரை**

துமிழ்நாட்டில் மூவேந்தர்கள், குறுநில மன்னர்கள் என பலர் ஆட்சி செய்துள்ளனர் என்றாலும், இல்லை என்று தம்மிடம் வருவோர்க்கெல்லாம் வரையாது வழங்கிய வள்ளல்கள் தமிழ்நாட்டில் ஆட்சிசெய்துள்ளார்கள் என்பதை, குறுந்தொகையிலுள்ள சில பாடல் குறிப்புகள் மூலமாக அறிந்து கொள்ள முடிகிறது. அகச் செய்திகளே அல்லாமல் வரலாற்றுச் செய்திகளையும் எடுத்துரைப்பதில் குறுந்தொகை தனித்தன்மைப் பெற்றுள்ளது.

**துணை நூல்கள்**

1. **குறுந்தொகை மூலமும் உரையும்** - டாக்டர் உ.வே.சா. பதிப்பு - டாக்டர்.உ.வே.சா. நூல் நிலையம் - 2. அருண்டேல் கடற்கரைச் சாலை- சென்னை.
2. **தமிழகத்தில அரசுகளின் தோற்றம்** - வெ.பெருமாள்சாமி - பாவை பப்ளிகேஷன்ஸ் - இராயப்பேட்டை, சென்னை.
3. **தமிழ்நாட்டு வரலாற்றுக் குழு** தமிழ் வளர்ச்சி இயக்கத்திற்காக வெளியிட்டோர் - சென்னை
4. **எழு பெருவள்ளல்கள்** - கி.வா.ஜகந்நாதன் - அமுத நிலையம் பிரைவேட் லிமிடெட் - தேனாம்பேட்டை, சென்னனை.

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019
Available at: www.ijtlls.com


# பாலைக்கலியின் பண்பாட்டுக் கூறுகள்

## Cultural Elements in Palaikali

**முனைவர் நா.ஹேமமாலதி,** உதவிப்பேராசிரியர்,
தமிழ்த்துறை தலைவி, சாரதா கங்காதரன் கல்லூரி, வேல்ராம்பேட், புதுச்சேரி - 605004.

**Abstract**

*This Essay is titled as "Cultural Elements in Palaikali " It speaks about the tradition, culture, family bond, relationship with the family and others, humans mind set and human day today routine practiced from early centuries till now. The basic ideas are taken from "Kalinthokai", especially from it 'Palaikali' has been taken for analysis. It speaks of the lave and deapair of the partially departed couples for the sake of earning. Moreover, the cultural traits of the people are shown in the paper.*

**Keywords:** Cultural Elements, *Palaikali, Kalinthokai*

உலகில் மக்கள் தோன்றி வளர்ந்து வந்துள்ள வளர்ச்சி நிலைக்கு அடிப்படையாக அமைவது பண்பாடுதான் அன்று முதல் இன்று வரை இச்சமூகத்தில் பண்பாடு என்பது நிலத்தின் தன்மைக்கும், காலத்தின் தேவைக்கும் ஏற்றவாறு மாற்றம் கொண்டுள்ளது தான் இந்த பண்பாடு. இது பரந்து பட்ட பொருளோடு விளங்கும் ஒரு சொல் தான் பண்பாடு எனப்பட்டது.

பண்பாடு என்ற சொல் சங்க இலக்கியங்களில் காணபெறவில்லை. பண்பு என்ற வேர்ச்சொல்லில் இருந்து இந்த பண்பாடு என்ற சொல் தமிழில் வந்திருக்கலாம். "பண்பாடு மனிதச் சமுதாயத்தின் வளர்ந்த நிலையைக் காட்டுவதாகும். அவர்தம் மனச் செம்மைப்பாட்டை விளக்குவதாகும். எனவே செம்மைப் படுத்தல், சீர்திருத்தல் என்ற பொருள்களை உடைய பண்பாடு என்ற சொல்லடியாகப் பண்பாடு என்ற சொல் வந்தது என்பது பொருத்தமாகும்." (க.ப.அறவாணன், தமிழர் மேல் நிகழ்ந்த பண்பாட்டுப் படையெடுப்புகள், ப. 48) என்று க.ப. அறவாணன் விளக்கம் தருகிறார்.

பண்பாடு என்ற அமைப்பு சமூகத்தில் பல வடிவங்களில் செயல்படுகிறது. மனிதனால் உருவாக்கப்படும் மதத்தினாலும், கலைகளினாலும்., ஒழுக்கத்தினாலும் உயர்ந்த இலட்சியங்களுக்கும் துணைநிற்கக் கூடியதாக உள்ளது. பழங்காலத்திலிருந்து இன்று வரை மாறாமல் சில கூறுகள் தொடர்ந்து பின்பற்றப்பட்டு வந்துள்ளது. அவை தான் விருந்தோம்பல், கற்புநெறி, இல்லறத்தின் உன்னதம், மனிதனின் மனப்பண்பு வழிபாடு, உலகத்து இயல்பு, சுற்றத்தாரை அரவணைக்கும் பண்பு, போன்றவையை வாழ்க்கையாகவே கொண்டிருந்தனர் நம் தமிழர்.

**கலித்தொகையின் தனித்தன்மை**

அக்காலந்தொட்டு தொடர்ந்து பின்பற்றப்பட்டு வரும் கலை தொகுப்புக்கலை, எட்டுத்தொகை நூல்களுக்கு, பல்வேறு கால கட்டத்தில் பல்வேறு சூழலில் பாடப்பட்ட புலவர்களின் பாடல்கள் மட்டுமல்லாமல் ஒரே புலவரின் பல பாடல்களையும் தொகுத்துத் தரப்பட்டுள்ளது. அதனைக்கொண்டு வாய்மொழி மரபாக வழங்கிய பாடல்களையும் புலவர்களும், புரவலர்களும் பாடிய பாடல்களையும் தொகுத்து தொகை நூல்களாக உருவாக்கினர். அப்படி உருவாக்கிய தொகைநூல்களில் இருந்து சிறப்பாகவும்

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

தனித்தன்மையோடும் விளங்கும் கலித்தொகையின் தனித்தன்மையைப் பற்றி அறிந்து கொள்வோம்.

*எட்டுத்தொகை* நூல்களில் அகப்பொருள் நூலான *அகநானூறு, குறுந்தொகை, நற்றிணை, ஐங்குறுநூறு* போன்றவற்றைக் காட்டிலும் கலித்தொகை தொகுப்பு முறையில் தனக்கென ஒரு தனித்தன்மையும் வேறுபாட்டையும் கொண்டது எனலாம்.

தொகை நூல் பாடல்களில் கலிப்பாவால் பாடப்பட்ட ஒரே தொகை நூல் கலித்தொகைதான் எனலாம். இது எட்டுத்தொகை நூலுக்கு மேலும்மொரு சிறப்பு. திணைவாரியாகத் தொகுக்கப்பட்ட இந்நூலுக்கு அடிவரையறை கிடையாது. ஐங்குறுநூற்றைப் போலவே ஐந்து புலவர்களால் பாடப்பட்டுள்ளது. திணைவரிசை முறையிலும் மாற்றம் உண்டு. இது குறித்து நச்சினார்க்கினியர் கூறும்கருத்தைப் பற்றி,

"முல்லை, குறிஞ்சி. மருதம், நெய்தலெனச் சொல்லிய முறையால் சொல்லவும் படுமே என்புழிச் சொல்லாத முறையாற் சொல்லவும் படுமே என்றளின் இத்தொகையைப் பாலை, குறிஞ்சி, மருதம், முல்லை, நெய்தல் என இம்முறையே கோத்தார் நல்லந்துவனார்." (பொ.வே. சோமசுந்தரனார் (உ.ஆ.), கலித்தொகை, பாலைக்கலி, ப.8.) என பொ.வே. சோமசுந்தரனார் கூறியுள்ளார். எனவே கலித்தொகைப் பாடல்கள் பாலைக்கலி, குறிஞ்சிக்கலி, மருதக்கலி, முல்லைக்கலி, நெய்தற்கலி எனப் பிரிந்து திணைப்பெயராக வைக்கப்பட்டுள்ளது.

சுந்தர சண்முகனார், ஐம்பதுக்கும் மேற்பட்ட இடத்தில் இந்நூற்பாடல்களை எடுத்தாண்டுள்ளார் நச்சினார்க்கினியா் என்பா். கற்பதற்கு மிக இனிமையான கலித்தொகையை "கற்றறிந்தார் ஏத்தும் கலி", என்றும் "கல்வி வலார் கண்ட கலி" என்றும் "கற்றறிந்தார் போற்றும் கலியாயுள்ளது" என்றும் புகழ்ந்து கூறியதன் வாயிலாக உணரமுடிகின்றது.

**பாலைக்கலி**

காதலர் ஒருவரை ஒருவர் பிரிவது பெருந்துன்பம் தரும் செயல் ஆதலால் துன்பமிக்க பாலைத் திணையை நல்லந்துவனார் நன்கு ஆராய்ந்து திணைகளுக்குள் முதன்மையாக இப்பாலைத்திணையை வைத்துள்ளார் (பொ.வே. சோமசுந்தரனார், (உ.ஆ), கலித்தொகை, பாலைக்கலி, ப.7) என்று கூறுவார். இன்பத்தின் மறுதலையாகிய துன்பத்தை நல்கும் பாலை நிலத்தின் கொடுமையைக் கூறுவதோடு, முதல் இருபத்தைந்து பாடல்கள் பழந்தமிழ் அகவல் அகமரபில் உள்ள பாலைத்திணைப் பாடல்களைப் பெரிதும் பின்பற்றியுள்ளன. அடுத்த பத்து பாடல்கள் மதுரைப் பாண்டியனையும், பரங்குன்றத்து விழா,இளவேனில் பருவம், காமன்விழா, வையை ஆற்றின் திருமருத முன்துறையில் இன்ப நுகர்ச்சி ஆகியவற்றைக் கூறும். எனவே, பாலைக்கலிப் பாடல்கள் மொத்தம் முப்பத்தைந்து.

**விருந்தோம்பல்**

விருந்தோம்பல் தமிழ் பண்பாடு. இல்லற மகளிர் விருந்தோம்பலுக்கு மிகுந்த முக்கியத்துவம் வழங்கினா். தமிழ் மக்கள் தம்மைப் போலவே பிற உயிர்களையும் நேசித்தனா் பிற உயிர்களையும் பேணிபாதுகாக்க முக்கிய தேவை பசிபிணி நீக்குவதுதான். எனவே உணவு வழங்கி உயிர்காக்கும் பண்பையே அறமாகக் கொண்டிருந்தனா்.

**"வருவிருந்து ஓம்பி,**
**தன் நகா், விழையக் கூடின்" (பாலைக்கலி. 8- 21)**

என்ற வரியில் இல்லறத்தின் சிறப்பு விருந்தோம்பல் ஆகும். வருவிருந்து ஓம்பல் இல்லறத்தார் கடன். மனைவியுடன் கூடியிருந்து பெறும் இன்பமே போரின்பம் என்ற பண்பினை காணமுடிகின்றது. இதனைதான் திருக்குறளில்.

**"வருவிருந்து வைகலும் ஓம்புவான் வாழ்க்கை**
**பருவந்து பாழ்படுதல் இன்று" (திருக்குறள். 83)**

என்று கூறுவா்.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

தோழி இளவேனிலை வருணித்து அதற்கு பின் தலைவியிடம் இளவேனிலே தலைவனுக்காக தூது வந்துள்ளது அதற்கென வா விருந்து சமைப்போம் என அழைப்பதும்,

**"தூது வந்தன்றே, தோழி.**

**துயர் அறு கிளவியோடு, அயர்ந்தீகம் விருந்தே" (பாலைக்கலி.32. 18-19)**

என்ற வரிகளில் காதலருடைய தூதராய் இளவேனிற் காலம் வந்துள்ளது. அதனால் அக்காலத்திற்கு விருந்தானவற்றைச் செய்வோம் வா, என அழைக்கும் தோழியின் வாயிலாக விருந்தோம்பலின் பண்பு போற்றுதலுக்குரிய ஒன்றாக அமைந்திருப்பதனைக் காணலாம்.

தமிழர் வாழ்வில் விருந்தினராக வந்தது இளவேனிலாகிய இயற்கையே ஆனாலும் நமக்கென தூது வந்திருப்பதை உணர்ந்து வந்தாரை உபசரிக்க விருந்து சமைப்பது சிறப்பு.

**கற்புநெறி**

கற்புநெறி தமிழர்களின் வாழ்க்கையில் இன்றியமையாத ஒருநெறி. கற்புநிலை என்றால் அது இருபாலர்க்கும் பொது என்ற பாரதியின் கருத்து இன்றைய காலம் வரை பேசப்படக் கூடிய ஒன்று. அதில் அன்று முதல் பெண்களுக்கு கற்பைப் பற்றி பல இடங்களில், பல சூழல்களில், பல பாடல்களில் இலக்கியங்களில் கற்பை வலியுறுத்தியுள்ளனர். சங்க கால பெண்கள் முதல் இன்றுவரை கற்புநெறியை போற்றி வருதலை நாம் காண முடிகின்றது. இந்த கற்பிற்கு அருந்ததியை உதாரணமாக கொள்வர். கற்பின் மாட்சிமைக்கு அருந்ததியை உதாரணமாகக் கூறுவது மரபு. அருந்ததி வடதிசைக்கண் வானில் நிலைத்துத் தோன்றும் விண்மீன் என்பர். எனவே உயர்ந்த கற்பிற்கு உரியவளான அருந்ததியை உதாரணமாக கூறும் தோழி,

**"வடமீன் போல் தொழுது ஏத்த வயங்கிய கற்பினாள்" (பாலைக்கலி: 2.- 21)**

என்ற வரியில் எல்லோரும் தொழுது வாழ்த்தும்படி விளங்கிய கற்பினை உடைய அருந்ததி போல தலைவியை விட்டு பொருளீட்டச் செல்லும் தலைவனிடம் தோழி அருந்ததியின் கற்பினைப் போல, பெருமை வாய்ந்த மெல்லிய தோளையுடைய தலைவியை பிரியாதிருத்தல் உனக்கு பெருஞ்செல்வம் என கூறுகிறார்.

தலைவியின் நலனில் அக்கறைக் கொண்ட தலைவி மழையையும், வெப்பத்தையும், காற்றையும் வழிபட விரும்புகிறாள். அத்தகைய தலைவிக்கு அறக் கடவுளே உதவுவது குறிப்பிடத்தக்கது.

**"கல்மிசை உருப்பு அறக் கனைதுளி சிதறி"**

**"சினை வாடச் சிறக்கும் நின் சினம் தணிந்தீக"**

**"முளி முதல் மூழ்கிய வெம்மை தீர்ந்து உறுக" (பாலைக்கலி: 16: 7, 11, 15)**

என்ற வரிகளில் கடுமையான பாலை நிலத்தை கடந்து செல்லும் தலைவனுக்கு யாதொரு தீங்கும் நேராமல் இருப்பதற்கு, இனிய ஓசையுடைய மேகத்தையும்,கதிர்களைப் பொழியும் கனலியான ஞாயிற்றையும், காற்றுக் கடவுளையும் நாம் இரந்து வேண்டினால் அது தம் கற்பிற்குப் பொருத்தமுடைய தொரு காரியம் ஆகுமோ? என வேண்டுகிறாள்.

தெய்வத்தை வணங்காமல் கொண்ட கணவனையே தெய்வமாக எண்ணி வாழும் மகளிர் பெய் என்றாள் மழை பொழியும் என்ற திருக்குறளுக்கு சான்றாக விளங்குபவர் இத்தலைவி. இந்த தெய்வக்கோட்பாடுகள் எல்லாம் தொல்காப்பியர் காலத்திருந்தே வந்துள்ளது. உதாரணமாக நிலத்தை சுட்டும் இடங்களில் எல்லாம் அந்நிலத்திற்குரிய தெய்வத்தோடு சுட்டிச் சொல்வதை காண நேர்கிறது. அத்தகைய தெய்வ வழிபாட்டிலும் கற்புநெறியே சிறந்ததாகச் சுட்டப் பெற்றுள்ளது இங்கு குறிப்பிடத்தக்கது.

**இல்லறத்தின் உன்னதம்**

தலைவன் இருக்கும் இடத்திலேயே தானும் இருக்க வேண்டும் என்று நினைப்பது தலைவியின் உள்ளம். அக்காலம் முதல் இக்காலம் வரை உள்ள அனைத்து

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

மகளிரின் அன்புநிலைக்கான உண்மையும் இதுதான். அவ்வன்பிற்கு அடிப்படையாக பாலைக்கலி பாடலும் உணர்த்துகின்றது

புறவாழ்க்கைக்கு தேவையான பொருளையும், செல்வத்தையும் காட்டிலும் உயர்ந்தது அகவாழ்க்கைகான அன்புதான் என்பதனை உணர்த்த, தலைவியை விட்டு பொருளீட்டுவதற்காக பிரிய இருப்பதாக உணர்த்திய தலைவனிடம், தோழியானவள் தலைவியின் இளமையும், அழகும், நீ ஈட்டச் செல்லும் பொருளால் மீண்டு வருமா? என்றும், உன் பிரிவால் வாடும் தலைவியின் இளமையும், மணம் வீசும் நீல மலர்போன்ற மையுண்ட இவளது கண்கள் அழுது, எரிகின்ற திரியிலிருந்து சொட்டும் நெய்போல, சுடும் நீரை துளிர்க்கும். அத்தகைய கண் அழகினையும் நீ ஈட்டுச் செல்லும் செல்வம் மீட்டுத் தருமோ? என்று கேட்கும் தோழி,

**“பெருகிய செல்வத்தான் பெயர்த்தரல் ஒல்வதோ-**
**செயலை அம்தளிர் ஏய்க்கும் எழில் நலம், அந்நலம்**
**பயலையால் உணப்பட்டுப் பண்டைநீர் ஒழிந்தகால்?” (பாலைக்கலி: 15: 11-13)**
**“மன்னிய புணர்ச்சியான் மறுத்தரல் ஒல்வதோ**
**புரிஅவிழ் நறுநீலம், புகை உண் கண் கலுழ்பு ஆனா,**
**திரிஉமிழ் நெய்யே போல், தெண்பனி உறைக்குங்கால்?” (பாலைக்கலி.15.18-21)**

என்ற வரிகளில், தலைவியின் இளமையும், அழகும் கழிந்த பின் நீ ஈட்டும் செல்வத்தால் யாது பலன். ஆதலால் தலைவியை பிரியாமல் இருப்பதே நீ ஈட்ட இருக்கும் பெருஞ்செல்வத்திற்கும் மேலானது என்று கூறுகிறாள்.

இங்கு தலைவன் தலைவியை விட்டு பிரிந்து எங்கு சென்றாலும் அவள் தலைவன் தலைவனின் பிரிவால் வாடக்கூறுயவள் என்றும், அவளது அழகும் இளமையும் இழக்கக்கூடிய வளாவாள் என்ற எண்ணமும் அக்காலத்தில் வாழ்ந்த பெண்களுக்கே உரிய பண்பாக அமைந்திருக்கின்றது.

தலைவியும் தலைவனும் சேர்ந்து வாழும் வாழ்வு உன்னதமான வாழ்க்கை என்பதை உணர்த்த தலைவியை விட்டு பொருளீட்டச் செல்லுத் தலைவனிடம் முன்னர் நிகழ்ந்ததைக் கூறி, தலைவனின் செலவைத் தவிர்க்கும் தோழி,

**“ஓரோஒ கை தம்முள் தழீஇ, ஓரோஒகை**
**ஒன்றன் கூறுஆடை உடுப்பவரே ஆயினும்**
**ஒன்றினார் வாழ்க்கையே வாழ்க்கை” (பாலைக்கலி. 18. 9-11)**

என்ற வரிகளில், இளமையையும், ஒத்த காமத்தையும் ஒள்றாகப் பெற்ற இருவர் உள்ளத்தில் பெருட் செல்வத்தை விரும்புவார்களோ? இல்லை.

இல்வாழ்க்கையானது இவ்விரண்டும் உள்ள நாள்வரை ஒருவரை ஒருவர் தழுவியும், தம்முள் ஒன்றன் கூறாகி ஆடையை உடுப்பவராக வறுமையுற்று வாழ்ந்தாலும் அதனைப் பற்றி கவலையுறாமல் ஒன்றாக கலந்து வாழ்வதே வாழ்க்கை என்பர். ஆதலால் தலைவியின் அன்பு பொருள் நோக்கி அல்ல. தலைவனின் அன்பு நோக்கி வாழ்வதே வாழ்க்கை என உணர்த்துகின்றது.

**மனிதனின் மனப்பண்பு**

மனிதன் வாழ்வில் பல அனுபவங்களுக்குள் ஆளாகிறான். அவன் காணும் அனுபவங்கள் அனைவருக்கும் ஒரே மாதிரியாக இருப்பதும் இல்லை. மனிதன் தன் மனக்கருத்தைக் கூறுவதற்கு பல விதமான வழிமுறைகளை கையாள்வார்கள். அவை அவர்களின் மனப்போக்கிற்கு ஏற்ப மாறுபடும்.

தலைவியை விட்டுப் பிரிந்து சென்ற தலைவன் இளவேனிற் காலத்திற்குள் பொருளீட்டி வருவதாக கூறிச் சென்ற தலைவன், இளவேனிற் காலத்தைக் கண்டும் தலைவன் வராமையை எண்ணி பலவாறாக மனக்குழப்பம் கொள்கிறாள். யாதெனில், தன் தோழியிடம் தலைவி, நம்

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019 Available at: www.ijtlls.com

காதலர் நம்மிடம் கொண்ட காதலிலிருந்து பிரிந்து விட்டாரோ? அல்லது தூது அனுப்ப மறந்திருப்பாரோ? அவர் திரும்பி வந்து நம்மிடம் காதல் கொள்ளும்வரை நாம், அவருக்காக இறந்துவிடாமல் ஆற்றி இருப்போமோ? நம்மை பிரிந்து சென்றவர் அங்கேயே தங்கி விடுவாரோ? என பரவாறாக குழம்பும் மன நிலையில் இருக்கும் தலைவி தோழியிடம் இதில் முடியும் காரியம் யாதெனக் கேட்கிறாள்.

**"காதலின் பிரிந்தார் கொல்லோ? வறிது ஓர்**
**தூதொடு மறைந்தார் கொல்லோ? நோதக**
**காதலர் காதலும் காண்பாம் கொல்லோ?**
**துறந்தவர் ஆண்டு ஆண்டு உறைகுவர் கொல்லோ? யாவது?"**
**(பாலைக்கலி. 36.18-21)**

என்ற வரிகளில், மனிதனின் மனம் பலவாறாக எண்ணும் இயல்புடையதுதான். அதனால் தான் தலைவன் பிரிந்தாரோ? மறந்தாரோ? காண்போமோ? என பலவாறாக எண்ணத்தோன்றியது.

**வழிபாடு**

வழிபாடு என்றாள் "பின்பற்றுதல்", "வணங்குதல்" என்ற பொருள்தருகிறது செந்தமிழ் அகராதி. சங்க காலத்தில் விலங்கையோ, மரத்தையோ, தம் இனத்தோடு தொடர்புபடுத்தி கொண்டு வழிபடுவது குலக்குறி வழிபாடு" என்பர். தன் தேவைக்குரியதுக்கு மட்டும் வழிபடும் வழிபாடு வழிபாட்டு முறையாகும் பஞ்சபூதங்களையும், தாவரங்களையும், நட்சத்திரங்களையும் வழிபடும் முறை இயற்கை வழிபாடாகும். அக்காலங்களில் மர வழிபாடும் தொன்மையானது தான். பொய்ச் சாட்சி சொல்லியவன் ஒரு மரத்தின் கீழ் வந்து தங்கினால் அம்மரம் பட்டுப்போகும் என்றனர்.

**"கரி பொய்த்தான் கிழ் இருந்த மரம் போலக்" (பாலைக்கலி. 34- 10)**

என்ற வரியின் வாயிலாக சங்க கால மக்கள் பொய்க் கூறுதலை ஒருபோதும் ஏற்றுக்கொள்வதில்லை. பொய்க் கூறியவன் வந்து தங்கும் மரம் பட்டுக் கருகிப்போகும் என்ற எண்ணம் சங்ககாலத்தில் இருந்தே நம்பப்பட்டு வந்துள்ளது. இது பற்றி குறுந்தொகை பாடல் 184-லும் "அறிகரி பொய்த்தல் ஆன்றோர்க்கில்லை" என்கிறது. எனவே மரங்களை வழிபடும் தெய்வமாகக் கொண்டனர் அக்கால மக்கள்.

வழிபாடுகளில் விழாக்கள் முக்கிய இடம் பெறும். காமனுக்கு விழா எடுக்கும் முறை பாலைக்கலியில் தெரிய வருகின்றது. இளவேனிற் காலத்தில் காமனுக்கு விழா எடுத்து வந்துள்ளனர். அவ்விழா காலத்தில் தலைவன் தலைவியோடும் பரத்தையரோடும் நீராடுதல் வழக்கமாக இருந்து வந்துள்ளது. அவ்விழாவில் தலைவன் பரத்தையுடன் நீராடுதலை தலைவி ஏற்றுக் கொண்டதும் காணக் கிடைக்கின்றது.

**"குழவி வேனில் விழவு எதிர் கொள்ளும்**
**சீரார் செவ்வியும், வந்தன்று" (பாலைக்கலி. 36. 10-11)**

என்ற வரிகளின் மூலம், இளவேனிற் காலம் வந்தால் காமனுக்கு விழா எடுக்கும் வழக்கம் சங்க இலக்கிய காலத்தில் கட்டாயம் இருந்து வந்துள்ளது என்றும்,

**"மல்கிய துருத்தியுள் மகிழ்துணைப் புணர்ந்தவர்**
**வில்லவன் விழவினுள் விளையாடும் பொழுதன்றோ" (பாலைக்கலி. 35. 13-14)**

என்ற வரிகளில், அவ்விழாவில் நிர் நிறைந்த ஆற்றிடைக் குறையிலே அவர் தம்மை மகிழும் பரத்தையரைக் கூடிக் காமனுக்கு நிகழ்த்துகின்ற விழாவில், பரத்தையருடன் விளையாடும் அவ்வேனிற் காலத்தே எடுக்கப்படுவதாகவும், அவ்விழாக்காலங்களில் தலைவன் காதற் பரத்தையருடன் நிராடுவதாகவும் சுட்டப்பெறுகின்றது. தலைவன் பரத்தையருடன் புனலாடுதலை அறிந்த தலைவி அதனை ஏற்றுக் கொண்டுள்ளதும் தெரியவருகின்றது.

E-ISSN: 2581-7140
Vol. 2: Issue - 1, July 2019
Available at: www.ijtlls.com

சங்க காலத்தில் காமன் விழா சிறப்புற்றிருந்திருக்கின்றது. இலக்கியங்களில் பதிவாகிய இவ்விழா இன்று வழக்கொழிந்து போயிருக்கு எனலாம். இக்காலத்தில் அவ்விழா மறைந்துவிட்டது என்றே கூறவேண்டும்.

**உலகத்து இயல்பு**

இவ்வுலகில் ஒருவனிடம் ஒருவன் தோற்றுப் போதல் புதுமை இல்லை. தொன்று தொட்டு தொடர்ந்து நடந்து வரக்கூடிய ஒன்றுதான். ஒருவரை ஒருவர் பகைக்கொண்டு கொல்லுதலும், தொன்று தொட்டு வருவததான். தலைவியை களவு காலத்தில் தலைவன் இரந்து பெற்ற முகபாவம் வேறு, அதுவே பின்பு கற்பு காலத்தில் தலைவியை கடிந்து பேசி முகபாவம் வேறாக காட்டுவதும் உலகத்து இயல்புதான் நாம் ஒருவரிடம் ஒரு பொருளை பெற முற்படும் போது முக மலர்ந்து மகிழ்ச்சியோடு பெற்றுக் கொள்வதும் அதுவே அப்பொருளை திரும்ப அவர்களிடம் தரநேரும் போது முகம் வேறாக இருத்தலும் இயல்புதான் இந்நிலை பண்டு தொட்டே இவ்வுலகத்தில் தொடர்ந்து நடந்துவரும் இயல்பு. இவை இன்று மட்டும் புதிதாக நிகழ்ந்துள்ளது என்பதை,

> **“உண்கடன் வழிமொழிந்து இரக்குங்கால் முகனும், தாம்**
> **கொண்டது கொடுக்குங்கால் முகனும் வேறாகுதல்**
> **பண்டும் இவ்வுலகத்து இயற்கை” (பாலைக்கலி. 22. 1-3)**

என்ற வரிகளில் உணர்த்துகின்றனர்.

மிகுந்த அறிவுடைய மாந்தர்கள் ஒருவரிடம் சென்று, அவரைப் புகழ்ந்து பேசி, உணவுப் பொருளை இரந்து வாங்கும் பொழுது முகம் மலர்ந்திருத்தலும், அப்படிப் பெற்ற கடனைத் திரும்பிக் கொடுக்குங்கால் முகம் வேறாக இருப்பதும், பண்டு தொட்டே இவ்வுலகத்தில் இருந்து வரும் இயல்பு தான். அது இன்று மட்டும் புதிதாக தோன்ற கூடியது அன்று. அது உலகத்து இயல்புதான் என்பர்.

**சுற்றத்தாரை அரவணைக்கும் பண்பு**

அரவணைக்கும் பண்பே தமிழர்களின் இறைப்பண்பாகும். இது மனிதவாழ்விற்கு இன்றியமையாதது எனத் தமிழ்ச் சமூகம் கருதியது. தமிழ் சமூகமும் தம்முள் ஒருவரை ஒருவர் சார்ந்து வாழும் வாழ்க்கை கொண்டுள்ளனர். அதனால் தம்மைச் சுற்றியுள்ளவர்களை நல்லுறவு கொண்டு பாதுகாத்து வைக்கும் பண்பாக இருந்தது. தமிழ் சமூகத்தில் ஒருவருக்கொருவர் அன்பு செலுத்தி ஒற்றுமையுடன் வாழவேண்டும் என்ற உயர்ந்த நோக்கம் வலியுறுத்தப்பட்டுள்ளது. அன்பின் வெளிப்பாடாக புகழ்மீதும், பொருள்மீதும் பற்று இல்லாமல் பொது நலத்தோடு தன்னை சுற்றியுள்ளவர்களை அரவணைத்து வாழ்வதே தொண்டாக அமைகிறது. அத்தொண்டினைப் பாலைக்கலியிலும் காண நேருகிறது.

> **“ஒல்குபு நிழல் சேர்ந்தார்க்கு உலையாது காத்து ஓம்ப**
> **வெல்புகழ் உலகு ஏத்த,” (பாலைக்கலி. 26.11-12)**
> **“நசை கொண்டு தம் நிழல் சேர்ந்தாரைத் தாங்கி, தம்**
> **இசை பரந்து, உலகு ஏத்த, (பாலைக்கலி. 26. 15-16)**
> **“ஊறு அஞ்சி நிழல் சேர்ந்தார்க்கு உலையாது காத்து ஓம்பி**
> **ஆறு இன்றிப் பொருள் வை.ஃ.கி, அகன்ற நாட்டு உறைபவர்”**
> **(பாலைக்கலி.26. 19-20)**

என்ற வரிகளில் முன்னர் வருத்தமுற்று, பின் விருப்பமுடன் நம்மை காத்தளிப்பார் என்று தன்னை நிழலாக அடைந்த குடிமக்களுக்கு, மனம் வருந்தாதபடி அவர்களை பேணிப்பாதுகாத்து அரவணைப்பது கடமையாகும் என்பது போல “நிழல் சேர்ந்தார்க்கு உலையாது காத்து ஓம்பி, “தம் நிழல் சேர்ந்தாரைத் தாங்கி” என வருவதையும் காணநேருகிறது. இதில் ஆதரவற்ற, நிலைகுலைந்த மக்களை காத்து அவர்களின்

